# பாட்டியல் களஞ்சியம்

பதிப்பாசிரியர்
**வ. ஜெயதேவன்**

தொகுப்பாசிரியர்
**கி. காவேரி**



சென்னைப் பல்கலைக்கழகம்
2007




150ஆம் ஆண்டு சிறப்பு வெளியீடு

# பாட்டியல் களஞ்சியம்

*பதிப்பாசிரியர்*

**வ. ஜெயதேவன்**

தகைசால் பேராசிரியர், தமிழ் இலக்கியத்துறை
முதன்மை ஆய்வாளர் & தலைமைப் பதிப்பாசிரியர்
தமிழ்ப் பேரகராதித் திருத்தப்பணித் திட்டம்
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை 600 005

*தொகுப்பாசிரியர்*

**கி. காவேரி**

முன்னைப் பதிப்பாசிரியர்
தமிழ்ப் பேரகராதித் திருத்தப்பணித் திட்டம்
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை 600 005




சென்னைப் பல்கலைக்கழகம்
2007



சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரகராதித் திருத்தப்பணித் திட்ட வெளியீடு: 9

பாட்டியல் களஞ்சியம்
வ. ஜெயதேவன் (பதிப்பாசிரியர்)

150ஆம் ஆண்டு வெளியீடு



முதல் பதிப்பு: அக்டோபர் 2007

விலை ரூ. **210/-**

கணினி வடிவமைப்பு: திரு இல. கணேசன்

வடிவமைத்து அச்சிட்டோர்: ஸ்ரீ ராகவேந்திரா பிரஸ்
✆ 24614545, 24952913

வெளியிடுவோர்: பதிப்புத்துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை 600 005








# சென்னைப் பல்கலைக்கழகம்

சேப்பாக்கம் - சென்னை - 600 005

பேராசிரியர் சு. இராமச்சந்திரன்
M.Sc., Ph.D., Ph.D. (Miami)
துணைவேந்தர்

## அணிந்துரை

புத்தகங்கள் நாகரிகத்தைச் சுமந்து வருவன; அவை இன்றேல், வரலாறு ஓசையற்றுப் போகும்; இலக்கியம் ஊமையாகி விடும்; அறிவியல் ஊனப்பட்டு விடும்; சிந்தனையும் எதிர்காலக் கணிப்பும் இயக்கமற்று விடும் எனப் புத்தகம் பற்றிச் சரியாகக் கூறப்பட்டுள்ளது. நம் பாசத்திற்கும் நேசத்திற்கும் உரிய அன்னை நிறுவனமான சென்னைப் பல்கலைக் கழகத்தின் 150ஆம் ஆண்டை அடையாளப்படுத்த... நினைவு நூல்கள் வெளியிடுவதை விடவும் சிறந்த நிலையான வேறுபணி என்ன இருக்கமுடியும்?

சென்னைப் பல்கலைக் கழகம் மற்றும் அதன் இணைப்பு நிறுவனங்களின் ஆசிரியப் பெருமக்கள் படைத்த இந்த நூல் தொகுதிகளுக்கு முகவுரை வரைவது அருமையும் பெருமையும் சான்ற சிறப்பு. இந்நூல்கள் உயர்கல்வி மற்றும் ஆராய்ச்சி மேம்பாட்டிற்கும் பல்கலைக் கழகத்தின் 150ஆம் ஆண்டு அர்ப்பணிப்புக்கும் நிலையான நினைவுப் பொருள்களாக அமையும் என்பதைக் கருத்திற்கொண்டு, இந்நூல்கள் அவற்றின் புத்தாக்க அணுகுமுறை, ஆய்வுத்தரம், நடைநலம் ஆகியவற்றின் அடிப்படையில் தேர்வு செய்யப்பட்டு வெளியிடப்பெறுகின்றன.

நமது பெருநிறுவனத்தின் முன்னேற்றப்பாதையில் ஓர் இன்றியமையாத மைல் கல்லாக மட்டுமன்றி நமது நாட்டின் கல்விப் பாங்கிற்கு ஓர் உண்மையான, பொருண்மை மிக்க பங்களிப்பை இந்நூல்கள் நல்கும் என்று நம்புகிறேன்.

கல்விச் சமூகத்தினர், கூட்டுறவாளர்கள், பங்காளர்கள் அனைவருக்கும், அவர்கள் நல்கிய ஒத்துழைப்பிற்கு நன்றி பாராட்டுகிறேன். சென்னைப் பல்கலைக் கழகத்தின் 150ஆம் ஆண்டு நிறைவு விழா நிகழும் அக்டோபர் 9, 2007இல் வெளியிடத்தக்க வகையில் இந்நினைவு நூல்களை உருவாக்கிய ஏனைய அனைவரையும் வாழ்த்துகிறேன், பாராட்டுகிறேன்.

சென்னைப் பல்கலைக் கழகம் செயல்படத் தொடங்கிய செப்டம்பர் 5, 1857 முதல் இன்றுவரை எத்தனையோ மாற்றங்களும் ஏற்றங்களும் பெற்றுப் பொலிவுடன் ஒளிர்கிறது. மேலும் பல சிறப்புகள் வரவுள்ளன என்பதை நாம் அனைவரும் எண்ணிப் பார்க்க இதயம் இறும்பூது எய்துகிறது. அன்பார்ந்த வணக்கத்துடனும் மனமார்ந்த வாழ்த்துக்களுடனும்

**சு. இராமச்சந்திரன்**
அக்டோபர் 2007

# பதிப்புரை

தொல்காப்பியப் பொருளதிகாரத்தை நிலைக்களனாகக் கொண்டு பிற்காலத்தில் உருவான பல்வேறு புலங்களுள் ஒன்று பாட்டியல் ஆகும். பாட்டியலைப் பகுதியாகவும் தனித்து முழுமையாகவும் கொண்ட ஏறத்தாழ பதினைந்து இலக்கண நூல்கள் தமிழில் தோன்றியுள்ளன. தொல்காப்பியத்திற்குப் பின் தமிழ் இலக்கணங்களில் படிந்த வடமொழிச் செல்வாக்கின் உச்சநிலையாகப் பாட்டியலைக் கருதலாம்.

இலக்கணத்தின் பன்முகங்கள் குறித்த பயிற்சி அருகிவரும் இக்காலத்தில் சிறிய முயற்சியில் பெரிய பயனைப் பெறச்செய்ய இலக்கண நோக்குநூல்கள் உதவவல்லன. இந்த அடிப்படையில் பாட்டியல் நூல்களுள் அமைந்துள்ள கருத்துகளைத் தொகுத்து உருவாக்கப்பட்ட நோக்குநூலே இப்பாட்டியல் களஞ்சியம் ஆகும். இதனை அரிதின் முயன்று உருவாக்கிய செல்வி கி. காவேரி பாராட்டுக்கு உரியவர். முன்னரே சித்திரக்கவிக் களஞ்சியம் என்னும் நோக்குநூலையும் இவர் உருவாக்கியுள்ளமை குறிப்பிடத்தக்கது. இன்றைய இளைய தலைமுறையைப் பெரிதும் ஈர்க்காத இலக்கணத் துறையில் ஈடுபாடு கொண்டு தொடர்ந்து உழைத்து இத்தகு பயன்மிகு நோக்குநூல்களை உருவாக்கிவரும் அன் ாருக்கு என் வாழ்த்தும் பாராட்டும் உரியன.

சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரகராதித் திட்டத்தின் துணைவிளையுள்களுள் ஒன்றான இப்பாட்டியல் களஞ்சியம் இத்திட்டத்தின் 9-ஆவது வெளியீடாகும். இதற்கு மாண்பமை துணைவேந்தர் பேராசிரியர் சு. இராமச்சந்திரன் அவர்கள் அணிந்துரை நல்கிச் சிறப்பித்துள்ளமை குறிப்பிடத்தக்கது. இதனை வெளியிட்ட சென்னைப் பல்கலைக்கழகப் பதிப்புத்துறைக்கு உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். தமிழ் கூறு நல்லுலகம் இந்த நூலை வரவேற்கும் என நம்புகிறேன்

அன்புள்ள

**வ. ஜெயதேவன்**

# பொருளடக்கம்

# முன்னுரை

உலக மொழிகள் அனைத்தும் தமக்கெனத் தனி இலக்கணத்தைக் கொண்டே இயங்குகின்றன. மொழியின் வளர்ச்சிக்கேற்பக் காலந்தோறும் அவ்விலக்கணம் புதுப்புதுப் பரிமாணங்கள் பெறுகின்றன. தமிழ் இலக்கணங்களுள் தொன்மையானதாகக் கருதப்படும் தொல்காப்பியம். எழுத்து, சொல், பொருள் என்னும் முப்பெரும் பிரிவுகளைக் கொண்ட இலக்கணத்தைப் பேசுகிறது. காலப்போக்கில் மூன்றாம் பகுப்பான பொருள் என்பதிலிருந்து யாப்பு, அணி என்பன தோற்றம் கொண்டன. பின்னர் எழுத்து, சொல் இரண்டும் நன்னூலிலும், பொருளானது அகம், புறம் என இரண்டாகப் பிரிந்து நம்பியகப் பொருள், புறப்பொருள் எனவும் யாப்பானது யாப்பருங்கலம், யாப்பருங்கலக் காரிகையிலும் அணியானது தண்டி, மாறன் எனவும் பெருகத் தொடங்கின. பின் பொருளதிகாரத்தின் செய்யுளியலில் இருந்து பாட்டியல் என்னும் உட்பிரிவு கிளைத்தெழத் தொடங்கி ஆறாம் இலக்கணமாக மலர்ந்தது.

சங்கம் மருவிய காலத்தை அடுத்துப் பல்வகை இலக்கியங்கள் தோன்றின. இவை பாடுபொருள், காலம், செய்யுள் எண்ணிக்கை, வடிவம், யாப்பு என்பனவற்றை அடிப்படையாகக் கொண்டு வகைப்படுத்தப்பட்டன. பல்கிப் பெருகிய இவற்றை வரையறுப்பதில் அறிஞர் சிலர் ஆர்வம் கொண்டனர். இவர்களின் ஆர்வத்தை அடியொற்றியே பாட்டியல் இலக்கணங்கள் நூல் வடிவம் பெறலாயின.

பாட்டியல் என்பது பாட்டு+இயல் எனப் பிரியும். பாட்டின் இயல்புகளை வரையறுத்து விளக்கும் இலக்கணம் என இதனைக் குறிப்பிடலாம். பாட்டு என்பது ஆகுபெயராய் அமைந்து பாட்டால் ஆகிய இலக்கியத்தைக் குறிக்கிறது. தனிநிலைச் செய்யுள்கள், தொடர்நிலைச் செய்யுள்களின் இலக்கணத்தைப் பாட்டியல் வரையறுக்கின்றது.

'பிரபந்தம்' என்ற சொல்லுக்குச் செம்மையாக யாக்கப்பட்டது அல்லது கட்டப்பட்டது என்பது பொருள். பிரபந்தம் என்ற வடசொல் தமிழில் நூல் எனப் பொருள்படும் எனக் கலைக்களஞ்சியம் கூறுகிறது. இதன்மூலம் இலக்கியங்கள் அனைத்தையும் குறிக்கும் சொல்லாக இதனைக் கருதலாம். ஆனால் பெரும்பாலானோர் சிற்றிலக்கியங்களை மட்டும் குறிக்கும் சொல்லாகவே இதனைப் பயன்படுத்துகின்றனர். பிரபந்த இலக்கணம் கூறுவனவாகிய பாட்டியல்கள் காப்பியம், புராணம், பேரிலக்கியம், சிற்றிலக்கியம் என அனைத்து இலக்கியங்களுக்குமே இலக்கணம் கூறுகின்றன. இதன்மூலம் பிரபந்தம் என்ற சொல் இலக்கியங்கள் அனைத்தையுமே உணர்த்தி நிற்பது புலப்படும். பாட்டியல் நூல்கள் பெருங்காப்பியத்தைக்கூடப் பிரபந்த வகையுள் அடக்கிக் கூறுகின்றன. ஆகையால் சிற்றிலக்கியம் என்னும் சொல்லாட்சி பொருந்தாது என மு. அருணாசலம் பிரபந்த மரபியல் முன்னுரையில் (ப. 6 அடிக்குறிப்பு) குறிப்பிடுவதும் இங்குக் கருதத்தக்கது.

பிரபந்தங்களைத் தொண்ணூற்றாறு எனக்கூறும் மரபு தமிழில் உண்டு. இன்று முதல் பாட்டியலாக நமக்குக் கிடைக்கும் பன்னிரு பாட்டியலிலோ, அதனைத் தொடர்ந்து தோன்றிய வெண்பாப் பாட்டியல், நவநீதப் பாட்டியலிலோ இவ்வெண்ணிக்கை இடம்பெறவில்லை. கி.பி. 16-ஆம் நூற்றாண்டில் தோன்றிய பிரபந்த மரபியல் என்னும் நூலிலேயே தொண்ணூற்றாறு என்னும் வரையறை முதன்முதலாக இடம் பெறுகின்றது. இதனை,

வானவர் ஏத்தும் மறையோர் முதலிய
மக்களின் னோர்க்குத் தக்க தன்மையிற்
பிள்ளைக் கவிமுதல் புராணம் ஈறாகத்
தொண்ணூற் றாறெனும் தொகைய தான
முற்பக ரியல்பை முன்னுறப் பாடும்
பிரபந்த மரபியலது பிரபந்த மரபியலே (பிர.தீபிகை. 1)

என்னும் நூற்பாவால் அறியலாம்.

பதினெட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த வீரமாமுனிவர் இயற்றிய சதுரகராதி 96 வகைப் பிரபந்தங்கள் எவை எவை என்பதையும் அவற்றின் விளக்கங்களையும் தருகிறது. மேலும் பிரபந்த தீபிகை, பிரபந்தத் திரட்டு, பொருட்டொகை நிகண்டு என்பனவும் 96 என்ற எண்ணிக்கையைக் குறிப்பிடுகின்றன. 96 எனக் குறிப்பிடும் இவையனைத்தும் ஒரே பட்டியலைத் தருவதில்லை. இவை வரையறுக்கும் பட்டியலின் வகைகள், வைப்பு முறைகளில் வேறுபாடுகள் காணப்படுகின்றன. மேலும், முற்காலத்துப் பயின்ற சில இலக்கிய வ்கைகள் இத் தொண்ணூற்றாறு என்னும் தொகையுள் சேர்க்கப்படாமலும் உள்ளன. சான்றாகக் குரவைப் பாட்டு, கந்துகவரி, பாவைப் பாட்டு, வள்ளைப் பாட்டு, பூவைநிலை, அகவல், அம்மானை, தாலாட்டு என்பவற்றைக் கூறலாம். இவ்வாறே பன்னிரு பாட்டியல் கூறும் இல்லற வெள்ளை, ஐம்படை விருத்தம், கடாநிலை, கணக்கு, (மேல், கீழ்) கலியந்தாதி, குடைமங்கலம், செந்தமிழ் மாலை, தேவபாணி, பறைநிலை, மறம், யாண்டுநிலை என்பவையும் தொண்ணூற்றாறு எனப் பிற பாட்டியல்கள் வகுக்கும் பட்டியலில் இடம்பெறவில்லை. நாளடைவில் பிரபந்தங்கள் பல தோன்றி வளர்ந்த நிலையில் பிரபந்தங்களின் எண்ணிக்கை மிகுதிப்படுவதுதான் இயல்பு. ஆனால் பன்னிரு பாட்டியலை அடுத்துத் தோன்றிய வெண்பாப் பாட்டியல், நவநீதப் பாட்டியலில் அதைவிடக் குறைவான பிரபந்தங்களே கூறப்பட்டுள்ளன. இது சிந்தனைக்குரிய ஒன்று.

மேலும் தொண்ணூற்றாறு என்னும் வரையறை பொருத்தமாக இல்லை. ஏனெனில் அவ்வரையறையுள் அடங்காத இலக்கியங்களும் உள. இதனைத் தவத்திரு தண்டபாணி சுவாமிகள் இயற்றிய அறுவகை இலக்கண நூற்பாவும் அரண்செய்கிறது.

பைந்தமிழ்ப் புலவோர் பகரும் பனுவல்  
தொண்ணூற்று ஆறுஎனச் சொல்வார் சொல்லினும்  
லகரி முதற்கொடு நொண்டிஈறு ஆகிய  
வேறுபல் விதங்களும் விளங்குகின் றனவால்  
யாமும் சிலவிதம் இயம்ப நாணுதுமே

என்னும் நூற்பாவால் இதனை அறியலாம். மேலும் இலக்கியம் படைக்கும் ஆசிரியனே அவ்விலக்கியத்திற்குப் பெயரிட வேண்டும் என்றும் அவர் வலியுறுத்துகிறார். இதனை

மழலையங் குழவியை வயிறுநொந்து ஈன்ற  
தாய்இடும் பெயரே தலைமிசைக் கொளல்போன்று  
அருந்தமிழ்ப் பனுவலும் ஆக்கியோன் அமைத்த  
பெயர்பொறுத்து உலகில் பிறங்கிடல் முறையே

என்னும் நூற்பாவால் அறியலாம்.

தமிழில் தோன்றிய பாட்டியல்களுள் காலத்தால் முந்தையதாக நமக்குக் கிடைப்பது பன்னிரு பாட்டியல். இதன் காலம் 10-ஆம் நூற்றாண்டு. இப் பாட்டியலுக்கு முன் இருந்த பாட்டியல்களின் பல செய்திகள் இந்நூலில் கூறப்பட்டுள்ளன. எனவே எட்டாம் நூற்றாண்டின் வாக்கிலேயே பாட்டியல்கள் தோன்றத் தொடங்கின எனக் கருத முடிகிறது. பன்னிரு பாட்டியல் மற்றும் வெண்பாப் பாட்டியல்களின் மூலம் மேலும் சில பாட்டியல்களைப் பற்றி அறிந்துகொள்ள முடிகிறது. வாருணப் பாட்டியல், தத்தாத்திரேயப் பாட்டியல், பண்டாரப் பாட்டியல், மாமூலனார் பாட்டியல், கல்லாடனார் கலாவியல் என்னும் பாட்டியல்களைப் பெயரளவிலோ அல்லது ஓரிரண்டு நூற்பாக்கள் அளவிலோ மட்டும் அறிந்துகொள்ள முடிகிறது.

## பாட்டியல் வளர்ச்சி

பாட்டியல்களுள் இரு நெறிகள் உள்ளன. அவை 1. அகத்தியர் நெறி, 2. இந்திரகாளியர் நெறி இவ்வாறு பகுப்பது பயனுள்ளதாக அமையுமெனினும் கிடைக்கின்ற பாட்டியல்கள் தாம் இன்ன நெறியைப் பின்பற்றுகின்றன என வெளிப்படையாகக் கூறவில்லை. மேலும் அகத்திய மற்றும் இந்திரகாளிய நெறிகளுக்கிடையே உள்ள வேறுபாடும் நமக்குத் தெளிவாகத் தெரியவில்லை.

பாட்டியலில் குறிப்பிடப்படும் இலக்கியங்களில் உள்ள சில உறுப்புகள் பிற்காலத்தில் தனித்தனி இலக்கியங்களாக வளர்ச்சி எய்தியமையும் உண்டு. சான்றாகக் கலம்பகத்தின் உறுப்புகளான ஊசல், தூது, கைக்கிளை போன்றவை பிற்காலத்தில் தனித்தனி இலக்கியங்களாயின. இதேபோல் தனியிலக்கியங்களாகச் சிறப்புற்று இருந்த இலக்கியங்கள் பின் ஓரிலக்கியத்தின் உள்ளுறுப்பாக அமைத்து விடுதலும் உண்டு. பன்னிரு பாட்டியல் குறிப்பிட்ட மறம், குறம் என்பன பிற்காலத்தில் கலம்பக உறுப்புகளாகக் கொள்ளப்பட்டன.

ஒரே பெயருடைய இலக்கியத்திற்கு வெவ்வேறான விளக்கங்களையும் பாட்டியல்கள் தருகின்றன. பாடல் எண்ணிக்கையிலோ பா வரையறுப்பதிலேயோ இவை வேறுபடுகின்றன. மேலும் ஒரு பாட்டியலில் குறிப்பிடப்படும் ஓர் இலக்கிய வகை பிற பாட்டியல்களில் இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட வகைகளாகக் கிளைத்தலும் உண்டு. 'தொகை வெண்பா' என்று நவநீதப் பாட்டியல் கூறும் இலக்கிய வகை வெண்பாப் பாட்டியலில் ஊர்நேரிசை, ஊரின்னிசை, பெயர் நேரிசை, பெயரின்னிசை என விரிகிறது. விருத்த வகை எனப் பன்னிரு பாட்டியல் கூறும் இலக்கிய வகை பிரபந்த மரபியல், நவநீதப் பாட்டியல், இலக்கண விளக்கம் என்பவற்றில் குடை விருத்தம், கோல் விருத்தம், ஊர் விருத்தம் எனத் தனித்தனி வகைகளாகின்றன.

## இலக்கியங்கள் பெயர் பெறும் முறை

பா (அந்தாதி), யாப்பு (ஊர் நேரிசை, ஊர் இன்னிசை, பெயர் நேரிசை, பெயர் இன்னிசை), பொருண்மை (உலா, மடல், ஆற்றுப்படை), சந்தம் (சிந்து, தெம்மாங்கு, வில்லுப்பாட்டு), எழுத்து (வருக்க மாலை, வருக்கக் கோவை), பாடல் எண்ணிக்கை (எண் செய்யுள், சதகம்) என்பனவற்றால் பெயர் பெறுகின்றன.

## நூல் பெயர் பெறும் முறை

இலக்கண நூல்கள் பின்வரும் முறையில் பெயர் பெறுகின்றன. நூலாசிரியர் பெயர் - (இந்திரகாளியம், நவநீதப் பாட்டியல்), நூலாசிரியரின் ஆசிரியர் பெயர் (வச்சணந்தி மாலை, சம்பந்தப் பாட்டியல்), செய்வித்தான் பெயர் (சிதம்பரப் பாட்டியல்), யாப்பு (வெண்பாப் பாட்டியல், விருத்தப்பாட்டியல்), பொருண்மை (பிரபந்த மரபியல், பொருத்த விளக்கம்), என்பவற்றால் பெயர் பெறுகின்றன. மேலும் சில பாட்டியல்கள் பிரபந்தம் எனத் தொடங்குகின்றன. சில 'பாட்டியல்' என முடிகின்றன. திரட்டு, தீபிகை, தீபம் என முடியும் பாட்டியல்களும் உள. ஒரே இலக்கணத்தை உடைய இலக்கியங்கள் வெவ்வேறு பெயரால் வழங்கப்படுதலும் உண்டு. அரிபிறப்பு என்று பன்னிரு பாட்டியல் கூறும் இலக்கியத்தை இலக்கண விளக்கம், பிரபந்த தீபிகை, முத்து வீரியம், தொன்னூல் விளக்கம் ஆகியவை உற்பவ மாலை என்றும் நவநீதப்பாட்டியல், சிதம்பரப் பாட்டியல், பிரபந்த மரபியல் ஆகியவை தசாப்பிராதுற்பவம் என்றும் கூறுகின்றன. இதேபோல் வளமடல் என்று பிற நூல்கள் கூறுவதனைப் பிரபந்த மரபியலும் சிதம்பரப் பாட்டியலும் இன்பமடல் என்று கூறுகின்றன. இவ்வாறு நாம மாலை, மெய்க்கீர்த்தி, வரலாற்று வஞ்சி என்பனவும் பெருமகிழ்ச்சி மாலை, புகழ்ச்சி மாலை என்பனவும் இயல்மொழி வாழ்த்து, வாயுறை வாழ்த்து, புறநிலை வாழ்த்து, புறநிலை என்பனவும் சின்னப்பூ, தசாங்கத்தயல், தசாங்கப்பத்து என்பனவும் கலம்பகம், பன்மணிமலை என்பனவும் பொருளால் பெரிதும் ஒப்புமை உடையனவாகும்.

சில பிரபந்தங்கள் காலப் போக்கில் வேறு பிரபந்தங்கள் உருவாக அடிப்படையாகின்றன. துயிலெடை நிலை என்பது பிற்காலத்தில் பள்ளியெழுச்சி ஆயிற்று. களவழி என்பது பரணி தோன்ற வித்திட்டது.

## பொருண்மைகள்

பாட்டியல்கள் பொதுவாகப் பின்வரும் மூன்று அடிப்படைகளை உடையவை; 1. பொருத்தங்கள் 2. பிரபந்த இலக்கணம் 3. ஒழிபியல் இம்மூன்று அடிப்படைகளும் முதல் மொழியியல், செய்யுள் மொழியியல், பொது மொழியியல் என்னும் முப் பிரிவுகளின் கீழ்

வரையறுக்கப்படுகிறது. இம்மூன்று செய்திகளுள் ஏதேனும் ஒன்றை மட்டுமே கூறிச் செல்லும் பாட்டியல்களும் உள. பிரபந்த மரபியல், பிரபந்த தீபம் இரண்டும் பிரபந்தங்களின் இலக்கணத்தை மட்டுமே கூறுகின்றன. வரையறுத்த பாட்டியல், பொருத்த விளக்கம் இரண்டும் பொருத்தங்கள் பற்றி மட்டுமே கூறுகின்றன. பன்னிரு பாட்டியல், வெண்பாப் பாட்டியல், நவநீதப் பாட்டியல், பிரபந்த தீபிகை, பிரபந்தத் திரட்டு என்பன பொருத்தங்கள் பிரபந்த இலக்கணங்களைக் கூறிச் செல்கின்றன. சிதம்பரப் பாட்டியல் யாப்பு தொடர்பான செய்திகள் பலவற்றைக் கூறுகின்றது. பிரபந்த தீபிகை, திரட்டு இரண்டும் வள்ளல்கள், தானங்கள், நாடுகள், சாதிகள், அறுபத்து நான்கு கலைகள் முதலான செய்திகளைக் கூறுகின்றன. இவை எவ்வகையில் பாட்டியலில் அடங்கும் என்பது புலனாகவில்லை. இதில் பிரபந்தத் திரட்டு கூறும் பல செய்திகளைப் புரிந்து கொள்வதில் சிக்கல் ஏற்படுகிறது. அச் செய்திகள் இயன்றவரை எளிமைப்படுத்தப்பட்டு இந்நூலில் தரப்பட்டுள்ளன. எளிமைப் படுத்த முடியாத இடங்கள் அப்படியே விடப்பட்டுள்ளன.

இலக்கண விளக்கம், முத்துவீரியம், சுவாமிநாதம், தொன்னூல் விளக்கம் என்னும் ஐந்திலக்கண நூல்களும் யாப்பதிகாரத்தின்கண் பாட்டியல் செய்திகளைக் கூறுகின்றன.

## பிரபந்தங்களின் வைப்பு முறை

பிரபந்தங்களின் வைப்பு முறையில் பாட்டியல்களிடையே வேறுபாடு காணப்படுகிறது. என முன்னரே கண்டோம். பெரும்பாலான பாட்டியல்கள் 'பிள்ளைத் தமிழ்' இலக்கியத்தையே முதலில் குறிப்பிடுகின்றன. பன்னிரு பாட்டியல் மட்டும் பிள்ளைக்குச் சாதகம் கணிக்க வேண்டும் என்ற அடிப்படையில் சாதகம் என்னும் இலக்கியத்தை முதலில் வைத்துப் பின்னர்ப் பிள்ளைத் தமிழைக் கூறுகிறது. இலக்கியங்களின் வைப்பு முறையில் இறுதியாக பரணி, பெருங்காப்பியத்தைப் பெரும்பாலான பாட்டியல்கள் வைத்துள்ளன. இனி ஒவ்வொரு பாட்டியல் குறித்தும் சில குறிப்புகளைக் காண்போம்.

## இந்திரகாளியம்

தமிழில் மறைந்துபோன நூல்கள் மிகப்பல. அவற்றுள் இந்திரகாளியமும் ஒன்று. இந்திரகாளிய நெறி எனப் பின்வந்த பாட்டியல்களுக்கு ஒரு பாதையை வகுத்துத் தந்த இந்நூல் மறைந்து போனது நம் தவக்குறைவே. உரையாசிரியர்களின் மேற்கோள்கள் வாயிலாக நமக்குச் சில இந்திரகாளிய நூற்பாக்கள் கிடைக்கின்றன. இவற்றைத் தொகுத்து க.ப. அறவாணன் அவர்கள் 'இந்திரகாளியம்' என வெளியிட்டுள்ளார். இரா. கண்ணன் அவர்களும் இப்பெயரில் நூல் வெளியிட்டுள்ளார். இவையிரண்டும் பன்னிரு பாட்டியல் முதலான பாட்டியல்களின் உரைகளில் காணக்கிடைக்கும் நூற்பாக்களைத் திரட்டித் தொகுத்து வெளியிட்டுள்ளன.

இந்திர காளியரால் இயற்றப்பட்ட இந்நூலில் நூற் பொருத்தம், இலக்கிய வகைகளின் இலக்கணம், பொதுவான செய்திகள் என்னும் முப்பொருண்மைகள் உள்ளமையை அறியமுடிகிறது.

## பன்னிரு பாட்டியல்

இன்று முழுமையாய்க் கிடைக்கும் பாட்டியல்களுள் காலத்தால் முந்தையது. இதன் காலம் பத்தாம் நூற்றாண்டு. இதன் ஆசிரியர் குறித்து வேறுபட்ட கருத்துகள் நிலவுகின்றன. 1. பன்னிரண்டு பேர் சேர்ந்து எழுதியது. 2. தம் காலத்து வழங்கிய பாட்டியல் நூல்களிலிருந்து ஒருவர் தொகுத்து அளித்தது. எழுத்தியல், சொல்லியல், இனவியல் என்னும் மூன்று இயல்களைக் கொண்ட இப் பாட்டியலில் மொத்தம் 232 நூற்பாக்கள் உள்ளன. எழுத்துகளின் பிறப்பு, பதினொரு பொருத்தங்கள், இலக்கியங்களுக்கான இலக்கணம் எனப் பாட்டியலுக்கான செய்திகள் விரிவாக எடுத்துரைக்கப்படுகின்றன. இந்நூலில் சுட்டப்படும் இலக்கியங்களின் எண்ணிக்கையை ஒவ்வொரு அறிஞரும் ஒவ்வொரு மாதிரி குறிப்பிடுகின்றனர். பதினொரு பொருத்தங்களுள் பெயர், கன்னல், புள் என்னும் பொருத்தங்கள் பிற பாட்டியல்களில்

இல்லாதவையாகும். இதேபோல் இந்நூல் குறிப்பிடும் மங்கலப் பொருத்தம் பின்வரும் பாட்டியல்களில் எழுத்துப் பொருத்தம், சொற்பொருத்தம் என்று பிரிகின்றது. இன்றும் நமக்குக் கிடைக்காத இலக்கியங்கள் சிலவற்றிற்கும் இந்நூலில் இலக்கணம் கூறப்பட்டுள்ளது.

மேற்கணக்கு, கீழ்க்கணக்கு என்ற பெயர்களில் சங்க இலக்கியங்களுக்கு இலக்கணம் கூறப்பட்டுள்ளது. இம்முறை இந்நூலில்தான் முதன்முதலாகக் காணப்படுகிறது.

## வெண்பாப் பாட்டியல்

குணவீர பண்டிதரால் பன்னிரண்டாம் நூற்றாண்டில் இயற்றப்பட்டது. இந்திரகாளிய மரபை அடியொற்றி எழுதப்பட்ட இந்நூல் முதன் மொழியியல், செய்யுளியல், பொதுவியல் என்னும் மூன்று இயல்களை உடையது. அந்தாதித் தொடையில் இந்நூல் அமைந்துள்ளது. பொருத்தங்கள் பத்து என முதன் முதலாக இந்நூலே கூறுகிறது. கவிஞர்களைக் கவி, கமகன், வாதி, வாக்கி என வகைப்படுத்திக் கவிதைகளையும் ஆசுகவி, மதுரகவி, சித்திரகவி, வித்தாரகவி என நான்காக வகைப்படுத்துகிறது. இறுதியில் கள்ளக்கவி, சார்த்துக்கவி, பிள்ளைக் கவி, வெள்ளைக்கவி என நான்கு புன் கவிஞர்களையும் கூறுகிறது. பிற பாட்டியல்களை விட மிகுந்த செல்வாக்குப் பெற்றிருந்தது இப்பாட்டியலே ஆகும்.

இக் களஞ்சியத்திற்குப் பயன்படுத்தப்பட்டுள்ள வெண்பாப் பாட்டியல் இயல் வாரியான நூற்பா எண்களைத் தந்துள்ளது. ஆனால் இக் களஞ்சியத்தில் அதன் நூற்பா எண்கள் தொடர் எண்களாகத் தரப்பட்டுள்ளன.

## நவநீதப் பாட்டியல்

14-ஆம் நூற்றாண்டில் நவநீத நடர் என்பவரால் இந்நூல் இயற்றப்பட்டது. முதன் மொழியியல் (பொருத்தவியல்) செய்யுள் மொழியியல், பொது மொழியியல் என்னும் மூன்று இயல்களையும் 108 பாடல்களையும் கொண்டது. அகத்தியர் பாட்டியலின் நெறியைப் பின்பற்றியது. கலித்துறைப் பாட்டியல் என்ற பெயரும் இதற்குண்டு. இந்நூலிற்கு இரண்டு பழைய உரைகள் உள்ளன. இவை உ.வே.சா. நூல் நிலையப் பதிப்பாக வெளிவந்துள்ளன.

## வரையறுத்த பாட்டியல்

இதன் காலம் 14-ஆம் நூற்றாண்டாக இருக்கும் என அறிஞர்கள் கருதுகின்றனர். நூலாசிரியரின் பெயர், ஊர் போன்றவற்றை அறிய முடியவில்லை. பாட்டியல் நூல்களுள் விரிவாகப் பேசப்படும் பத்துப் பொருத்தங்களுள் மங்கலப் பொருத்தம் ஒன்றை மட்டுமே இந்நூல் எடுத்துரைக்கிறது.

இன்னின்ன எழுத்துகளைப் பெயரின் முதலெழுத்தாகக் கொண்ட பாட்டுடைத் தலைவனுக்கு இலக்கியம் பாடுகையில் இன்னின்ன சொற்களையே தொடக்கமாக வைக்க வேண்டும் என விளக்குகிறது.

இந்நூல் அளவில் சிறிதாகையால் இதன் சமகால வழக்கிலிருந்த நூலாகிய வெண்பாப் பாட்டியலோடு சேர்த்தே இது பதிப்பிக்கப்பட்டிருக்கிறது.

## சிதம்பரப் பாட்டியல்

கி.பி. பதினாறாம் நூற்றாண்டில் பரஞ்சோதி என்பவரால் இயற்றப்பட்டது இந்நூல். தனிநிலைச் செய்யுள், தொடர்நிலைச் செய்யுள் என்னும் இரண்டின் இலக்கணத்தை இது கூறுகிறது. யாப்புச் செய்திகள் மிகுதியும் இந்நூலில் இடம்பெற்றுள்ளன. உறுப்பியல், செய்யுளியல், ஒழிபியல், பொருத்தவியல், மரபியல் என்னும் ஐந்தியல்கள் இதில் உள்ளன. இதில் முதல் மூன்று இயல்களில் யாப்புத் தொடர்பான செய்திகள் இடம்பெறுகின்றன. பொருத்தவியல், மரபியல் என்னும் இறுதி இரண்டு இயல்களும் பாட்டியலைப் பேசுகின்றன. இந்நூல் விருத்த யாப்பில் அமைந்துள்ளதால் விருத்தப் பாட்டியல் என்ற பெயரும் இதற்குண்டு.

## பிரபந்த மரபியல்

இது பதினாறாம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகக் கருதப்பெறுகிறது. இதன் ஆசிரியரைப் பற்றித் தெளிவாக அறிய முடியவில்லை. பொருத்த இலக்கணம் பற்றிக் கூறாத முதல் பாட்டியல் இலக்கணம் இதுவேயாகும். தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்கள் என முதன்முதலாகக் குறிப்பிடும் பாட்டியலும் பிரபந்த மரபியலே. கிடைத்துள்ள 35 நூற்பாக்களுடன் விரிவான ஆழமான முன்னுரையையும் எழுதி மு. அருணாசலம் இந்நூலைப் பதிப்பித்துள்ளார். நூல் அரங்கேற்றம், பரிசில் நிலை, குற்றமுடைய பாடல், குற்றமற்ற பாடல், இவற்றின் விளைபயன் ஆகியவற்றை விரிவாக இந்நூல் எடுத்துரைக்கிறது.

## இலக்கண விளக்கம்

17-ஆம் நூற்றாண்டில் வைத்தியநாத தேசிகரால் இயற்றப்பட்டது. மூன்று அதிகாரங்களில் ஐந்திலக்கணத்தைக் கூறுகிறது. மூன்றாம் இயலான பொருளதிகாரத்தின் இறுதியில் பாட்டியல் செய்திகள் கூறப்படுகின்றன. பிற பாட்டியல்களில் காணக்கிடைக்காத பகுப்பு நிலை ஒன்று இப்பாட்டியலில் உள்ளது. இலக்கியங்களைத் தொடர்நிலைச் செய்யுள் வகை, தனிநிலைச் செய்யுள் வகை என இரு கூறாக்கி இலக்கணம் கூறுகிறது. இந்நூலுக்கு மறுப்பாக எழுந்ததே இலக்கண விளக்கச் சூறாவளி. இதேபோல உரை, பதிப்புக்கு மறுப்பாகக் கூட மற்றொரு உரை, பதிப்பினை இந்நூல் பெற்றுள்ளது. தொல்காப்பியத்தில் கூறப்பட்டுள்ள பத்துவகைக் குற்றங்கள், முப்பத்திரண்டு வகை உத்திகள், முதல், வழி, சார்பு எனும் நூல்வகைகள் போன்ற செய்திகள் பாட்டியல் செய்திகளாக இந்நூலில் இடம்பெற்றுள்ளன.

## தொன்னூல் விளக்கம்

வீரமாமுனிவரால் இயற்றப்பட்டது. ஐந்து இலக்கணங்களை ஐந்து அதிகாரங்களில் கூறுகிறது. எல்லாப் பாட்டியல்களும் பொருத்த இலக்கணத்தை முதலில் கூறிப் பின்னர்ப் பிரபந்தங்களின் இலக்கணத்தைக் கூறும். ஆனால் இந்நூல் மறுதலையாக அமைந்துள்ளது. நூலுக்கு உரையெழுதியவரும் வீரமாமுனிவரே. நூற்பாவில் சொல்லாத செய்திகள் பலவற்றை உரையில் விளக்குகிறார் ஆசிரியர்.

## பிரபந்த தீபம்

இந்நூலாசிரியரைப் பற்றி அறிந்து கொள்ள வாய்ப்பேதும் இல்லை. இதன் காலம் 18-20 ஆம் நூற்றாண்டாக இருக்கலாம் எனக் கருதப்படுகிறது. உட்பிரிவுகள் எதுவுமில்லாமல் அகப்பொருள் என்னும் இலக்கிய வகையில் தொடங்கி சமுத்தி என்னும் இலக்கிய வகையில் முடிகிறது. பொருத்தம், வருணம் போன்றவற்றைக் கூறாது இலக்கிய வகைகளை மட்டும் கூறிச் செல்கிறது.

## பிரபந்த தீபிகை

பத்தொன்பதாம் நூற்றாண்டில் முத்து வேங்கிட சுப்பையர் என்பவரால் இயற்றப்பட்டது. இயல் பகுப்பு, அதிகாரப் பகுப்பு போன்றவை இந்நூலில் காணப்படவில்லை. பிரபந்தங்களின் இலக்கணம் கூறுவதோடு நூறுஅணிகள், தண்டி கூறும் அணிகள், விண்மாதர், நாயகி நாயகன் வகை, இராகங்கள், புராணம், மன்னர்கள் தேசம் எனப் பல பொருள் இதில் பேசப்படுகின்றன. பாட்டியலோடு தொடர்பில்லாத பல பொருள்கள் இதில் கூறப்பட்டுள்ளன.

## பிரபந்தத் திரட்டு

நூலாசிரியரின் பெயரையோ, ஊரையோ இந்நூலின் வழி அறிய முடியவில்லை காலம் 19-ஆம் நூற்றாண்டின் முற்பகுதி என இந்நூலின் முன்னுரையில் குறிப்பிடப்பட்டுள்ளது. பாயிரம் நீங்கலாகப் பத்து இயல்களை இந்நூல் கொண்டுள்ளது. அவை; திரட்டியல், புறநடையியல், கருப்பொருளியல், பொருத்தவியல், உவமாருட வியப்புச் சார்வியல், விசேடவணி வியப்புச் சார்வோரியல், ஒழிபியல், கொடையியல் என்பனவாம். பிற

பாட்டியல்களில் இருந்து இப்பாட்டியல் பெரிதும் வேறுபடுகிறது. புதுச் செய்திகள் பலவற்றுடன், பிற பாட்டியல்களில் கூறப்படாத செய்திகள் பலவும் இதில் இடம்பெறுகின்றன. ஒவ்வொரு பாட்டியலும் ஒவ்வொரு யாப்பில் அமைய இப் பிரபந்தத் திரட்டு மட்டும் ஒன்றுக்கு மேற்பட்ட யாப்பால் இயற்றப் பெற்றுள்ளது. ஐந்நிலங்கள், உவமைகள், கடவுளர்க்குரிய அணிகள், சாதிகள் குறித்து இந்நூல் கூறுவன பிற பாட்டியல்களில் இடம்பெறாதனவாகும். சித்திரகவிகள் பிற பாட்டியல்களில் பெரும்பாலும் பெயரளவில் மட்டுமே உள்ளன இந்நூல் மட்டும் அட்டநாக பந்தம், சருப்பதோபத்திரம் இரண்டிற்கும் விரிவான விளக்கங்களைத் தருகிறது.

## சுவாமிநாதம்

சாமி கவிராசரால் 19-ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்டது. விருத்தம் என்னும் யாப்பால் இந்நூல் இயற்றப்பட்டுள்ளது. ஐந்து அதிகாரங்களைக் கொண்ட இந்நூலில் யாப்பதிகாரம் என்னும் அதிகாரத்தில் பிரபந்தமரபு என்னும் இயலில் பாட்டியல் கருத்துகள் இடம்படுகின்றன. தொன்னூல் விளக்கம்போல இதுவும் முதலில் பாட்டியல் செய்திகளைக் கூறிப் பின்னர்ப் பிரபந்த இலக்கணங்களைக் கூறுகிறது. 33 இலக்கியங்களுக்குகான இலக்கணம் இடம்பெற்றுள்ளது. 15 இலக்கியங்கள் பெயரளவில் மட்டுமே சுட்டப்பெறுகின்றன.

## முத்துவீரியம்

இது 19-ஆம் நூற்றாண்டில் முத்துவீர உபாத்தியாயரால் இயற்றப்பட்டது. நான்காம் அதிகாரமாக அமைந்துள்ள யாப்பதிகாரத்தில் ஒழிபயலின் பெரும்பகுதி பாட்டியல் செய்திகளாக உள்ளன. பா, நால்வகைக் கவிகள், பொருத்தங்கள், பிரபந்தங்களுக்கான இலக்கணம் என வரிசையாக இலக்கணம் உரைக்கப்படுகிறது. தொல்காப்பியத்திற்குப் பிறகு ஐந்திலக்கணங்களை விரிவாகக் கூறும் நூல் இதுவேயாகும்.

## பொருத்த விளக்கம்

இது 19-ஆம் நூற்றாண்டில் குலாம் காதிறு நாவலரால் இயற்றப்பட்டது. பொருத்தத்தைப் பற்றி மட்டுமே இந்நூல் பேசியுள்ளது. பாட்டியல் செல்வாக்குப் பெற்றிருந்த காலத்திலேயே பொருத்த இலக்கணத்தை அறிஞர்கள் அனைவரும் பின்பற்றினர் எனக் கூறவியலாது. ஆனால் 19-ஆம் நூற்றாண்டின் இறுதியிலும் பொருத்தத்தை மட்டுமே விளக்கும் வகையில் இந்நூல் அமைந்திருப்பது வியப்பிற்குரியது.

இந்த நூல் மேற்குறித்த பாட்டியல் நூல்கள் அனைத்திலும் உள்ள கருத்துகளைத் தொகுத்து அகரவரிசையில் அடைவுசெய்து விளக்கும் களஞ்சியம் ஆதலின் பாட்டியல் களஞ்சியம் என்னும் பெயர்தாங்கி நிற்கிறது. ஒவ்வொரு பதிவும் தலைச்சொல் - விளக்கம், எந்தெந்தப் பாட்டியல் நூல்கள் என்னென்ன கூறுகின்றன. நூற்பா எண் என்னும் தகவல்களைத் தரும் அமைப்பில் அமைந்துள்ளது.

இந்நூலில் சிலவிடங்களில் ► என்னும் குறியீடு பயன்படுத்தப்பட்டிருக்கிறது. இதன் பொருள் ► இதனை அடுத்துவரும் வார்த்தையின் தலைச் சொல்லைக் காண வேண்டும் என்பதாகும். சான்றாக ஆணை என்னும் தலைச்சொல்லின் கீழ் ► பெயர் என இருந்தால் பெயர் என்னும் தலைச்சொல்லில் உள்ள தகவலைக் காணவேண்டும் என்பது இதன் பொருள்.

பாட்டியல் களஞ்சியம் செம்மை பெற எல்லா வழியிலும் துணைநின்ற தமிழ்மொழித் துறைத்தலைவர் **பேரா. வ. ஜெயதேவன்** அவர்களுக்கு என் மனம்நிறைந்த நன்றி. பாட்டியல் தொடர்பான நூல்களைக் கொடுத்துதவியதோடு ஐயங்களைத் தீர்த்துதவிய புலவர் **ப.வெ. நாகராஜன்** அவர்களுக்கும், தம்மிடம் இருந்த பாட்டியல் தொடர்பான நூல்களைக் கொடுத்துதவியதோடு அது தொடர்பான ஆய்வு நூல்களைச் சேகரிக்க உதவிய நண்பர்கள் இரமேஷ், அருள், மிதிலா ஆகியோருக்கும் மிக்க நன்றி. மெய்ப்புத் திருத்தத்தில் உதவிய அபிராமிக்கும் நன்றி. கணிப்பொறியில் விரைவாகவும் பிழையின்றியும் வடிவமைத்துக் கொடுத்த திரு இல. கணேசன் அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றி.

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அபி.சிந். | - | அபிதான சிந்தாமணி |
| இந்.காளி | - | இந்திர காளியம் |
| இல.விள. | - | இலக்கண விளக்கம் |
| சித.பா. | - | சிதம்பரப் பாட்டியல் |
| சுவாமி. | - | சுவாமிநாதம் |
| தொ.விள. | - | தொன்னூல் விளக்கம் |
| நவநீ.பா. | - | நவநீதப் பாட்டியல் |
| பன்.பா. | - | பன்னிரு பாட்டியல் |
| பிர.தீபம் | - | பிரபந்த தீபம் |
| பிர.தீபிகை | - | பிரபந்த தீபிகை |
| பிர.திர. | - | பிரபந்தத் திரட்டு |
| பிர.மர. | - | பிரபந்த மரபியல் |
| பொரு.விள. | - | பொருத்த விளக்கம் |
| மு.வீ. | - | முத்துவீரியம் |
| யா.கலம் | - | யாப்பருங்கலம் |
| யா.கல.விரு. | - | யாப்பருங்கல விருத்தியுரை |
| வரை.பா. | - | வரையறுத்த பாட்டியல் |
| வெண்.பா. | - | வெண்பாப் பாட்டியல் |

## துணைநூல் பட்டியல்


அரங்கராசன் மருதூர் ச., இலக்கண வரலாறு: பாட்டியல் நூல்கள், பாலமுருகன் பதிப்பகம், மருதூர், 1983.

அருணாசலம் மு. (ப.ஆ), பிரபந்த மரபியல், தமிழ்நாடு அரசு, சென்னை.

அன்னிதாமசு (உ.ஆ.& ப.ஆ.), பிரபந்தத் திரட்டு, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1982.

இராமலிங்கத் தம்பிரான், கொ., (உ.ஆ), வெண்பாப் பாட்டியல், சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி

கண்ணன், இரா., (ப.ஆ) இந்திரகாளியம், அப்பர் பதிப்பகம், சென்னை, 2003.

கண்ணன், இரா., (உ.ஆ.& ப.ஆ) பொருத்த விளக்கம் கூத்தன் பதிப்பகம், சென்னை, 2003.

கண்ணன், இரா., (உ.ஆ) வெண்பாப் பாட்டியல், அப்பர் பதிப்பகம், சென்னை, 2005.

கலியாண சுந்தரையர், எஸ்., கணபதி ஐயர் எஸ்.ஜி., (ப.ஆ) நவநீதப் பாட்டியல், உ.வே.சா. நூல் நிலையம், சென்னை, 1961.

கோபாலையர் தி.வே. (ப.ஆ) இலக்கண விளக்கம் (பொருளதிகாரம் - பாட்டியல்), தஞ்சை சரசுவதி மகால், தஞ்சாவூர், 1974.

கோவிந்தராச முதலியார் (உ.ஆ), பன்னிரு பாட்டியல், சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், 1970.

சண்முகம் செ.வை., (ப.ஆ), சுவாமி நாதம், இளங்கோ அச்சகம், பாண்டிச்சேரி, 1975.

சிங்காரவேலு முதலியார் ஆ., அபிதான சிந்தாமணி, ஏசியன் எஜிகேஷனல் சர்வீஸஸ், 1981.

சுப்பிரமணியன், ச.வே., (தொ.ஆ), இலக்கணத் தொகை - யாப்பு பாட்டியல் தமிழ்ப் பதிப்பகம், சென்னை, 1978.

சுப்பிரமணியன், ச.வே. (ப.ஆ.), தொன்னூல் விளக்கம், தமிழ்ப் பதிப்பகம், அடையாறு.

சுப்பிரமணியன், ச.வே. (ப.ஆ.), பிரபந்த தீபம், தமிழ்ப் பதிப்பகம், சென்னை, 1980.

சுப்பிரமணியன், ச.வே. (ப.ஆ.), பிரபந்த தீபிகை, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1982.

மணிகண்டன், ய., (ப.ஆ), சிதம்பரப் பாட்டியல், சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர், 2002.

முத்துச் சண்முகம், நிர்மலா மோகன், சிற்றிலக்கியங்களின் தோற்றமும் வகையும், முத்துப் பதிப்பகம், மதுரை, 1979.

நலங்கிள்ளி அரங்க. பாட்டியல்கள் ஓர் அறிமுகம், வாணிதாசன் பதிப்பகம், புதுவை, 1986.

நலங்கிள்ளி அரங்க. பாட்டியல்கள் ஓர் ஒப்பாய்வு

## அ

**அ**

1. முதல்வன் (நான்முகன்) படைத்த எழுத்துகளுள் ஒன்று *(பன். பா. 3; வெண். பா. 9; நவநீ. பா. 11; சித. பா. 21)*
2. சிவன் படைத்த எழுத்துகளுள் ஒன்று *(சுவாமி. 175)*
3. அந்தண சாதிக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 5; வெண்.பா. 9; நவநீ.பா. 12; சித.பா. 21; இல.விள. 774; தொ.விள. 291, பிர.திர. 135; சுவாமி. 175; மு.வீ. 1033; பொரு.விள. 33)*
4. வானவர் (தேவ/தெய்வ) கதிக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 14; வெண்.பா. 18; நவநீ.பா. 20; சித.பா. 24; இல.விள. 798; தொ.விள. 293; பிர.திர. 152; சுவாமி. 176; மு.வீ. 1036)*
5. அமுத எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 20; வெண்.பா. 7; நவநீ.பா. 10, சித.பா. 20; இல.விள. 779; தொ.விள 290; பிர.திர. 128; சுவாமி. 175; மு.வீ 1032; பொரு.விள. 27)*
6. ஆண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 26; வெண்.பா. 6; நவநீ.பா. 7; சித.பா 20; இல.விள. 773; தொ.விள 289; பிர.திர. 124; சுவாமி 174; மு.வீ 1031, பொரு.விள. 20)*
7. கார்த்திகை நாளுக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா 41; வெண்.பா 11, நவநீ.பா 31; சித.பா. 23; இல.விள 785; தொ.விள 292. பிர.திர. 142; மு.வீ. 1034; பொரு.விள. 37)*
8. கங்கை என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை. பா. 7)*; பூ, மணி, முந்நீர், கடல், கார் என்னும் மங்கலச் சொற்களுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.தீபிகை 3)*

**அக்கரவிலக்கணம்**

அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 72)*

**அக்கினி**

இசைக்குரிய தேவர்களுள் ஒருவர் *(பிர.திர. 92)*

**அக்கினிஸ்தம்பனம்**

அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 72)*

**அக்காரக்கனிநச்சுமன்**

சங்கப் புலவர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை. 85)*

**அகத்தியர் சீற்றம்**

தன்னைப் பிரியாது பருந்தும் நிழலும் போன்று இருந்த தொல்காப்பியருடன் அகத்தியர் ஆறாயிரம் ஆண்டுகள் சினம் கொண்டிருந்தார் *(பிர.திர. 412)*

**அகப்பொருட் கோவை**

1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(சுவாமி. 165)*
2. ► கோவை *(வெண்.பா. 37; நவநீ.பா 54; பிர.மர. 7; சித.பா. 30; இல.விள. 816; சுவாமி. 167)*
3. திணை முதலாகத் துறை ஈறாகக் கூறப்பட்ட பன்னிரண்டு அகப்பாட்டு உறுப்பும் வழுவின்றித் தோன்ற அகவல், வெண்பா, கலிப்பா, வஞ்சிப்பா, வண்ணம் இவற்றால் பாடப்படும் இலக்கியம் *(மு.வீ. 1042)*
4. இரண்டு முதற்பொருள், பதினான்கு கருப்பொருள், பத்து உரிப்பொருள் பன்னிரண்டு அகப்பாட்டு உறுப்புகள் இவற்றைக் கொண்டு களவியல், கற்பியல், வரைவியல் முதலியவற்றைக் காட்டிக் கலித்துறையில் பாடும் இலக்கியம். *(பிர.தீபிகை. 8; பிர.தீபம். 1)*

**அகம்பிடார்**

குலப் பெயர்களுள் ஒன்று *(பிர.திர. 363)*

**அகலக்கவி**

1. ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்னும் நால்வகைக் கவிகளுள் வித்தாரக் கவியையும் அவ்வகைக் கவியை இயற்றும் புலவரையும் குறிக்கும் பொதுச் சொல்.
2. *அகலக்கவி பெயர் பெறும் முறை*

   தொழில், அளவு, காலம், இடம், பொருள், பா, உறுப்பு, எல்லை, பாடினான் பெயர், பாடுவித்தான் பெயர், பாடப்படும் பொருள் என்பவற்றாலும் பிறவற்றாலும் பாடப்பெறும். *(வெண்.பா. 66)*, *முதல் நூல், தன்மை, மிகுதி, இடுகுறி என்பனவற்றாலும் பெயர் பெறும்.* *(சித.பா. 43; இல.விள. 876; தொ.விள. 300; சுவாமி. 162)*

| | நூற் பெயருக் கான அடிப்படை | நூற் பெயர் | பாட்டியல் நூல்கள் |
|---|---|---|---|
| 1 | அடி | கழிநெடில், திருவிருக்குறள் | சித.பா. 16 |
| 2 | அளவு | பன்னிரு படலம், நூற்றந்தாதி குறுந்தொகை, நெடுந்தொகை, நாலடியார் | வெண்.பா. 66; நவநீ.பா. 66; சித.பா. 43; இல.விள. 876; தொ.விள. 253 |
| 3. | இசை | சந்தத்தாழிசை | சித.பா. 16 |
| 4. | இடம் | களவழி, ஐந்திணை, மதுரைக் காஞ்சி, பட்டினப்பாலை | வெண்.பா. 66; நவநீ.பா. 66; இல.விள. 876; தொ.விள. 253 சுவாமி. 162 |
| 5. | இடுகுறி | கலைக்கோட்டுத்தண்டு, நிகண்டுகள் | வெண்.பா. 66; நவநீ.பா. 66; சித.பா. 43 |
| 6. | உறுப்பு | அங்கமாலை, பயோதரப்பத்து நயனப்பத்து | வெண்.பா. 66; இல.விள. 876 |
| 7. | எண் | அகநானூறு | சித.பா. 16 |
| 8. | எல்லை | கேசாதி பாதம், பாதாதி கேசம் | வெண்.பா. 66 |
| 9 | எழுத் தெண்ணிக்கை | கட்டளைக் கலித்துறை | சித.பா. 16 |
| 10. | ஒருவர் உரைத்தது | நான்மணிக்கடிகை | நவநீ.பா. 66; சுவாமி. 162 |
| 11. | கலை | அச்சுக்கலை | சித.பா. 16 |
| 12. | காரணம் | திருவெம்பாவை | சித.பா. 16 |
| 13. | காலம் | கார்நாற்பது, வேனில் விருத்தம் வசந்த மாலை | வெண்.பா. 66; நவநீ.பா. 66; இல.விள. 876; தொ.விள. 253 சுவாமி. 162 |
| 14. | தன்மை | சிந்தாமணி, சூளாமணி, நன்னூல் | சித.பா. 43 |
| 15. | தொழில் | யானைத் தொழில், ஊசல் ஊடல் மாலை, கூடல்மாலை | வெண்.பா. 66; நவநீ.பா. 66; இல.விள. 876; சுவாமி. 162 |
| 16. | பல்லோர் உரைத்தது | அகநானூறு | நவநீ.பா. 66; சுவாமி. 162 |
| 17. | பா | கலித்தொகை, வெண்பாமாலை பரிபாடல் | நவநீ.பா. 66; சித.பா. 43; சுவாமி. 162; தொ.விள. 253 |
| 18. | பாடு பொருள் | ஆசாரக் கோவை, அகநானூறு புறநானூறு, கந்த புராணம், கூர்ம புராணம் | வெண்.பா. 66; நவநீ.பா. 66; சித.பா. 43 இல.விள. 876; சுவாமி. 162; தொ.விள. 253 |
| 19. | பாடினான் பெயர் | தொல்காப்பியம், அவிநயம் கல்லாடம், அகத்தியம் | வெண்.பா. 66; நவநீ.பா. 66; சித.பா. 43 இல.விள. 876 |
| 20. | பாடுவித் தான்பெயர் | பாண்டிக்கோவை, சாதவாகனம் | வெண்.பா. 66; நவநீ.பா. 66; சித.பா. 43 இல.விள. 876 |
| 21. | மிகுதி | களவியல் | சித.பா. 43 |
| 22. | முதல்நூலால் பெயர் பெறல் | ஆசிரியப் படலம், பாரதம் | சித.பா. 43 |

2.1 மங்கலச் சொல்லைப் பொருளுடையதாக அமைத்துத் தொடர்ந்துவரும் சொற்களையும் பொருளுடையதாக அமைத்துப் பாடுவது அகலக்கவி *(பிர.திர. 118)*

2.2 முதற்சீரில் மூவசைச்சீர் (காய்ச்சீர், கனிச்சீர்) அமையாது, நன்மை பயக்கின்ற இறைவனைச் சொல்லி முன்மொழிக்கு உரியனவாகத் தொன்மை இலக்கணங்கள் கூறியவற்றைக் காட்டுவது *(வெண்.பா. 21)*

2.3 அகப்பொருளைச் சொல்லும் ஆசிரியப் பாவில் வஞ்சியடி விரவாது. அகப்பொருள் மேலன்றிக் கலிப்பா பெரும்பான்மையும் வராது. வஞ்சிப்பா தனித்து நின்று பொருள் தரும் தொகையின்கண் துணையல்லாது வரும் (ஆசிரிய சுரிதகத்துடன் வரும்) *(வெண்.பா. 65; இல.விள 875)*

3. *அகலக்கவி செய்வார் இலக்கணம்*

இயலிசை நாடகம் உணர்ந்தவர்கள், அனைத்துப் பொருள்களையும் மயக்கமற உணர்ந்தவர்கள், நால்வகை வருணத்தார், உயர்நெறியில் நிற்போர், அவையினரால் மதிக்கப்படுபவர், இறைவனை மனதில் நிறுத்தியவர். *(வெண்.பா. 75; நவநீ.பா. 97; சித.பா. 44)*

3.1 பாடும் முறை, பா, பா விகற்பம் இவற்றில் தெளிவுடையவராய் நூற்புலமையைச் செப்புபவர், பாடவல்லவர், தகு நலம், குணம், தெய்வ நம்பிக்கை, மேன்மை யுடைமை, அழகு, சமய நூல் அறிந்தமை, பிறமொழி இலக்கண அறிவுடைமை, தேர்ச்சி பெற்று விரைந்து பாடும் நாவினனாதல், உடல் உறுப்புகளில் குறைவு இல்லாதவனாய் இருத்தல், அறம் முதலான நாற்பொருள் உணர்ந்து கலைக்கு ஞானியாய் விளங்குதல் என்னும் திறங்கள் புலமைக்குரிய இலக்கணம் *(பிர.மர 28, 29; சித.பா. 44; பிர.திர. 400)*

3.2 பாடுவோர் வயது 30 - 70 என சிதம்பரப் பாட்டியல் குறிப்பிடுகிறது.

3.3 வயது இருபதிற்கு மேலாகவும் எழுபதிற்கு உள்ளாகவும் இருப்பவர். உடல் உறுப்புகளில் குறைபாடு இல்லாதவர், அறநெறியின் பரிசுடையவராய் இருப்பவர். *(நவநீ.பா. 98; இல.விள. 938; பிர.திர. 400)*

4. *அகலக்கவி பெறுவோர் இலக்கணம்*

20-70 வயதுக்கு இடைப்பட்டவர், உடல் உறுப்புகளில் குறைபாடு இல்லாதவர், நோயற்றவர் *(வெண்.பா. 75)*

5. *அகலக்கவி கேட்கும் முகூர்த்தம்*

அ ஆ, இ ஈ ஐ, உ ஊ ஔ, எ ஏ, ஒ ஓ இவை முறையே உதயாதி ஆறு நாழிகையில் உதிக்கும்; இவற்றுள் முதல் மூன்று நாழிகை உத்தமம், பின் மூன்று நாழிகை ஆகாது. *(வெண்.பா. 94; இல.விள 937)*

5.1 மொழியின்கண் முன் ஆராய்ந்தவற்றையும் அழகாகச் சொல்லியவற்றையும் அன்றி, செய்யுளுக்கு உரைத்த எல்லாவற்றையும் குற்றமின்றிச் செய்தல் நலம்; இல்லையெனில் தீது *(வெண்.பா. 95)*

5.2 தீதில்லாத நூலுரைத்த தீதில்லாச் செய்யுளை நல்லவர் நிறைந்த நல்லவையில் சேர்த்து, அதன்பின் முதல்சொல் பாவிற்கேற்றவாறு உரைப்பின் பலபொருளும் குற்றமிலாப் பொருளோடு சேர்ந்து வரும் *(வெண்.பா. 96)*

5.3 நன்கு உணர்ந்து ஆராய்ந்த தமிழ்நூலின் நன்னெறியை முன்பு உணர்ந்து, பாட்டியல் நூலை முற்றுணர்ந்து பின்னர் உணரும் நல்லார் முன் கவியுரைக்கும் வல்லமையாதல் அறிவுடைமை. *(வெண்.பா. 98)*

6. *கொள்வோர் பெறும் பயன்*

பத்துவகைப் பொருத்தமும் அமைந்த முதற்பா முதற்சீரைக் கொண்ட நன்மைதரும் பிரபந்தத்தைப் பெற்ற புரவலன் புகழால் நிறைமதி போலவும் உருவத்தால் இளஞாயிறு போலவும் சிறந்து இவ்வுலகில் சிறப்போடு வீற்றிருப்பான். *(இல.விள. 940)*

7. *அகலகவிக்குப் புறனடை*

சொல்லப்பட்ட பத்துவகைப் பொருத்த இலக்கணத்தில் எவ்வகைக் குறைவுமின்றி தெளிந்த மூவசைச் சீரால் அகலக்கவி பாடப்பெறும். தேறிய என்றதனால் விலக்கப்பட்ட நஞ்செழுத்துகளும் கதிப் பொருத்தத்தில் விலக்கப்பட்ட எழுத்துகளும் மங்கலச் சொல்லில் வரின் அமுதமாய்க் கருதப்படும். *(இல.விள. 804)*

**அகலவுரை**

உரைவகைகளுள் ஒன்று *(இல.விள. 903, உரை)*

**அகவற்பா**

1. ஆசிரியப்பா ஈரசைச்சீரால் இயல்வது *(பன்.பா. 55)*
2. அரச சாதிக்குரியது *(பன்.பா. 92; வெண்.பா. 69, நவநீ.பா. 82; பிர.மர. 24; இல.விள. 877, தொ.விள. 296; மு.வீ. 1013; பிர.திர 417)*
3. இறைவனுக்குரிய பா *(பிர.திர. 417)*
4. அகவற்பா, பெருமையுடைய மலர்மகளின் செங்கையில் பொருந்திய தாமரை மலர் ஆகையினால் உலகில் மிகுதியான பயிற்சி உடையது; பழைய நூல்களும் அவற்றை மிகுதியாகக் கொள்ளும். விகனன் கம்பன் என்பவர்க்குக் கும்பன், ஆரணக் கவிஞன் என்பவர் குறைவுற்றமை இதற்குச் சான்று. *(பிர.திர. 431)*

அங்கம்

ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று *(பிர.திர. 500-502; பிர.தீபிகை. 99)*

அங்கமாலை

1. ஆண், பெண்களின் அவயவங்களை வெண்பாவாலும் வெளிவிருத்தத்தாலும் பாதாதிகேசம், கேசாதிபாதம் என்னும் முறை தவறாது அந்தாதித் தொடையில் பாடும் சிற்றிலக்கியம். *(வெண்.பா 51; நவநீ.பா. 48; பிர.மர. 12)*
2. வெளிவிருத்தத்தால் உரைக்கப்படுவது *(சித.பா. 35; இல.விள 835; (பிர.திர. 23; மு.வீ. 1046; பிர.தீபிகை. 9, பிர.தீபம். 2)*
3. கலிவெண்பா, வெளிவிருத்தத்தால் உரைப்பது *(தொ.விள. 262)*

அங்கி

அக்கினி கணங்களுள் ஒன்று *(இந் காளி 12; பன் பா 57)*

அங்கிசம்

முப்பத்திரண்டு உபநிடதங்களுள் ஒன்று *(பிர.தீபிகை 59)*

அங்கிரன்

பதினென் மிருதிகளுள் ஒன்று *(பிர தீபிகை. 58)*

அச்சுமன்

சங்கப் புலவர்களுள் ஒருவர். *(பிர தீபிகை. 85)*

அச்சுவினி/அசுபதி/அசுவநி/அசுவதி

நாளுக்கு உரிய எழுத்துகள் - சு, சூ, செ, சே, சை *(பன் பா 43; வெண் பா. 13; நவநீ.பா 15; சித.பா. 23; இல விள 788, தொ.விள. 292, பிர திர. 143; மு வீ 1034; பொரு.விள. 45)*

அச்சோவா

ஆண்பால் பிள்ளைப்பாட்டு நிலைகளுள் ஒன்று *(பன்.பா. 102, உரை)*

அசாவேரி

வசந்தகாலத்து இராகங்களுள் ஒன்று *(பிர.தீபிகை 55)*

அசிதம்

இருபத்தெட்டுச் சிவாகமங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 60)*

அசுரபாஷை

இடப்பக்கமாகச் சுழித்து எழுதப்படும் எழுத்துகளை உடைய மொழி *(பிர திர 456)*

அசுரம்

எண்வகை மணங்களுள் ஒன்று; வில்லை வளைத்தல், சுழற்பொறி எய்தல் முதலியன செய்தவருக்கு இப்பெண் மனைவியாவாள் என அறிவித்து, அது செய்தவனுக்கு அவளை அளிப்பது *(பிர திர 359)*

அசுரமாதர்

1. பாற்கடல் போன்ற முகத்தினர்;
2. மல்லிகை மலரைத் தாங்குவர்;
3. அசோக மரநிழலில் தங்குவர்;
4. தம் தோழியரை மல்லி என்பர்;
5. நெருங்குகின்ற இறைவனைச் சவிந்து (சமித்து - கஞ்சாச் செடி) என்பர். *(பிர.திர. 454)*

அசுவபரிட்சை

அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 72)*

அசுவினி

வஞ்சிப் பாவிற்கு உரிய நாள்களுள் ஒன்று *(பன் பா. 94; வெண்.பா. 70; இல.விள. 881, தொ விள 298; மு வீ 1015. பிர திர. 417)*

அசோகு

1. காமனின் ஐங்கணைகளுள் ஒன்று *(பன்.பா 186)*
2. மஞ்சரிக்கு உரிய பத்துவகை மரங்களுள் ஒன்று *(பிர திர 35)*
3. பெண்டிர் அணியும் மலர் மாலைகளுள் ஒன்று *(பிர திர. 201)*

அஞ்சித முகம்

முகநிலைகள் பதினான்கனுள் ஒன்று; சில வருத்தத்தினால் இரண்டு தோள் மீது தலை சாய்த்து அமைவது. *(பிர தீபிகை. 73)*

**அஞ்சுமான்**

இருபத்தெட்டுச் சிவாகமங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 60)*

## அட்டதிக்குப் பாலர்க்குரிய தேவியர், நாள்

சுதை (ஸ்வதா) சுவாகி (ஸ்வாகா), கேசரி, விந்தை, சவுசலை, சுரசை, மாந்தினி, பாகை, பாரி. அத்தம், கார்த்திகை, கேட்டை, முக்குளம், சோதி, சதையம், மிருகசீரிடம் *(பிர.திர 264)*
இந்திரன் - இந்திராணி; அக்னி - சுவாகாதேவி; யமன் - சியாமளா; நிருதி - தீர்காதேவி; வருணன் - காளிகா; வாயு - அஞ்சனா தேவி; குபேரன் - சித்திரரேகா; ஈசன் - பார்வதி.

**அட்டநாகங்கள்**

1. அனந்தன், வாசுகி, தற்கண், கார்க்கோடன், பற்பன், மாபற்பன், சங்கன், குளிகன் *(பிர.திர 273)*
2. *அட்டநாகங்களின் சாதிப்பகுப்பு*
   அனந்தன், குளிகன் - அந்தணசாதி
   வாசுகி, சங்கபாலன் - அரச சாதி
   தக்கன், மாபற்பன் - வணிக சாதி
   கார்க்கோடன், பற்பன் - சூத்திர சாதி *(பிர.திர. 274)*

2.1 *அட்டநாகங்களின் பண்புகள்*
வாரத்தின் ஏழுநாட்களிலும் சனிக் கிழமையின் இரவுநேரத்திலும் முறையாக இந்நாகங்கள் இரை உண்ணும் நோக்கத்துடன் எழும். ஆடல் புரியும்போது தலைதூக்கி அமையும். பாம்பினைச் சேவை செய்கையில் பெண்களுக்கு உரியது தென் திசை *(பிர.திர. 275)*

2.2 *அட்டநாகங்கள் முட்டையிட்டுக் குஞ்சு பொரித்தல்*
படமுடைய பாம்புகளின் இணைச் சேர்க்கை ஆடிமாதம் நிகழும். முட்டையிடுவது கார்த்திகை மாதம். நானூற்று எண்பது முட்டைகளை இருபத்தெட்டு நாட்களில் இட்டு, ஏழு நாட்களில் அவற்றில் இருநூற்றிருபத்தெட்டு முட்டைகளைக் குடித்து, இருபதாக அணைத்த முட்டைகளில் நான்கு கெட, இருபத்து ஏழு நாட்களில் அரவக் குஞ்சுகள் பிறக்கும் *(பிர.திர 276)*

2.3 அட்ட நாகங்களுக்கு மனைவியர் முதலிய அணிகள் எல்லாம் பொருந்தும். அவர் முன்னோர் ஏற்ற அணியும் பின் அணிந்தனவும் மறுபெயராகவும் விரித்துரைக்கப்பட்டன. வெளிப்படையாக அன்றிக் குறிப்பாக அமைந்த இவற்றைப் பதினெண் புராணங்களில் காணலாம். (பிர.திர. 279)

**அட்ட நாகபந்தம்**

1. எட்டு நாகங்கள் பிணைந்த படத்தில் பொருந்தும்படியான எழுத்துகளால் இயற்றப்பெறும், தளை ஓசை பிழையாத வெண்பாவையுடைய இலக்கியம் *(பிர.திர 60)*
2. பன்னிரண்டு அல்லது பதினாறு எழுத்துகள் தலைப்பகுதியிலும் ஏனையவை உடல் பகுதியிலும் வரும்படி வெண்பாவாலோ, வண்ணத்திலோ பாடி, அதில் இறைவன் அல்லது மனிதனின் பெயரோ, ஊரோ அல்லது பிறவோ விளங்கும்படி அமைக்கும் இலக்கியம் *(பிர.திர 61)*
3. எழுத்து ஒத்துவரும் வண்ணச் செய்யுளின் நெறிபிழையாது அகம், புறத்துறைகளைப் பாடலாம். முதல் மூன்றடிகளில் ஊர்ப்பெயர் வரலாம். மோனை, எதுகை இருத்தல் வேண்டும். இவ்வரையறைகளை உடைய இலக்கியம் *(பிர.திர. 62)*
4. எழுத்து ஒத்துவருவதற்காக நெடிலைக் குறிலாகவும் குறிலை நெடிலாகவும் உயிர்மெய்யை ஒற்றாகவும் ஒற்றை உயிர்மெய்யாகவும் ஆக்கிக் கொள்ளல் உண்டு ஒரு வாலில் பதிக்கப்பட்ட எழுத்துகளின் எண்ணிக்கை மற்ற ஏழு பாம்புகளின் வால்களிலும் ஒத்து வரவேண்டும் *(பிர.திர. 63)*
5. தத்தம் உடலிலும், பிறிதொன்றோடு இணையும் இடத்திலும் உள்ள எழுத்துகளின் மொத்த எண்ணிக்கை 408. கோட்டிலமையும் எழுத்துகளின் எண்ணிக்கை 332. மூலைகளில் நான்கு, தலையில் ஐந்து, இடையில் நாற்பது, வாலில் இருபது அல்லது இருபத்து நான்கு என்னும் முறையில் அமையும் *(பிர.திர. 64)*
6. மற்றொரு வகை 480 எழுத்துகளைக் கொண்டது. இதில் ஒத்துவரும் எழுத்துகள் நீங்க, 384 எழுத்துகளைப் பெற்று வயிறு, தலை, இடை ஆகியவற்றில் ஐந்தும் வாலில் பத்தொன்பது எழுத்தும் பெற்று மொத்தம் 128 எழுத்துகளில் அமைகிறது. *(பிர.திர 65)* (பின்னிரு வகைகளுக்கு இலக்கியமும் சித்திரமும் கிடைக்கவில்லை.)

**அட்டமங்கலம்**

1. சிற்றிலக்கியப் பா இனங்களுள் ஒன்று *(பன்.பா 99)*
2. தொடர்நிலைச் செய்யுள் வகைகளுள் ஒன்று *(இல.விள 805)*
3. பாட்டுடைத் தலைவனைக் காக்குமாறு ஒவ்வொரு செய்யுளிலும் வேண்டிக் கடவுளைத் துதிக்கும் எண்வகை ஆசிரிய விருத்தத்தால் ஆகிய நூல் *(பன்.பா. 189; வெண்.பா. 46; நவநீ.பா. 52)*
4. அந்தாதித்துப் பாடப்படும் இலக்கியம் *(பிர.மர. 11; சித.பா 34)*

5. கடவுளைப் பாடி, அக்கடவுள் காக்க வேண்டிப் பாடும் இலக்கியம். *(இல.விள. 843; தொ.விள. 274; மு.வீ. 1047; பிர.தீபிகை. 9)*
6. பரம்பொருளை எட்டு ஆசிரிய விருத்தத்தால் பாடுதல், ஒவ்வொரு பாடலுக்கும் ஒவ்வொரு மங்கலம் அமையும்படி பாடுதல் வேண்டும். *(பிர.தீபம். 3)*

அட்டவித சமரம்

காதலர் ஒப்பனை, ஆசைமயக்கம், இன்பமொழிகள், காமன் பஞ்சபாணம் எய்தல் ஆகிய எண்வகைக் காமன் போர்கள் *(பிர.திர. 473)*

அடலிள விடை

ஆண்பால் பிள்ளைப்பாட்டுக்குரியதும் ஆண்மகற்குப் பன்னிரண்டாம் வயதில் கூறுதற்குரியது மான உவமைகளுள் ஒன்று *(பன்.பா. 114)*

அடாணா

வகுப்புறு இராகங்கள் முப்பத்திரண்டனுள் ஒன்று *(பிர.தீபிகை. 53)*

அடி

சீர்கள் இணைந்து யாக்கப்பெறுவது *(சித பா. 5)*

அடிஇயைபு

1. தொடை வகைகளுள் ஒன்று; 2. அடிதோறும் இறுதியில் நின்ற எழுத்தாலோ, அசையாலோ, சீராலோ தம்முள் ஒன்றி வரத் தொடுக்கப்படும் இயைபு *(சித.பா. 6)*

(எ-டு) இன்னகைத் துவர்வாய்க் கிளவியும் **அணங்கே**
நன்மா மேனிச் சுணங்குமார் **அணங்கே**
ஆடமைத் தோளிக் கூடலும் **அணங்கே**
அரிமதர் மழைக்கணும் **அணங்கே**
திருநுதற் பொறித்த திலகமும் **அணங்கே**

*(மேற்: யா.விருத்தியுரை நூ. 40, யா.காரிகை. 18, உரை, சித.பா.ப. 21)*

அடிமயக்கம்

தாழிசை, துறை, விருத்தம் என்னும் பாவினங்களில் அடி நியமமில்லாமல் மயங்கல் உண்டு *(சித பா. 13)*

அடிமறிமண்டில ஆசிரியப்பா

பாடலின் அடிகளை மாறி மாறிப் படித்தாலும் பொருள் மாறாது ஒத்து முடியும் செய்யுள் *(சித.பா 9)*

(எ-டு) சூரல் பம்பிய சிறுகான் யாறே
சூரர மகளிர் ஆரணங் கினரே
வாரல் எனிலே யானஞ் சுவலே
சாரல் நாட நீவர லாறே

*(மேற்: யா.கல விருத்தியுரை நூ. 73, 95; யா.காரிகை 28, உரை; தொல்.செய். 113, இளம். உரை; சித பா.ப. 41)*

அடிமுரண்

1. தொடை வகைகளுள் ஒன்று; 2. அடிதோறும் முதல்சீர் மறுதலைப்பட இயற்றப்பெறும் செய்யுள் *(சித.பா. 6)*

(எ-டு) **இருள்பரந்** தன்ன மாநீர் மருங்கில்
**நிலவுக்குவிந்** தன்ன வெண்மணல் ஒருசிறை
**இரும்பின்** அன்ன கருங்கோட்டுப் புன்னை
**பொன்னின்** அன்ன நுண்டா திறைக்கும்
**சிறுகுடிப்** பரதவர் மடமகள்
**பெருமதர்** மழைக்கணும் உடையவால் அணங்கே.

*(மேற்: யா.கல விருத்தியுரை நூ. 38; யா.காரிகை 18, உரை; சித.பா.ப. 22)*

அடி மோனை

1. தொடை வகைகளுள் ஒன்று; 2. இரண்டு அடிகளின் முதற்சீரின் முதலெழுத்து ஒன்றி வருதல். *(சித.பா. 6)*

(எ-டு) மாவும் புள்ளும் வதிவயிற் படர
மாநீர் விரிந்த பூவுங் கூம்ப
மாலை தொடுத்த கோதையுங் கமழ
மாலை வந்த வாடையின்
மாயோள் இன்னுயிர்ப் புறத்திறுத் தற்றே

*(மேற்: யா.கல விருத்தியுரை நூ. 35, 37; யா.காரிகை 18,41 உரை; சித.பா.ப. 21)*

**அடியளபெடை**

1. தொடை வகைகளுள் ஒன்று; 2. அடிதோறும் அளபெடுத்தொன்றி வரும்வகையில் இயற்றப்பெறும் செய்யுள்; இதில் முதலடிக்கேற்ப இரண்டாம் அடியிலும் அளபெடை வரவேண்டும். *(சித.பா.6)*

(எ-டு) ஆஅ அளிய அலவன்றன் பார்ப்பினோ
ஈஇர இரைகொண் டீரளைப் பள்ளியுள்
தூஉம் திரையலைப்பத் துஞ்சா திறைவன்தோள்
மேஎ வலைப்பட்ட நம்போல் நறுநுதால்
ஓஒ உழக்கும் துயர்

*(மேற்: யா.கல விருத்தியுரை நூ. 41; யா.காரிகை 18, உரை; சித.பா.ப. 22)*

**அடியெதுகை**

1. தொடை வகைகளுள் ஒன்று; 2. அடிதோறும் இரண்டாம் எழுத்து ஒன்றிவரும் வகையில் இயற்றப்பெறும் செய்யுள். *(சித.பா. 6)*

(எ-டு) தேம்பழுத் தினியநீர் மூன்றுந் தீம்பலா
மேம்பழுத் தளிந்தன சுளையும் வேரியு
மாம்பழக் கனிகளும் மதுத்தண் டீட்டமுந்
தாம்பழுத் துளசில தவள மாடமே.

*(மேற்: சூளாமணி 49; யா.விருத்தியுரை நூ. 24; யா. காரிகை 13, உரை; சித பா ப. 21)*

**அடி வகைகள்**

1. குறளடி, 2. சிந்தடி, 3. அளவடி, 4. நெடிலடி, 5. அறுசீர்க் கழிநெடிலடி, 6. எழுசீர்க் கழிநெடிலடி, 7. ஒன்பதின்சீர்க் கழிநெடிலடி *(சித.பா. 5)*

**அடைதாளம்**

எழுவகைத் தாளங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 49)*

**அண்டகோசம்**

1. உலகின் இயல்பை ஒட்டி வகுப்பு, கலிவெண்பாவால் இயற்றப்படும் இலக்கியம் *(பிர.திர. 44)*
2. இவ்விலக்கியத்தின் மதிப்பு 64,000 பொன் *(பிர.திர. 87)*

**அணி**

மங்கலச் சொற்களுள் ஒன்று *(தொ.விள. 285; சுவாமி. 173)*

**அணிகள்**

| வ.எண் | அணி | எண்ணிக்கை | வகைகள் *(தண்டி)* |
|---|---|---|---|
| 1. | தன்மை | 4 | பொருள் தன்மை, குணத்தன்மை, சாதித்தன்மை, தொழில் தன்மை. |
| 2 | உவமை | 35 | பண்பு உவமை, தொழில் உவமை, பயன் உவமை, விரி உவமை, தொகை உவமை, இதர விதர உவமை, சமுச்சய உவமை, உண்மை உவமை, மறுபொருள் உவமை, புகழ் உவமை, நிந்தை உவமை, நியம உவமை, அநியம உவமை, ஐய உவமை, தெரிதரு தேற்ற உவமை, இன்சொல் உவமை, விபரீத உவமை, இயம்புதல் வேட்கை உவமை, பலபொருள் உவமை, விகார உவமை, மோக உவமை, ஆபூத உவமை, பலவயிற் போலி உவமை, ஒருவயிற் போலி உவமை, கூடா உவமை, பொது நீங்கு உவமை, மாலை உவமை, அற்புத உவமை, சிலேடை உவமை, அதிசய உவமை, விரோத உவமை, ஒப்புமைக் கூட்ட உவமை, தற்குறிப்பேற்ற உவமை, விலக்கு உவமை, ஏது உவமை. |
| 3 | உருவகம் | 21 | தொகை உருவகம், விரி உருவகம், தொகை விரி உருவகம், இயைபு உருவகம், இயைபிலி உருவகம், வியநிலை உருவகம், சிறப்பு உருவகம், விருபக உருவகம், சமாதான உருவகம், உருவக உருவகம், ஏகாங்க உருவகம், அனேகாங்க உருவகம், முற்று உருவகம், அவயவ உருவகம், அவியவி உருவகம், உவமை உருவகம், ஏது உருவகம், வேற்றுமை உருவகம், விலக்கு உருவகம், அவநுதி உருவகம், சிலேடை உருவகம். |

| | | | |
|---|---|---|---|
| 4 | தீவகம் | 12 | குணத்தீவகம், தொழில் தீவகம், சாதித் தீவகம், பொருட்டீவகம், முதனிலைத் தீவகம், இடைநிலைத் தீவகம், கடைநிலைத் தீவகம், மாலா தீவகம், விருத்த தீவகம், ஒருபொருள் தீவகம், சிலேடை தீவகம், உவமா தீவகம், உருவக தீவகம். |
| 5 | பின்வருநிலை | 4 | சொற்பின் வருநிலை, பொருட் பின்வருநிலை, சொற்பொருட் பின்வருநிலை, உவமப் பொருட் பின்வருநிலை. |
| 6 | முன்னவிலக்கு | 25 | இறந்தவினை விலக்கு, எதிர்வினை விலக்கு, நிகழ்வினை விலக்கு, பொருள் விலக்கு, குணவிலக்கு, காரண விலக்கு, காரிய விலக்கு, வன்சொல் விலக்கு, வாழ்த்து விலக்கு, தலைமை விலக்கு, இகழ்ச்சி விலக்கு, துணைசெயல் விலக்கு, முயற்சி விலக்கு, பரவச விலக்கு, உபாய விலக்கு, கையறல் விலக்கு, உடம்படல் விலக்கு, வெகுளி விலக்கு, இரங்கல் விலக்கு, ஐயவிலக்கு, வேற்றுப்பொருள் வைப்பு விலக்கு, சிலேடை விலக்கு, ஏது விலக்கு. (23) |
| 7 | வேற்றுப் பொருள் வைப்பு | 8 | முழுவதுஞ் சேரல், ஒருவழிச் சேரல், முரணித் தோன்றல், சிலேடையின் முடித்தல், கூடாவியற்கை, கூடுமியற்கை, இருமையியற்கை, விபரீதப் படுத்தல். |
| 8 | வேற்றுமை | 9 | ஒரு பொருள் வேற்றுமைச் சமம், இரு பொருள் வேற்றுமைச் சமம், உயர்ச்சி வேற்றுமை, குணவேற்றுமை, பொருள் வேற்றுமை, சாதி வேற்றுமை, தொழில் வேற்றுமை, விலக்கியல் வேற்றுமை, சிலேடை வேற்றுமை. |
| 9 | விபாவனை | 5 | அயற்காரண விபாவனை, இயல்பு விபாவனை, வினையெதிர் மறுத்துப் பொருள் புலப்படுத்தல், பொதுவகையால் காரணம் விளக்கிக் காரியம் புலப்படுத்துதல். |
| 10 | ஒட்டு | 4 | அடையும் பொருளும் அயல்பட மொழிதல், அடை பொதுவாக்கிப் பொருள் வேறுபட மொழிதல், அடை விரவிப் பொருள் வேறுபட மொழிதல், அடையை விபரீதப் படுத்துப் பொருள் வேறுபட மொழிதல். |
| 11 | அதிசயம் | 6 | பொருளதிசயம், குணவதிசயம், தொழிலதிசயம், ஐயவதிசயம், துணிவதிசயம், திரிபதிசயம். |
| 12 | தற்குறிப்பேற்றம் | 3 | பெயர் பொருள் தற்குறிப்பேற்றம், பெயராத பொருள் தற்குறிப்பேற்றம். (2) |
| 13 | ஏது | 18 | கருத்தா காரக ஏது, பொருட் காரக ஏது, கருமகாரக ஏது, கருவிகாரக ஏது, ஏற்பது காரக ஏது, நீக்க நிலை காரக ஏது, ஞாபக ஏது, என்றுமபாவம், இன்மைய தபாவம், ஒன்றினொன்றபாவம், உள்ளதனபாவம், அழிவுபாட்டபாவம், தூரகாரிய ஏது, ஒருங்குடன் தோற்ற ஏது, காரண முந்துறூஉங் காரிய நிலை, யுத்தவேது, அயுத்த வேது, ஐயவேது. |
| 14 | நுட்பம் | 2 | குறிப்பு நுட்பம், தொழில் நுட்பம். |
| 15 | இலேசம் | 2 | புகழ்வது போலப் பழித்தல், பழிப்பது போலப் புகழ்தல். |
| 16 | நிரனிறை | 1 | நிரலே நிறுத்தி நேரே பொருள் கொள்வது. நிரலே நிறுத்தி மொழி மாற்றிப் பொருள் கொள்வது (2) |
| 17 | ஆர்வமொழி | 1 | |
| 18 | சுவை | 8 | வீரம், அச்சம், இழிப்பு, வியப்பு, காமம், அவலம், உருத்திரம், நகை. |

| | | | |
|---|---|---|---|
| 19 | தன் மேம் பாட்டுரை | 1 | |
| 20 | பரியாயம் | 1 | |
| 21 | சமாயிதம் | 1 | |
| 22 | உதாத்தம் | 2 | செல்வ மிகுதி, உள்ள மிகுதி |
| 23 | அவநுதி | 3 | சிறப்பு, பொருள், குணம். |
| 24 | சிலேடை | 10 | செம்மொழி, பிரிமொழி, ஒருவினை, பலவினை, முரண்வினை, நியமம், நியம விலக்கு, விரோதம், அவிரோதம் (9) |
| 25 | விசேடம் | 5 | குணக்குறை விசேடம், தொழிற் குறை விசேடம், சாதிக் குறை விசேடம், பொருட்குறை விசேடம், உறுப்புக் குறை விசேடம். |
| 26 | ஒப்புமைக் கூட்டம் | 2 | புகழ், பழிப்பு |
| 27 | விரோதம் | 1 | பொருள் விரோதம், சொல் விரோதம் (2) |
| 28 | மாறுபடு புகழ்நிலை | 1 | - |
| 29 | புகழாப் புகழ்ச்சி | 1 | - |
| 30 | நிதரிசனம் | 1 | புகழ்மை, தீமை |
| 31 | புணர்நிலை | 1 | வினை, பண்பு (2) |
| 32 | பரிவருத்தனை | 1 | |
| 33 | வாழ்த்து | 1 | |
| 34 | சங்கீரணம் | 1 | |
| 35 | பாவிகம் | 1 | *(பிர.தீபிகை. 43)* |

(பிரபந்த தீபிகை சிலவிடங்களில் அணிகளின் எண்ணிக்கையைக் குறிப்பிடுகையில் தண்டியிலிருந்து மாறுபடுகிறது. அணிகள் எவையெவை எனப் பிரபந்த தீபிகை குறிப்பிடாததால் அதைப் பற்றித் தெளிவாக அறியமுடியவில்லை.)

| 2. வ.எண் | தமிழ் | வடமொழி |
|---|---|---|
| 1. | உவமை | - |
| 2. | இயைபின்மை | - |
| 3. | புகழ்பொருள் உவமை | - |
| 4. | எதிர்நிலை | பிரிதீபம் |
| 5. | உருவகம் | - |
| 6. | திரிபு | பரிணாமம் |
| 7. | பலபடப்புனை | உல்லேகம் |
| 8. | நினைப்பு | - |
| 9. | மயக்கு | - |
| 10. | ஐயம் | - |
| 11. | ஒழிப்பு | அவனுதி |
| 12. | சொற் குறிப்பு | உற்பிரேட்சை |
| 13. | உயர்வுநவிற்சி | உத்தியோக்தி |
| 14. | ஒப்புமைக் கூட்டம் | துல்லியம் |
| 15. | விளக்கணி | தீபகம் |
| 16. | பின்வரும் விளக்கு | ஆவர்த்த தீபகம் |
| 17. | தொடர் முழுவதுவமை | பிரவத் துவமை |
| 18. | எடுத்துக் காட்டுவமை | திட்டாந்தம் |

| | | |
|---|---|---|
| 19. | சாட்சி | நிதர்சனம் |
| 20. | வேற்றுமை | விதிரேகம் |
| 21. | உடனிகழ்ச்சி | சகோத்தி |
| 22. | இன்மை நவிற்சி | அவினோக்தி |
| 23. | சுருங்க மொழிதல் | சமாசோக்தி |
| 24. | கருத்துடையடை | பரிகரம் |
| 25. | கருத்துடை அடைகொள் | பரிகராங்குரம் |
| 26. | பலபொருட் சொற்றொடர் | சிலேடை |
| 27. | புனைவிலி புகழ்ச்சி | அப்பிரஸ்துதப் பிரசம் |
| 28. | புனைவுளி விளைவு | பிரஸ்துதாங் குரம் |
| 29. | பிறிதினவிற்சி | ப்ரயாயோக்தி |
| 30. | வஞ்சகப் புகழ்ச்சி | வியாஜஸ் துதி |
| 31. | வஞ்சப் பழிப்பு | வியாச நிந்தை |
| 32. | எதிர்மறை | ஆட்சேபம் |
| 33. | முரண் விளைந்தழிவணி | விரோதா பாசம் |
| 34. | பிரதியாராய்ச்சி | விபாவனை |
| 35. | காரணவாராய்ச்சி | விசேடோக்தி |
| 36. | கூடாமை | அசம்பவம் |
| 37. | தொடர்பின்மை | அசங்கதி |
| 38. | தகுதியின்மை | விஷமம் |
| 39. | தகுதி | சமம் |
| 40. | வியப்பு | விசித்திரம் |
| 41. | பெருமை | அதிகம் |
| 42. | சிறுமை | அற்பம் |
| 43. | ஒன்றோர்க்கொன்று உதவி | அன்னியோன்னியம் |
| 44. | சிறப்பு நிலை | விசேடம் |
| 45. | மற்றதற்காக்கல் | வியாகாதம் |
| 46. | காரணமாலை | - |
| 47. | ஒற்றைமணி மாலை | ஏகாவளி |
| 48. | மேன்மேலுயர்ச்சி | சாரம் |
| 49. | மாலைவிளக்கு | - |
| 50. | நிரை | எதாசங்கை |
| 51. | முறையிற் படர்ச்சி | பரியாயம் |
| 52. | மாற்றுநிலை | பரிவிருத்தி |
| 53. | ஒழித்துக் காட்டு | பரிசங்கியை |
| 54. | உறழ்ச்சி | விகற்பம் |
| 55. | கூட்டம் | சமுச்சயம் |
| 56. | வினைமுதல் விளக்கு | காரகதீபகம் |
| 57. | எளிதின்முடி | சமாதி |
| 58. | விறல் கோளணி | நீகம் |
| 59. | தொடர் செய்யுட் பொருட்பேறு | காவியார்த்தாபத்தி |
| 60. | தொடர்நிலைச் செய்யுட் குறி | காவியலிங்கம் |
| 61. | வேற்றுப் பொருள் வைப்பு | அர்த்தாந்தர நியாய(த)ம் |

| | | |
|---|---|---|
| 62. | மலர்ச்சி | விகஸ்வரம் |
| 63. | கற்றோர் நவிற்சி | பிரௌடோக்தி |
| 64. | உய்த்துணர்வு | சம்பாவனை |
| 65. | பொய்த்தற் குறிப்பு | மித்தியாத்தியவசதி |
| 66. | வனப்புநிலை | லலிதை |
| 67. | இன்பு | பரிகர்ஷம் |
| 68. | துன்பம் | விஷாதம் |
| 69. | அகமலர்ச்சி | உல்லாசம் |
| 70. | இகழ்ச்சி | அவிக்கினை |
| 71. | வேண்டலணி | அனுக்ஞாயம் |
| 72. | இலேசம் | - |
| 73. | குறிநிலை | முத்திரை |
| 74. | அரதன மாலை | ரத்னாவளி |
| 75. | தொல்லுருப் பெறல் | பூர்வரூபம் |
| 76. | பிறிதின் குணம்பெறல் | தற்குணம் |
| 77. | பிறிதின் குணப் பேறின்மை | அதற்குணம் |
| 78. | தன்குண மிகை | அனுகுணம் |
| 79. | மறைவு | மீலிதை |
| 80. | பொதுமை | சாமானியம் |
| 81. | மறையாமை | உன்மீலிதை |
| 82. | சிறப்பு | விசேடகம் |
| 83. | இறை | உத்தரம் |
| 84. | நுட்பம் | சூட்சம் |
| 85. | களவு வெளிப்படுப்பு | பிசிதம் |
| 86. | வஞ்ச நவிற்சி | வியாசோக்தி |
| 87. | குறிப்பு நவிற்சி | கூடோக்தி |
| 88. | வெளிப்படை நவிற்சி | விவிர்தோக்தி |
| 89. | - | யுக்தி |
| 90. | உலகு வழக்கு நவிறல் | உலோகோக்தி |
| 91. | வல்லோர் நவிற்சி | சேஷோக்தி |
| 92. | மடங்குத நவிற்சி | வக்கிரோக்தி |
| 93. | தன்மை நவிற்சி | சுபாவோக்தி |
| 94. | நிகழ்வின் நவிற்சி | பாவிகம் |
| 95. | பிரிநிலை நவிறல் | நிருத்தி |
| 96. | விலக்கணி | பிரதி நிஷேதம் |
| 97. | விதி | - |
| 98. | ஏது | - |
| 99. | சேர்வை | சம்சிருட்டி |
| 100. | கலவை | சங்கரம் *(பிர.தீபிகை. 40-42)* |

அத்தம்

1. ஆசிரியப்பாவிற்கு உரிய நாள்களுள் ஒன்று *(பன்.பா. 92; வெண்.பா. 70; தொ.விள. 296; மு.வீ. 1013; பிர.திர 417)*
2. சந்திர கணத்திற்கு உரிய நாள் *(பிர.திர. 154)*
3. மிக்க புகழ் உண்டாக்குவது *(பிர.திர. 154)*
4. அத்த நாளுக்கு உரிய எழுத்துகள் பு, பூ *(பன்.பா. 47; வெண்.பா. 15; நவநீ.பா. 17; சித.பா. 23; இல.விள. 792; தொ.விள. 292; பிர.திர. 144; மு.வீ. 1034; பொரு.விள. 55)*

**அத்தி**

நாடி பத்தனுள் ஒன்று *(பிர.திர. 379)*

**அத்திரி**

பதினெண் மிருதிகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 58)*

**அத்துவாசைவம்**

பதினாறு சைவங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 62)*

**அதிகார முறைமை**

முப்பத்திரண்டு உத்திகளுள் ஒன்று; முன்நின்ற நூற்பாவின் பொருள் பின்வரும் நூற்பா ஒன்றனுக்கோ, நூற்பாக்கள் பலவற்றிற்கோ தேவைப்பட்ட அளவு தொடர்பு கொள்ளவைத்தல் *(இல விள. 898)*

**அதிரிசயம்**

அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்று *(பிர தீபிகை 72)*

**அதோமுகம்**

முகநிலைகள் பதினான்கனுள் ஒன்று; தலை குனிந்து பார்த்தல் (பிர.தீபிகை. 73)

**அந்தக் கரணம்**

மனம், புத்தி, ஆங்காரம், சித்தம் *(பிர திர. 378)*

**அந்தணர்**

1. கைசிகர் *(தொ விள. 291)*
2. கலம்பகத்தில் தொண்ணூற்றைந்து செய்யுள்களால் பாடப்படுவர் *(பிர.திர. 34; மு.வீ. 1041; பிர.தீபிகை 7)*
3. பிரமனின் வழி வந்தவர்கள் *(பிர.திர. 369)*
4. *அந்தண சாதிக்குரிய எழுத்துகள்*
1. பன்னிரு உயிர் மற்றும் கங, சஞ, டண *(பன்.பா 5; வெண்.பா. 9; நவநீ.பா. 12; சித பா. 21, இல விள 774; சுவாமி 175; பொரு.விள. 33)*
2. அ இ உ எ, ஆ ஈ ஊ ஏ; எஞ்சிய ஐ, ஒ, ஓ, ஔ நான்கும் ஈற்றில் ஒலிக்கின்ற இ, உ என்னும் உயிரெழுத்தின் பகுப்பில் சேர்ந்து அவ்வருணத்திற்கே உரியதாகும் *(பிர.திர 135, 140)*
3. அந்தணர்க்குரியவை என வல்லினப் புள்ளி முத்து வீரியத்தில் குறிப்பிடப்படுகிறது. அவ்வாறு கொண்டால் அதே நூற்பாவில் த,ப-வை அரசர்க்கும் ற-வை வணிகர்க்கும் குறிப்பதேன்? என்ற சிக்கல் தோன்றுகிறது. ஆகவே பிற பாட்டியல்கள் கருத்தே இங்குக் கொள்ளப்படுகிறது. *(மு வீ 1033)*
5. *அந்தண சாதிக்குரிய எழுத்துகளைப் படைத்தோர்*
1. திசைமுகன், ஈசன், நாரணன், அறுமுகன் *(பன் பா. 5)*
2. இந்நான்கு கடவுளரை அந்தண சாதிக்குரிய தேவதை என நவநீதப்பாட்டியல் கூறுகிறது. *(நவநீ.பா 12)*
6. *அந்தண சாதிக்குரிய பா*

வெண்பா *(பன் பா 91; வெண்.பா 69, நவநீ.பா. 82; பிர.மர. 24; இல விள. 877)*

7 *அந்தணர் வகை*

நீறு, கருகுமாலை, சந்தனம், பொட்டு முதலிய பிறவற்றுடன் போற்றப்படும் அந்தணர் ஐந்து வகையினர் *(பிர திர 361)*

8 *அந்தணரியல்பு*

1. முப்புரிநூல், கையில் வேதம், இடையில் கோவணம், முக்கோல், முத்தீ வழிபாடு (ஆகவனீயம், காருகபத்தியம், தக்ஷிணாக்கினி) வேள்வி, மென்மைத் தன்மை, கையில் குடை, சமித்து, குண்டிகை, புல், கோத்திரம் ஆகியவற்றைக் கொண்டவர்கள் *(வெண்.பா. 80)*
2. இறைபக்தி, நெருப்பைப் பிரமனாக எண்ணுதல், வேதம் ஓதல், ஓதுவித்தல், வேட்டல் வேட்பித்தல், ஈதல், இரத்தல் முதலியவற்றைச் செய்தல் *(வெண் பா 81; நவநீ.பா. 74)*
3. குசை, இருபிறப்பு, மணை, மான்தோல் அரவிந்தத் தார், ஆறு அங்கம் உடையவர்கள் *(நவநீ. பா. 73)*
4. நூல், கரகம், முக்கோல், மணை கொண்டவர்களாகவும், அரசுரிமை எய்தியவர்களாகவும் இருத்தல் *(இல.விள. 924,928)*
5. உலவும் கொடியாக மறையையும், தாமரை மலர் மாலையையும் கொண்டிருத்தல் *(பிர.திர. 297,298)*

**அந்தரசைவம்**

பதினாறு சைவங்களுள் ஒன்று *(பிர.தீபகை. 62)*

## அந்தாதி

1. ஒரு நூல் பல பாட்டாகும் இலக்கிய வகையுள் ஒன்று *(பன்.பா. 88)*
2. அந்தாதியில் நாலாம் அடியின் முதற்சீர், நாலாமடியின் நாலாம்சீர், பிற சீர்களின் எழுத்து ஒன்று, ஒற்றின் மேலேறிய உயிர், உயிர்மெய் இரண்டு அல்லது மூன்று வைத்து தொடர்ந்து வரும் பாவைக் கொண்ட இலக்கியம் *(பிர.திர. 94)*
3. வேற்றுமை, சாரியை, எச்சம், இடைச்சொல், விகுதி போன்ற சொல்வடிவங்கள் கருதப்படுமே தவிரப் பொருள் கருதப்படுவதில்லை
   *(பிர.திர. 95)*
   *குறிப்பு:* நாலாம் அடியின் முதற்சீர் எனப் பதிப்பாசிரியர் கூறுவது பொருந்தாது. ஏனெனில் முதற்சீரைக் கொண்டு அந்தாதி பாடும் மரபு இருப்பதாகத் தெரியவில்லை. நாலாம் அடி முதற்சீர் என்பதால் நாலாம் அடியின் முதற்சீர் முதல் அடிமுழுவதையும் அடுத்த பாடலில் கொண்டு வரும் அடி அந்தாதியைக் கருதுகிறார் போலும். நாலாம்சீர் பிற்சீர்கள் என்பதே மூலபாடம். உரையாசிரியர் பிற சீர்கள் எனக் கொண்டது பொருந்தாது. நான்கு சீர்களுக்கு மேலுள்ள துறை, கழிநெடில் விருத்தங்களின் நான்காம் சீருக்குப் பிறகுள்ள சீர் எனப் பொருள் கொள்ள வேண்டும். ஓர் அடியின் ஈற்றுச்சீர் என்பதாலேயே இவ்வாறு சுற்றி வளைத்துக் கூறுகிறார்.

   அந்தாதிக்கும்போது முதல்பாட்டின் ஈற்றிலுள்ள இரண்டு அல்லது மூன்று உயிர்மெய்களைக் கொண்டு அடுத்த பாடல் தொடங்கவேண்டும் என்பது கருத்துப்போலும்.

## அந்தாதித் தொகை

1. சிற்றிலக்கியப் பா இனங்களுள் ஒன்று; புலவர்கள் தாம் விரும்பிய பொருட்களை வெண்பா அல்லது கலித்துறையில் அந்தாதித் தொடையின் தன்மையோடு பாடும் நூல். *(பன்.பா. 212, சித.பா. 30)*
2. இவ்விலக்கியம் இரு வகையில் அமைவதும் உண்டு. (i). வெண்பா அந்தாதி - நேரிசை வெண்பா நூறு அந்தாதியாய் வரும் இலக்கியம். (ii). கலித்துறை அந்தாதி - கட்டளைக் கலித்துறை நூறு அந்தாதியாய் வரும் இலக்கியம் *(வெண்.பா. 31; நவநீ.பா. 38)*
3. விருத்தம் என்னும் பா வகையும் சுட்டப் பெறுகிறது. அந்தாதித் தமிழ் என்ற சிறப்புப் பெயரும் உண்டு. *(பிர.திர. 7)*

## அந்தாதித் தொடை

செய்யுளின் இறுதியில் அமையும் எழுத்தோ, அசையோ, சீரோ, அடியோ, அடுத்த பாடலின் ஆதியாக அமையும் வகைச் செய்யுள். *(சித.பா. 5)*

(எ-டு) உலகுடன் விளக்கும் ஒளிதிக ழவிர்மதி
மதிநல னழிக்கும் வளங்கெழு முக்குடை
முக்குடை நீழற் பொற்புடை யாசனம்
ஆசனத் திருந்த திருந்தொளி யறிவன்
ஆசனத் திருந்த திருந்தொளி யறிவனை
அறிவுசே ருள்ளமோ டருந்தவம் புரிந்து
துன்னிய மாந்தரஃ தென்ப
பன்னருஞ் சிறப்பின் விண்மிசை யுலகே.

*(திருப்பாமாலை, யா. விருத்தியுரை நூ. 52, யா காரிகை 18, உரை; தொல்.செய்யு.நூ. 98, இளம் உரை; சித.பா 19)*

## அருடம்

1. கலிப்பாவிற்குரிய நாள்களுள் ஒன்று *(பன்.பா. 93; வெண்.பா. 70; பிர.மர. 25; இல.விள. 881; தொ.விள. 297; மு.வீ. 1014, பிர.திர. 417)*
2. *உரிய எழுத்துகள்*
   ந, நா, நி, நீ, நு, நூ *(பன்.பா. 46; வெண்.பா. 14; நவநீ.பா. 16; சித.பா 23; இல.விள. 791, தொ.விள. 292; பிர.திர. 143; மு.வீ. 1034; பொரு.விள. 51)*

## அப்பூச்சி காட்டுகின்றான் எனல்

ஆண்பால் பிள்ளைப்பாட்டு நிலைகளுள் ஒன்று (பன்.பா. 102, உரை)

## அபானன்

வாயுக்கள் பத்தனுள் ஒன்று *(பிர.திர. 379)*

## அபிராமி

சத்த மாதர்களுள் ஒருவர் (பன்.பா. 109, உரை; நவநீ.பா. 27 உரை)

► **வேய்த்தோள் எழுவர்**

### அபிராமி ஆயுதம்
மறை *(பன்.பா. 109 உரை)*

▶ வேய்த்தோள் எழுவர்

### அபிராமி வாகனம்
அன்னம் *(பன்.பா. 109 உரை)*

▶ வேய்த்தோள் எழுவர்

### அபேதச்சைவம்
பதினாறு சைவங்களுள் ஒன்று *(பிர.தீபிகை 62)*

### அம்பட்டர்
குலப் பெயர்களுள் ஒன்று *(பிர.திர. 363)*

### அம்புலி
1. ஆண்பால் பிள்ளைப்பாட்டு நிலைகளுள் ஒன்று *(பன்.பா 102; வெண்.பா 30; நவநீ.பா 29, பிர.மர. 2; சித.பா. 28; இல.விள. 806, தொ.விள 257, பிர.திர. 3, சுவாமி. 167; மு.வீ 1039, பிர.தீபிகை 5, பிர.தீபம். 94)*
2. பெண்பால் பிள்ளைப்பாட்டு நிலைகளுள் ஒன்று *(பன்.பா 104, வெண்.பா 29; நவநீ.பா. 32; பிர.மர 2; சித.பா. 28; இல.விள. 807, தொ.விள 257; பிர.திர. 3, சுவாமி. 167; மு.வீ. 1039; பிர.தீபிகை 5; பிர.தீபம். 94)*

### அம்போதரங்க ஒத்தாழிசைக்கலி
தரவு ஒன்றும் தாழிசை மூன்றும் கொண்டதாய் நாற்சீரடியாகவோ, முச்சீரடியாகவோ, இருசீரடியாகவோ வந்து அம்போதரங்கம் உடைத்தாய்த் தனிச்சொல், சுரிதகம் பெற்று வரும் செய்யுள் (சித.பா. 10)

கெடலரு மாமுனிவர் கிளர்ந்துடன் தொழுதேத்தக்
கடல்கெழு கனைசுடரிற் கலந்தொளிரும் வாலுளைய
அழல்விரி சுழல்செங்கண் அரிமாவாய் மலைந்தானைத்
தாரொடு முடிபிதிரத் தமனியப் பொடி பொங்க
ஆர்புனல் இழிகுருதி அகலிடம் உடனனைப்பக்
கூறுகிறான் மார்பிடந்த கொலைமலி தடக்கையோய்
(தரவு)

மூரைசதிர வியன்மதுரை முழுவதூஉஞ் தலைபனிப்பப்
புரைதொடித் திரண்டோட் போர்மலைந்த மறமல்லர்
அடியொடு முடியிறுப்புண் டயர்ந்தவன் நிலஞ்சேரப்
பொடியெழு வெங்களத்துப் புடைத்துநின் புகழாமோ

கலியொலி வியனுலகங் கடந்துட னனிநடுங்க
வலியியல் அவிராழி மாறெதிர்ந்த மருட்சோர்வு
மாணாதார் உடம்போடு மறம்பிதிர வெதிர்கலங்கிச்
சேணுயர் நெடுவிசும்பிற் சிதைத்தது நின் சினமாமோ

படுமணி இனநிரைகள் பரந்துடன் இரிந்தோடக்
கடுமுரண் எதிர்மலைந்த காரொலி எழிலேறு
வெரிநொடு மருப்பொசிய வீழ்ந்துதிறல் வேறாக
எருமலி பெருந்தொழுவில் இறுத்ததுநின் னிகலாமோ
(மூன்றும் தாழிசை)

இலங்கொளி மரகத எழில்மிகு வியன்கடல்
வலம்புரித் தடக்கை மாஅல் நின்னிறம்
விரியினர்க் கோங்கமும் வெந்தெரி பசும்பொனும்
பொருகளி றட்டோய் புரையும் நின்னுடை;
(இவை பேரெண்)

கண்கவர் கதிர்முடி கனலுஞ் சென்னியை
தண்சுடர் உறுபகை தவிர்த்த ஆழியை
ஒலியியல் உவனம் ஓங்கிய கொடியினை
வலிமிகு சகடம் மாற்றிய அடியினை; (இவை அளவெண்)
போரவுணர்க் கடந்தோய் நீஇ
புணர்மருதம் பிளந்தோய் நீஇ

நீரகல மளந்தோய் நீஇ
நிழறிகழைம் படையோய் நீஇ. (இவை இடையெண்)
உழிநீஇ; உலகுநீஇ; உருவுநீஇ; அருவு நீஇ;
ஆழிநீஇ; அருளு நீஇ; அறமு நீஇ; மறமு நீஇ
(இவை சிற்றெண்)
(எனவாங்கு (தனிச்சொல்)
அடுதிறல் ஒருவநிற் பரவுதும் எங்கோன்
தொடுகழற் கொடும்பூட் பகட்டெழில் மார்பிற்
கயலொடு கலந்த சிலையுடைக் கொடுவரிப்
புயலுறழ் தடக்கைப் போர்வேல் அச்சுதன்
தொன்றுமுதிர் கடலுலகம் முழுதுடன்
ஒன்றுபுரி திகிரி உருட்டுவோன் எனவே (இது சுரிதகம்)

*(யா.கல விருத்தியுரை நூ 83; யா.காரிகை 30 உரை; தொல்.செய் 146 பேரா.உரை; சித.பா.ப 46-48)*

## அம்மனை

1. பெண்பால் பிள்ளைப்பாட்டு நிலைகளுள் ஒன்று *(வெண்.பா. 29; நவநீ.பா. 32 உரை; பிர.மர 2; சித.பா. 28; இல.விள. 807; தொ.விள. 257, சுவாமி 167; மு.வீ. 1039; பிரதீபிகை. 5)*
2. மூன்று பெண்கள் கூடி அம்மானை விளையாடுகையில் அவர்களில் ஒருத்தி தலைவனைப் புகழ்ந்துகூற வேறொருத்தி ஐயம் கொண்டு வினவ மற்றொருத்தி அவ்வினாவிற்கு அவ்விருவரும் ஏற்கும்படி விடை அளிப்பதாகப் பாடும் பகுதி. இதில் பெரும்பான்மை சிலேடை அணி கலந்து நிற்கும் *(பன்.பா. 129 உரை; இல.விள. 812 உரை)*
3. கலம்பக உறுப்புகளுள் ஒன்று *(பன்.பா. 129; வெண்.பா. 32; நவநீ.பா 33, பிர.மர. 4; சித.பா 29; இல.விள. 812; தொ.விள. 258; பிர.திர. 32; மு.வீ. 1041; பிர. தீபிகை. 7; பிர. தீபம் 95)*

## அம்மானை

▶ அம்மனை

## அமர்நிலை நிமித்தம்

பரணியின் உறுப்புகளுள் ஒன்று (பன்.பா. 143; வெண்.பா. 61; நவநீ.பா. 57-61; பிர.திர. 45, 46)

## அமிருதபிந்து

முப்பத்திரண்டு உபநிடதங்களுள் ஒன்று (பிர.தீபகை. 59)

## அமுதம்

1. உணவு வகைகளுள் ஒன்று *(பன்.பா. 19; வெண்.பா. 7, சித.பா 20)*
2. மங்கலச் சொற்களுள் ஒன்று *(பன்.பா. 68, நவநீ.பா. 2, சித.பா. 18; இல.விள. 771; தொ.விள 285: சுவாமி 173; மு.வீ 1027)*

## அமுத எழுத்துகள்

1. அ, இ, உ, எ, க, ச, த, ப, ந, ம, வ *(பன்.பா. 20; வெண்.பா. 7; நவநீ.பா. 10; சித.பா. 20; இல.விள. 779; தொ.விள. 290)*
2. ஆ, ஈ, ஊ, ஏ, ங, ஞ, ண *(பிர.திர. 128)*
3. ஆ, ஈ, ஊ, ஏ *(சுவாமி. 175; மு.வீ. 1032; பொரு.விள. 27)*
4. அ, இ, உ, எ என்னும் நான்கு உயிரோடு இயைந்து வரும் மெய்யெழுத்துகள் *(இந்.காளி 7; பன்.பா. 21)*
5. ஆ, ஈ, ஊ, ஏ - உடன் இயைந்துவரும் உயிர்மெய்கள் *(பிர.திர 134)*

## அய்யனார்

சிவனின் இந்திரியத்தில் தோன்றியவன் *(பிர.திர. 283)*

## அர்த்த வேதம்

நான்கு வேதங்களுள் ஒன்று; வணிகர்க்கு உரியது *(பிர.தீபிகை. 58)*

## அரசர்

1. குலப்பெயர்களுள் ஒன்று *(பன்.பா. 75)*
2. வேந்தனிடம் சிறப்புப்பெயர் பெறுபவர்களில் ஒருவர் *(பன்.பா 83)*
3. பாற்கடலில் துயிலும் திருமாலின் வழி வந்தவர் *(பிர.திர. 369)*
4. பிரம்மா வழி வந்தவர்கள் *(பிர.திர. 369)*

5. *அரச சாதிக்கு உரிய எழுத்துகள்*

தந, பம, யர *(பன் பா 6, வெண் பா. 9; நவநீ பா. 12, சித பா. 21; இல.விள 775; தொ.விள. 291; சுவாமி 175, மு வீ. 1033; பொரு விள. 34)*

6. *அரச சாதிக்கு உரிய எழுத்துகளைப் படைத்தோர்*

இந்திரன், சூரியன், சந்திரன் *(பன்.பா 6)*; இவர்களை அரச சாதிக்குரிய தேவதை என நவநீதப் பாட்டியல் கூறுகிறது. *(நவநீ பா. 12)*

7. *அரச சாதிக்கு உரிய பா*

அகவற்பா *(பன்.பா. 92, வெண்.பா. 69; நவநீ.பா. 82; பிர.மர. 24, இல.விள. 877, தொ.விள. 296, மு வீ. 1013)*

8. *அரச யானை*

எழுச்சியுடைய அரசர்களின் மாமதம் பொருந்திய யானையின் நான்கு கால்கள், கோசம், கை, வால் என்னும் ஏழு உறுப்புகளும் நிலத்தில் தோயும். கால் முதலிய உறுப்புகளால் பலரையும் கொல்லும். கால்நகங்கள், தந்தம் பால் போன்றும் சங்கு போன்றும் வெளுத்திருக்கும். பத்துமுழச் சுற்றளவு ஒன்பது முழ நீளம், ஏழுமுழ உயரம் உடையது. முன்புறம் உயர்ந்து, பின்புறம் தாழ்ந்து சிறுகண்ணுடன், தந்தத்தில் கிம்புரி என்னும் பூண் தாங்கி நிற்கும். நெற்றியில் முகபடாம் அணிந்து முறம் போன்ற காதுடன் விளங்கும். மும்மதம் கொண்டு பாகலம் எனும் நோயின்றிக் கருங்குன்றுபோல் தோற்றம் பெற்றிருக்கும். இடிபோல் முழங்கும். எற்றுதலால் பெரிய மலைகளைப் பஞ்சுபோல் சிதறச் செய்யும். வேகமாக எழும் வலிமையுடைய காற்றுப்போல் ஆகி தன்னைப் பிணித்திருக்கும் தறியின் பத்தியை முறிக்கும். கழுத்தணி கயிறு, தண்டுதாங்கி, இருபக்கம் மணி பொருந்திய வயிற்றுச் சகடம், அம்பாரி, தைத்த இலகம் இட்டு, சங்கிலியை அறுத்து உயர்ச்சியுடன் நிற்கும். குங்குமம் இட்டு, சாந்து, பூசி, துத்தமணி கழுத்தில் அணிந்து அங்குசத் தண்டினை மாலை பொருந்திய குன்றுபோல் கொண்டு இருபுறமும் சாமரைகள் கட்டி நிற்கும்.

கொம்பினை அசைத்து இடைக்கச்சு இறுக, உரல் போன்ற கால்களை நிலம் அதிரும்படி வைக்கும் மழைத்தாரை போன்று மதம் ஒழுகும்; துதிக்கையை வானுக்கு நேராக நீட்டி ஆட்டும்; இரும்புத்தூண் போன்ற கால்களைத் தேய்த்து பிறைபோன்ற கொம்புகளால் நிழலைச் சினத்துடன் விழித்துப் பார்த்துப் பாயும். காற்றுக் கடவுளின் தோற்குடம் போன்று சினந்து பகைத்து விசிறியை வீசியெறியும் முதுகு நெளியாமல் ஆட, கைந்நுனி சேர்ந்திருந்து கடைக்கண் பார்த்துக் கதுப்பை அதுக்கியதால் வழியும் நீருடன், துதிக்கை உமிழ்நீரும் கொம்பின் அடியும் தோன்ற நிற்கும்.

முன்காலைப் பரப்பி வைக்கும்போது ஒரு கால் நெறியில்லாது காட்டி உடல் இயந்திரம் போல அசைவுறும். சேவகம் சேராது மலையில் பள்ளம் நிரப்பி, சார்த்திய பிடியொடு சார்ந்து காட்டில் உள்ளதாகிப் பல யானைகளுடன் செல்லும் *(பிர.திர 382 - 385)*

9. *அரசர்க்கு உரிய உவமை*

பன்னிரண்டு முதல் பதினாறு வயதுவரை முருகனோடு உவமிக்கலாம். *(நவநீ பா 86)*

10. *அரசர்க்கு உரிய இலக்கியங்கள்*

1. கோவை, 2. தூது, 3. உலா, 4. மஞ்சரி *(பிர திர 81)*

11. *அரசர்க்கு உரிய சின்னங்கள்*

1. அரியாசனம், 2. இரத்தினத்தால் அமையும் முடி, 3. இரு சாமரம், 4. இணைக்கயல்கள், 5. மூன்று முரசம், 6. குடை, 7. பூமாலை, 8. பூரணகும்பம், 9. கொடி, 10. மதில், 11. வாடாத விளக்கு, 12. மதம் பொருந்திய யானை, 13. கடல், 14. ஆமை, 15. சிங்கம், 16. மகரம், 17. தோட்டி, 18. சங்கு, 19. சக்கரம், 20. இடபம், 21. செங்கோல் *(பிர.தீபிகை 88)*

12. *அரசர்க்கு உரிய செய்யுள் எண்ணிக்கை*

1. தொண்ணூறு செய்யுள் (பன்.பா. 130; வெண்.பா. 34; நவநீ.பா. 35; பிர.மர. 5; சித.பா. 30; இல.விள. 813; தொ.விள. 258; பிர.திர. 34; மு.வீ. 1041; பிர.தீபிகை. 7)
2. எழுபது (சுவாமி. 70)

13. *அரசர்க்கு உரிய துணைவர்*

1. மந்திரி, 2. கருமாதிகாரர், 3. சுற்றம், 4. அழகிய நகர மக்கள், 5. கடைகாப்பாளர், 6. குதிரை வீரர், 7. யானை வீரர், 8. சேனைத் தலைவர் (பிர.தீபிகை. 89)

14. *அரசர் வகை*

சூரியன், சந்திரன், அக்கினி, பலசாதி என்னும் நான்கு வகையினர் *(பிர.திர. 361)*

**அரசன்**

1. ஐவகைத் தானங்களுள் ஒன்று *(பன்.பா 30, வெண்.பா. 5; நவநீ.பா. 6; சித.பா. 19; இல.விள. 783; தொ.விள. 288; பிர.திர. 121, சுவாமி 174; பொரு.விள. 17)*
2. நட்பிற்குரிய தானங்களுள் ஒன்று *(பன்.பா. 32)*
3. மங்கலச் சொற்களுள் ஒன்று *(நவநீ.பா. 2, உரை)*

**அரசன்**

1. *அரசர்க்குரிய சிறப்புப் பொருட்கள்*
தோளின் மீது வெற்றித் தெய்வத்தின் நடனத்தைக் காட்டும் குஞ்சம் (அங்க வத்திரம்) வளர்கின்ற புகழ் உலகத்தின் எல்லை வரைக்கும் சுற்றும் உவகையை ஒத்தது பாவாடை வீசிடுதல்; உயர்நீதி வேரூன்றல் கம்பு; தழைத்து ஓடி மூவுலகங்களிலும் படர்வது போல் நிற்கும் ஆலவட்டம், எக்காளம் முதலியன ஏகல், அரசன் வரவைக் கூறும் கட்டியம்; அரசனின் கொடி, முழங்குகின்ற புகழுடைய பேரி, வீரம், வேல், ஈட்டி போன்ற படைக்கலம் தாங்குதல் *(பிர.திர. 519)*
2. *அரசர்க்குரிய குதிரையின் இயல்பு*
மல்லகதி, மயூரகதி, வானரகதி, சசகதி, சரத்தின் கதி உடையது; பெண்களின் மணம் போலச் சொல்லத்தக்க மணமுடையது. வாழை மடல் போன்ற செவி; நான்கு காலும், முகமும், வாலும் வெண்மை. எண்பத்திரண்டு விரல் உயரம்; சேணம், மெத்தை, கலணை, முத்துக்குச்சி, அங்கவடி, கடிவாளம், கச்சு, தாழ்ப்பிணி, பிடரிமயிர், முகமெட்டு, லாடம், சிலம்பு, முதுகுக் குஞ்சம், சடை, குமிழ் என்பனவும்;
அழகிய மாலைகள் புனைந்து, குதிரைச் சம்மட்டிக்கு அடங்காது நீர்தேய்த்து, வேர்வையில் கவனம் பொருந்தி, செருமி, போகையில் கனைத்து, வலசாரி இடசாரி போய், பின் அந்தம், முன் அந்தம் பாய்ந்து, இருகால் தூக்கி, உடல் ஆடி, கண் இமையாது, காலின் சிலம்பொலி, காலோசை அதிரும் ஒலி, மேல் தட்டின் ஒலி என்பனவற்றை உடையது. அரசக் குதிரை உவகை தருகின்ற முகத்திலும் கழுத்திலும் ஒவ்வொன்றும், இடையிலும் மார்பிலும் இரண்டிரண்டும் உறும். மட்டி, சரி எனும் இரண்டு சுழிகளும் பொருந்துதற்கு நன்றாம் *(பிர.திர. 386, 387)*
3. *அரசரின் தேர் இயல்பு*
அழகிய பறவை மூக்குப் போன்ற அச்சு ஆணி, உருளை, விட்டம், தட்டு, வளையம், தேர்க்கால், கயிறு, சங்கிலி, பொன்பூட்டு, பொருந்துகின்ற ஆலவட்டம், சில்லாணி, கொடி, கொடிஞ்சி, பொற்குடம், பூமாலை, தேர்ச்சீலை, பொன்தட்டி தரித்த மரப்படி, சிங்காசனக் குறடு, பதுமை, சன்னமணி, வீரமணி, குடமணி, கண்டைமணி, கிடுகு, அடுக்கு, பலகணி, பூட்டு, சுற்று, வடிம்புப் பலகை என்பவற்றை உடையதாய், பாகரைத் தாங்கி நிற்கும்.
குதிரையின் ஒலி, பாகனின் ஒலி, மணியின் ஒலி, உருளுகின்ற ஓசை பலவும் தாங்கி, மலை ஓடிவரல் போல, அண்டகோள ஓட்டின் முடி துளைபடும்படி, தீபரவ, கடல்நீர் ததும்ப, நிலம் பிளக்க, மலை பொடிய ஏறி, எட்டுத்திசை யானைகளும் ஓடும்படி, வடவைக்கனல் போல வருவது அரசனின் காவல்மிக்க தேர் *(பிர.திர 389, 390)*
4. *அரசர்க்குரிய சில சிறப்பியல்புகளின் பொருட்குறிப்பு*
சங்கீதம், மேளம், வீணை என்பன இலக்குமியின் நடனத்தின் போது எழும்பும் கால்சிலம்பின் ஓசை; பகைவராகிய பனி அழிந்துவிடும்படித் தோன்றுவதால் கிரீடம் கதிரவனாம். கூறப்பட்ட அரசர்கள் யாரென்றாலும் சூரியகுலம் ஆகையினால் பொங்கியெழும் அக் கதிரவனே இவ் அரசன் எனல் ஆகும். குடையாகிய சந்திரனின் கீழே பொருந்தியவனின் இளமைத் தன்மையைச் கூறும்படி அணியப்பட்டது. தண்டை பிற அணிகளும் அங்குப் பொருந்தும்; வீரச் செயலால் அமையும் பொன் கழல்; குற்றம் நீக்கும் கொடி நட்புடையது என்று அணிவர் அரசர். குறுகிய அம்பு, உலங்கு, கொடி என்னும் பறவைகளின் இறகும் அணிவர் *(பிர.திர 520)*
5. *அரசனின் பாடல் கேட்கும் தன்மை*
பிறப்பு முதல் இறப்பு வரை நல்லகவி கேட்பதில் பிழையில்லை. இறந்தும் இடம் கொடுத்தவர் உண்டு. நந்திவர்மன் ஈமத்தின் மேலிருந்து கவி கேட்டமை இதற்குச் சான்று. ஆக நல்ல கவிஞன் கவிதை எழுதினால் அதனை மன்னன் எப்போது வேண்டுமானாலும் கேட்கலாம் *(பிர.திர 517)*

**அரசன் உக்கிர வழுதி**

சங்கப் புலவர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை 86)*

**அரசர்க்கு உரிய குழு**

1. புரோகிதர், 2. சாரர், 3. சேனாபதி, 4 மந்திரி, 5. தூதர் என்போரைக் கொண்டது *(பிர.தீபிகை. 89)*

**அரசன் விருத்தம்**

பத்து கலித்துறை, முப்பது விருத்தம், கலித்தாழிசையில் மலை, கடல், நாடு, நகர், நிலம் பாடி, வாள்மங்கலமும், தோள்மங்கலமும் பாடி முடிக்கும் இலக்கியம் *(நவநீ.பா. 51; மு.வீ. 1103; பிர.தீபிகை. 24; பிர.தீபம். 5)*

**அரசனின் அரசியல் வகை**

1. அறநிலையறம், 2. மறநிலையறம், 3. அறநிலைப் பொருள், 4. மறநிலைப் பொருள், 5. அறநிலை இன்பம், 6. மறநிலை இன்பம் *(பிர.தீபிகை. 89)*

**அரசனின் அரசியலணி**

1. படை, 2. குடி, 3. கூழ், 4. அமைச்சர். 5. நட்பு 6. அரண் *(பிர.தீபிகை 89)*

**அரசனின் உறுதிச் சுற்றம்**

1. நட்பாளர், 2. மறை ஓதும் அந்தணாளர். 3. மருத்துவக் கலைஞர், 4. நிமித்திகப் புலவர், 5. படைத்தொழிலர் *(பிர.தீபிகை 89)*

**அரம்பையர்**

1. புன்னை அரும்பு எனக் கூறத்தகும் நகையுடையவர்;
2. பொன் யாழினைத் தாங்குவர்;
3. கற்பக மரநிழலில் தங்குவர்;
4. தம் தோழியரை முல்லை என்பர்;
5. நெருங்குகின்ற இறைவனை கரவீரம் (அலரிச் செடி) என்பர் *(பிர.திர. 454)*

**அரன்**

சிவன்; காப்பிற்குரிய கடவுளருள் ஒருவர் *(பன்.பா 106; நவநீ.பா. 27, இல.விள. 808; பிர.திர 89)*

**அரனுக்குரிய மகவு, முறை**

விநாயகன், முருகன், ஐயனார் (அய்யப்பன்), வீரபத்திரன், வைரவன் ஐவரும் பிள்ளைகள். திருமால் - மைத்துனன்; அயனார் (பிரமன்) - மருமகன் *(பிர.திர. 224)*

**அரிசிற்கிழார்**

சங்கப் புலவர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை 85)*

**அரிடிகம்**

சிற்பநூல் முப்பத்திரண்டனுள் ஒன்று *(பிர.தீபிகை 61)*

**அரிதாளம்**

ஒன்பதுவகைத் தாளங்களுள் ஒன்று *(பிர.தீபிகை 49)*

**அரிபிறப்பு**

1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(பன்.பா 99)*
2. தொடர்நிலைச் செய்யுள் வகைகளுள் ஒன்று *(இல.விள 805)*
3. மீன், ஆமை, ஏனம், நரசிங்கம், வாமனன், பரசுராமர், சீராமர், பலராமர், கிருஷ்ணன், கல்கி எனத் தேவர்கள் விரும்பியவாறு பல அவதாரங்களை எடுத்த திருமாலை வணங்கித் தலைவனைக் காக்க வேண்டி அந்த அவதாரங்களுக்கு இயைந்த மொழிகளை அமைத்து ஆசிரிய விருத்தம் பத்தால் பாடப்படும் இலக்கியம் *(பன்.பா 188; 46)*
4. தசப் பிராதுற்பவம் எனவும் உற்பவமாலை எனவும் பெயர் பெறும் *(பிர.மர. 18)*
5. உற்பவ மாலை எனப் பெயர் பெறும் *(இல.விள 868; பிர.திர 21, மு.வீ 1065, பிர.தீபிகை. 13)*

**அரிமா**

மங்கலச் சொற்களுள் ஒன்று *(நவநீ.பா 2, உரை)*

**அரியமம்**

பதினெண் மிருதிகளுள் ஒன்று *(பிர.தீபிகை 58)*

**அரியாசனம்**

அரசர்க்கு அமைகின்ற இருபத்தொரு சின்னங்களுள் ஒன்று *(பிர.தீபிகை 88)*

**அரிவை**

1. மகளிரின் ஏழு பருவங்களுள் ஒன்று *(பன்.பா 135 வெண்.பா 48; நவநீ.பா. 46; பிர.மர. 14, சித.பா. 37, இல.விள 862; பிர.திர. 198, தொ.விள 260)*
2. (அ) 20-25 வயது வரையான பருவம் (ஆறு வருடம்) *(வெண்.பா 48; பிர.மர. 4, சித.பா 37, இல.விள 862)*
   (ஆ) 19-24 வயது வரையான பருவம் (ஆறு வருடம்) *(நவநீ.பா. 46)*
3. இப் பருவ மகளிர்க்கு உவமையாகத் திருமகளைக் கூறுதல் வேண்டும். *(நவநீ.பா 86)*

அருணம்
ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று *(பிர.திர. 500-502, பிர.தீபிகை. 99)*

அருந்ததி
மங்கலச் சொற்களுள் ஒன்று *(பன்.பா. 68; சித.பா 18, உரை)*

அரும்பு
மரத்தின் உறுப்புகளுள் ஒன்று *(இல.விள. 921)*

அருமதாளம்
ஒன்பதுவகைத் தாளங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 49)*

அரை
(இடுப்பு) பாதாதி, கேசாதிக்குரிய உறுப்புகளுள் ஒன்று *(பன்.பா. 214; நவநீ.பா. 44)*

அலகை. சில தெய்வங்கள் பிறப்பு
அரவிடம் பிறந்தவர்கள் *(பிர.திர 282)*

அலங்காரப் பஞ்சகம்
1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(சுவாமி 165)*
2. வெண்பா, கலித்துறை, அகவல், விருத்தம், சந்த விருத்தம் ஆகிய இவைகள் மாறி மாறி வர அந்தாதித் தொடையில் இயற்றப்படும் நூறு செய்யுள்களைக் கொண்ட இலக்கியம் *(வெண்.பா. 44, நவநீ.பா. 42, இல.விள. 844, தொ.விள 282; பிர.திர. 16; மு.வீ. 1108)*
3. அகவலையடுத்து வஞ்சிப்பாவைக் குறிப்பிட்டுள்ளார் பதிப்பாசிரியர். *(பிர.மர. 11)*
4. அகவலையடுத்து வஞ்சி, வகுப்பு கூறப்பட்டுள்ளது. *(சித.பா. 34)*
5. ஐம்பது பாடல்கள் என்கிறது *(சுவாமி 169)*: பாடல் எண்ணிக்கை நூறு என்கின்றன. *(பிர.தீபிகை 24, பிர.தீபம் 6)*
6. தொடர்நிலைச் செய்யுள் வகைகளுள் ஒன்று *(இல.விள. 805)*

அலங்காரம்
அறுபத்துநான்கு கலைகளுள் ஒன்று *(பிர.தீபிகை 72)*

அல்குல்
பாதாதி, கேசாதிக்குரிய பெண் உறுப்புகளுள் ஒன்று *(பன்.பா 214, நவநீ.பா 44)*

அலம்புசை
விண்மாதர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை 46)*

அலம்புருடை
நாடி பத்தனுள் ஒன்று *(பிர.திர 379)*

அலரி
1. இறைவன் அணிதற்குரிய மலர்களுள் ஒன்று *(பிர.திர. 37)*
2. பெண்டிர் அணியும் மலர் மாலைகளுள் ஒன்று *(பிர.திர. 201)*

அலி
எழுத்துகளுக்கான மூவகைப் பால்களுள் ஒன்று *(பன்.பா. 25; சித.பா. 20)*

அலி எழுத்துகள் -
1. ஒற்றெழுத்துகள், ஆய்தம் *(பன்.பா 28, வெண்.பா 6, நவநீ.பா 7, சித.பா 20, இல.விள. 73, தொ.விள 289, மு.வீ 1031, பொரு.விள 22)*
2. ஒ, ஓ, ஐ, ஔ *(பிர.திர. 125, 126)*

அவத்தைப் பிரயோகம்
அறுபத்துநான்கு கலைகளுள் ஒன்று *(பிர.தீபிகை 72)*

அவந்தி
ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று *(பிர.திர 500-502; பிர.தீபிகை. 99)*

அவிட்ட நாளுக்கு உரிய எழுத்துகள்
1. ஞா, ஞெ, ஞொ *(பன்.பா. 44)*
2. ஞ, ஞா, ஞெ *(வெண்.பா. 13)*
3. ஞ, ஞா, ஞொ *(நவநீ.பா. 15)*
4. ஞ, ஞா, ஞெ *(சித.பா. 23)*
5. உற்ற ஞகரத்து மூன்று என இலக்கண விளக்கம் கூற அதன் உரைகாரர் ஞா, ஞி, ஞெ, ஞொ என நான்கைக் குறிப்பிட்டுள்ளார் *(இல.விள 789)*
6. ஞா, ஞே, ஞொ *(தொ.விள. 292)*
7. ஞ, ஞா, ஞெ, ஞே *(பிர.திர 145)*
8. ஞ, ஞா, ஞெ, ஞொ *(மு.வீ. 1034)*
9. ஞ, ஞா, ஞெ *(பொரு.விள. 47)*

அவிட்டம்

1. வஞ்சிப்பாவிற்கு உரிய நாள்களுள் ஒன்று *(பன்.பா 94; தொ.விள. 298; மு.வீ. 1015; பிர.திர. 417)*
2. கலிப்பாவிற்கு உரிய நாள்களுள் ஒன்று *(வெண்.பா 70; இல.விள. 881; தொ.விள. 297; மு.வீ. 1014; பிர. திர. 417)*

அவையடக்கியல்

கற்று வல்ல நூலாசிரியர் நாற்பொருளையும் நன்கு அறிந்து கூறினும் அவையினுள்ளார் தன் குற்றத்தைக் களைந்து ஏற்குமாறு கூறல் அழகு. *(இல.விள 888)*

அவையில் விலக்கத்தக்கவை

அவையின் மையத்தில் இருப்பதன்றி ஓரமாக மூலையில் இருப்பது (அவை நடைபெறும் விவாதத்திற்கு எதிர்மறை எண்ணம் கொண்டு இருப்பது. அதாவது பகுத்தறிவுச் சபையில் ஆன்மீகவாதி இருந்து விவாதிப்பது என்ற கருத்தும் கூறப்படுகிறது) அளவில்லாது கோபம் கொள்ளுதல், நாணத்தகும் சொற்களைச் சொல்லுதல், நல்ல நூல்களின் ஆணைப்படி உள்ளவற்றை விடுத்து அல்லாதவற்றைச் சொல்லுதல், அனைவரும் அறியும்படி பொய் கூறுதல் *(நவநீ பா. 95)*

அவையில் வெற்றி தோல்விகளின் பெருமை சிறுமை

நல்லவை, நிறையவையில் ஓதிய மரபில் தொலைந்தாலும் அது தோல்வி எனப்படாது. வெற்றி பெற்றால் புகழ் மிகும். தீயவையில் வென்றாலும் சிறப்பில்லை *(நவநீ.பா 96)*

அவையின் குறை

1. பொருள் உரைப்பாரிடம் வாதம் புரிந்து நகை செய்வோர்.
2. திறம் பழிப்போர்.
3. நாடகமுத்திரை காட்டிடுபவர்.
4. அவையில் பொதுத்தலைவர் அல்லாது குழு குழுவாகப் பிரிந்து நிற்பவர்கள்.
5. நூலை அறிந்து கொள்வதன்றிப் பகை செய்வோர்.
6. தருமநெறியில் தவறியோர்.
7. தம்முள்ளே சங்கேத மொழிகளைப் பேசுவோர்.
8. பொய்யுரைப்போர் *(நவநீ பா 91)*

அழகு

மங்கலச் சொற்களுள் ஒன்று *(சுவாமி 173)*

அளகு

பெண்பால் மரபுப்பெயர்களுள் ஒன்று *(இல விள 917)*. *கோழி, கூகை, மயில் இவற்றின் பெண்பாலைக் குறிக்கும் (இல விள 917, உரை)*

அளபெடை

1. நஞ்சு எழுத்துகளுள் ஒன்று *(பன் பா 23; வெண் பா 8, நவநீ பா. 9, இல விள. 780; தொ விள 290, பிர திர. 130, சுவாமி 175)*
2. உயிரளபெடை, ஒற்றளபெடை என்ற இரு வகையையும் குறிப்பிடுகின்றன. *(சித.பா 20, மு வீ 1032)*
3. செய்யுளில் இசை நிறைவைத் தரும் பொருட்டு எழுத்துகள் நீண்டு வருதல் (அ) இரட்டித்து வருதல். இது இரு வகைப்படும். (அ) அடி அளபெடை (ஆ) சீர் அளபெடை *(சித.பா. 6)*

அளவடி

அடி வகைகளுள் ஒன்று: அடிதோறும் நான்கு சீர்களால் அமையும் செய்யுள் (சித.பா. 5)

(எ-டு) தேம்பழுத் தினியநீர் மூன்றுந் தீம்பலா
மேம்பழுத் தளிந்தன சுளையும் வேரியு
மாம்பழக் கனிகளு மதுத்தண் டீட்டமுந்
தாம்பழுத் துளசில தவள மாடமே *(மேற் சூளாமணி 49, யா.கல விருத்தியுரை நூ. 24, யா காரிகை 13, உரை; சித.பா.ப. 16)*

அளவழித் தாண்டகம்

நான்கடியிலும் எழுத்துகளின் எண்ணிக்கை ஒவ்வாதிருக்கும் இலக்கியம் *(மு வீ 1115, பிர தீபிகை 26; பிர தீபம். 79)*

அளவியல் தாண்டகம்

நான்கடியிலும் எழுத்துகளின் எண்ணிக்கை ஒத்திருக்கும் இலக்கியம் *(மு.வீ 1115; பிர.தீபிகை 26, பிர.தீபம். 79)*

**அறநிலை இன்பம்**

அரசியல் வகை ஆறனுள் ஒன்று; பருவமும் குலமும் ஒழுக்கமும் குணமும் ஒத்த பெண்ணைத் திருமணம் புரிந்து மனம் ஊன்றி வீட்டில் இருத்தல். *(பிர.தீபிகை. 89)*

**அறநிலைப் பொருள்**

அரசியல் வகை ஆறனுள் ஒன்று; செல்லுதற்குரிய வழியில் சென்று தத்தம் நிலையினால் முயன்று பெறுகின்ற பொருள் *(பிர.தீபிகை. 89)*

**அறநிலையறம்**

அரசியல் வகை ஆறனுள் ஒன்று; தம் வருணத்தை விட்டு நீங்காது நிலைத்து, நிலைபெறப் பாதுகாத்து உயிர் அளித்தல் மாறாத அறநிலையறம் *(பிர.தீபிகை 89)*

**அறவைச் சோறு**

முப்பத்திரண்டு அறங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 71)*

**அறவைத்துரியம்**

முப்பத்திரண்டு அறங்களுள் ஒன்று *(பிர.தீபிகை 71)*

**அறவைப் பிணம் சுடுதல்**

முப்பத்திரண்டு அறங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 71)*

**அறியாது உடன்படல்**

முப்பத்திரண்டு உத்திகளுள் ஒன்று: முற்ற உணர்ந்த ஆசிரியன் தான் இயற்றும் இலக்கணத்தில் வேறுபட வருவனவும் உள்ளன என்பதை மனத்தில் கொண்டு, நூல் பயில்வோர் அவற்றையும் அறிய வேண்டும் எனப் புறனடை முதலிய நூற்பாக்களை இயற்றுதல். *(இல.விள 898)*

**அறிவைப் பற்றிய சிறப்பு விதி**

மக்களாகப் பிறந்து வினைப்பயனால் அடுத்த பிறவியில் விலங்காய்ப் பிறப்பினும் ஆறறிவு பெறுதல் உண்டு *(இல விள. 915)*

**அறுகம்புல்**

இறைவன் அணிதற்குரிய புல் *(பிர.திர. 37)*

**அறுசீர்க் கழிநெடிலடி**

அடி வகைகளுள் ஒன்று; அடிதோறும் ஆறு சீர்களால் அமையும் செய்யுள் *(சித பா 5)*

(எ-டு) இரைக்கு மஞ்சிறைப் பறவைக ளெனப்பெயர்ந் தினவண்டு புடைசூழ
நுரைக்க ளென்னுமக் குழம்புக டிகழ்ந்தெழ நுடங்கிய விலயத்தால்
திரைக்க ரங்களிற் செழுமலைச் சந்தனத் திரள்களைக் கரைமேல்வைத்
தரைக்கு மற்றிது குணகடற் றிரையோடு பொருதல தவியாதே

*(மேற்: சூளாமணி 877; யா.கல விருத்தியுரை நூ 25, யா. காரிகை 13 உரை, சித பா.ப 16)*

**அறுபத்து நான்கு கலைகள்**

1. அக்கரவிலக்கணம், 2. இலிகிதம் 3. கணிதம், 4. ஆகமபுராணம், 5. வேதம், 6. வியாகரணம், 7. நீதிசாத்திரம், 8. மந்திரம், 9. தருமசாத்திரம், 10. சகுனம், 11. சிற்பம், 12. இதிகாசம், 13. உருவம், 14. அலங்காரம், 15. வைத்தியம், 16. அசுவபரிட்சை, 17. அஸ்தரப்பரீட்சை, 18. ஆகாயகமனம், 19. வசியம், 20. சுக்கிலத்தம்பனம், 21. வாயு, 22. வாக்கு, 23. திட்டி, 24. சோதிடம், 25. யானை போலக் காதசைத்தல், 26. பசுவைப் போன்று சுழலும் வண்ணம் காதினை அசைத்தல் 27. தாளம் 28. வீணை, 29. வேணு, 30. தும்பிப் பரிட்சை, 31. நட்டம், 32. சத்தப்பிரமம், 33. மதுரடாஷாணம், 34. ஆதோரண வகுப்பு 35. முட்டி, 36. சோராத யோகம், 37. இந்திரசாலம், 38. மோகனம், 39. மல்யுத்தம், 40. மதனசாத்திரம், 41. பூமிப்பரிட்சை, 42. வித்வேடணம், 43. காருடம், 44. இரத்தினப் பரிட்சை, 45. ஆகருடணம், 46. அக்கினிஸ்தம்பனம், 47. கட்க ஸ்தம்பனம், 48. சலத்தம்பனம், 49. மகேந்திர சாலம் 50. காயப்பிரவேசம், 51. அதிரிசயம், 52. இரஸவாதம், 53. காவியம் 54. பைபீல வாதம் 55. கவுத்துகாவாத முடனே, 56. கனகப்பரிட்சை, 57. உச்சாடனம், 58. நாடகம், 59. இரதப்பரீட்சை, 60. காந்தருவ வாதம், 61. மிருதங்கம், 62. தாது, 63. கனதம்பம், 64. அவத்தைப் பிரயோகம், 65. சங்கிராம லக்கணம் *(பிர.தீபிகை 72)*

**அறுமுகன்**

1. அந்தண சாதிக்குரிய எழுத்துகளைப் படைத்த நால்வருள் ஒருவர் *(பன்.பா 5)*
2. அந்தண சாதிக்குரிய தேவதைகளுள் ஒன்று *(நவநீ.பா. 12)*

**அறுவகை அறிவுகள்**

1. ஓரறிவு, 2. ஈரறிவு, 3. மூவறிவு, 4. நான்கறிவு, 5. ஐந்தறிவு, 6. ஆறறிவு *(இல.விள 912)*

| வ.எண் | அறிவு | புலன்கள் | உயிர்கள் | நூற்பா எண் |
|---|---|---|---|---|
| 1. | ஓரறிவு | மெய் | புல்,மரம் | 912 |
| 2. | ஈரறிவு | மெய், நா | நந்து, முரள் | 913 |
| 3. | மூவறிவு | மெய், நா, மூக்கு | சிதல், எறும்பு | |
| 4. | நான்கறிவு | மெய், நா, மூக்கு, கண் | நண்டு, தும்பி | |
| 5. | ஐயறிவு | மெய், நா, மூக்கு, கண், காது | மாக்கள் | |
| 6. | ஆறறிவு | மெய், நா, மூக்கு, கண், காது, மனம் | மக்கள் | |

*அறுவகை அறிவுபெறும் உயிர்களுக்கு உரிய கிளையும், பிறப்பும் அந்தந்த அறிவே பெறும். *(இல.விள 914)*

**அறுவகை அறிவுபெறும் உயிர்கள்**
புல், மரம், முரள், நந்து, சிதல், எறும்பு, ஞெண்டு, தும்பி, மா, மக்கள் *(இல.விள. 913)*

**அன்றில்**
பருவரல் வளரக் காரணமானவற்றுள் ஒன்று *(பன்.பா. 185)*

**அன்னம்**
1. அபிராமியின் வாகனம் *(பன்.பா. 109 உரை)*; ▶ வேய்த்தோள் எழுவர்.
2. மங்கலச் சொற்களுள் ஒன்று *(சுவாமி 173)*

**அனங்கதிலகை**
விண்மாதர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை. 46)*

**அனந்தன்**
1. அட்ட நாகங்களுள் ஒன்று *(சுவாமி 165)*
2. அந்தண சாதியினது.
3. ▶ அட்டநாகம் 1, 2 *(பிர.திர. 474)*

**அனல் வாக்கு**
1. நல் வாக்குக்கு எதிரானது;
2. துன்பம் நினைந்து பாடுதல் *(பிர.திர 419)*

**அனலம்**
சிவாகமம் இருபத்தெட்டுள் ஒன்று *(பிர தீபிகை. 60)*

**அனாதி**
சைவம் பதினாறுள் ஒன்று *(பிர தீபிகை 62)*

**அனுசம்**
சைவம் பதினாறுள் ஒன்று *(பிர.தீபிகை 62)*

**அனுமான்**
சிற்பநூல் முப்பத்திரண்டுள் ஒன்று *(பிர தீபிகை. 61)*

**அனுமோனை**
1. இன எழுத்துகளால் அமையும் மோனை *(சித.பா. 13)*
   இன எழுத்துகள் - அ, ஆ, ஐ, ஔ
   இ, ஈ, எ, ஏ
   உ, ஊ, ஒ, ஓ
   ஞ, ண, ன, ந, ம, வ
   ச, த
   (எ.டு) ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல் தாமுடைமை
   வைத்திழக்கும் வன்கணவர்
2. சீரின் முதலிலே வருவதன்றி, இடையில், ஈற்றில் வரினும் மோனையாம். *(சித.பா 14)*

**அனுராக மாலை**
1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(சுவாமி 165)*
2. தலைவன் கனவினால் ஏற்பட்ட இன்னலைப் பாங்கனிடத்து வருணிக்கும் இலக்கியம் *(பிர.மர. 15; சித.பா. 38; சுவாமி 168)*
3. கனவில் ஒருத்தியைக் கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து இனிதின் உணர்ந்ததைப் பாங்கற்கு உரைக்கும் இலக்கியம். இது நேரிசைக் கலி வெண்பாவால் பாடப்பெறும் *(இல.விள. 864; பிர.தீபம் 4, மு.வீ. 1048)*
4. தலைவன் தன் கனவில் பெண்ணைக் கண்டு, மயக்கம் தருகின்ற அவள் இன்புறும்படி சோலையில் அவளைச் சேர்ந்து அமைந்ததைத் தனது இனிய தோழனுக்குக் கூறுவதாகக் கலிவெண்பா யாப்பில் அமையும் இலக்கியம் *(பிர.தீபிகை 9)*

**அஸ்தரப்பரீட்சை**

அறுபத்துநான்கு கலைகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 72)*

## ஆ

**ஆ**

1. நான்முகன் (முதல்வன்) படைத்த எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 3, வெண்.பா. 9; நவநீ.பா. 11; சித.பா. 21, இல.விள. 778)*
2. சிவன் படைத்த எழுத்துகளுள் ஒன்று *(சுவாமி 175)*
3. அந்தண சாதிக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 5; வெண்.பா 9; நவநீ.பா 12; சித.பா. 21; இல.விள. 774; தொ.விள. 291; பிர.திர. 135; சுவாமி 175, மு.வீ. 1033; பொரு.விள. 33)*
4. மக்கள் கதிக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா 15, வெண்.பா. 18; நவநீ.பா. 20; சித.பா. 24, இல.விள 798; தொ.விள. 293; பிர.திர. 152, சுவாமி 176; மு.வீ. 1036)*
5. நஞ்சு எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 22; நவநீ.பா. 8; சித.பா. 20; பொரு.விள. 28)*;
6. அமுத எழுத்துகளுள் ஒன்று *(பிர.திர. 128; சுவாமி 28)*
7. பெண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 27; வெண்.பா 6; நவநீ.பா. 7; சித.பா. 20; இல.விள. 733, தொ.விள. 289, பிர.திர 124; சுவாமி 174, மு.வீ. 1031; பொரு.விள. 21)*
8. கார்த்திகை நாளுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 41; வெண்.பா 11; நவநீ.பா. 13, சித.பா 23; இல.விள 785; தொ.விள. 292, பிர.திர. 142; மு.வீ. 1034; பொரு.விள. 37)*
9. கங்கை என்னும் மங்கலச் சொல்லுக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 7)*; பூ, மணி, முந்நீர், கடல், கார் என்னும் மங்கலச் சொற்களுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 3)*
10. இசைக்கு உரிய குறியீட்டெழுத்துகளுள் ஒன்று *(பிர.திர. 92)*

**ஆகதீ**

யாம நேர இராகங்களுள் ஒன்று; இரக்கத்திற்கு உரிய இராகங்களுள் ஒன்று *(பிர.தீபிகை 55)*

**ஆகம்பித ஆனனம்**

முகநிலைகள் பதினான்கனுள் ஒன்று; இசைவைத் தெரிவிக்கும் பொருட்டு மேல்கீழாகத் தலையை அசைத்திடுதல் *(பிர.தீபம் 73)*

**ஆகமபுராணம்**

அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்று *(பிர.தீபிகை 72)*

**ஆகருடணம்**

அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 72)*

**ஆகவலயநீயம்**

முப்பத்திரண்டு உபநிடதங்களுள் ஒன்று *(பிர.தீபிகை 59)*

**ஆகாய கணம்**

1. கணம் என்பது சீர்களைக் குறிக்கிறது. நிரை நிரை நேர் என்பது ஆகாய கணத்திற்கு உரிய சீர் ஆகும் *(இந்.காளி 15; பன்.பா. 63; நவநீ.பா 23; இல.விள. 800; தொ.விள. 294; பொரு.விள. 78)*
2. இக்கணத்தைத் 'த' கணம் என்றும் சில பாட்டியல்கள் கூறுகின்றன *(சித.பா. 26; பிர.திர. 157; சுவாமி 177)*
3. இக்கணம் தீமை பொருந்திய கணங்களுள் ஒன்று *(இந்.காளி 21, பன்.பா. 66, வெண்.பா. 20; நவநீ.பா. 23; சித.பா. 25; தொ.விள 294; பிர.திர 155)*
4. இக்கணத்திற்கு உரிய நாள் திருவோணம் *(இந்.காளி 36; பன்.பா 63)*
5. இக்கணத்திற்கு உரிய நாள் புனர்பூசம் என்றும் சில நூல்கள் கூறுகின்றன *(சித.பா 25, இல.விள. 800, உரை; பிர.திர 154)*
6. இக்கணத்திற்கு உரிய சீரால் தொடங்கும் இலக்கியம் பாடப்படும் தலைவனின் வாழ்நாளைக் குறைக்கும் எனக் கருதப்படுகிறது *(பொரு.விள 86)*

**ஆகாய கமனம்**

அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 72)*

**ஆகிரி**

வகுப்புறு இராகங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 53)*

**ஆங்கிரம்**

உபபுராணம் பதினெட்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 70)*

## ஆசிரியத் தாழிசை

மூன்றடியும் தம்முள் ஒத்து முடியும் செய்யுள் *(சித.பா. 9)*

(எ-டு) கன்று குணிலாக் கனியுதிர்த்த மாயவன்
இன்றுநம் மானுள் வருமேல் அவன்வாயிற்
கொன்றையந் தீங்குழல் கேளாமோ தோழீ
பாம்பு கயிறாக் கடல்கடைந்த மாயவன்
ஈங்குநம் மானுள் வருமேல் அவன்வாயில்
ஆம்பலந் தீங்குழல் கேளாமோ தோழீ

கொல்லையஞ் சாரற் குருந்தொசித்த மாயவன்
எல்லைநம் மானுள் வருமேல் அவன்வாயில்
முல்லையந் தீங்குழல் கேளாமோ தோழி.

இது மூன்றடியாய் ஒருபொருள்மேல் மூன்றடுக்கி வந்த செய்யுள்.

*(மேற்: சிலப்பதிகாரம். 17·1-3; யா.கல விருத்தியுரை நூ. 75; யா.கல காரிகை 29 உரை; சித.பா. ப. 42)*

## ஆசிரியத்துறை

நான்கடியாய் இடையிடை அடிகள் சீர்குறைந்தும் இடைமடக்கியும் ஈற்றயலடி குறைந்தும் வரும் செய்யுள் *(சித.பா. 9)*

(எ-டு) இரங்கு குயில்முழவா இன்னிசையாழ் தேனா
அரங்கம் அணிபொழிலா ஆடும்போலும் இளவேனில்
அரங்கம் அணிபொழிலா ஆடு மாயின்
மரங்கொல் மணந்தகன்றார் நெஞ்சமென் செய்த திளவேனில்

*(மேற்: யா கல விருத்தியுரை நூ. 52, 76, 95, யா.கல காரிகை 29, உரை; சித.பா. ப. 43)*

## ஆசாரக் கோவை நூறு

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று *(பிர தீபிகை. 44)*

## ஆசிரியப்பா

1. மங்கலம் பொருந்திய பாக்களுள் ஒன்று *(பன் பா. 98)*
2. அகவலோசை பெற்றும் அளவடியாலும் அமையும் செய்யுள் *(சித பா. 9)*
3. இப் பா மூன்றடிச் சிறுமையுடையது *(சித பா. 5)*

(எ-டு) முதுக்குறைந் தனளே முதுக்குறைந் தனளே
மலையன் ஒள்வேற் கண்ணி
முலையும் வாரா முதுக்குறைந் தனளே *(மேற். யா.விருத்தியுரை நூ. 32, 73; யா. காரிகை 15, உரை; சித.பா. ப. 18)*

## ஆசிரியப்பாவிற்கு உரிய இராசிகள்

சிங்கம், தனு, மேடம் (மேஷம்) *(பன்.பா 92, வெண்.பா. 70; பிர.மர. 26; இல.விள. 882; தொ.விள. 296; மு வீ. 1013)*

## ஆசிரியப்பாவிற்கு உரிய கடவுளர்/கோள்கள்

சூரியன், செவ்வாய் *(பன்.பா. 92; வெண்.பா. 71; பிர.மர 27; இல.விள 883; தொ.விள. 296; மு வீ. 1013, பிர திர. 417)*

## ஆசிரியப்பாவிற்கு உரிய நறுமணப் பொருள்

1. செஞ் சந்தனம் *(பன் பா. 92; வெண் பா. 71; இல.விள 884)*
2. செந்நிறம் உடைய நறுமணப்பொருள் *(பிர திர. 417)*

## ஆசிரியப்பாவிற்கு உரிய நாள்கள்/நட்சத்திரங்கள்

மகம், பூரம், உத்திரம், அஸ்தம், சித்திரை, சுவாதி, விசாகம் *(பன் பா. 92; வெண்.பா 70; இல.விள 881; தொ.விள. 296; மு.வீ 1013; பிர.திர. 417)*

## ஆசிரியப்பாவிற்கு உரிய நிலம்

குறிஞ்சி *(பன்.பா 92; வெண்.பா. 69, பிர.மர 25; இல.விள. 878; தொ.விள. 296; மு வீ. 1013; பிர.திர. 417)*

## ஆசிரியப்பாவிற்கு உரிய பூ

செம்மை நிறம் உடைய கழுநீர்ப் பூ *(பன்.பா. 92, வெண்.பா. 71; இல.விள 884; பிர.திர. 417)*

**ஆசிரியப்பாவிற்கு உரிய வண்ணம்**
செம்மை *(பன்.பா. 92; வெண்.பா. 69; பிர.மர. 25; இல.விள. 879, தொ.விள. 296; மு.வீ.1013; பிர.திர. 417)*

**ஆசிரிய நல்லந்துவன்**
சங்கப் புலவர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை 85)*

**ஆசிரியவிருத்தம்**
1. நான்கடியும் தம்முள் ஒத்து ஒவ்வொரு அடியிலும் அறுசீர் முதலான சீரைக் கொண்டு முடியும் செய்யுள் *(சித.பா. 9)*
2. பிள்ளைப்பாட்டின் பா வகைகளுள் ஒன்று *(பன்.பா. 110)*

**ஆசிரியன் ஆகத் தகாதவன்**
குணமின்மை முதலிய இயல்பினன்; கழற்குடம், மடற்பனை, பருத்திக்கும்பம், முடத்தாழை எனும் உவமைகளைப் பெறுபவன் *(பிர.திர. 395)*

**ஆசுகவி**
1. ஒருபுலவன் மற்றொரு புலவனை நோக்கி, எழுத்து, சொல், பொருள், அணி, யாப்பு ஆகியவை இன்ன இன்ன வகையாயிருக்கும்படி பாடவேண்டும் எனக் கேட்டதும் தடையின்றிப் பாடும் பா வகை *(வெண்.பா. 24; நவநீ.பா. 87 உரை; இல.விள. 764, தொ.விள. 299, மு.வீ. 1017; பிர.திர. 392; பிர.தீபிகை. 98)*
2. நால்வகைக் கவிகளுள் ஒருவர் *(வெண்.பா. 23; நவநீ.பா. 87; இல.விள. 930; தொ.விள. 299; மு.வீ. 1016; பிர.திர. 392; பிர.தீபிகை. 98)*

**ஆசெதுகை**
எதுகையிடையில் வரும் ய, ர, ல, ழ என்னும் நான்கு ஒற்றுகள்.
(எ-டு) காய்மாண்ட தெங்கின் பழம்வீழக் கமுகி னெற்றிப்
பூமாண்ட தீந்தேன் தொடைகீறி வருக்கை போழ்ந்து
தேமாங் கனிசிதறி வாழைப் பழங்கள் சிந்தும்
ஏமாங் கதமென் றிசையால் திசைபோய துண்டே.
[யகரவொற்று இடைவந்த ஆசெதுகை]
*(மேற்: சிந். 31; யா.காரிகை.ப. 187; சித.பா.ப 79)*
மாக்கொடி மாலையும் மவ்வற் பந்தரும்
கார்க்கொடி முல்லையுங் கலந்து மல்லிகைப்
பூக்கொடிப் பொதும்பரும் பொன்ன ஞாழலும்
தூக்கடி கமழ்ந்துதான் துறக்கம் ஒத்ததே
[ரகரவெற்று இடைவந்த ஆசெதுகை]
*(மேற்: சூளா. 35; யா.காரிகை.ப. 187; சித.பா.ப. 79)*
ஆவே றுருவின வாயினும் ஆபயந்த
பால்வே றுருவின அல்லவாம் - பால்போல்
ஒருதன்மைத் தாகும் அறநெறி; ஆபோல்
உருவு பலகொளல் ஈங்கு
[லகரவொற்று இடைவந்த ஆசெதுகை]
*(மேற்: நாலடி. 118, யா.காரிகை 187; சித.பா.ப. 79)*
அந்தரத் துள்ளே அகங்கை புறங்கையாம்
மந்தரமே போலும் மனைவாழ்க்கை - மந்தரத்து
வாழ்கின்றேம்! என்று மகிழன்மின்? வாணாளும்
போகின்ற பூளையே போன்று.
[ழகரவொற்று இடைவந்த ஆசெதுகை]
*(மேற்: யா.காரிகை ப. 187, 188)*

**ஆடவர் இயல்பும் செயலும்**
நன்னெறியில் நிற்பர், சாம பேத தான தண்ட முறைகளைக் கைப்பிடிப்பர், வேலெறிதல், அம்பு எய்தல், ஈட்டியால் குத்துதல், வாளால் வெட்டுதல் எனும் செயல்கள் புரிவர். மனவுறுதி கொண்டு ஒரு வழிச் சென்றால் துருவன் போன்று வாழ்வர் *(பிர.திர. 214)*

**ஆடவர் பெறும் உவமைகள்**
கன்னன், சீவகன் முதலிய பெயர்களையும் நிலை பேறுடைய செயல்கள் பற்றி அயனையும் அழிக்கும் ஆற்றல் பற்றி அரனையும் ஒப்பர். கை வச்சிரத்தண்டினையும் மார்பு - தாமரை, கண்ணாடியையும் ஒப்பாகக் கொள்ளும். ► அட்டவணை 1 *(பிர.திர. 211)*

**ஆடவரின் ஆற்றல், செயல்**
வில், வேல், வாள், மழு, வச்சிரம், அங்குசம், பாசம், தண்டு, தோமரம், சூலம், சக்கரம், சங்கு, கலப்பை, பிரம்பு, குத்துக்கோல், கவண், அம்பு, கேடயம் என்னும் பதினெண் படைக்கலங்களையும் எடுப்பர்; போர்க்களத்தில் மன்னனின் அழியாத வெற்றியைக் கூறும் வெண்கொற்றக் குடையை ஏந்துவர். பல விருதுகள் பெறுவர்; பதினெட்டுக் காவியங்களையும் கற்றுக் கரை காண்பர். அறிவு காரணமாக என்றும் மூப்படையாத காமவேளின் மதன நூலாகிய காமத்தை அறிவர் *(பிர.திர. 213)*

ஆடாமணி

அரண்மனை வாயிலில் ஆராய்ச்சி மணி ஒலிக்காத நல்லாட்சியில் வெற்றித் தெய்வத்தின் ஆசிமொழிகள் அமையும் வண்ணம் அரசன் போர்மேற் சென்று திரும்பி வருதலைக் கூறும் இலக்கியம். *(பிர.திர. 10)*; ஆராய்ச்சி மணி ஒலிக்காத நல்லாட்சியைக் கூறுதலைக் கருவாகக் கொண்ட இலக்கியம் *(பிர.திர. 106)*

ஆண்டி

குலப் பெயர்களுள் ஒன்று *(பிர.திர. 362)*

ஆண்டு நிலை

சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(பன்.பா. 99)*

ஆண்பால்

எழுத்துகளுக்கு உரிய மூவகைப் பால்களுள் ஒன்று *(பன்.பா. 25; சித.பா. 20)*

ஆண்பாலுக்கு உரிய எழுத்துகள்

1. உயிர்க்குறில் ஐந்து (அ, இ, உ, எ, ஒ) மற்றும் உயிர்மெய்க்குறில் 90 (க, கி, கு, கெ, கொ, ங, ஙி, ஙு, ஙெ, ஙொ, ச, சி, சு, செ, சொ, ஞ, ஞி, ஞு, ஞெ, ஞொ, ட, டி, டு, டெ, டொ, ண, ணி, ணு, ணெ, ணொ, த, தி, து, தெ, தொ, ந, நி, நு, நெ, நொ, ப, பி, பு, பெ, பொ, ம, மி, மு, மெ, மொ, ய, யி, யு, யெ, யொ, ர, ரி, ரு, ரெ, ரொ, ல, லி, லு, லெ, லொ, வ, வி, வு, வெ, வொ, ழ, ழி, ழு, ழெ, ழொ, ள, ளி, ளு, ளெ, ளொ, ற, றி, று, றெ, றொ, ன, னி, னு, னெ, னொ) *(பன்.பா. 26, வெண்.பா. 6; நவநீ.பா 7, சித.பா. 20)*
2. குற்றெழுத்து ஐந்து *(இல.விள 773; தொ.விள. 289)*
3. உயிர்க்குறில் 4, உயிர்மெய்க்குறில் 72 *(பிர.திர 124, சுவாமி 174; மு.வீ 1031; பொரு.விள. 20)*

ஆண்பால் உவமைகள்

1. பன்னிரண்டாம் அகவையில் கூறற்குரிய உவமைகள்; அவை:
2. பொங்குகதிர், இளம்பிறை, புலியின் சிறுபறழ், குஞ்சரக் குழவி, கோளரிக் குருளை, அடலிள விடை. *(பன்.பா 114)*

ஆண்பால் பிள்ளைத்தமிழ்

பிறப்பு முதல் பதினாறு ஆண்டுகள் வரையிலான காலம் ஆண்பால் பிள்ளைத் தமிழின் பாட்டுடைத் தலைவனுக்கு உரியது *(இந்.காளி 29)*

ஆண்பால் பிள்ளைப் பாட்டுக்குரிய பருவங்கள்

1. காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வருக, அம்புலி, சிற்றில், சிறுபறை, சிறுதேர், *(பன்.பா 102, வெண்.பா. 30; நவநீ.பா. 29, பிர.தீபிகை 5)*
2. மேற்குறிப்பிட்ட பருவங்களின் வரிசை முறையில் இறுதி மூன்றின் வரிசையில் சில பாட்டியல்கள் மாறுபடுகின்றன. அதாவது பன்னிரு பாட்டியல் குறிப்பிடும் சிற்றில், சிறுபறை, சிறுதேர் என்ற வரிசை முறையை மாற்றிச் சிறுபறை, சிற்றில், சிறுதேர் என்று குறிப்பிடுகின்றன. *(பிர.மர. 2; இல.விள 806, தொ.விள 257, பிர.திர. 3; சுவாமி 167; மு.வீ 1037, பிர.தீபம் 94)*

ஆண்பால் மரபுப் பெயர்கள்

ஏறு, ஏற்றை, ஒருத்தல், களிறு, சே, சேவல், இரலை, கலை, மோத்தை, தகர், உதள், உம்பல், போத்து, கடுவன், கண்டி *(இல.விள 916)*

ஆணவம்

மும்மலங்களுள் ஒன்று *(பிர.திர. 381)*

ஆணை

1. ▶ பெயர் *(நவநீ.பா 24)*
2. மங்கலச் சொற்களுள் ஒன்று *(சுவாமி 173)*

ஆணை கூறல்

முப்பத்திரண்டு உத்திகளுள் ஒன்று; ஆசிரியன் தன் நூலில் தான் குறிப்பிடும் சில செய்திகளை வேறு காரணம் எதுவும் கூறாது இக்கருத்தை 'எல்லீரும் கொண்மின்' என்பது என் ஆணை எனக் கூறி விடுத்தல் *(இல.விள. 898)*

ஆணைப்பெயர்

1. எண்வகைப் பெயர்களுள் ஒன்று *(பன்.பா. 74)*
2. வலியோர் அஞ்சும்படி உலகத்தவரால் போற்றிப் பேசப்படும் பெயர் *(பன்.பா. 80)*

ஆத்தி

1. இறைவன் அணிதற்குரிய மலர்களுள் ஒன்று *(பிர.திர. 37)*
2. பெண்டிர் அணியும் மலர் மாலைகளுள் ஒன்று *(பிர.திர. 202)*

**ஆதிசாரம்**
சிற்பநூல் முப்பத்திரண்டுள் ஒன்று *(பிர.தீபிகை 61)*

**ஆதிசைவம்**
பதினாறு சைவங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 62)*

**ஆதுலர்க்குச்சாலை**
முப்பத்திரண்டு அறங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 71)*

**ஆதோரண மஞ்சரி**
▶ வாதோரண மஞ்சரி *(மு.வீ. 1068; பிர.தீபிகை. 17, பிர.தீபம். 50)*

**ஆதோரண வகுப்பு**
அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 72)*

**ஆந்திரம்**
ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று *(பிர.திர. 500-502, பிர.தீபிகை. 99)*

**ஆபஸ்தம்பம்**
பதினெண் மிருதிகளுள் ஒன்று *(பிர.தீபிகை 58)*

**ஆமை**
அரசர்க்குரிய இருபத்தொரு சின்னங்களுள் ஒன்று *(பிர.தீபிகை 88)*

**ஆய்தக்குறுக்கம்**
நஞ்சு எழுத்துகளுள் ஒன்று *(வெண்.பா. 8, சித.பா. 20; சுவாமி. 175; பொரு.விள. 28)*

**ஆய்தம்**
1. நரகர் கதிக்குரிய எழுத்துகளுள் ஒன்று (பன்.பா. 17; நவநீ.பா. 21; சித.பா. 24)
2. நஞ்சு எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 23; நவநீ.பா. 9; சித.பா. 20; இல.விள. 780, தொ.விள. 290; பிர.திர. 130; சுவாமி 175; மு.வீ. 1032)*
3. அலி எழுத்துகளுள் ஒன்று (பன்.பா.28; வெண்.பா. 6; நவநீ.பா. 7; இல.விள. 773; தொ.விள. 289; பிர.திர. 127; மு.வீ. 1031; பொரு.விள. 22)

**ஆயர் தீங்குழல்**
பருவரல் வளரக் காரணமானவற்றுள் ஒன்று *(பன்.பா 185)*

**ஆயில்ய நாளுக்குரிய எழுத்துகள்**
மெ, மே, மை *(பன்.பா. 48, வெண்.பா. 15, நவநீ.பா. 17; சித.பா. 23; இல.விள. 793; தொ.விள 292; பிர.திர 144, மு.வீ 1034; பொரு.விள. 58)*

**ஆயில்யம்**
வெண்பாவிற்கு உரிய நாள்களுள் ஒன்று *(பன்.பா. 91, வெண்.பா 70; இல.விள. 880; தொ.விள 295, மு.வீ. 1012; பிர.திர. 417)*

**ஆயுள்வேதம்**
நான்கு வேதங்களுள் ஒன்று; வேத சாதியர்க்கு உரியது *(பிர.தீபிகை. 58)*

**ஆரணம்**
மங்கலச் சொற்களுள் ஒன்று *(பன்.பா 68; நவநீ.பா 2, இல.விள 771; தொ.விள 285, மு.வீ. 1027)*

**ஆரபி**
வகுப்புறு இராகங்கள் முப்பத்திரண்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 53)*

**ஆரிடம்**
எண்வகை மணங்களுள் ஒன்று; (மணமகன், மணமகள் இருவரையும் இருத்தி) இரு இடங்களும் நிறுவி, மனத்திற்குப் பொருந்திய மணமகனுக்கு, தனக்கு ஒத்த பொருள் உதவி மகளைப் பத்தினியாக்குவது *(பிர.திர. 358)*

**ஆரியர்**
குலப் பெயர்களுள் ஒன்று *(பிர.திர. 363)*

**ஆருணி**
முப்பத்திரண்டு உபநிடதங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 59)*

**ஆலங்குடிவங்கனார்**
சங்கப் புலவர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை 85)*

**ஆலோலிதம்**
முகநிலைகள் பதினான்கனுள் ஒன்று; ஆசையால் அழைத்தலால் மலருதல் *(பிர.தீபிகை. 73)*

**ஆவற்கியம்**

பதினெண் மிருதிகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 58)*

**ஆவுரிஞ்சு தறி**

முப்பத்திரண்டு அறங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 71)*

**ஆழி**

நாராயணியின் ஆயுதம் *(பன்.பா. 109 உரை)*

**ஆற்றுப்படை**

1. ஒரு நூல் ஒரு பாட்டேயாகும் இலக்கிய வகைகளுள் ஒன்று *(பன்.பா 87)*
2. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(பன்.பா. 99)*
3. தொடர்நிலைச் செய்யுள் வகைகளுள் ஒன்று *(இல.விள. 805)*
4. வேந்தனிடம் பரிசில் பெற்றுத் திரும்பும் இரவலன் ஒருவன் எதிர்ப்படும் புலவர், பாணர், பொருநர், விறலியர், கூத்தர் இவர்களுள் ஒருவரைக் கண்டு தனக்குப் பரிசில் அளித்த வேந்தனின் பெயர், ஈகைத்திறம், நாடு, ஊர் இவற்றைப் புகழ்ந்து கூறி அம்மன்னனிடம் ஆற்றுப் படுத்தும் இலக்கியம் *(பன்.பா. 202; வெண்.பா. 52; நவநீ.பா. 53; இல.விள. 873; தொ.விள. 266; பிர.திர. 27; மு வீ. 1090; பிர.தீபிகை. 21; பிர.தீபம். 7)*
5. அகவற்பாவால் பாடப்பெறும் *(பன்.பா. 203; இல.விள. 872; தொ.விள. 266; பிர.திர. 27; மு.வீ. 1090; பிர தீபிகை. 21; பிர.தீபம். 7 )*; வெண்கலிப்பாவால் பாடினும் குற்றமில்லை *(வெண்.பா. 52 உரை; நவநீ.பா. 53; பிர.மர. 12; இல.விள. 873; தொ.விள. 266; பிர.திர. 27; மு.வீ. 1090; பிர.தீபிகை. 21; பிர.தீபம். 7)*
6. விறலி சொல்லப்படவில்லை *(சித.பா. 33; தொ.விள 266; பிர.திர. 27)*

**ஆற்றுப்படை வகை**

புலவராற்றுப்படை, பாணாற்றுப்படை, பொருநராற்றுப்படை, கூத்தராற்றுப்படை *(வெண் பா. 52 உரை)*; புலவராற்றுப்படை குறிக்கப்பெறவில்லை அதற்குப் பதிலாக விறலியாற்றுப்படை உள்ளது. *(இல.விள 873, (பு.19); தொ.விள. 266; பிர.திர. 27)*

**ஆறறிவு**

அறுவகை அறிவுகளுள் ஒன்று; மெய், வாய், மூக்கு, கண், செவி, மனம் என்னும் ஆறினால் அறியப்படும் அறிவு *(இல.விள. 912)*

**ஆறாரைச் சக்கரம்**

நாற்பத்தொன்பது எழுத்துடைய பாடல் பொருந்துவதான சக்கரம் *(பிர.திர. 58)*

**ஆற்றொழுக்கு நிலை**

நூற்பாவின் கிடக்கை முறைகளுள் ஒன்று; ஆற்றின் நீர்ப்போக்கு போல் நூற்பாக்கள் பொருள் தொடர்புற அமையும் நிலை *(இல.விள. 892)*

**ஆறு சமயத்தவர்க்கு உணவு**

முப்பத்திரண்டு அறங்களுள் ஒன்று (பிர.தீபிகை. 71)

**ஆன்ம தத்துவம்**

இருபத்து நான்கு

| | | |
|---|---|---|
| நிலம் முதலிய பூதம் | - 5 | |
| மெய் முதலிய புலன் | - 5 | |
| கண் முதலிய ஞானேந்திரியம் | - 5 | |
| பாதம் முதலிய கருமேந்திரியம் | - 5 | |
| மனம் முதலிய அந்தக் கரணம் | - 4 | *(பிர.திர. 378)* |

**ஆன்ம நிலை**

தலைவன் மடல் ஏறத் துணிந்ததை மாற்றி அவன் உயிரைத் தோழி நிலைபெறச் செய்தல். அவன் மடல் எழுதுதல், அவற்றைப் பார்த்துப் பின்பு புலம்புதல், ஒளிபொருந்திய தலைவி வருதல், பெண்ணே நீ தானோ என்று இழுத்து அவள் உறுப்புகட்கு ஒப்புகள் கூறுதல், பின்பு மருவுதல் ஆகியனவற்றை உள்ளடக்கிய சிற்றிலக்கிய வகை *(பிர.திர. 481)*

(இவ்விலக்கியத்திற்குப் பிற பாட்டியல்களில் இலக்கணமோ எடுத்துக்காட்டு இலக்கியமோ இல்லை)

**ஆனந்தக் குற்றம்**

அறுவகைப்பட்டது. ஆனந்தம் - குற்றம். அவை: 1. எழுத்தானந்தம், 2. சொல்லானந்தம், 3. பொருளானந்தம், 4. யாப்பானந்தம், 5. தூக்கானந்தம், 6. தொடையானந்தம் *(இல.விள. 887)* இயற்பெயர்க்கண் விலக்கப்படல் வேண்டும்.

**ஆனந்தபயிரவி**

வகுப்புறு இராகங்கள் முப்பத்திரண்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 53)*

**ஆனந்தம்**

கன்மேந்திரிய புலன்களுள் ஒன்று *(பிர.திர. 380)*

**ஆனை**

▶ பெயர் *(நவநீ.பா. 24)*

**ஆனைத் தொழில்**

▶ யானைத் தொழில் *(நவநீ.பா. 49; பிர.மர. 18; சித.பா. 40)*



**இ**

1. (முதல்வன்) நான்முகன் படைத்த எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா 3; வெண்.பா. 9. நவநீ.பா. 11; சித.பா. 21; இல.விள. 778)*
2. சிவன் படைத்த எழுத்துகளுள் ஒன்று *(சுவாமி 175)*
3. அந்தண சாதிக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 5; வெண்.பா. 9; நவநீ.பா. 12, சித.பா. 21; இல.விள. 774; தொ.விள. 291; பிர.திர. 135; சுவாமி. 175; மு.வீ. 1033; பொரு.விள. 33)*
4. வானவர் கதிக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா 14; வெண்.பா. 18; நவநீ.பா. 20; சித.பா. 24; இல.விள. 798; தொ.விள. 293; பிர.திர. 152; சுவாமி 176; மு.வீ. 1036)*
5. அமுத எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 20; வெண்.பா. 7; நவநீ.பா. 10; சித.பா. 20; இல.விள. 779, தொ.விள. 290; பிர.திர. 128; சுவாமி 175; மு.வீ. 1031; பொரு.விள. 27)*
6. ஆண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 26; வெண்.பா. 6; நவநீ.பா. 7; சித.பா. 20; இல.விள. 773; தொ.விள. 289; பிர.திர. 124; சுவாமி 174; மு.வீ. 1031; பொரு.விள. 20)*
7. கார்த்திகை நாளுக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 41; வெண்.பா. 11; நவநீ.பா. 13, சித.பா. 23; இல.விள. 785; தொ.விள. 292; பிர.திர. 142; மு.வீ. 1034; பொரு.விள. 37)*
8. குஞ்சரம் என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 8)*; முந்நீர் என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 3)*

**இசை**

இராகம் புகறல், அதாவது இராகம் கூறுவது *(பிர.திர. 393)*

*இசைக்குரிய குறியீட்டெழுத்துகள்*

இசைக்குரிய எழுத்துகளான ச, ரி, க, ம, ப, த, நி என்ற ஏழிற்கும் முறையே ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ என்பவற்றைக் கொள்ள வேண்டும் *(பிர.திர. 92)*

*இசைக்குரிய சுவை*

பால், தேன், கிழான், நெய், ஏலம், வாழை, மாதுளங்கனி *(பிர.திர. 92)*

*இசைச்செய்யுள் திறம்*

பா நான்கும் இசையொடு பயின்று, பாவினங்களுள்ளும் வெண்செந்துறை மேல் சந்தமும் தாண்டகங்களும் பயின்று வருவனவாம் *(நவநீ.பா 68)*

*இசைக்குரிய தேவர்கள்*

விசுவாமித்திரன், யமன், அக்கினி, சந்திரன், சூரியன், கௌதமன், காசிபன் *(பிர.திர. 92)*

*இசைக்குரிய மணம்*

மௌவல், முல்லை, கடம்பு, வஞ்சி, நெய்தல், தாமரை, புன்னை *(பிர.திர. 92)*

**இசைக்குரிய மணம், சுவை, குறி, இறை**

மௌவல், முல்லை, கடம்பு, வஞ்சி, நெய்தல், தாமரை, புன்னை என்பவற்றை உரிய இடத்தில் பொருத்தி இசைக்குரிய சுவையான பால், தேன், கிழான், நெய், ஏலம், வாழை, மாதுளங்கனி என்பவற்றையும் அமைத்து, இசைக்குரிய குறியீட்டெழுத்தான ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ என்னும் ஏழையும் அவ்வாறே இணைத்து, இசைக்குரிய தேவர்களான விசுவாமித்திரன், யமன், அக்கினி, சந்திரன், சூரியன், கௌதமன், காசிபன் என்போரையும் அவ்வவ்விடங்களில் இசையை இணைத்தது போல் அடுக்கிக் கொள்ள வேண்டும் *(பிர.திர 92)*

| வ.எண் | ஏழிசை | மலர் | சுவை | குறி | இறை |
|---|---|---|---|---|---|
| 01. | குரல் | மௌவல் | பால் | ஆ | விசுவாமித்திரன் |
| 02. | துத்தம் | முல்லை | தேன் | ஈ | யமன் |
| 03. | கைக்கிளை | கடம்பு | கிழான் | ஊ | அக்கினி |
| 04. | உழை | வஞ்சி | நெய் | ஏ | சந்திரன் |
| 05. | இளி | நெய்தல் | ஏலம் | ஐ | சூரியன் |
| 06. | விளரி | தாமரை | வாழை | ஓ | கௌதமன் |
| 07. | தாரம் | புன்னை | மாதுளங்கனி | ஔ | காசிபன் |

**இடபம்**

1. வஞ்சிப் பாவிற்கு உரிய இராசிகளுள் ஒன்று *(பன்.பா. 94; வெண்.பா. 70; பிர.மர. 26; இல.விள. 882; தொ.விள. 298; மு.வீ. 1015)*
2. மயேச்சுவரியின் வாகனம் *(பன்.பா. 109, உரை)*
3. அரசர்க்கு உரிய இருபத்தொரு சின்னங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 88)*
4. மங்கலச் சொற்களுள் ஒன்று *(வெண்.பா. 2, உரை; நவநீ.பா. 2)*

**இடைகலை**

நாடி பத்தனுள் ஒன்று *(பிர.திர. 379)*

**இடைக்கொடை**

1. தன்கொடையும், பிறர் கொடையும் *(பிர.திர. 424)*
2. ▶ கொடை

**இடைப்புணர் இயைபு**

இரண்டு, மூன்றாம் சீரில் இடம்பெறும் இயைபு *(சித.பா. 13)*

**இடைப்புணர் எதுகை**

இரண்டு, மூன்றாம் சீரில் இடம்பெறும் எதுகை *(சித.பா. 13)*

**இடைபுணர் முரண்**

இரண்டாம் சீரும் மூன்றாம் சீரும் முரணும் நிலை *(சித.பா. 13)*

(எ-டு) போதுவிரி **குறிஞ்சி நெடுந்**தண் மால்வரைக்
கோதையிற் **றாழ்ந்த ஓங்கு**வெள் ளருவிக்
காந்தளஞ் **செங்குலைப் பைங்கூ** தாளி
வேரல் **விரிமலர் முகை**யொடு விரைஇப்
பெருமலைச் **சீறூர் இழி**தரு நலங்கவர்ந்து
இன்னா வாயின இனியோர் மாட்டே.
*(யா.கல விரு மேற்.நூ. 39; யா கல காரி மேற். கா. 40)*

**இடைப்புணர்மோனை**

இரண்டு, மூன்றாம் சீரில் இடம்பெறும் மோனை *(சித பா 13)*

**இடை மாணாக்கர்**

மண், பூங்கிளியை ஒப்பர் *(பிர.திர. 396)*

**இடையர்**

குலப் பெயர்களுள் ஒன்று *(பிர.திர. 363)*

**இடையின எதுகை**

இடையின எழுத்துகளால் அமையும் எதுகை.

(எ-டு) எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு.
*(திருக்குறள் 299, சித.பா.ப. 77)*

**இடையினப்பாட்டு**

சித்திரகவி வகைகளுள் ஒன்று *(வெண்.பா 26)*

(எ-டு) விரவலராய் வாழ்வாரை வெல்வா யொழிவா
யிரவுலவா வேலை யொலியே - வரவொழிவாய்
ஆயர்வா யேயரிவை ஆருயிரை ஈராவோ
ஆயர்வாய் வேயோ அழல் (தனிப்பாடல்)

**இடையின மோனை**

இடையின எழுத்துகளால் அமையும் மோனை *(சித பா. 13)*

**இடையீட்டெதுகை**

அடி இடையிட்டு அமையும் எதுகை

(எ-டு) தோடார் எல்வளை நெகிழ நாளும்
நெய்தல் உண்கண் பைதல் கலுழ
வாடா அவ்வரி புதைஇப் பசலையும்
வைகல் தோறும் பைப்பயப் பெருக
நீடார் இவரென நீமனங் கொண்டார்
கேளார் கொல்லோ காதலர் தோழி

வாடாப் பௌவம் அறமுகந் தெழிலி
பருவஞ் செய்யாது வலனேர்பு வளைஇ
ஓடா மலையன் வேலிற்
கடிது மின்னுமிக் கார்மழைக் குரலே
*(மேற்: யா.கல.விரு.நூ. 37, 95; சித.பா.ப. 80)*

**இடைலோபம்**
1. பிறரால் நேரும் கொடையை விடச்செய்தல் *(பிர.திர. 424)*
2. ▶ உலோபம் *(பிர.திர. 424)*

**இடைலோபி**
▶ உயிர்போகும் விதம் *(பிர.திர. 422)*

**இணைஅளபு**
1. முப்பத்தைந்து தொடை வகைகளுள் ஒன்று *(சித.பா. 6)*
2. முதல், இரண்டாம் சீரில் இடம்பெறும் அளபு.
(எ-டு) தாஅட் டாஅ மரைமலர் உழக்கிப்

**இணை எதுகை**
1. முப்பத்தைந்து தொடை வகைகளுள் ஒன்று *(சித.ப. 6)*
2. முதல், இரண்டாம் சீரில் இடம்பெறும் எதுகை
(எ-டு) பொன்னின் அன்ன பொறிசுணங் கேந்திப்
*(மேற்: யா.கல.விருத்தியுரை நூ. 36 : 1; யா.காரிகை 20 உரை; சித.பா.ப. 23)*

**இணைக்கயல்கள்**
அரசர்க்கு உரிய இருபத்தொரு சின்னங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 88)*

**இணைக்குறளாசிரியப்பா**
இடையில் அமையும் அடிகள் இரண்டு சீராகவோ அல்லது மூன்று சீராகவோ இருக்கும் செய்யுள் *(சித.பா 9)*
(எ-டு) நீரின் தண்மையுந் தீயின் வெம்மையும்
சாரச் சார்ந்து
தீரத் தீருஞ்
சாரல் நாடன் கேண்மை
சாரச் சாரச் சார்ந்து
தீரத் தீரத் தீர்பொல் லாவே.
*(மேற்: யா.கல விருத்தியுரை நூ. 72; யா.காரிகை 28 உரை; தொல்.செய்யு. 66 இளம்.,பேரா.,; சித.பா.ப. 40)*

**இணைமணி மாலை**
1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(பன்.பா. 99)*
2. தொடர்நிலைச் செய்யுள் வகைகளுள் ஒன்று *(இல.விள. 805)*
3. வெண்பாவும் கலித்துறையும் தம்முள் இயைந்து அந்தாதியாய் நூறு செய்யுள்களால் அமையும் இலக்கியம் *(பன்.பா. 150; நவநீ.பா. 37; பிர.மர. 8; பிர.திர. 12)*
4. வெண்பா, கலித்துறையுடன் அகவலையும் இணைத்துக் கூறுகிறது. *(சித.பா. 31)*
5. அகவலுடன் விருத்தத்தையும் இணைத்துக் கூறுகிறது. *(தொ.விள. 282)*

இவ்விலக்கிய வகையை வெண்பாப் பாட்டியல் இரண்டாகப் பகுக்கின்றது.
1. வெண்பாவும் ஆசிரியப்பாவும் அந்தாதியாய் நூறு செய்யுள்களால் பாடப்படுவது வெண்பா அகவல் இணைமணி மாலை *(வெண்.பா. 39; மு.வீ. 1050; பிர.தீபிகை. 10; பிர.தீபம். 9)*
2. வெண்பா, கலித்துறை இரண்டும் கூடி அந்தாதியாய் நூறு செய்யுள்களால் பாடப்படுவது வெண்பா கலித்துறை இணைமணி மாலை *(வெண்.பா. 39, மு.வீ. 1050; பிர.தீபம். 9; பிர.தீபிகை. 10)*

**இணைமுரண்**
1. முப்பத்தைந்து தொடை வகைகளுள் ஒன்று *(சித.பா. 6)*
2. முதல், இரண்டாம் சீரில் இடம்பெறும் முரண்
(எ-டு) **சீறடிப் பேரகல்** அல்குல் ஒல்குபு
*(மேற்: யா.கல விருத்தியுரை நூ. 38:1; யா.காரிகை 20, உரை; சித.பா.ப. 24)*

**இணைமோனை**
1. முப்பத்தைந்து தொடை வகைகளுள் ஒன்று *(சித.பா. 6)*
2. முதல் இருசீர்களில் இடம்பெறும் மோனை.
(எ-டு) **அணிமலர் அசோகின்** தளிர்நலம் கவற்றி
*(மேற்: யா.கல விருத்தியுரை நூ. 35:1; யா.காரிகை 20 உரை; சித.பா.ப 22)*

**இணையளபெடை**

1. முப்பத்தைந்து தொடை வகைகளுள் ஒன்று *(சித.பா. 6)*
2. முதல், இரண்டாம் சீரில் இடம்பெறும் அளபெடை

   (எ-டு) **தாஅட் டாஅ** மரைமலர் உழக்கி

   *(மேற்: யா.கல விருத்தியுரை நூ. 41:1; யா.காரிகை 20 உரை, சித.பா.ப. 24)*

**இணையியைபு**

1. முப்பத்தைந்து தொடை வகைகளுள் ஒன்று *(சித.பா. 6)*
2. ஒன்று இரண்டாம் சீரிலுள்ள இறுதி எழுத்து ஒன்றிவரும் இயைபு

   (இயைபு - ஓரடியின் இறுதி சீரை முதற்சீராகக் கொள்ளவேண்டும்)

   (எ-டு) மொய்த்துடன் தவழும் முகி**லே** பொழி**லே**

   *(மேற். யா.கல விருத்தியுரை நூ. 41:1; யா.காரிகை 20 உரை; சித.பா.ப. 23)*

**இதழ்**

1. புல்லின் உறுப்புகளுள் ஒன்று *(இல.விள. 920)*
2. ► பாதாதி

**இதிகாசம்**

அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்று *(பிர.தீபிகை 72)*

**இந்திரசாலம்**

1. அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 72)*
2. பரணியின் உறுப்புகளுள் ஒன்று *(பன்.பா 143; வெண்.பா. 61, நவநீ.பா. 57-61; பிர.திர. 45,46)*
3. வித்தை என்று தலைவன் காட்ட, தலைவியின் உறுப்புகளில் பொருந்தும் என்றும் பின்பு ஒவ்வாது என்றும் அமைக்கும் சிற்றிலக்கிய வகை *(பிர.திர. 482)*

**இந்திரம்**

சிற்பநூல் முப்பத்திரண்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 61)*

**இந்திரன்**

1. அரச சாதிக்குரிய எழுத்துகளைப் படைத்த மூவருள் ஒருவர் *(பன்.பா 6)*
2. அரசர்க்கு உரிய தேவதைகளுள் ஒன்று *(நவநீ.பா 12)*
3. காப்புக் கடவுளருள் ஒருவர் *(பன்.பா. 106; நவநீ.பா. 28: இல.விள. 808)*
4. மஞ்சரியில் குறிக்கப்படும் வழிபடு தெய்வங்களுள் ஒன்று *(பிர.திர. 36)*

**இந்திரன் படைத்த எழுத்துகள்**

1. த, ந *(பன்.பா. 4, நவநீ.பா. 11; சித.பா. 21; இல.விள. 778; சுவாமி. 175)*
2. வெண்பாப் பாட்டியல் இவ்வெழுத்துகளைப் புதன் படைத்ததாகக் கூறுகின்றது *(வெண்.பா. 10)*

**இந்திராணி**

சத்த மாதர்களுள் ஒருவர் *(பன்.பா. 109, உரை; நவநீ.பா. 27, உரை)*

► வேய்த்தோள் எழுவர்

*இந்திராணி ஆயுதம்*

வச்சிரம் (பன்.பா. 109, உரை)

*இந்திராணி வாகனம்*

யானை (பன்.பா. 109, உரை)

**இந்தோளம்**

1. முப்பத்திரு இராகங்களுள் ஒன்று *(பிர.தீபிகை 51)*
2. வைகறை நேர இராகங்களுள் ஒன்று *(பிர.தீபிகை 56)*

**இமாவதி**

விண்மாதர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை. 46)*

**இயமான கணம்**

1. நேர் நேர் நேர் என்னும் மூன்று அசையினாலாகிய சீர் இதற்கு உரியது *(பன்.பா. 58; வெண்.பா. 20, நவநீ.பா 22, இல.விள. 800; தொ.விள. 294; பிர.திர. 157; சித.பா. 26; சுவாமி. 177)*
2. இதனை ந கணம் என்றும் சில பாட்டியல்கள் கூறுகின்றன *(சித.பா. 26, பிர.திர. 157; சுவாமி. 177)*
3. இந்திர கணம் என்றும் சில கூறுகின்றன *(இந்.காளி. 17; பொரு.விள. 74)*
4. நன்மை பொருந்திய கணங்களுள் ஒன்று *(இந்.காளி. 21; பன்.பா. 66; வெண்.பா. 20; நவநீ.பா. 22; சித.பா 25; இல.விள. 800, தொ.விள. 294, பிர.திர. 154)*
5. வாழ்நாள் பெருக்கம் தரும் *(பொரு.விள. 82)*

**இயமானன்**

1. ஆன்மா, 2. கணங்களுள் ஒன்று *(பன்.பா. 57; இந்.காளி 12)*

**இயல்**

வாக்குறுதல், அதாவது சொல் பொருந்துதல் *(பிர.திர. 393)*

**இயற்சீர் வெண்டளை**

தளை வகை ஏழனுள் ஒன்று *(சித.பா. 4)*

**இயற்பெயர்**

1. எண்வகைப் பெயர்களுள் ஒன்று *(பன்.பா. 74)*
2. ▶ சிறப்பியற் பெயர்.

**இயன்மொழி வாழ்த்து**

இக்குடியில் பிறந்தோர்க்கு எல்லாம் இவை இயல்பென்றும், ஆகவே இவற்றை இயல்பாக உடைய நீயும் இன்னோர்போல இயல்பாகப் பிறருக்கு உதவிசெய் என்று உயர்ந்தோர் ஒருவனை வாழ்த்துவதாக அமைவது இயன்மொழி வாழ்த்து (மு.வீ. 1128; பிர.தீபிகை. 31; பிர.தீபம். 11)

**இயைபு**

அடியின் இறுதி எழுத்து இயைந்து (ஒத்து) வருதல் *(சித.பா. 6).*

இதன் இருவகைகள்: 1. அடி இயைபு 2. சீர் இயைபு

(எ.டு) இன்னகைத் துவர்வாய்க் கிளவியும் **அணங்கே**
நன்மா மேனிச் சுணங்குமார் **அணங்கே**
ஆடமைத் தோளிக் கூடலும் **அணங்கே**
அரிமதர் மழைக்கணும் **அணங்கே**
திருநுதர் பொறித்த திலகமும் **அணங்கே**

*(யாப்பருங்கல விருத்தியுரை மேற்.நூ. 40; யா. காரிகையுரை மேற்.கா 18; சித.பா.ப. 21)*

**இரக்கத்திற்கு உரிய இராகங்கள்**

1. ஆகரீ, 2, கண்டாரவம், 3. புன்னாகவராளி, 4. நீலாம்பரி, 5. பியாக்கடை *(பிர.தீபிகை 55)*

**இரங்கல்**

1. தலைவன் பொருள் ஈட்டுதல் முதலான காரணங்களால் பிரிகையில், தலைவி வருந்திக் கூறுதல் தோன்றப் பாடும் பகுதி *(பன்.பா 129, உரை; இல.விள. 812, பிர.தீபம் 29, உரை),* கடல், கழி, பறவை போன்றவற்றை நோக்கி இரங்கிப் பாடுதல் எனப் பிரபந்த தீபம் கூறுகின்றது.
2. கலம்பக உறுப்புகளுள் ஒன்று *(பன்.பா. 129, உரை; வெண்.பா 32, பிர.மர. 4; இல.விள. 812, பிர.திர. 32; பிர.தீபம். 95)*

**இரசவாதம்**

அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 72)*

**இரட்டைத் தொடை**

ஓரடி முழுவதும் வந்த சொல்லே மீண்டும் வரும் வண்ணம் இயற்றப்பெறும் செய்யுள் *(சித.பா. 5)*

(எ.டு) ஒக்குமே ஒக்குமே ஒக்குமே ஒக்கும்
விளக்கினிற் சீறெரி ஒக்குமே ஒக்கும்
குளக்கொட்டிப் பூவின் நிறம்.

*(மேற்: யா.விருத்தியுரை.நூ 51, 53, யா.காரிகை. 18, உரை; தொல்.செய்யு.நூ 91, பேரா., இளம், சித.பா.ப. 19)*

**இரட்டை நாகபந்தம்**

1. சித்திரத்தில் இரண்டு நாகங்கள் இணையும் பகுதிகளான தலை, வயிறு, வால் என்பவற்றில் முறையே 5, 8, 9 எண்ணிக்கையுள்ள எழுத்துகள் பொருந்தும்படி மொத்தம் இருபத்திரண்டு எழுத்துகளால் இயற்றப்பெறும் இரு வெண்பாக்கள் *(பிர.திர. 56)*
2. முதல், இடை, மூலை, வயிறு என்னும் இடங்களில் ஐந்து, நான்கு, எட்டு என எழுத்துகளைப் பெறும். வால், அரை என்பன ஒன்பது எழுத்துகளைப் பெறும். இவை ஆண்பாம்பிற்காகும், ஆண் பாம்பு ஐந்து இடங்களில் பெண் பாம்பைச் சந்திக்கும்; இதேபோல் பெண் பாம்பு ஐந்து இடங்களில் ஆண் பாம்பில் இணையும்; பெண்ணுக்குப் பன்னிரண்டு எழுத்து. முதற்பாடலான நேரிசை வெண்பா ஆண்; இரண்டாம் பாடலான இன்னிசை வெண்பா பெண். எழுத்துகள் ஒன்றாகச் சந்திக்குமிடங்கள்; *8/50, 12/18, 20/54, 22/24, 52/26, 10/32, 48/34, 6/36, 40/46* இவை ஆண், பெண் பாம்பிற்குப் பொருந்தும் *(பிர.திர. 60-65)*

**இரட்டை மணிக்கோவை**

1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(சுவாமி. 165)*
2. பத்து வெண்பாவினாலும் பத்து ஆசிரியப் பாவினாலும், அந்தாதியாய்ப் பாடப்பெறும் இலக்கியம் *(சுவாமி. 169)*

**இரட்டை மணி மாலை**

1. பல பாட்டுகள் தொக்கி ஒரு நூலாகும் இலக்கிய வகையுள் ஒன்று *(பன்.பா. 90, உரை)*
2. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(பன்.பா. 99)*
3. தொடர்நிலைச் செய்யுள் வகைகளுள் ஒன்று (இல.விள. 805)
4. வெண்பாவை முதலிலும் கலித்துறையைப் பின்னரும் கொண்டு அந்தாதியாய் இயற்றப்பெறும் இருபது செய்யுள்கள் *(பன்.பா. 151; வெண்.பா. 39; நவநீ.பா. 37; பிர.மர. 8; சித.பா. 31; இல.விள. 819; தொ.விள.278; மு.வீ. 1049; பிர.தீபிகை. 10; பிர.தீபம். 8)*
5. ஆசிரிய விருத்தமும் நேரிசை வெண்பாவும் தம்முள் மாறி அந்தாதியாய் இருபது செய்யுள்களால் அமையும் இலக்கியம் *(வெண்.பா. 58; இல.விள. 829; பிர.தீபிகை. 10; பிர.தீபம். 8)*
6. வெண்பா, அகவலால் அமையும் இலக்கியம் என்று பிரபந்தத் திரட்டு கூறுகின்றது. *(பிர.திர. 12)*

**இரண்டடியெதுகை**

முன்னிரண்டடி ஒரெதுகையாய்ப் பின்னிரண்டடி வேறோரெதுகையாய் வரும் செய்யுள்

(எ-டு) துவைக்குந் துளிமுந்நீர்க் கொற்றை மகளிர்
அவைப்பர்தம் பல்லிற் கழகொவ்வா முத்தம்
மணங்கமழ்தா ரச்சுதன் மண்காக்கும் வேலின்
அணங்கும் அமுதமும் அந்நலார் பாடல். *(யா.கல.கா.உரை. 41)*

**இரத்தம்**

ஐம்பூதங்களாலாகிய மனித உடலின் நீர்க் கூறுகளுள் ஒன்று *(பிர.திர. 380)*

**இரதப்பரீட்சை**

அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 72)*

**இரத்தினத்தால் அமைகின்ற முடி**

அரசர்க்குரிய இருபத்தொரு சின்னங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 88)*

**இரத்தினப் பரீட்சை**

அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 72)*

**இரதி**

விண்மாதர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை. 46)*

**இரலை**

ஆண்பால் மரபுப் பெயர்களுள் ஒன்று *(இல.விள 916);* புல்வாய், முசு இவற்றின் ஆண்பாலைக் குறிக்கும் *(இல விள. 916 உரை)*

**இரவிடையீடு**

தன்னை இணைந்த தலைவன் அவன் நகருக்குப் போய்விட அச்சம் அடைந்த தலைவி அவன் மீண்டும் வருவதற்கு ஏற்படக்கூடிய இன்னல்களை நினைத்துத் துயருறுகையில் தலைவன் வந்து மேவுவது குறித்த சிற்றிலக்கியம். இவ்வகைச் சிற்றிலக்கியம் கிடைத்திலது *(பிர.திர. 481)*

**இராக்கதம்**

எண்வகை மணங்களுள் ஒன்று; தலைமகள் தன்னினும் தமரினும் பெறாது வலிதில் கொள்வது *(பிர.திர. 359)*

**இராகங்கள் சிலவற்றிற்குச் சாதி, மனைவி, இறை**

| வ.எண் | ராகம் | பால் | சாதி | மனைவி | தெய்வம் |
|---|---|---|---|---|---|
| 1 | பூபாளம் | புருடன் | வேதியன் | வேளாவளி, பவுளி, மலகரி | திருமால் |
| 2 | ஸ்ரீராகம் | புருடன் | அரச சாதி | இந்தோளம், பல்லதி, சாவேரி | சரஸ்வதி |
| 3 | படமஞ்சரி | புருடன் | அரச சாதி | தேசி, இலலிதை, தோடி | இலக்குமி |
| 4 | வசந்தம் | புருடன் | வணிகன் | ராமக்கிரியை, கைசிகை, வராளி | கதிரவன் |
| 5 | மாளவி | புருடன் | செட்டி | குண்டக்கிரியை, கூர்ச்சரி நாராயணி | |
| 6 | பங்காளம் | புருடன் | சூத்திரன் | தன்னியாசி, கவுளி, காம்போதி | தெய்வம் |
| 7 | நாட்டை | புருடன் | சூத்திரன் | காந்தாரி, சாரங்கம், தேசாட்சரி *(பிர.தீபிகை. 52)* | விநாயகன் தும்புரு |

**இராகம்**

1. காலவரையறை: ஆகரீ, பூபாளம், இந்தோளம், ராமகலி, சாரங்கம் இவை தவிர்த்த பிற இராகங்கள் எக்காலத்திலும் இசைத்தற்கு உரியன *(பிர.தீபிகை. 56)*
2. வித்தியா தத்துவம் ஏழனுள் ஒன்று *(பிர.திர. 378)*

**இராகு கேது கைகளின் எண்ணிக்கை**

இரண்டு *(பிர.திர. 268)*

**இராசபுத்திரன்**

குலப் பெயர்களுள் ஒன்று *(பிர.திர. 362)*

**இராமகலி**

வைகறை நேர இராகங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 56)*

**இருபத்தொரு மாதருக்குரிய பொருண்மைகள்**

1. தேர், 2. அருமீன், 3. கொக்கு, 4. இப்பி, 5. தந்தி, 6. பூகம், 7. மழை, 8. சனி, 9. தோள், 10. நெல், 11. ஆவின்பல், 12. மாதர் கண்டம், 13. நந்து, 14. கரும்பு, 15. நீண்ட மூங்கில், 16. அரவு, 17. கார், 18. உடும்பு, 19. இந்து, 20. பன்றியின் கொம்பு, 21. கமலம், 22. திருவின் புயத்தில் பிறக்கும் மணி, 23. முத்துமாலை, 24. மாங்கனி, 25. பலாக்கனி 26. வாழைக்கனி *(பிர.திர. 451)* (21 மாதர் எவர் என்பதும் அவர்களோடு பொருட்களின் இயைபும் தெளிவின்றி அமைகின்றன)

**இருபா இருபஃது**

1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(பன்.பா. 99)*
2. தொடர்நிலைச் செய்யுள் வகைகளுள் ஒன்று *(இல.விள. 805)*
3. முன்னதாக வெண்பாவையும் அடுத்ததாக ஆசிரியப்பாவையும் முறையாக வைத்து ஒன்றோடொன்று சொல்லால் தொடரும் பாடல்வகையால் அமையும் இலக்கியம் *(பன்.பா. 220; பிர.மர. 8, சித.பா. 31)*
4. செய்யுள் எண்ணிக்கை இருபது எனச் சில பாட்டியல்கள் கூறுகின்றன *(வெண்.பா. 39; நவநீ.பா. 37, இல.விள. 822; தொ.விள. 265; மு.வீ. 1089; பிர.தீபிகை. 21; பிர. தீபம். 10)*

**இருவாட்சி**

பெண்டிர் அணியும் மலர் மாலைகளுள் ஒன்று *(பிர.திர 201)*

**இரேவதி நாளுக்கு உரிய எழுத்துகள்**

*ச, சா, சி, சீ (பன்.பா. 43; வெண்.பா. 13; நவநீ.பா. 15; சித.பா. 23; இல.விள. 788; தொ.விள. 292, பிர.திர. 143, மு.வீ. 1034; பொரு.விள. 44)*

**இல்லற வெள்ளை**

1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(பன்.பா. 99)*
2. கலைகள் பொருந்திய வண்ணம், வெண்பாக்களால் அமையும் ஒன்பது பாட்டுகள் *(பன் பா. 190).*
3. இல்லற வெள்ளையைப் பாடுமிடத்து வண்ணம், வெள்ளை இரண்டையும் கலந்து ஒன்பது பாட்டுகளால் பாடுதல் மட்டுமல்லாது முந்தைய சூத்திரத்தில் 'கலைதருவண்ணம்' என்றதனால் வெண்கலிப்பா ஒன்றேனும் பாடுவார் உளர் என்பதும், நிலைபெற என்றதனால் வகுப்பு ஒன்பதும், வெண்பா ஒன்பதும் அமைத்துப் பாடுவாரும் உளர் என்பதும் பெறப்படுகின்றன. *(பன்.பா. 191)*

**இலக்கணம்**

எழுத்து, சொல், அகம், புறம், அலங்காரம் ஆகிய ஐந்தும் உடையது. இவை எல்லாவற்றிற்கும் பொது, சிறப்புப் பாயிரம் ஏற்புடையன. பொதுப்பாயிரம் - 5 வகை, சிறப்புப்பாயிரம் - 11 வகை *(பிர.திர. 393)*

**இலக்கியம்**

நிகண்டுகள் தரும் பொருள், வள்ளுவர் நூல், நாலடியார், சிந்தாமணி, நூல்திரட்டு முதலியவை *(பிர.திர. 393)*

**இலக்கியம் பெயர் பெறும் முறை**

இலக்கியங்கள் பாவகையால் பெயர் பெறுதலன்றி அடி, இசை, கலை, எழுத்தெண்ணிக்கை, வகுப்பு, பொருள் போன்றவற்றாலும் பெயர் பெறும் *(சித.பா. 16)*

**இலலிதை**

முப்பத்திரண்டு இராகங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 51)*

**இலளிதம்**

சிவாகமம் இருபத்தெட்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 60)*

**இலாடம்**
ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று *(பிர.திர. 500-502; பிர.தீபிகை. 99)*

**இலாடன்**
குலப் பெயர்களுள் ஒன்று *(பிர.திர. 362)*

**இலிகிதம்**
அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 72)*

**இலை**
மரத்தின் உறுப்புகளுள் ஒன்று *(இல.விள. 921)*

**இழிகட்பெருங்கண்ணன்**
சங்கப் புலவர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை. 86)*

**இளந்தளிர் வல்லி**
பெண்பால் பிள்ளைப்பாட்டுக்குரிய உவமைகளுள் ஒன்று *(பன்.பா. 115)*

**இளம்பிறை**
ஆண்பால் பிள்ளைப்பாட்டுக்குரிய உவமைகளுள் ஒன்று *(பன்.பா. 114)*

**இளமை மரபுப்பெயர்கள்**
பார்ப்பு, பறழ், குட்டி குருளை, கன்று, பிள்ளை, மகவு, மறி, குழவி *(இல.விள. 910)*

**இளவேட்டனார்**
சங்கப் புலவர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை. 86)*

**இறந்தது காத்தல்**
முப்பத்திரண்டு உத்திகளுள்ஒன்று. முன் நூற்பாவில் கூறிய பொருள்களுள் ஒன்றனைப் பின்வரும் வேறொரு நூற்பாவால் நீக்குதல் *(இல விள. 898)*

**இறைவன் அணிதற்கு உரிய புல், மலர்**
அறுகம்புல், ஆத்தி, கொன்றை, தும்பை, தாமரை, காந்தள், கோங்கு, அலரி, பிச்சி, ஓமை *(பிர திர. 37)*

**இறைவர்க்குப் படைக்கப்படும் பொருள்கள்**
1. வெண்ணெய் 2. தயிர் 3. பால் 4. நெய் 5. தேன் 6. வெல்லம் 7. எள் 8. செந்நெல்லரிசி 9. கடலை 10. தினை *(பிர.திர. 37)*

**இன்ப அதிசயம்**
உடற்குற்றம் பதினெட்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 70)*

**இன்ப மடல்**
1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(சுவாமி 165)*
2. ► மடல் *(வெண்.பா 50, உரை; பிர.மர. 14; சித.பா. 37; சுவாமி 168)*

**இன்று முற்றும்**
ஆண்பால் பிள்ளைப்பாட்டு நிலைகளுள் ஒன்று *(பன்.பா. 102, உரை)*

**இன்னாமை நாற்பது**
கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 44)*

**இன்னிசைச் சிந்தியல்**
இன்னிசை வெண்பாப் போலத் தனிச்சொல்லின்றியும் மூன்றடியாயும் வரும் செய்யுள். (சித.பா. 8)
(எ.டு) சுரையாழ அம்மி மிதப்ப வரையனைய
யானைக்கு நீத்து முயற்கு நிலையென்ப
கானக நாடன் சுனை.
*(மேற்: யா.விருத்தியுரை.நூ. 59, 95; யா.காரிகை. 25. உரை; தொல்.செய்யு.நூ. 114, இளம். உரை, சித.பா.ப. 36)*

**இன்னிசைத் தொகை**
1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(பன்.பா. 99)*
2. தொடர்நிலைச் செய்யுள் வகைகளுள் ஒன்று *(இல விள. 805)*
3. இன்னிசை வெண்பாக்கள் தொண்ணூறாலோ அல்லது எழுபதாலோ பாடப்படும் இலக்கியம் *(பன் பா. 177)*
4. வெண்பாப் பாட்டியல் இதனை (1) ஊர் நேரிசை வெண்பா (2) ஊர் இன்னிசை வெண்பா என இரண்டாகக் கூறுகின்றது *(வெண்.பா. 36)*

5. இலக்கண விளக்கம் இவ்விலக்கியத்தை நான்கு வகையாகக் கூறுகின்றது. (1) ஊர் நேரிசை வெண்பா (2) ஊர் இன்னிசை வெண்பா (3) பெயர் நேரிசை வெண்பா (4) பெயர் இன்னிசை வெண்பா *(இல.விள. 825, 830)*

இன்னிசை என்பதில் 'பா' -வினை அடிப்படையாகக் கொண்டு ஊரினைப் பாடும் முறையை ஊர் நேரிசை, ஊர் இன்னிசை என இரண்டு வகைகளாக வெண்பாப் பாட்டியல் கூறுகின்றது. இதேபோல் பெயரினைப் பாடும் வகையால் பெயர் நேரிசை, பெயர் இன்னிசை என மேலும் இரு வகைகளை இலக்கண விளக்கம் கூறுகின்றது.

### இன்னிசை வெண்பா

தனிச்சொல்லின்றி நான்கடியாய் ஒரு விகற்பமும், பல விகற்பமுமாகிவரும் செய்யுள் *(சித பா. 7)*

(எ.டு) வைகலும் வைகல் வரக்கண்டும் அஃதுணரார்
வைகலும் வைகலை வைகுமென் றின்புறுவர்
வைகலும் வைகற்றம் வாணாள்மேல் வைகுதல்
வைகலை வைத்துணரா தார்.

*(மேற்: நாலடியார். அறன் வலியுறுத்தல் 9; யா.கல விருத்தியுரை நூ. 57; யா.காரிகை 24, உரை; சித.பா.ப. 30)*

### இனத்தின் பொது வகை

1. ஒரு நூல் ஒரு பாட்டு
2. ஒருநூல் பல பாட்டு
3. பல பாட்டு தொக்கிய ஒரு நூல் *(பன்.பா. 86)*

### இனம்

பாக்களால் ஆகும் நூல்களை இயற்றும் முறை பற்றிக் கூறும் பகுதி. வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, மருட்பா, தாழிசை, துறை, விருத்தம் என்பவற்றால் இயற்றப்பெறும் செய்யுள்கள் *(பன்.பா. 85)*

### இனமோனை

இன எழுத்தால் அமையும் மோனை. இது மூன்று வகையில் அமையும். 1. வல்லின மோனை 2. மெல்லின மோனை 3. இடையின மோனை *(சித.பா. 13)*

### இனவெதுகை

இன எழுத்தால் அமையும் எதுகை. இது மூன்று வகையில் அமையும். 1. வல்லின எதுகை 2. மெல்லின எதுகை 3. இடையின எதுகை *(சித.பா. 13)*

### இனியநாற்பான்

கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 44)*

### இஷீகோஷை

விண்மாதர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை. 46)*

## ஈ

### ஈ

1. முதல்வன் (நான்முகன்) படைத்த எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா.3; வெண்.பா. 9; நவநீ.பா 11; சித.பா. 21; இல.விள. 778)*
2. சிவன் படைத்த எழுத்துகளுள் ஒன்று *(சுவாமி 175)*
3. அந்தண சாதிக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 5; வெண்.பா 9; நவநீ.பா 12; சித.பா. 21; இல.விள. 774, தொ.விள. 291; பிர.திர. 135; சுவாமி 175; மு.வீ. 1033; பொரு.விள. 33)*
4. மக்கட் கதிக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 15; வெண்.பா. 18; நவநீ.பா. 20, சித.பா. 24; இல.விள. 798; தொ.விள. 293; பிர.திர. 152; சுவாமி 176; மு.வீ. 1036)*
5. நஞ்செழுத்துகளுள் ஒன்று *(சித.பா. 20)*
6. அமுத எழுத்துகளுள் ஒன்று *(பிர.திர. 128; சுவாமி 175)*
7. பெண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 27; வெண்.பா. 6; நவநீ.பா. 7; சித.பா. 20; இல.விள 773; தொ.விள. 289; பிர.திர. 124; சுவாமி 174; மு.வீ. 1031; பொரு.விள. 21)*
8. கார்த்திகை நாளுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 40; வெண்.பா. 11; நவநீ.பா. 13; சித.பா. 23; இல.விள. 785; தொ.விள. 292; பிர.திர. 142; மு.வீ. 1034; பொரு.விள. 37)*
9. குஞ்சரம் என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை. பா 8)*; முந்நீர் என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 3)*
10. இசைக்குரிய குறியீட்டெழுத்துகளுள் ஒன்று *(பிர.திர. 92)*

**ஈச்சுரம்**

சிவதத்துவம் ஐந்தனுள் ஒன்று *(பிர.திர. 379)*

**ஈசன்**

1. அந்தண சாதிக்கு உரிய எழுத்துகளைப் படைத்த நால்வருள் ஒருவர் *(பன்.பா. 5)*
2. அந்தண சாதிக்கு உரிய தேவதைகளுள் ஒன்று *(நவநீ.பா. 12)*

**ஈர்க்கு**

புல்லின் உறுப்புகளுள் ஒன்று *(இல.விள. 920)*

**ஈரசை**

1. நால்வகைச் சீர்களுள் ஒன்று *(பன்.பா. 54)*
2. யாப்பின் தொகைகளுள் ஒன்று; நேரசை, நிரையசை என இருவகைப்படும் *(தொ.விள. 300)*

| | | சுவர்க்கம் | சந்திரன் | நிலம் | நீர் | நூற்பா எண் |
|---|---|---|---|---|---|---|
| இலக்கண | சீர் | நேர் நேர் | நிரை நேர் | நிரை நிரை | நேர் நிரை | 802 |
| விளக்கம் | இறை | பிரமன் | இலக்குமி | சுரபி | கருடன் | |
| சுவாமி | சீர் | நேர் நேர் | நிரை நேர் | நிரை நிரை | நேர் நிரை | 177 |
| நாதம் | இறை | பிரமன் | இலக்குமி | அரசன் | கருடன் | |
| பிரபந்தத் | சீர் | நேர்நேர் | நிரை நேர் | நிரை நிரை | நேர் நிரை | 158 |
| திரட்டு | இறை | பிரமன் | இலக்குமி | - | கருடன் | |

**ஈரறிவு**

அறுவகை அறிவுகளுள் ஒன்று; மெய், வாய் இரண்டால் அறியப்படும் அறிவு (இல.விள. 912)

## உ

**உ**

1. முதல்வன் (நான்முகன்) படைத்த எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 3; வெண்.பா. 9; நவநீ.பா. 11; சித.பா. 21; இல.விள. 778)*
2. சிவன் படைத்த எழுத்துகளுள் ஒன்று *(சுவாமி. 175)*
3. அந்தண சாதிக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 5; வெண்.பா. 9; நவநீ.பா. 12; சித.பா. 21; இல.விள. 774; தொ.விள. 291; பிர.திர. 135; சுவாமி. 175; மு.வீ. 1033; பொரு.விள. 33)*
4. வானவர் கதிக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 14; வெண்.பா. 18; நவநீ.பா. 20; சித.பா. 24; இல.விள. 798, தொ.விள. 293; பிர.திர. 152; சுவாமி. 176; மு.வீ. 1036)*
5. அமுத எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 20; வெண்.பா. 7; நவநீ.பா. 10; சித.பா. 20; இல.விள. 779; தொ.விள. 290; பிர.திர. 128; சுவாமி. 175; மு.வீ. 1032; பொரு.விள. 27)*
6. ஆண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 26; வெண்.பா. 6; நவநீ.பா. 7; சித.பா. 20; இல.விள. 773; தொ.விள. 289; பிர.திர. 124; சுவாமி. 174; மு.வீ. 1031; பொரு.விள. 20)*
7. பூராடத்திற்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 41; வெண்.பா. 11; நவநீ.பா. 13; சித.பா. 23; இல.விள. 785; தொ.விள. 292; பிர.திர. 142; மு.வீ. 1034; பொரு.விள. 38)*
8. தேர் என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 9)*; நேமி, பொன் என்னும் மங்கலச் சொற்களுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 3)*

**உகிர் கைவிரல்/கால்விரல் நகம்**

► பாதாதி *(பன்.பா. 214; நவநீ.பா. 44)*

**உச்சமட்டி**

குதிரைக்கு ஆகாத இருபது சுழிகளுள் ஒன்று. *(பிர.திர. 388)*

**உச்சாடனம்**

அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 72)*

**உச்சை நேர இராகம்**

மாளவஸ்ரீ, தசாட்சரி *(பிர.தீபிகை. 56)*

**உசனம்**

உபபுராணம் பதினெட்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 70)*

**உசேனா**

வகுப்புறு இராகங்களுள் ஒன்று; உசேனி எனவும் இது வழங்கப்பெறும் *(பிர.தீபிகை. 53)*

**உசேனீ**

▶ உசேனா *(பிர.தீபிகை. 53, உரை)*

**உட்கருவி எண்ணிக்கை**

| | | |
|---|---|---|
| முப்பத்தாறு | ஆன்ம தத்துவம் | - 24 |
| | வித்தை தத்துவம் | - 7 |
| | சிவ தத்துவம் | - 5 |
| | | ----- |
| | | 36 *(பிர.திர. 379)* |
| | | ----- |

**உடம்பினில் வேர்வை**

உடற்குற்றம் பதினெட்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 70)*

**உடலின் உறுப்புகள்**

குதி, உள்ளங்கால், புறங்கால், துடை, முழங்கால், கணைக்கால், குறங்கு, நகம், விரல், கடிதடம், கறண்டை, குறி, உந்தி, முதுகு, குறித்துளை, நெஞ்சு, வயிறு, மலத்துளை, கை, நகில், பிடரி, தோள், உள்ளங்கை, முழங்கை, மணிக்கை, இதழ், கழுத்து, தலை, கன்னம், காது, கண், மூக்கு, அண்ணம், இடை, பல், நாக்கு, வாய், புருவம், நெற்றி, தாடி, வதனம், தோல், இரத்தம், இறைச்சி, மேதை, எலும்பு, மச்சை, மயிர், நரம்பு, சுவேதநீர் (வியர்வை நாளம்) *(பிர.திர. 375)*

**உடற்குற்றம்**

1. தீயபசி, 2. நீர்வேட்டல், 3. வகை, 4. நோய், 5. வெகுளி, 6. நரை, 7. பிறப்பு, 8. வெகு உறக்கம், 9. பலநினைப்பு, 10. உற்றமரணம், 11. இன்பமான அதிசயம், 12. கையறம், 13. உன்மத்தம், 14. துக்கம், 15. வேண்டல், 16. உடம்பினில் வேர்வை, 17. மிக்க இன்பம், 18. மிக்க அச்சம் *(பிர.தீபிகை. 70)*

**உடன்பாடு**

குடைமங்கலப் பொருள்களுள் ஒன்று *(பன்.பா. 121)*

**உடையோர்ப் பேணல்**

யானைகள் தம்முடைய தலைவர்களின் ஏவலைச் சிறிதும் தவறாது செய்தல் *(பன்.பா. 173)*

**உண்டி**

எழுத்துகளை அமுத எழுத்துகள் நஞ்செழுத்துகள் எனப் பாட்டியலார் இருவகையாகப் பிரித்துரைக்கின்றனர். இவ்விருவகை எழுத்துகளில் அமுத எழுத்துகளை முதலாகக் கொண்ட மங்கலச் சொற்களை முதன்மொழியில் பொருத்துவது உண்டிப் பொருத்தம் ஆகும்.

அமுது, நஞ்சு எழுத்துகள்

| வ.எண் | வகை | எழுத்துகள் | ஆதாரம் |
|---|---|---|---|
| 1 | அமுது<br>அமுது | அ இ உ எ<br>க ச த ப ந ம வ<br>ஆ (தொ.விள.290) | பன்.பா. 20; வெண்.பா. 7; நவநீ.பா. 9; சித.பா. 20; இல.விள.779; தொ.விள.290; பிர.திர.128; சுவாமி. 175; மு.வீ. 1032; பொரு.விள. 27. |
| 2 | நஞ்சு | அ, ஒ<br>ஓ(பிர.திர. 128) | பன்.பா. 22; வெண்.பா. 8; நவநீ.பா. 10; சித.பா. 20; இல.விள.780; தொ.விள.290; பிர.திர. 128;சுவாமி. 175; மு.வீ. 1032;பொரு.விள. 28. |
| 3 | நஞ்சு | ய ர ல | பன்.பா. 22; வெண்.பா. 8; நவநீ.பா. 10; சித.பா. 20; இல.விள.780; பிர.திர. 129; சுவாமி. 175; மு.வீ. 1032; பொரு.விள. 28. |
| 4 | நஞ்சு | யா, யோ, ரா, ரோ, லா<br>ள, ளா, ளோ | பன்.பா. 22, 23; வெண்.பா. 8; நவநீ.பா. 10; சித.பா. 20; இல.விள.780; தொ.விள.290; |

| | | | |
|---|---|---|---|
| | | வ, ழ, ள, ற, ன, ள, ளா ளோ, ளோ, ழ, ற, ன (ங, ஞ) | பிர.திர.129; சுவாமி. 175; மு.வீ. 1032; பொரு.விள. 28. |
| 5 | நஞ்சு | அளபெடை | பன்.பா. 24; வெண்.பா. 8; சித.பா. 20; இல.விள.780; தொ.விள.290; பிர.திர.130; சுவாமி. 175; |
| | | உயிரளபெடை ஒற்றளபெடை | நவநீ.பா. 10; மு.வீ. 1032; பொரு.விள. 28. |
| 6 | நஞ்சு | ஃ | பன்.பா. 24; வெண்.பா. 8; நவநீ.பா. 8; சித.பா. 20; இல.விள.780; தொ.விள.290: பிர.திர.130; சுவாமி. 175; மு.வீ. 1032; பொரு.விள. 28 |
| 7 | நஞ்சு | குற்றியலிகரம் | பன்.பா. 24 |
| 8 | நஞ்சு | குற்றியலுகரம் | பன்.பா. 24 |
| 9 | நஞ்சு | ஐகாரக்குறுக்கம் | பன்.பா. 24 |
| 10 | நஞ்சு | ஔகாரக் குறுக்கம் | பன்.பா. 24 |
| 11 | நஞ்சு | மகரக் குறுக்கம் | பன்.பா. 24; வெண்.பா. 8; நவநீ.பா. 10; சித.பா. 20; இல.விள.780: பிர.திர.130; சுவாமி. 175; மு.வீ. 1032; பொரு.விள. 28 |
| 12 | நஞ்சு | ஆய்தக் குறுக்கம் | பன்.பா. 24; சித.பா. 20; சுவாமி. 175;பொரு.விள. 28 |

சுவாமிநாதம் மொழிக்கு முதலில் வராத எழுத்துகளை நஞ்செழுத்துகள் எனக் கூறுகிறது. பின்னர் ஞ, ண இரண்டையும் தனியே நஞ்செழுத்துகளாகக் குறிக்கிறது. மொழிக்கு முதலில் வராதன என்றபின் தனியே இவ்வாறு குறிப்பதும், ஞ மொழிக்கு முதலில் வரும் எனினும் 'ண' - வைக் குறிப்பதும் ஏன் என்பது ஆய்வுக்கு உரியது. இவையிரண்டும் அமுத எழுத்துகளை அடுத்தும் வரக்கூடாது என்பதற்காகத் தனியே சொல்லப்பட்டுள்ளதா என்பதும் ஆய்தற்கு உரியது.

இங்குப் பட்டியலிடப்பட்ட இரு வகைகள் போக எஞ்சிய எழுத்துகள் நூலுக்கு முதலில் அமையினும் குற்றமில்லை *(இந்.காளி 5)*

மெய்யெழுத்துகளில் அமுது எனப்பட்ட எழுத்துகளோடு உயிரெழுத்துகளில் நஞ்செழுத்து எனப்பட்டவை பொருந்தின் அவை அமுத எழுத்துகளாகக் கொள்ளப்படும் *(இந்.காளி 8)*

அமுத எழுத்து என்று சொல்லப்பட்ட அ இ உ எ என்னும் உயிரெழுத்துகளுடன் சேரும் மெய்களும் அமுதாகக் கொள்ளப்படும் *(இந்.காளி 7; பன்.பா. 21)*

ஆ, ஈ, ஊ, ஏ - உடன் இயைந்து வரும் உயிர்மெய்கள் அமுத எழுத்துகளாகக் கருதப்பெறும் *(பிர.திர. 134)*

ஒற்றெழுத்துகளுள் நஞ்சு எனச் சொல்லப்படுவனவற்றோடு சேரும் உயிரெழுத்துகளும் நஞ்செழுத்துகளாகக் கொள்ளப்பெறும் *(இந்.காளி 4)*

* *மொழிக்கு முதலில் வராத எழுத்துகள் நஞ்சு எழுத்துகள் (சுவாமி 175)*
* *நஞ்செழுத்து என்று கூறப்பட்ட ய ர ல மூன்றும் உகரத்துடன் இணைந்தால் அமுத எழுத்தாகக் கொள்ளப்படும்*
* *ய ர ல தனித்து அமுதாய் வரும் எனில் வ ழ ள ற ன என்பனவும் ஏற்புடையன.*
* *நஞ்சென்று சொல்லப்படும் னகர எழுத்து ஆகாது எனினும் வருவது மாண்பு.*
* *நஞ்செனப்படும் ஒற்றெழுத்துகள் எட்டும் அமுதவுயிர் ஏறிவரின் அவையும் அமுதமாகும்*
* *நஞ்சென நக்கப்படும் உயிர்கள் நான்கும் அமுத மெய்யுடன் வந்தால் அவையும் அமுதமாகக் கருதப்படும் (பிர.திர. 128-134)*

**புறனடை**

அமுத எழுத்தும் நஞ்செழுத்தும் முதல் மொழிக்கே அன்றி தசாங்கத்தயலில் வருதலும், வாராமையும் பொருந்தும் *(இல.விள. 781)*

இதில் அமுத எழுத்துகளை மட்டும் குறிப்பிடுகிறது *(பொரு.விள. 29)*

நஞ்செழுத்துகள் முதற்சீருக்கும் தசாங்கத்து அயலுக்கும் பொருந்தாது *(பொரு.விள. 30)*

**உண்மை**
குடைமங்கலப் பொருள்களுள் ஒன்று *(பன்.பா. 121)*

**உணவு வகைகள்**
அமுதம், விடம் *(பன்.பா. 19; வெண்.பா. 7; சித.பா. 20)*

**உத்திராடம்**
கலிப்பாவிற்கு உரிய நாள்களுள் ஒன்று *(பன்.பா. 93; வெண்.பா. 70; இல.விள. 881; தொ.விள. 297; மு.வீ. 1014; பிர.திர. 417)*

**உத்தியாபனம்**
இவ்விலக்கியத்தின் மதிப்பு 4,00,000 *(பிர.திர. 88)*

**உத்திரட்டாதி**
வஞ்சிப்பாவிற்கு உரிய நாள்களுள் ஒன்று *(பன்.பா. 94; வெண்.பா. 70; இல.விள. 881; தொ.விள. 298; மு.வீ 1015; பிர.திர. 417)*

**உத்திரட்டாதி நாளுக்கு உரிய எழுத்து**
1. யா *(பன்.பா. 49; நவநீ.பா. 18; சித.பா. 23; இல.விள. 794; பிர.திர. 144; பொரு.விள. 60)*
2. ய என்று இரு பாட்டியல்கள் கூறுகின்றன *(வெண்.பா. 16; தொ.விள. 292)*
3. ய, யா இரண்டையும் சேர்த்துக் கூறுகின்றது *(மு.வீ. 1034)*

**உத்திரம்**
ஆசிரியப்பாவிற்கு உரிய நாள்களுள் ஒன்று *(பன்.பா. 92; வெண்.பா. 70; தொ.விள. 296; மு.வீ. 1013; பிர.திர. 417)*

**உத்திரம் நாளுக்கு உரிய எழுத்துகள்**
பா, பா, பி, பீ *(பன்.பா. 47; வெண்.பா. 15; நவநீ.பா. 17; சித பா. 23; இல.விள. 792; தொ.விள. 292; பிர.திர. 144; மு.வீ. 1034; பொரு.விள. 54)*

**உத்திராடத்திற்கு உரிய எழுத்துகள்**
ஒ, ஓ, ஔ *(பன்.பா. 41; வெண்.பா. 11; நவநீ.பா. 13; சித.பா. 23; இல.விள. 786; தொ.விள. 292; பிர.திர. 142; மு.வீ. 1034; பொரு.விள 39)*

**உத்வாகிதம்**
முகநிலைகள் பதினான்கனுள் ஒன்று; தலையை அண்ணாந்து பார்த்து வரும் நிலை (பிர.தீபிகை. 73)

**உதள்**
ஆண்பால் மரபுப்பெயர்களுள் ஒன்று *(இல.விள. 916)*: யாட்டின் ஆண்பாலைக் குறிக்கும் *(இல.விள. 916 உரை)*

**உதாசீனத்திற்குரிய தானம்**
மூப்பு *(பன்.பா. 33)*

**உதானன்**
வாயுக்கள் பத்தனுள் ஒன்று *(பிர.திர. 379)*

**உபத்தம்**
ஐந்து கருமேந்திரியங்களுள் ஒன்றான குறி *(பிர.திர. 378)*

**உபபுராணம்**
இது பதினெண் வகைப்படும் அவை: 1. பராசரம், 2. மாரீசம், 3. நாரதீயம், 4. சாம்பவம், 5. நாரசிங்கம், 6. காளி, 7. பார்கவம், 8. துர்வாசம், 9. நந்தி, 10. சௌரம், 11. ஆங்கிரம், 12. சிவதருமம், 13. உசனம் 14. வாமனம், 15. கபிலம், 16. வசிட்டம், 17. சனற்குமாரம், 18. வருணம் *(பிர.தீபிகை. 70)*

**உம்பல்**
ஆண்பால் மரபுப் பெயர்களுள் ஒன்று *(இல.விள. 916)* யாட்டின் ஆண்பாலைக் குறிக்கும் *(இல.விள. 916 உரை)*

**உய்த்துக்கொண்டு உணர்தல்**
முப்பத்திரண்டு உத்திகளுள் ஒன்று; ஓரிடத்தில் ஒரு பொருள் பற்றி இயற்றப்படும் நூற்பாவிலேயே மற்றொரு பொருளையும் அமைத்துக் கொள்வதற்கு வாய்பளித்து இயற்றல் *(இல.விள. 898)*

**உயர்திரச் சீனம்**
முகநிலைகள் பதினான்கனுள் ஒன்று; மருகும் நாணத்தால் தலையாட்டும் நிலை *(பிர.தீபிகை. 73)*

**உயர்முலை**

► பாதாதி *(பன் பா 214; நவநீ.பா. 44)*

**உயிர்போகும் விதம்**

1. பொறாமையுடைய உலோபியின் உயிர் போகும்பொழுது மிருகத்தின் உருவுடன் நீங்கும்.
2. இடைலோபி, முதல்லோபியரின் உயிர் மான், புலி உருவைப்போலப் போகும்.
3. கொடையாளியின் உயிர் போர் வீரர் உயிர் போல, பொன்தூண்போலப் போகும். *(பிர.திர. 422)*

**உயிரளபெடை**

1. தளையும் சீரும் கெடவந்த இடத்து ஓரளபெழுந்தால் ஈரசையாகும்; ஈரளபெழுந்தால் மூவசையாகும் (சித.பா. 12)

   (எ.டு) ஏஎர் சிதைய வழாஅல் எலாஅநின்
   சேஎயரி சிந்திய கண்.

   *(மேற்: யா.கல விருத்தியுரை நூ. 2; யா.காரிகை 37, உரை; சித பா.ப. 70)*

2. தளையும் சீரும் கெடவந்த இடத்து ஓரோரிடங்களில் அலகு பெறாது *(சித.பா. 12)*

   (எ.டு) பல்லுக்குத் தோன்ற பனிமுல்லை; பைங்கிளிகள்
   சொல்லுக்குத் தோற்றின்னம் தூற்றினவால் -
   நெல்லுக்கு
   நூறோஒநூ றென்பார் நுடங்கிடைக்கும்
   மென்முலைக்கும்
   மாறோமால் அன்றளந்த மண்?

   *(மேற்: யா.கல விருத்தியுரை நூ. 4; யா.காரிகை 36, உரை; சித.பா.ப. 69)*

**உயிரினங்களின் தெய்வமும் அரசனும்**

தேவர்கள் முதலாக மரங்கள் ஈறாக உள்ள உயிரினங்களின் தெய்வம், அரசன் வருமாறு:

| உயிரினங்கள் | தெய்வம் | அரசன் |
|---|---|---|
| தேவர்கள் | சிவபெருமான் முதலியவர் | இந்திரன் |
| முனிவர்கள் | முன்னோர்கள் | பிரமரிஷி |
| பூ உலகத்தினர் | - | உலகக் காவலன் |
| விலங்குகள் | புருட மிருகம் | சிங்கம் |
| பறவைகள் | அன்னப் புள், சரபப் பட்சி | கருடன் |
| மரங்கள் | சங்கரன் என்னும் ஒளிவிளங்கும் மரம் | கற்பகம் |

*(பிர.திர. 311)*

**உயிரெதுகை**

இரண்டாம் எழுத்து (மெய்யெழுத்து) ஒன்றாதாயினும் இரண்டாம் எழுத்தின்மேல் ஏறிய உயிர் ஒன்றி வருவது உயிர் எதுகை

(எ.டு) துளியொடு மயங்கிய தூங்கிருள் நடுநாள்
அணிகிளர் தாரோய் அருஞ்சுரம் நீந்தி
வடியமை எஃகம் வலவயின் ஏந்தித்
தனியே வருதி நீயெனின்
மையிருங் கூந்தல் உய்தலோ அரிதே.

*(மேற்: யா காரிகை ப. 186)*

**உரைவகை**

1. பாட்டிடை வைத்த குறிப்பு, பாவின்று எழுந்த கிளவி, பொருளொடு புணராப் பொய்மொழி பொருளொடு புணர்ந்த நகைமொழி. *(இல.விள 903)*
2. 1. பொழிப்புரை, 2. அகலவுரை, 3. நுட்பவுரை, 4. எச்சவுரை *(இல.விள. 903, உரை)*

**உரோகிணி நாளுக்குரிய எழுத்துகள்**

வ, வா, வி, வீ, *(பன்.பா. 50; வெண்.பா. 16; நவநீ.பா. 18; சித.பா. 23; இல.விள. 795; தொ.விள. 292; பிர.திர. 144; மு வீ. 1034; பொரு.விள. 62)*

**உருத்திர சன்மகனார்**

சங்கப் புலவர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை. 86)*

**உருவசி**

விண்மாதர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை. 46)*

**உருவம்**

1. அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 72)*
2. ஐந்து புலன்களுள் ஒன்றான ஒளி *(பிர.திர. 378)*

### உருபகம்

எழுவகைத் தாளங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 49)*

### உலகம்

மங்கலச் சொற்களுள் ஒன்று *(பன்.பா. 68; வெண்.பா. 2; நவநீ.பா. 2; )*

### உலக வாயுக்கள் பத்து

1. விதனனுவன், 2. பிறசேதகன், 3. தழற்பிறசேதன், 4. சேசனி, 5. அவுதகன், 6. வயிராங்கதன், 7. வயுத்திதன், 8. இரைவதன், 9. சங்கவர்தன், 10. விசயங்கவர்தன் *(பிர.திர. 293)*

விதனனுவன் - கனல், பறவை இவைக்கு வலிமையும் ஆற்றலும் அளிக்கும்.

பிறசேதகன் - உடலின் ஈரத்தை வற்றச் செய்து மதுவைவாட்டி, மரங்களை முறிக்கும்.

தழற்பிறசேதன் - சுழன்று வீசி, வீடுகளை அழித்து மலைகளைத் தரைமட்டமாக்கி உயிர்களை வெப்பமுறச் செய்து அழிக்கும்.

(பிற ஏழு வாயுக்களும் மேகங்களுடன் உறவு கொண்டு நீர்த்திரள் கொண்டு பின்வருமாறு மழையைப் பொழியும்)

சேசனி - உயிர்கள் துன்புறும்படி குளிர்ச்சி அளித்து நடுங்கி அழியும்படியான மழையைப் பொழியும்.

அவுதகன் - கொடிய நஞ்சு பெய்யும்

வயிராங்கதன் - மண்ணுடன் இரத்தமும் தசையும் எலும்பும் அழியும்படி தீமாரி பொழியும்.

வயுத்திதன் - மின்னல், இடி என்பனவற்றால் நெருப்பழிவு புரியும்.

இரைவதன் - நன்னீர் பெய்து பெரிய உலகை உய்விக்கும்.

சங்கவர்தன் - நீரைக் குடிப்பவருக்கு நோய்கள் வரும்படியான மழை தரும்.

விசயங்கவர்தன் - அரசனுக்கும் அரசனுக்கும் போர், துன்பம் வரும்படி வேறுபாடு ஏற்படும்படி கண்டமாரி பொழிந்து கெடுக்கும் *(பிர.திர. 294)*

### உலகு

மங்கலச் சொற்களுள் ஒன்று *(வரை.பா. 8; சித.பா. 18; இல.விள. 271; தொ.விள. 295; பிர.திர. 111; சுவாமி 173; மு.வீ. 1027)*

### உலா

1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(பன்.பா. 99, சுவாமி 165)*
2. தொடர்நிலைச் செய்யுள் வகைகளுள் ஒன்று *(இல.விள. 805)*
3. வேறு பாட்டுவகை விரவாமல் ஒரே பாட்டு வகையால் பாடப்படும் இலக்கியம் *(பன்.பா. 87)*
4. அரசனுக்குப் பாடப்பெறும் இலக்கியங்களுள் ஒன்று *(பிர.திர 81)*
5. இவ்விலக்கியத்தின் மதிப்பு 200 பொன் (பிர.திர. 86)
6. வெண் கலிப்பாவில் முன்னர் முதல்நிலையும் பின்னர் எழுநிலையும் அமைத்துப் பாடும் இலக்கியம்; உயர்ந்த செல்வம், அறிவு, ஆண்மை, அன்பு, ஈகை, எழில் முதலியவற்றால் உயர்ந்த நிலையில் உள்ள ஒருவனைக் கண்டு எழுவகை மகளிர் காதல் செய்யும் பொருளில் கலிவெண்பாட்டில் அமையும் இலக்கியம் *(பன்.பா. 131, 132; நவநீ.பா. 46; பிர.மர. 14; சித.பா. 37; இல.விள. 858; பிர.திர. 31, 108, சுவாமி 167)*
7. கலிவெண்பாவை நேரிசைக் கலிவெண்பா என்கின்றன சில பாட்டியல்கள் *(வெண்.பா. 49; மு.வீ. 1085; பிர.தீபிகை. 19)*
8. தலைவனின் குலம், குடி, பிறப்பு, குணம், எழில் (தசாங்கங்கள்) இவற்றை விளக்கி ஏழுபருவ மகளிரும் நெருங்கி நிற்கின்ற பாதையில் அவர்கள் பணியும்படி உலா வந்ததைப் பாடும் இலக்கியம் *(பிர.தீபம். 15;* தொ.விள. 260*)*
9. ஓங்கிய இலை பொருந்திய வேலினை உடைய அரசனின் பவனியை தீதில்லாது முதலிலும் இடையிலும் கடையிலும் தசாங்கம் முதலியனவற்றை வைத்துக் கூறல் நலம் *(பிர.திர 493)*
10. ஆடவன் ஒருவனது பதினாறாம் அகவை முதல் நாற்பத்தெட்டாம் அகவைவரை உலாப் பாடப்படுதற்கு உரியது *(பன்.பா. 136)*
11. உலா முதலிய பிரபந்தங்களுக்குத் துயர்புறும் மடந்தையர் கன்னியர் என்றே கூறுவர்; சொல்லுகின்ற பருவம் நேரும் அன்பில்லாத வழக்கில் சென்றது *(பிர.திர. 474)*

### உலாப்புறம்

► உலா 10 *(பன்.பா. 136)*

### உலா பெறுதற்குரியோர்

வேந்தர், கடவுள், நூல்களின் வழி மக்களின் வாழ்க்கைக்குத் தேவையான ஒழுகலாறுகளை உணர்பவர்கள் *(பன்.பா. 138)*

உலாமடல்

1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(சுவாமி. 165)*
2. கனவில் கண்ட பெண்ணின் உறுப்பு நலன்களை உவந்து காமுற்ற தலைவன் அப்பெண்ணைத் திருமணம் செய்து கொள்வேன் என ஏறும் மடல் *(பிர.மர. 15; சித.பா. 38; இல.விள. 857; சுவாமி. 168; மு.வீ. 1086)*
 (உலாவோடு தொடர்பு கொண்ட போதிலும் நனவிலன்றிக் கனவில் இணைந்த மாதிற்காக மடலூர்வேன் என்பதால் சூழல் - பொருள் நிலையில் வேறுபடுகிறது *(பிர.தீபிகை. 19; பிர.தீபம். 14)*

உலோகம்

சிற்பத் தொழிற்குரிய பத்துப் பொருள்களுள் ஒன்று *(பிர.தீபிகை 60)*

உலோபம்

மூன்று வகைப்படும்; 1. தலைலோபம், 2. இடைலோபம், 3. கடைலோபம் *(பிர.திர. 424)*

உலோபி

▶ உயிர்போகும் விதம் *(பிர.திர. 422)*

உலோமிசை

விண்மாதர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை. 46)*

உலோலிதம்

முகநிலைகள் பதினான்கனுள் ஒன்று; சிந்தை காரணமாக ஒரு தோளின் மீது தலையைச் சாய்த்து வைத்தலால் வரும் நிலை *(பிர.தீபிகை 73)*

உவகை

உடற்குற்றம் பதினெட்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 70)*

உழத்திப் பாட்டு

சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று (பன்.பா. 99)

செங்கோல் அரசனை முதலில் கூறி அவனை வாழ்க என்று வாழ்த்தி, அகன்ற வயல்களின் தொழில்களை உழத்தி ஒப்பற உணர்ந்துகொண்டாள் என்று பத்துப் பாட்டால் பாடும் நூல் (பன்.பா. 216)

கடவுளர் வணக்கம், பள்ளனும் இரு பள்ளியரும் வருதல், அவர்கள் பெருமையைக் கருதி, முறையே அவர் வரலாறு கூறல், நாட்டுவளம் கூறுதல், கரிய குயிலைக் கூவ வேண்டுதல், கார்கால மழையை வேண்டுதல், தெய்வத்தைத் துதித்தல், மழை தோன்றுவதற்கான குறிகளைக் கூறுதல், நீர் ஆற்றில் வருதல், அதனைக் காணுதல், அதன் சிறப்புக் கூறுதல், அதனிடையிடையே அகப்பொருள் துறைகள் கூறுதல், இடம்பொருந்திய பண்ணையின் தலைவன் வரவு, பள்ளியர் இருவரும் முறையிடுதல், அதனைக்கண்டு இளைய பள்ளியைச் சினத்தல், அதனைக் கேட்ட பள்ளன் வீட்டிலிருந்து வெளியே வருதல், அவனிடம் ஏர், நிலம், விதை என்பன பற்றிக் கேட்டல், அவன் அதனைக் கூறுதல், பின்னர் இடையர்களை வருவித்தல், அவர்கள் சிறப்பு மொழிதல், மூத்த பள்ளி முறையிடல், பள்ளன் சிறந்த கிடையிலிருந்து வருவது போல் வருதல், திடமாக வருகின்ற பள்ளனைத் தொழுவில் மாட்டுதல், அதனால் திகைத்து அவன் புலம்புதல், அன்புடைய பள்ளனுக்கு உணவு கொண்டு மூத்த பள்ளி வருதல், நிகழ்ந்த தீமையை அவளிடம் கூறுதல், அதனைத் தீர்க்கும் வழிவேண்டுதல், அவள் அதனை மறுத்தல், பின்பு அவன் சூள்மொழிதல், பின் பண்ணைத் தலைவனைச் சிறப்பாக வாழ்த்தி விடுதல், வாங்குதல், விதை, மாடு, மருந்து எடுத்து முதலில் கயிறு அறுத்து எருது மேலே பாய, அதனைக் கண்ட பள்ளியரின் மனத் துயரம் நீங்க எழுந்து வருதல், பண்ணையான் அறிதல், நாற்று நடுதல், விளைந்த கதிரின் மணிகளைக் கொய்து அடித்து அளக்கல், வருகின்ற மூத்த பள்ளியின் முறையீடு, பள்ளியர் ஏசுதல் என்பன நிலைபெற்ற சிந்துப்பாடலடிகளால், விருத்தப் பாடல்வகைகள் விரவும்படி தலைவனின் பெருமையினைக் கூறும் இலக்கியமாகும் *(பிர.தீபிகை. 29)*

உழவர்

▶ வேளாளர் *(சித.பா. 30)*

உழிஞை மாலை

1. மதில் வளைத்தலை எப்பாவினாலும் முப்பது செய்யுள்களால் பாடும் இலக்கியம் *(பிர.மர. 17; சித.பா. 39; மு.வீ. 1076)*
2. உழிஞைப்பூ மாலை சூடிப் பகைவர்களின் ஊரின் புறத்தை, சந்திரனை ஊர்வட்டம் சூழ்ந்த வண்ணமாகப் படையினால் வளைப்பதனை வாழ்த்தும் இலக்கியம் *(பிர.தீபிகை. 17; பிர.தீபம். 13)*

**உள்ளங்கை**

▶ பாதாதி *(பன்.பா. 214; நவநீ.பா. 44)*

**உள்ளங்கால்**

▶ பாதாதி *(பன்.பா. 214; நவநீ.பா. 44)*

**உற்கடிதம்**

ஐவகைத் தாளங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 49)*

**உற்பவமாலை**

▶ அரிபிறப்பு *(வெண்.பா. 46, உரை; நவநீ.பா. 52, உரை; பிர.மர. 18, உரை; இல.விள. 868, மு.வீ. 1065; பிரதீபிகை 13; பிர.தீபம். 12)*

**உறவுமுறைகள்**

| | | |
|---|---|---|
| தந்தைக்கு முன்பு பிறந்தவர் | - | பெருந்தாதை |
| தந்தைக்குப் பின்பு பிறந்தவர் | - | சிறுதாதை |
| தந்தையுடன் பிறந்த பெண் | - | மாமி |
| தாயுடன் பிறந்தவன் | - | மாமன் |
| உடன் பிறந்த பெண்டிர் | - | பெருந்தாய், சிறுதாய் |
| பெற்றவர்களைப் பெற்றவர் | - | பாட்டர் |
| உடன் பிறந்தவன் | - | தம்பி |
| உடன் பிறந்தவள் | - | தங்கை |
| பெருந்தாதையின் மக்கள் | - | தம்பி, தங்கை முறை |
| மாமனின் மகன் | - | மைத்துனன் |
| மாமனின் மகள் | - | கொழுந்தி |
| பெற்ற பிள்ளையின் மகன் | - | பேரன் |
| பெற்ற பிள்ளையின் மகள் | - | பேத்தி |
| அண்ணனின் மகன் | - | மகன் |
| அணணனின் மகள் | - | மகள் |
| அக்காளின் மகன் | - | மருமகன் |
| அக்காளின் மகள் | - | மருமகள் |

நெருங்கிய மணம் கொள்ளும்முறை - மாமியின் மக்கள்

உரிய முறைகளான இவையின்றிப் பிறந்த மற்ற உறவுகள் குற்றமுற்றன. அதாவது மணம்புரியும் முறை அழித்துச் சேர்ந்து தாலி இல்லாது பார்த்தும், மேவியும் பெறும் உறவுகள் *(பிர.திர. 374)*

**உறையூர் முதுக்கூத்தர்**

சங்கப் புலவர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை. 85)*

**உறுப்பழிந்த செய்யுள்**

இலக்கண மரபிலிருந்து மாறுபட்டும், நூல் பயில்வார்க்கு இன்பம் பயக்காது வெற்றெனக் கிடப்பதும் வட எழுத்துகளைச் சேர்த்து எழுதுவதும், இலக்கண மரபிற்கு உட்படாத சொற்களைப் பெற்று வருவதும் ஆகிய இவை எல்லாம் நூலின் இழிந்த உறுப்புகளாகும். (நவநீ.பா. 84)

**உறுப்புச் செய்யுள்**

வழக்கு, மரபோடு பொருத்தமுடையதாய் வடவெழுத்துக் கலவாது கேட்போர்க்கு இன்பம் பயக்கும் சொல்லாகச் சான்றோர் செய்யுள்களில் எடுத்துக்காட்டும் சொற்களால் புணர்க்கப் படுவன உறுப்புச் செய்யுள் *(வெண்.பா. 73)*

**உன்மத்தம்**

உடற்குற்றம் பதினெட்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 70)*

## ஊ

**ஊ**

1. முதல்வன் (நான்முகன்) படைத்த எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 3, வெண்.பா 9; நவநீ.பா. 11; சித.பா. 21; இல.விள. 778)*
2. சிவன் படைத்த எழுத்துகளுள் ஒன்று *(சுவாமி 175)*
3. அந்தண சாதிக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 5; வெண்.பா. 9; நவநீ.பா. 12; சித.பா. 21; இல.விள. 774; தொ.விள. 291; பிர.திர. 135; சுவாமி 175; மு.வீ. 1033; பொரு.விள. 33)*
4. மக்கள் கதிக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 15; வெண்.பா. 18; நவநீ.பா. 20; சித.பா. 24; இல.விள. 798; தொ.விள. 293; பிர.திர. 152; சுவாமி 176; மு.வீ. 1036)*

5. நஞ்செழுத்துகளுள் ஒன்று *(சித.பா. 20)*
6. அமுத எழுத்துகளுள் ஒன்று *(பிர.திர. 128; சுவாமி. 175)*
7. பெண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 27; வெண்.பா. 6; நவநீ.பா. 7; சித.பா. 20; இல.விள. 773; தொ.விள. 289; பிர.திர. 124; சுவாமி. 174; மு.வீ. 1031; பொரு.விள. 21)*
8. பூராடத்திற்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 41; வெண்.பா. 11; நவநீ.பா. 13; சித.பா. 23; இல.விள 785; தொ.விள. 292; பிர.திர. 142; மு.வீ. 1034; பொரு.விள. 38)*
9. தேர் என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 9)*; நேமி, பொன் என்னும் மங்கலச் சொற்களுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 3,)*
10. இசைக்குரிய குறியீட்டெழுத்துகளுள் ஒன்று *(பிர.திர. 92)*

**ஊசல்**

1. ஆடீரூசல், ஆடாமோ ஊசல் என்ற இரண்டுள் ஏதேனும் ஒன்றைச் செய்யுளின் முடிவில் கொண்டு கலித்தாழிசையாலோ அல்லது ஆசிரிய விருத்தத்தாலோ பாடப்படும் இலக்கிய வகை *(பன்.பா. 129, உரை; இல.விள. 812, உரை; மு.வீ. 1041); பிற பாக்களாலும் பாடப்பெறும் (பிர.திர. 20)*
2. சுற்றத்தாரோடு கூடி வாழ்வதாக என்று வாழ்த்திப் பாடப்படும் இலக்கியம் *(வெண்.பா. 45; நவநீ.பா. 50, உரை; பிர.மர. 10; சித.பா. 33; இல.விள. 845; தொ.விள. 276; மு.வீ. 1122; பிர.தீபிகை 30; பிர.தீபம் 19)*
3. பெண்பால் பிள்ளைப்பாட்டு நிலைகளுள் ஒன்று *(பன்.பா. 105; வெண்.பா. 29; நவநீ.பா. 32, உரை, பிர.மர 2; சித.பா 28; இல.விள. 807; தொ.விள. 257; பிர.திர. 3; சுவாமி. 167; மு.வீ. 1039)*
4. தொடர்நிலைச் செய்யுள் வகைகளுள் ஒன்று *(இல.விள. 805)*
5. கலம்பக உறுப்புகளுள் ஒன்று *(பன்.பா. 129; வெண்.பா. 32; நவநீ.பா. 33; பிர.மர. 4; சித.பா. 29; இல.விள. 812; தொ.விள. 258; பிர.திர. 32; மு.வீ. 1041; பிர.தீபிகை. 7; பிர.தீபம். 295)*

**ஊஞ்சல்**

▶ ஊசல் *(பிர.தீபிகை. 30)*

**ஊர்**

1. பாட்டுடைத் தலைவனின் ஊர் சிறப்பைப் பாடும் பகுதி *(பன்.பா 129, உரை)*
2. கலம்பக உறுப்புகளுள் ஒன்று *(பன்.பா 129, உரை; வெண்.பா. 32; பிர.மர 4)*
3. குடி *(பன்.பா. 129, உரை)*
4. தசாங்கம், சின்னப் பூவில் பாடப்படும் பத்துவகைப் பொருள்களுள் ஒன்று *(பன்.பா. 139; வெண்.பா 42, நவநீ.பா. 24; சித.பா. 32; தொ.விள. 263; ஒன்பது சின்னங்களுள் ஒன்று எனச் சில பாட்டியல்கள் கூறுகின்றன. பிர.மர. 9, உரை; பிர.திர. 15)*
5. அரசர்க்கு உரிய ஒன்பது உறுப்புகளுள் ஒன்று *(பன்.பா. 178; வெண்.பா. 42; நவநீ.பா. 41 பிர.மர 9; சித.பா. 32; இல.விள. 853; தொ.விள. 273; பிர.திர. 16; மு.வீ. 1126; பிர.தீபிகை. 31, பிர.தீபம் 88)*

**ஊர்இன்னிசை வெண்பா**

1. தொண்ணூறு, எழுபது அல்லது ஐம்பது இன்னிசை வெண்பாக்களால் தலைவனின் ஊரைச் சிறப்பித்துப் பாடும் இலக்கியம் *(வெண்.பா. 36; இல.விள. 825; மு.வீ. 1093; பிர.தீபிகை. 22)*
2. பாடல் எண்ணிக்கை குறிப்பிடவில்லை *(பிர.தீபம். 16)*
3. ▶ இன்னிசைத் தொகை

**ஊர்த்த சைவம்**

பதினாறு சைவங்களுள் ஒன்று (பிர.தீபிகை. 62)

**ஊர்நேரிசை வெண்பா**

1. தொண்ணூறு, எழுபது, அல்லது ஐம்பது நேரிசை வெண்பாக்களால் தலைவனின் ஊரைச் சிறப்பித்துப் பாடும் இலக்கியம் *(வெண்.பா. 36; இல.விள. 830; மு.வீ. 1095; பிர.தீபிகை. 23, பிர.தீபம் 18)*
2. ▶ இன்னிசைத் தொகை

**ஊர்வன, கடல், மலை இவற்றின் அரசனும் கடவுளும்**

| வ.எண் | உயிரினங்கள்/பொருள்கள் | அரசன் | கடவுள் |
|---|---|---|---|
| 1 | ஊர்வன | நாகம் | யானை |
| 2 | ஏழ்வகைக் கடல் | வருணன் | சூழ்கடல் |
| 3 | மலைக்குலம் | இமயமலை | மேருமலை |
| | | | *(பிர.திர. 312)* |

**ஊர் வெண்பா**

ஓர் ஊரைக் குறித்துப் பத்து நேரிசை வெண்பாக்களால் சிறப்பித்துக் கூறும் இலக்கியம் *(வெண்.பா. 44; நவநீ.பா. 41)*

வெண்பாவால் பாடப்படுவது; நேரிசை பற்றிக் கூறப்படவில்லை *(மு.வீ. 1096; பிர.தீபிகை. 23; பிர.தீபம். 17)*

## எ

**எ**

1. முதல்வன் (நான்முகன்) படைத்த எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 3; வெண்.பா. 9; நவநீ.பா 11; சித.பா. 21; இல.விள. 778)*
2. சிவன் படைத்த எழுத்துகளுள் ஒன்று *(சுவாமி. 175)*
3. அந்தண சாதிக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 5; வெண்.பா. 9, நவநீ.பா. 12; சித.பா. 21; இல.விள. 774; தொ.விள. 291, பிர.திர 135; சுவாமி. 175; மு.வீ. 1033; பொரு.விள. 33)*
4. வானவர் கதிக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 14; வெண்.பா. 18, நவநீ.பா. 20; சித.பா. 24; இல.விள. 798; தொ.விள 293; பிர.திர. 152; சுவாமி. 176; மு.வீ. 1036)*
5. அமுத எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா 20; வெண்.பா. 7; நவநீ.பா. 10; சித.பா. 20; இல.விள. 779; தொ.விள. 290; பிர.திர. 128; சுவாமி. 175; மு.வீ. 1032; பொரு.விள. 27)*
6. ஆண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 26; வெண்.பா. 6; நவநீ.பா. 7; சித.பா. 20; இல.விள. 773; தொ.விள. 289; பிர.திர. 124; சுவாமி. 174; மு.வீ 1031; பொரு.விள. 20)*
7. பூராடத்திற்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 41; வெண்.பா. 11; நவநீ.பா. 13; சித.பா. 23; இல.விள. 785; தொ.விள. 292; பிர.திர. 142; மு.வீ. 1034; பொரு.விள. 38)*
8. தேர் என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 9)*; *நேமி, பொன்* என்னும் மங்கலச் சொற்களுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.தீபிகை 3,)*

**எகினம்**

தூதுப் பொருள்களுள் ஒன்றாம் அன்னம் *(பிர.திர. 30)*

**எச்சவுரை**

உரை வகைகளுள் ஒன்று *(இல.விள. 903, உரை)*

**எட்டாரைச் சக்கரம்**

எட்டு ஆரங்களை உடைய சக்கரமொன்றில் எண்பத்தைந்து அல்லது எண்பத்தொன்பது எழுத்துகள் பொருந்தும்படியாக இயற்றப்படும் செய்யுள் வகை *(பிர.திர 58)*

**எண்சீர்க் கழிநெடிலடி**

அடிதோறும் எட்டுச் சீர்களால் அமையும் செய்யுள் *(சித.பா 5)*

(எ.டு) மூவடிவி னாலிரண்டு சூழ்சுடரும் நாண
முழுதுலகு மூடி முளைவயிரம் நாறித்
தூவடிவி னாலிலங்கு வெண்குடையின் நீழற்
சுடரோயுன் னடிபோற்றிச் சொல்லுவதொன் றுண்டாற்
சேவடிகள் தாமரையின் சேயிதழ்கள் தீண்டச்
சிவந்தனவோ சேவடியின் செங்கதிர்கள் பாயப்
பூவடிவு கொண்டனவோ பொங்கொளிகள் சூழ்ந்து
புலன்கொளா வாலெமக்கெம் புண்ணியர்தங் கோவே

*(மேற்: சூளாமணி 1904; யா.விருத்தியுரை நூ. 25; யா.காரிகை 13, உரை: சித.பா ப. 17)*

**எண் செய்யுள்**

1. பாட்டுடைத் தலைவனின் ஊரினையோ அல்லது பெயரினையோ சிறப்பித்துப் பத்து முதல் ஆயிரம் பாடலால் பாடப்பெறும் இலக்கியம் (பாடப்பெறும் செய்யுள் எண்ணிக்கையால் இப்பெயர் வழங்கப்பெறுகிறது) *(இல.விள. 848; மு.வீ. 1080; பிர.தீபிகை. 15)*; குலம், எழில், வீரம் ஆகியவற்றைப் பாடுதலையும் குறிக்கிறது *(பிர.தீபம். 21)*
2. ► மாலை 5 *(சித.பா. 38)*

**எண்திசைப் பாலருக்குரிய ஊர்தி, படை**

இந்திரன் ஒழிந்த எண்திசைப் பாலர் எழுவருக்கும் உரிய ஊர்தி, படை வருமாறு.

| | ஊர்தி | படை |
|---|---|---|
| அக்கினி | ஆட்டுக்கடா | மழு |

| | | | |
|---|---|---|---|
| யமன் | - | எருமைக்கடா | பாசம் |
| நிருதி | - | தண்டிகை | சக்கரம் |
| வருணன் | - | முதலை | அயில் |
| வாயு | - | மான் | வாள் |
| குபேரன் | - | குதிரை | செண்டாயுதம் |
| ஈசானன் | - | இடபம் | சூலம் *(பிர.திர. 261)* |

**எண்திசை யானையின் இயல்பு**

அயிராவணம் ஒழிந்த புண்டரிகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புட்பகந்தம், சார்வபூமம், சுப்பிரதீபம் ஆகியன வெண்மை நிறமும், நான்கு தந்தங்களும் கொண்டவை; இவ் உலகின் அளவிற்குப் பெருகுதலும், பின் சுருங்குதலுமான ஆற்றல் கொண்டவை; நிலத்தினைச் சுமக்கும் எண்திசை நாகம் போன்று அண்டங்கள் அனைத்தையும் சுமக்கும் ஆற்றல் கொண்டவை; அடிமுதல் மருப்புவரை பதினாறாயிரம் யோசனை தொலைவு உடையவை; நெருங்குகின்ற கனமும் நீளமும் அதன் இரட்டி ஆகும்.

ஆயிரம் யோசனையாக ஆக்கி நிறுத்தி, அடுக்கடுக்காக, அடிமுதல் நுனிவரை வந்தால், மருப்புக்கு இடம் பதினாறில் ஒரு பங்காக அமையும். யானையின் நீளம், உலகின் அளவு குறைந்தும் நிகழ வேண்டுமெனில் தெய்வ இயல்புடைமை பற்றி ஆகும். இருள் பொருந்திய நஞ்சில் தோன்றிய அஞ்சனம் எனும் யானை ஒழியக் கூறிய ஏழும் அமுதத்தில் தோன்றியவை ஆகும். அவ் யானையை ஆய்தற்காக நிலத்தில் கிடத்தினால், இருள்நிறைந்த பூமிக்கு அப்பாலும் செல்லும்; அரசு நிலை வர வேண்டுமாயின் எவ்விடத்தும் வரும் (பிர.திர. 285, 286)

**எண்வகைப் பெயர்கள்**

▶ 1. குலப்பெயர் 2. குடிப்பெயர் 3. கோத்திரப்பெயர் 4. குணப்பெயர் 5. மனப்பெயர் 6. ஆணைப்பெயர் 7. சிறப்புப் பெயர் 8. இயற்பெயர் *(பன் பா. 74)*

**எதிர்பொருள் உணர்த்தல்**

முப்பத்திரண்டு உத்திகளுள் ஒன்று; முதல்நூல் ஆசிரியன் சொன்ன கருத்துகளுள் சில தன்காலத்தில் திரிந்து வருதலைக் கண்டுணரும் ஆசிரியர், தான் சொல்லும் கருத்துகளும் பிற்காலத்தில் இவ்வாறே திரிபுபடும் என்பதை உணர்ந்து அவற்றைக் காலம் நோக்கி ஏற்க வேண்டும் என்று தெரிவித்தல் *(இல.விள. 898)*

**எதிர்மொழி நாடகம்**

புதியன புகுதலாக அமைவது; முன்பின்னாக மடல் ஏறல், விலக்குதல், துதி, தாய் வினாவுதல், தண்டம், எதிர்தல், மணம் முதலியனவாகப் புனைவது *(பிர.திர. 479)*
(இவ்விலக்கியத்திற்குச் சான்றுகள் எதுவும் கிடைக்கவில்லை)

**எதிரது போற்றல்**

முப்பத்திரண்டு உத்திகளுள் ஒன்று; பின்னர் ஒரு நூற்பாவில் ஆசிரியர் தான் கூறக் கருதியுள்ள செய்தியை மனங்கொண்டு, முன்னர் வேறொரு பொருளைக் கூறுதல் *(இல.விள. 898)*

**எதுகுல காம்போதி**

▶ யதுகுலகாம்போதி *(பிர.தீபிகை. 53. உரை)*

**எதுகை**

1. தொடை வகையுள் ஒன்று
2. இரண்டாம் எழுத்து ஒன்றி வருதல் எதுகை. இது இரு வகைகளில் அமைகிறது. அவை: 1. அடி எதுகை 2. சீர் எதுகை *(சித பா 6)*

*எதுகை வகை*

1.ஆசு எதுகை (ய, ர, ல, ழ) 2. உயிரெதுகை 3. இடையீட்டெதுகை 4. இரண்டடியெதுகை 5. மூன்றாமெழுத்தெதுகை. *(சித பா 13)*

**எமன் படைத்த எழுத்துகள்**

ழ, ள (பன்.பா. 4)

**எல்லாத் தொடைக்கும் சிறப்பு விதி**

இயைபுத்தொடை, முரண்தொடை, அளபெடைத்தொடை முதலானவை தமது இலக்கணங்களுக்கு ஏற்ப முடிகையில் எதுகை, மோனையுடன் கூடிவரின் சிறப்புடைத்து *(சித.பா. 14)*

**எலும்பு**

ஐம்பூதங்களாலாகிய மனித உடலின் நிலக் கூறுகளுள் ஒன்று *(பிர திர. 379)*

**எழிலி**

தூதுப் பொருள்களுள் ஒன்றாம் முகில். *(பிர.திர. 30)*

### எழுகூற்றிருக்கை

சித்திரகவி வகைகளுள் ஒன்று *(வெண்.பா. 26; நவநீ.பா. 67; மு.வீ. 1019; பிர.தீபிகை. 30; பிர.தீபம். 20)*; இருபகுதிகளுள் ஒவ்வொன்றிலும் ஏழு கூறுகள் அமையுமாறு பிரித்துக்கொண்டு அதில் ஒன்று முதலாக ஏழு வரையிலான எண்கள் அமையுமாறு இயற்றப்பெறும் செய்யுள். இது சிறுவர்கள் முன்னின்றும், புக்கும் போந்தும் விளையாடும் முறையில் அமைந்திருக்கும். *(மு.வீ. 1123)*

### எழுசீர்க் கழிநெடிலடி

1. அடி வகைகளுள் ஒன்று
2. அடிதோறும் ஏழு சீர்களால் அமையும் செய்யுள் (சித.பா. 5)

(எ.டு) கனிகொண்ட லர்ந்த நறுவேங்கை யோடு கமழ்கின்ற காந்த ளிதழால்
அணிகொண்ட லர்ந்த வனமாலை சூடி அகிலவி குஞ்சி கமழ
மணிகுண்ட லங்க ளிருபாலும் வந்து வரையாக மீது திவளத்
துணிகொண்டி லங்கு சுடர்வேலி னோடு வருவானி தென்கொல் துணிவே

*(மேற். சூளாமணி 1327; யா.விருத்தியுரை நூ. 25; யா.காரிகை 13, உரை; சித.பா.ப. 17)*

### எழுத்தானந்தம்

ஆனந்தக் குற்றங்களுள் ஒன்று; இயற்பெயர் அளபெடுத்தல் என்பது இவ்வகைக் குற்றம் ஆகும்.

(எ.டு) திரைய - திரையவோ ஓ *(இல.விள. 887)*

### எழுத்து

மங்கலச் சொற்களுள் ஒன்று *(பன்.பா. 68; வெண்.பா. 2; நவநீ.பா. 2; வரை.பா. 4; சித.பா. 18; இல.விள. 771; தொ.விள. 285; பிர.திர. 111; சுவாமி 173; மு.வீ. 1027)*

### எழுத்துகளைப் படைத்தோர்

| வ.எண் | எழுத்துகள் | பன்.பா | வெண்.பா. | நவநீ.பா. | சித.பா. | இல.விள. | சுவாமி |
|---|---|---|---|---|---|---|---|
| 1. | பன்னிரு உயிரெழுத்துகள் | பிரமன் | பிரமன் | பிரமன் | பிரமன் | பிரமன் | சிவன் |
| 2. | க ங | சிவன் | சிவன் | சிவன் | சிவன் | சிவன் | அயன் |
| 3. | சஞ | திருமால் | திருமால் | திருமால் | திருமால் | திருமால் | திருமால் |
| 4. | டண | முருகன் | முருகன் | முருகன் | முருகன் | முருகன் | முருகன் |
| 5. | தந | இந்திரன் | புதன் | இந்திரன் | இந்திரன் | இந்திரன் | இந்திரன் |
| 6. | பம | சூரியன் | சூரியன் | சூரியன் | சூரியன் | சூரியன் | சூரியன் |
| 7. | யர | மதி | மதி | மதி | மதி | மதி | மதி |
| 8. | லவ | குபேரன் | எமன் | எமன் | எமன் | எமன் | எமன் |
| 9. | ழ ள | கூற்றுவன் | வருணன் | வருணன் | வருணன் | வருணன் | வருணன் |
| 10. | ற ன | வருணன் | குபேரன் | குபேரன் | குபேரன் | குபேரன் | குபேரன் |

எழுத்துகளைப் படைத்த இறைவர்களைப் பற்றிக் கூறும் பாட்டியல்களில் பெரும்பாலும் வேறுபாடு இல்லை. பன்னிரு பாட்டியல் குறிப்பிடும் இறுதி மூன்று பெயர்கள் மட்டும் பிற பாட்டியல்களில் இருந்து வேறுபட்டுள்ளன.
*(பன்.பா.3; வெண் பா.10; நவநீ பா. 11; சித.பா 21; இல.விள. 778; சுவாமி 175)*

### எழுத்துச் சுருக்கம்

சித்திரகவி வகைகளுள் ஒன்று. *(வெண்.பா. 26)*; எழுத்துகளைக் குறைத்தலால் அமையும் சித்திரகவி. அதாவது பொருள் தரக்கூடிய சொல்லொன்றைக் கூறி அதில் ஒவ்வோர் எழுத்தாக நீக்க, வேறுவேறு பொருள் தருமாறு அமைந்திருக்கும் செய்யுள்.

### எழுத்துப் பெருக்கம்

சித்திரகவி வகைகளுள் ஒன்று *(வெண்.பா. 26)*

► எழுத்து வருத்தனை

### எழுத்துப் பொருத்தம்

பாட்டுடைத் தலைவனின் பால், பிறந்த நாள், வருணம் முதலியவற்றோடு பொருந்தக் கூடிய எழுத்தினை இலக்கியத்தின் முதலெழுத்தாக அமைப்பது எழுத்துப்பொருத்தம் எனப்படும்.

பன்னிரு பாட்டியல் எழுத்துப் பொருத்தத்தைத் தனியொரு பொருத்தமாகக் கூறவில்லை மங்கலச் சொல்லிலேயே இணைத்துக் கூறியுள்ளது. பன்னிரு பாட்டியலை அடுத்துத் தோன்றிய இலக்கியங்கள் இதனைத் தனியொரு பொருத்தமாக வளர்த்தெடுத்தன.

முதற்சீரில் அமையும் எழுத்துகள் மூன்று, ஐந்து, ஏழு, ஒன்பது என்னும் எண்ணிக்கையில் அமைய வேண்டும். இரட்டைப்படையில் அதாவது இரண்டு நான்கு ஆகிய எழுத்துகளால் அமையும் சொற்கள் முதன்மொழியில் வரக்கூடாதெனப் பாட்டியல் நூல்கள் வலியுறுத்துகின்றன. *(பன்.பா. 70; வெண்.பா. 4; நவநீ.பா. 5; சித.பா. 19; இல.விள. 784; தொ.விள. 287; சுவாமி 173; மு.வீ. 1029)*

மூன்று, ஐந்து, ஏழு என்பவற்றுக்குச் சுவாமிநாத உரைகாரர். இ, உ, எ, ஐ என (அதாவது - மூன்று (இ) ஐந்து (உ)) குறிப்பிடுகிறார். இது பொருத்தமாக இல்லை. மூன்று, ஐந்து என்பன முதற்சீரின் எழுத்தெண்ணிக்கையைக் (உலகு-3) குறிக்குமே தவிர, மூன்றாமெழுத்து, ஐந்தாமெழுத்து என்பதைக் குறிக்காது. ஆகவே உரையாசிரியரின் இக்கருத்து மேலாய்விற்கு உரியது.

இவ்வாறு ஒற்றைப்படையில் அமைவதை வியநிலை என்றும் இரட்டைப் படையில் அமைவதை சமநிலை என்றும் கூறுவர். பெரும்பான்மையான பாட்டியல்கள் இரட்டைப்படையில் முதன்மொழி அமையக்கூடாது என்கின்றன. பிரபந்தத் திரட்டு மட்டும் இரண்டு, நான்கு ஆகிய எண்ணிக்கையில் முதன்மொழி எழுத்துகள் அமையலாம் என்றும், ஓரெழுத்துச் சீர் மொழியின் முதலில் வரக்கூடாதென்றும் கூறுகின்றது. *(பிர.திர. 119)*

இதற்கு ஆதாரமாக இந்நூலின் மங்கலப் பொருத்தத்தில் முதன்மொழிச் சொல்லாக உலகம், ஆரணம் என்னும் நான்கு எழுத்துச் சொற்கள் வரலாம் என்பர். மற்ற பாட்டியல்கள் இரட்டைப் படையில் முதன்மொழி அமையாது எனக் கூறிவிட்டு அதற்கு முரணாக மங்கலப் பொருத்தத்தில் உலகம் ஆரணம் என்னும் இரட்டைப்படைச் சொற்கள் முதன்மொழியில் வரலாம் என்றும் கூறுகின்றன.

எழுத்துப் பொருத்தம் பார்க்கையில் எழுத்துகளை ஒற்றுட்பட எண்ணிப் பார்க்க வேண்டும் என்று சில பட்டியல்கள் வரையறுக்கின்றன. *(பன்.பா. 70; வெண்.பா. 4; நவநீ.பா. 5; சித.பா. 19, தொ.விள. 287; பொரு.விள. 12)*

எழுத்துவருத்தனை

சித்திரகவி வகைகளுள் ஒன்று *(வெண்.பா. 26; நவநீ.பா. 67; இல.விள. 766 (690))*; ஓரெழுத்து ஒரு மொழியாய்ப் பொருள் கொடுத்துப் பின் அதனுடன் ஓரெழுத்து கூடப் பிறிதொரு பொருள் கொடுத்து இவ்வாறே ஒவ்வோர் எழுத்தாய்க் கூடக்கூட வெவ்வேறு மொழியாய்ப் பொருள் தருவது.

எழுவகைத்தாளங்கள்

1. துருவதாளம், 2. மட்டியம், 3. உருபகம், 4. சம்பைதாளம், 5. திரிபுடைதாளம், 6. அடைதாளம், 7. ஏகதாளம் *(பிர.தீபிகை. 49)*

எழுவகைப் பிறப்புகள்

| | | |
|---|---|---|
| 1. தெய்வம் | - | பதினான்கு நூறாயிரம் |
| 2. மக்கள் | - | ஒன்பது இலட்சம் |
| 3. விலங்குகள் | - | பத்து இலட்சம் |
| 4. பறவைகள் | - | பத்து இலட்சம் |
| 5. ஊர்வன | - | பதினொரு இலட்சம் |
| 6. நீரில் பிறந்தவை | - | பத்து இலட்சம் |
| 7. தாவரங்கள் | - | இருபது இலட்சம் *(பிர.தீபிகை. 81; பிர.திர. 372)* |

எழுவர் மங்கையர்

காப்புக் கடவுளருள் ஒருவர் *(பன்.பா. 106; நவநீ.பா. 27; இல.விள. 808; பிர.திர. 89)*

எள்

இறைவர்க்குப் படைக்கப்படும் பொருள்களுள் ஒன்று *(பிர.திர. 37)*

எறிச்சலூர் மலாடனார்

சங்கப் புலவர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை. 85)*

எறும்பு

1. அறுவகை அறிவுபெறும் உயிர்களுள் ஒன்று.
2. உற்றுணர்தல், நாச்சுவை அறிதல், மூக்குணர்வு என்னும் மூவறிவுயிர் *(இல.விள. 913)*

## ஏ

ஏ

1. முதல்வன் (நான்முகன்) படைத்த எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 3; வெண்.பா. 9; நவநீ.பா. 11; சித.பா. 21)*
2. சிவன் படைத்த எழுத்துகளுள் ஒன்று *(சுவாமி 175)*
3. அந்தண சாதிக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 5; வெண்.பா. 9; நவநீ.பா. 12; சித.பா. 21; இல.விள. 774; தொ.விள. 291; பிர.திர. 135; சுவாமி 175; மு.வீ. 1033, பொரு.விள. 33)*
4. மக்கள் கதிக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 15; வெண்.பா. 18; நவநீ.பா. 20; சித.பா. 24; இல.விள. 798; தொ.விள. 293; பிர.திர. 152; சுவாமி 176; மு.வீ. 1036)*

5. நஞ்செழுத்துகளுள் ஒன்று *(சித.பா. 20)*
6. அமுத எழுத்துகளுள் ஒன்று *(பிர.திர. 128: சுவாமி. 175)*
7. பெண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 27; வெண்.பா. 6; நவநீ.பா. 7; சித.பா. 20)*
8. பூராடத்திற்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 41; வெண்.பா. 11; நவநீ.பா. 13; சித.பா. 23; இல.விள. 785; தொ.விள. 292; பிர.திர. 142; மு.வீ. 1034; பொரு.விள 38)*
9. தேர் என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 9)*; நேமி பொன் என்னும் மங்கலச் சொற்களுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 3)*
10. இசைக்குரிய குறியீட்டெழுத்துகளுள் ஒன்று *(பிர.திர. 92)*

ஏக தாளம்

எழுவகைத் தாளங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 49)*

ஏகபாதம்

சித்திரகவி வகைகளுள் ஒன்று. *(வெண்.பா. 26; நவநீ.பா. 67; மு.வீ. 1019)*; ஒரே மாதிரியான அடி; செய்யுளின் நான்கு அடிகளும் ஒரே மாதிரி அமைந்து மடக்கு வகையில் வெவ்வேறு பொருள் தருவதாக அமைவது.

ஏசல்

1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(சுவாமி 165)*

ஏடு

புல்லின் உறுப்புகளுள் ஒன்று *(இல.விள. 920)*

ஏலம்

இசைக்குரிய சுவைகளுள் ஒன்று *(பிர.திர. 92)*

ஏலாதிஎண்பது

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 44)*

ஏழிசை

| வ.எண் | ஏழிசை | பிறக்குமிடம் | ஓசை | சுவை | மணம் | அரசன் |
|---|---|---|---|---|---|---|
| 1 | குரல் | மிடறு | மயில் | பால் | மௌவல் | விசுவாமித்திரன் |
| 2 | துத்தம் | நா | இடபம் | தேன் | முல்லை | சமதக்கினி |
| 3 | கைக்கிளை | அண்ணம் | ஆடு | தயிர் | கடம்பு | சந்திரன் |
| 4 | உழை | தலை | கொக்கு | நெய் | வஞ்சி | கதிரவன் |
| 5 | இளி | நெற்றி | குயில் | ஏலம் | நெய்தல் | கவுதமன் |
| 6 | விளரி | நெஞ்சு | குதிரை | வாழைக் கனி | பொன்னாவரை | காசிபன் |
| 7 | தாரம் | மூக்கு | யானை | மாதுளம் பழம் | புன்னைமலர் | ஈசன் |

*(பிர தீபிகை. 50)*

இவையன்றி தாரத்தில் உழை எழும். உழையில் குரல் எழும். சொல்லப்பெறும் குரலில் இளியும், இளியில் துத்தமும் தோன்றுகிறது. இதில் விளரி. விளரியிடத்தும் முறையாகக் கைக்கிளையிலும் பிறக்கின்றது. இவை ஏழு சுரம் எனவும் ஏழு நரம்பு எனவும் கூறப்பெறும்.

மேற்கூறிய செய்திகளுடன் வண்ணம், குறியீட்டெழுத்து என்பவற்றையும் சேர்த்துப் பிரபந்தங்களுக்கு உரியனவாகப் பிரபந்தத் திரட்டு கூறுகிறது.

▶ அட்டவணை 2.

ஏழு தளை

யாப்பின் தொகைகளுள் ஒன்று. 1. நேரொன்றாசிரியத் தளை, 2. நிரையொன்றாசிரியத்தளை. 3. இயற்சீர் வெண்டளை, 4. வெண்சீர் வெண்டளை, 5. ஒன்றிய வஞ்சித் தளை, 6. ஒன்றாத வஞ்சித் தளை, 7. கலித்தளை *(தொ.விள. 300)*

ஏற்றை

அஃறிணை ஆண்பால் மரபுப் பெயர்களுள் ஒன்று *(இல.விள. 916)*; ஆற்றலோடு கூடிய ஆண்பால் விலங்குகளைக் குறிக்கும். *(தொல் பொருள். 604)*

ஏறு

ஆண்பால் மரபுப் பெயர்களுள் ஒன்று *(இல.விள. 916)*; பன்றி, புல்வாய், உழை, கவரி. எருமை, மரை, பெற்றம், சுறா என்பவற்றின் ஆணினைக் குறிக்கும்.

## ஐ

**ஐ**

1. முதல்வன் (நான்முகன்) படைத்த எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 3; வெண்.பா. 9; நவநீ.பா. 11; சித.பா. 21: இல.விள. 778)*
2. சிவன் படைத்த எழுத்துகளுள் ஒன்று *(சுவாமி 175)*
3. அந்தண சாதிக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 5; வெண்.பா. 9; நவநீ.பா. 12; சித.பா. 21, இல.விள. 774; தொ.விள. 291; பிர.திர. 135; சுவாமி. 175; மு.வீ. 1033; பொரு.விள. 33)*
4. நரகர் கதிக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 17: வெண்.பா. 19; நவநீ.பா. 21; சித.பா. 24: இல.விள. 799; தொ.விள. 293; பிர.திர. 152; மு.வீ. 1036; பொரு.விள. 70)*
5. நஞ்செழுத்துகளுள் ஒன்று *(சித.பா. 20; சுவாமி 175)*
6. பெண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 27; வெண்.பா 6; நவநீ.பா. 7; சித.பா. 20; இல.விள. 773; தொ.விள 289; சுவாமி 174; மு.வீ. 1031)*
7. அலி எழுத்துகளுள் ஒன்று *(பிர.திர. 126; பொரு.விள. 21)*
8. பூராடத்திற்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 41; வெண்.பா 11; நவநீ.பா. 13; சித.பா. 23; இல.விள. 785; தொ.விள. 292; பிர.திர 142; மு.வீ. 1034; பொரு.விள. 38)*
9. தேர் என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 9)*; *நேமி, பொன்* என்னும் மங்கலச் சொற்களுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 3)*
10. இசைக்குரிய குறியீட்டெழுத்துகளுள் ஒன்று *(பிர.திர. 92)*

**ஐகாரக் குறுக்கம்**

1. நஞ்சு எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 24)*
2. தளையும் சீரும் கெடவந்த இடத்துக் கொள்ளப்படும் குற்றெழுத்துகளுள் ஒன்று *(சித.பா. 12)*

(எ-டு) அன்னையை நோவ தெவன் மாண் அணியிழாய்
புன்னையை நோவன் புலந்து

*(மேற்: யா.கல விருத்தியுரை நூ. 9, யா.காரிகை 36, உரை; சித.பா.ப. 70)*

**ஐங்கணையின் ஆற்றல்**

நினது உடலும் உயிரும் அழியா என உரைத்து இரதியை மணமுடித்த மன்மதன் தனது ஏழு வயதளவில் தவம் புரிந்து பெற்றவை ஐங்கணைகள். இவற்றின் ஆற்றல்கள்:

1. மங்கி அழியாதவை
2. மயக்கும் ஆற்றலுடையவை
3. முறை தவறாதவரையும் உடல் இணைவுக்குத் தூண்டுபவை
4. பெற்ற தாயரையும் சஞ்சலப்படுத்துபவை
5. நல் அறிவுடையவரையும் மயக்குபவை *(பிர.திர 250)*

**ஐங்குறுநூறு**

பலவகைப் பாட்டுகள் சேர்ந்து ஒரு நூலாகும் இலக்கியங்களுள் ஒன்று *(பன்.பா 89, உரை)*

**ஐந்தறிவு**

அறுவகை அறிவுகளுள் ஒன்று: மெய், வாய் மூக்கு, கண், செவி என்னும் ஐந்தால் அறியப்படும் அறிவு *(இல விள. 912)*

**ஐந்திணை ஐம்பது**

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 44)*

**ஐந்திணைச் செய்யுள்**

1. ஐந்து திணையினையும் அவற்றிற்கு உரிய உரிப்பொருள்களையும் பற்றிப்பாடும் இலக்கியம் *(இல.விள. 849; மு.வீ. 1043)*
2. இதன்யாப்பு - வெண்பா, வஞ்சி, கலி, வண்ணம், அகவல் *(பிர.தீபிகை 8; பிர.தீபம். 22)*

**ஐந்துசீர்**

1. யாப்பின் தொகைகளுள் ஒன்று.
2. இயற்சீர், வெண்சீர், வஞ்சிச்சீர், பொதுச்சீர். அசைச்சீர் *(தொ.விள. 300)*

**ஐந்து பூதங்கள்**

நீர். தீ. பூமி, காற்று. வான் *(பிர.திர. 378)*

**ஐந்நிலங்கட்குரிய முதல், கரு, உரி**

கூடல், பிரிதல், இருத்தல், ஊடல், நினைந்து இரங்கல். இவற்றின் நிமித்தம் என்னும் பத்தும் உரிப்பொருள். கடவுளோடு பதினைந்து கருப்பொருட்கள், காலம் என்பதோடு மலை, நிலம், கானம், மருதம், முதுநீர் என்னும் இவையும் இவை சார்ந்த பத்தும் நிலம் (இடம்)-முதற்பொருள் *(பிர.திர. 354)*
► அட்டவணை 3.

**ஐம்படை விருத்தம்**

1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(பன்.பா. 99)*
2. சக்கரம், வில், வாள், சங்கு, தண்டு என்னும் திருமாலின் ஐம்படைகளை ஆசிரிய விருத்தத்தால் பாடும் நூல் *(பன்.பா. 179)*

**ஐம்பா**

யாப்பின் தொகைகளுள் ஒன்று. வெண்பா, ஆசிரியப்பா, வஞ்சிப்பா, கலிப்பா, மருட்பா *(தொ.விள. 300)*

**ஐம்பால் மொழி ஐம்பது**

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 44)*

**ஐயம்**

முப்பத்திரண்டு அறங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 71)*

**ஐயர்**

1. கலம்பகத்தில் தொண்ணூற்றைந்து செய்யுள்களால் பாடப்படுதற்கு உரியவர் *(சித.பா. 30. இல.விள. 813)*
2. தொண்ணூறு செய்யுள்களால் பாடப்படுதற்கு உரியவர் *(சுவாமி. 170)*

**ஐயர் பாடை வழக்குகள்**

| தமிழ் | ஐயர் வழக்கு |
|---|---|
| பேசுதல் | கொடை |
| வா | மோ |
| பேய் | மிருத்து |
| போ | மிச்சு |
| நட (மாசில்) | சற்ப |
| இறக்கு | வளை |
| மனை | இந்து |
| கூசுவது | கூட்டு |
| ஆசை | எட்டு |
| கூடல் முதல் பிற | குறிஞ்சி முதல் ஐந்தாக மாசில் உரை |
| திறன் | மைந்து |
| வாய் நயந்து உண்பது | துப்பு *(பிர.திர. 454)* |

**ஐயனார் (அய்யப்பன்)**

1. அரனுக்குரிய பிள்ளைகளுள் ஒருவர் *(பிர.திர. 424)*
2. சிவனின் இந்திரியத்தில் தோன்றியவர் *(பிர.திர 283)*

**ஐவகைத் தாளங்கள்**

1. சச்சற்புடம், 2. சாசற்புடம், 3. சட்பிதாபுத்திரிகம், 4. சம்பத்து வேட்டம், 5. உற்கடிதம். *(பிர.தீபிகை. 49)*

**ஐவகை நிதிகள்**

சங்கம், பதுமம் என்னும் இரு நிதிகள், சிந்தாமணி, கற்பகத்தரு, காமதேனு ஆகியன அமுதினிலே வந்தவை *(பிர.திர. 287)*



## ஒ

**ஒ**

1. நான்முகன் (முதல்வன்) படைத்த எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 3; வெண்.பா. 9; நவநீ.பா. 11; சித.பா. 21; இல.விள. 778)*
2. சிவன் படைத்த எழுத்துகளுள் ஒன்று *(சுவாமி. 175)*
3. அந்தண சாதிக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 5; வெண்.பா 9, நவநீ.பா. 12; சித.பா. 21; இல.விள. 774; தொ.விள. 291; பிர.திர. 135, சுவாமி. 175; மு.வீ. 1033; பொரு.விள. 33)*
4. விலங்கு கதிக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 16; வெண்.பா. 19; நவநீ.பா 21; சித.பா. 24; இல.விள. 799; தொ.விள.293; பிர.திர. 152; மு.வீ. 1036; பொரு.விள. 69)*
5. நஞ்செழுத்துகளுள் ஒன்று *(சித.பா 20; சுவாமி. 175)*
6. ஆண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 26; வெண்.பா. 6, நவநீ.பா. 7; சித.பா. 20; இல.விள 773, தொ.விள 289; சுவாமி. 174; மு.வீ. 1031, பொரு.விள. 20)*
7. அலி எழுத்துகளுள் ஒன்று *(பிர.திர. 126)*
8. உத்திராடத்திற்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 41; வெண்.பா. 11; நவநீ.பா. 13; சித.பா. 23; இல.விள. 786; தொ.விள. 292; பிர.திர. 142, மு.வீ. 1034; பொரு.விள. 39)*
9. கங்கை என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 7)*; ஆழி, கார், நீர் என்னும் மங்கலச் சொற்களுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 3)*

**ஒச்சன்**
குலப் பெயர்களுள் ஒன்று *(பிர.திர. 362)*

**ஒட்டர்**
குலப் பெயர்களுள் ஒன்று *(பிர.திர. 363)*

**ஒட்டியம்**
ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று *(பிர.திர. 500-502; பிர.தீபிகை 99)*

**ஒப்பக் கூறல்**
முப்பத்திரண்டு உத்திகளுள் ஒன்று; ஒரு சொல்லுக்குக் கூறும் விதி இரட்டுற மொழிதலால் இருசொல்லுக்கு அமையுமாறு கூறுதலும் ஒன்றன் இலக்கணத்தைப் பிறிதொன்றனோடு மாட்டெறிதலும் போல்வன *(இல.விள. 898)*

**ஒருதலை அன்மை**
முப்பத்திரண்டு உத்திகளுள் ஒன்று; ஒரு அதிகாரத்தில் கூறவேண்டிய இலக்கணத்தை வேறோர் அதிகாரத்தில் கூறி, கூறப்பட்டதனையே கூறப்பெறாத அதிகாரத்திற்குக் கொள்ள வைத்தல் *(இல.விள. 898)*

**ஒருபா ஒருபஃது**
1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(பன்.பா. 99)*
2. தொடர்நிலைச் செய்யுள் வகைகளுள் ஒன்று *(இல.விள. 805)*
3. பல பாட்டுகள் சேர்ந்து ஒரு நூலாகும் இலக்கிய வகையுள் ஒன்று *(பன்.பா. 87)*
4. வெண்பா அல்லது ஆசிரியப்பாவினால் ஒன்றோடொன்று சொல்லால் தொடரும் வகையில் பத்து செய்யுள்கள் அமையப் பாடப்பெறும் நூல் *(பன்.பா.219; சித.பா. 34)*
5. வெண்பா (அ) ஆசிரியப்பா (அ) கலித்துறையால் ஆன இலக்கியம் எனச் சில பாட்டியல்கள் கலித்துறையைச் சேர்த்துக் கூறுகின்றன. *(வெண்.பா. 40; பிர.மர 11; இல.விள. 823; தொ.விள. 264; மு.வீ. 1088; பிர.தீபிகை. 21)*
6. வெண்பாப் பாட்டியல் முதலானவை வெண்பா (அ) ஆசிரியம் (அ) கலித்துறை என்கின்றன. பிரபந்த தீபம் மட்டும் இவை மூன்றும் கலந்த செய்யுள்களை உடைய இலக்கியம் என்கிறது. *(பிர.தீபம். 59)*

**ஒருபொருட்கொன்று**
பெண்ணின் உடலுறுப்புகளில் ஒன்றினை எடுத்து, அதற்குச் சிறப்பான உவமை கூறி, அந்த உவமைக்கு ஒரு கதையைச் சான்றாகக் கூறி உலகில் அவளைத் தலைவன் சேருவதாகக் கூறும் இலக்கிய வகை *(பிர.திர. 483)* (இவ்வகை இலக்கியத்திற்குச் சான்று இல்லை)

**ஒருபொருட்பாட்டு**
சித்திரகவி வகைகளுள் ஒன்று *(வெண்.பா. 26; நவநீ.பா. 67)*

**ஒருபோகு**
1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(பன்.பா. 99)*
2. தன்மை, முன்னிலை, படர்க்கை என்னும் மூவிடத்தில் தன்மை இடத்தை நீக்கி மற்ற இரண்டிடத்தில் ஓரிடத்தால் கடவுளைப் பழிச்சும் ஒரு போகானது தரவு, தாழிசை, அராகம், அம்போதரங்கம், தனிச்சொல், சுரிதகம் என்னும் ஆறு உறுப்பும் ஒன்றாய் அமைந்து நடக்கும் நயம் விளங்கும் வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பாவினுள், வண்ணக உறுப்பு நீங்கினும் அம்போதரங்க உறுப்பு நீங்கினும் ஓதப்பட்ட உறுப்பால் பெயரைக் கூறும் இலக்கியம் *(பன்.பா. 122)*
3. கலம்பகத்தின் முதல் உறுப்பு *(பன்.பா. 129; வெண்.பா. 33; நவநீ.பா. 33; பிர.மர. 5; சித.பா. 29; இல விள. 812; தொ.விள. 258; பிர.திர. 33; மு.வீ. 1041; பிர.தீபிகை. 7; பிர.தீபம் 95)*

**ஒரூஉ அளபெடை**
1. நாற்பது தொடை வகைகளுள் ஒன்று
2. முதல், நான்காம் சீரில் இடம்பெறும் அளபெடை *(சித.பா 6)*
(எ.டு) **காஅய்ச் செந்நெற் கறித்துப் போஒய்**
*(மேற்: யா.கல. விருத்தியுரை நூ. 41 : 3; யா.காரிகை 20, உரை; சித.பா.ப. 24)*

**ஒரூஉ இயைபு**
1. நாற்பது தொடை வகைகளுள் ஒன்று
2. ஒன்று, நான்காம் சீரிலுள்ள இறுதி எழுத்து ஒன்றிவரும் இயைபு *(சித.பா. 6)*
(எ.டு) நிழலே இனியதன் அயலது கடலே
*(மேற்: யா.கல விருத்தியுரை நூ. 40:3; யா.காரிகை 20, உரை; சித.பா.ப. 23)*

**ஒரூஉ எதுகை**

1. நாற்பது தொடை வகைகளுள் ஒன்று
2. முதல், நான்காம் சீரில் இடம்பெறும் எதுகை *(சித.பா. 6)*

(எ.டு) மின்னவிர் ஒளிவடந் தாங்கி மன்னிய

*(மேற்: யா.கல விருத்தியுரை நூ 36 : 3; யா.காரிகை 20, உரை; சித.பா.ப. 23)*

**ஒரூஉ முரண்**

1. நாற்பது தொடை வகைகளுள் ஒன்று
2. முதல், நான்காம் சீரில் இடம்பெறும் முரண் *(சித.பா. 6)*

(எ.டு) குவிந்துசுணங் கரும்பிய கொங்கை விரிந்து

*(மேற்: யா.கல விருத்தியுரை நூ. 38:3; யா.காரிகை 20, உரை; சித.பா.ப. 24)*

**ஒரூஉ மோனை**

1. நாற்பது தொடை வகைகளுள் ஒன்று
2. முதல் சீரிலும் நான்காம் சீரிலும் இடம்பெறும் மோனை *(சித.பா. 6)*

(எ.டு) அம்பொற் கொடிஞ்சி நெடுந்தேர் அகற்றி

*(மேற்: யா.கல விருத்தியுரை நூ. 35 . 3, யா.காரிகை 20, உரை; சித.பா.ப. 22)*

**ஒருத்தல்**

அஃறிணை ஆண்பால் மரபுப்பெயர்களுள் ஒன்று; *(இல.விள. 916)* யானை, பன்றி, புல்வாய், புலி, மான், கவரி, கராம், எருமை இவற்றின் ஆணினைக் குறிக்கும். *(இல.விள 916 உரை)*

**ஒருவன்மேல் பாடிய கவிதையை இன்னொருவன் மீது வைக்கும் சூழல்**

பாடல் தலைவன் இறந்து போதல், கேட்கமாட்டேன் எனல், வறுமை உறுதல், கவிஞனுக்குக் கூற இசைவு இல்லாது போதல், பரிசாகக் கொடுக்கும் பொருள் குறைவாக அமைதல், வேறொருவன் மிகுந்த பொருள் கொடுத்தல் என்னும் சூழல்களில் இது நிகழும் *(பிர.திர. 444)*

**ஒலியந்தாதி**

1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(பன்.பா. 99; இல.விள. 805)*
2. கலி அந்தாதியில் கூறியபடி தத்தம் இனத்தில் ஒத்து முறைமையில் மாறுபடாது ஓர் அடிக்கு நான்கு கலையாக நாலடிக்குப் பதினாறு கலைகள் அமையப் பாடப்படும் முப்பது செய்யுள்கள் *(பன்.பா. 159; நவநீ.பா. 39; பிர.மர. 8; சித.பா 31; இல.விள. 824)*
3. ஓரடிக்குப் பதினாறு கலை தொடுத்த பல்சந்த வகுப்புகள் அந்தாதியாக அமைய முப்பது செய்யுள்களால் பாடப்படுவது; சிறுபான்மை எட்டுக் கலையால் வரப்பெறுவனவும் உள *(வெண்.பா. 35; மு.வீ. 1082)*
4. இருபத்தாறு எழுத்துகளையுடைய, நான்கடியாகச் சந்தப்பாவின் மிக்க தாண்டகங்கள் முப்பதால் வரும் இலக்கியம் *(பிர.திர. 75)*
5. வெண்பா, அகவல், கலித்துறை ஆகிய மூன்றும் பத்துப் பத்தாக அந்தாதித்துப் பாடப்படும் இலக்கியம் *(மு.வீ. 1082; பிர.தீபிகை. 18; பிர.தீபம். 56)*

**ஒலியலந்தாதி**

▶ ஒலியந்தாதி *(வெண்.பா. 35, உரை; மு.வீ. 1082; பிர.தீபம். 56)*

மூன்றாகப் பகுக்கப்பட்டுள்ளது.

1. அடிக்கு 16 கலையாக நாலடிக்கு 64 கலையாக அடிகள் பல சந்தமாய் வண்ணமும், கலைவைப்பும் அந்தாதி தவறாமல் வகுத்து 30 செய்யுள் பாடுவது.
2. சிறுபான்மை எட்டுக் கலைகளைப் பெற்று வரும் (பிர.தீபிகை. 18)
3. ஒலியலந்தாதி எனக் குறிப்பிடும் இவை மூன்று மட்டுமே ஓரடிக்குப் பதினாறு கலை வீதம் நான்கடிக்கு 64 கலைகளைக் குறிப்பிடுகின்றன. ஏனையவை நான்கடிக்கு 16 கலை என்கின்றன.

**ஒற்றளபெடை**

தளையும் சீரும் கெடவந்த இடத்துக் குற்றெழுத்தாகக் கருதப்படும். முன்னிற்கும் எழுத்துடன் கூடி நிரையசையாய் நில்லாது குற்றெழுத்தின் மாத்திரையைப் பெற்று நேரசையாகவே நிற்கும் *(சித.பா. 12)*

(எ.டு) கண்ண் கருவிளை கார்முல்லை கூரெயிறு
பொன்ன் பொறிசுணங்கு போழ்வாய் இலவம்பூ
மின்ன் நுழைமருங்குல் மேதகு சாயலாள்
என்ன் பிறர்மகளா மாறு.

*(மேற்: யா.கல விருத்தியுரை நூ. 3, 95; யா.காரிகை 36, உரை; தொல்.உவமவியல் நூ. 3; பேரா; சித.பா.ப. 70)*

**ஒற்று**

தளை, சீர் தட்டுமிடத்து பொருந்தக்கூடிய ஒற்றினை உண்டாக்கலாம். அப்படியும் தட்டினால் அவ்வொற்றினையே இரட்டிக்கலாம். இவ்வாறு இரண்டு அல்லது மூன்று ஒற்றுகள் வந்தாலும் அவை ஓரொற்றாகவே கருதப்படும் *(சித.பா. 12)*

(எ.டு) அப்பொ ரைந்து டைய்ய காம னைய னென்ன வந்தண
னம்பு நீர ரல்லர் நன்கு ரங்கு நீர ராயினுந்
தங்கு ரவ்வர் தாங்கொ டுப்பி னெஞ்சு நொந்து தாழ்வர்தாம்
பொங்க ரவ்வ வல்கு லாரெ னப்பு கன்று சொல்லினார்.

**ஒற்றுப்பெயர்த்தல்**

சித்திரகவி வகைகளுள் ஒன்று; ஒரு செய்யுளின் சொல்லொன்றில் உயிர்மெய் எழுத்து ஒன்றை நீக்க அச்சொல் வேறொரு பொருளைத் தரும் வகையில் அமையும் கவி. யாப்பருங்கல விருத்தி இதைப் பின்வருமாறு கூறுகிறது. ஒரு மொழியைப் பாட்டின் இறுதிக்கண் வைத்துப் பிறிதொரு பொருள் பயக்கப் பாடுவது. இது பிந்துசி யுதகம் என்றும் அழைக்கப்படுகிறது.

**ஒன்பதின்சீர்க் கழிநெடிலடி**

1. அடி வகைகளுள் ஒன்று
2. அடிதோறும் ஒன்பது சீர்களால் அமையும் செய்யுள் *(சித பா. 5)*

(எ.டு) இடங்கை வெஞ்சிலை வலங்கை வாளியி னெதிர்ந்த தாரையை
இலங்கு மாழியின் விலங்கியோள்
முடங்கு வாலுளை மடங்கன் மீமிசை முனிந்து சென்றுடன்
முரண்ட ராசனை முருக்கியோள்
வடங்கொண் மென்முலை நுடங்கு நுண்ணிடை மடந்தை சுந்தரி
வளங்கொள் பூண்முலை மகிழ்ந்தகோன்
தடங்கொள் தாமரை யிடங்கொள் சேவடி தலைக்கு வைப்பவர்
தமக்கு வெந்துயிர் தவிர்க் குமே

*(மேற். யாப்பருங்கல விருத்தியுரை, நூ 25, யா.காரிகை 13, 29 உரை, சித.பா.ப. 17)*

**ஒன்பதுவகைத் தாளங்கள்**

1. நிவர்ததாளம், 2. அருமதாளம், 3. விடதாளம், 4. அரிதாளம், 5. செயதாளம், 6. சித்திரதாளம், 7. சமதாளம், 8. துருவதாளம், 9. படிமதாளம் *(பிர தீபிகை. 49)*

**ஒன்பான் மணிமாலை**

ஒன்பது பாடல்களில் நவமணிகளைத் திரிபு எனும் அணியாக இடம்பெறக்கூறும் இலக்கிய வகை. *(பிர திர. 21)*

**ஒன்றாத வஞ்சித்தளை**

தளை வகை ஏழனுள் ஒன்று *(சித பா 4)* கனிமுன் நிரை வருதல் ஒன்றாத வஞ்சித் தளை
(எ.டு) வண்டோலிடும் வண்டமிழகம்

**ஒன்று பலவாகிய இனம்**

ஒருநூல் பல பாட்டுக்களை உடையதாக இருத்தல். அந்தாதி, கோவை, காப்பியம் போன்றவை இவ்வகையின. *(பன் பா. 88)*; மேலும் பிள்ளைக்கவி, பரணி என்பனவும் இவ்வகையைச் சேர்ந்தவை (பன்.பா. 88, உரை)

**ஒன்றே ஆகிய இனம்**

ஒரு நூல் ஒரு பாட்டே ஆகி இருத்தல். உலா, ஆற்றுப்படை, மடல் என்பன இவ்விலக்கிய வகையின (பன்.பா. 87)

## ஓ

**ஓ**

1. முதல்வன் (நான்முகன்) படைத்த எழுத்துகளுள் ஒன்று *(பன் பா. 3; வெண் பா 9, நவநீ.பா. 11; சித.பா. 21; இல.விள. 778)*
2. சிவன் படைத்த எழுத்துகளுள் ஒன்று *(சுவாமி 175)*
3. அந்தண சாதிக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா 5; வெண் பா. 9; நவநீ.பா. 12; சித.பா 21; இல விள. 774, தொ.விள. 291; பிர.திர 135, சுவாமி. 175; மு.வீ. 1033; பொரு.விள. 33)*
4. விலங்கு கதிக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 16; வெண்.பா. 19; நவநீ.பா. 21; சித.பா. 24; இல.விள. 799; தொ விள. 293; பிர.திர. 152; மு வீ. 1036; பொரு.விள. 69)*
5. நஞ்சு எழுத்துகளுள் ஒன்று *(பன் பா. 22; நவநீ.பா. 9; சித.பா. 20; பொரு.விள. 28)*
6. பெண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 27; வெண்.பா. 6; நவநீ.பா. 7; சித.பா. 20; இல.விள. 773, தொ.விள. 289; பொரு.விள. 21; சுவாமி 174; மு.வீ. 1031)*

7. அலி எழுத்துகளுள் ஒன்று *(பிர.திர. 126)*
8. உத்திராடத்திற்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 41; வெண்.பா. 11; சித.பா. 23; இல.விள 786; தொ.விள. 292: பிர.திர. 142; மு.வீ. 1034; பொரு.விள. 39)*
9. கங்கை என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 7)*; ஆழி, கார், நீர் என்னும் மங்கலச் சொற்களுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 3)*
10. இசைக்குரிய குறியீட்டெழுத்துகளுள் ஒன்று *(பிர.திர. 92)*

**ஓகை**

பரணியின் உறுப்புகளுள் ஒன்று (காளிக்கும் பேய்களுக்கும் உண்டாகும் மகிழ்ச்சியைப் பாடும் பகுதி) *(பன்.பா. 143; வெண் பா. 61; நவநீ.பா. 57-61; பிர.திர. 45, 46)*

**ஓடல்**

ஐம்பூதங்களாலாகிய மனித உடலின் காற்றுக் கூறுகளுள் ஒன்று *(பிர.திர. 380)*

**ஓத்து இலக்கணம்**

ஓரினப் பொருளை எல்லாம் ஓரிடத்தே தொகுத்துக் கூறும் இலக்கணம் *(இல.விள. 894)*

**ஓதுவாருக்குணவு**

முப்பத்திரண்டு அறங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 71)*

**ஓர்கோல் கொண்டுவா**

ஆண்பால் பிள்ளைப்பாட்டு நிலைகளுள் ஒன்று *(பன்.பா. 102, உரை)*

**ஓரசை**

நால்வகைச் சீர்களுள் ஒன்று *(பன்.பா 54)*

**ஓரறிவு**

அறுவகை அறிவுகளுள் ஒன்று; மெய்யால் அறியப்படும் அறிவு *(இல.விள. 912)*

**ஓரெழுத்துப்பா**

சித்திரகவி வகைகளுள் ஒன்று; ஒரே உயிர்மெய் வருக்க எழுத்துகளால் அமையப்பெறும் செய்யுள் *(வெண்.பா 26)*

**ஓரைப்பொருத்தம்**

► அகலக்கவி ► அகலக்கவி கேட்பிக்கும் முகூர்த்தம் *(இல.விள. 937)*

**ஓலை**

புல்லின் உறுப்புகளுள் ஒன்று *(இல.விள. 920)*

**ஓலையிலக்கணம்**

1. முரியாத, பிளப்பில்லாத ஓலையில் வெண்பாவாலோ, ஆசிரியப்பாவாலோ அரசனைப் பற்றி முதலில் கூறி வாதம், விதண்டை, சற்பங்கள் இல்லாது நூல் இயற்றுகிற தன்னைப் பற்றிக் கூறி முடிப்பது *(நவநீ பா. 92)*
2. அந்தணனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு இயற்றப்படும் நூல் இருபத்து நான்கு விரலளவு உடைய ஓலையாலும், அரசனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு இயற்றப்படும் நூல் இருபது விரல் அளவுடைய ஓலையாலும், வணிகனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு இயற்றப்படும் நூல் பதினாறு விரலளவு உடைய ஓலையாலும் பாடப்பெறும் *(இந்.காளி. 38)*

**ஓமை**

மஞ்சரி என்னும் வகையைச் சார்ந்த இலக்கியத்தில் வழிபடும் தெய்வங்களுக்கு அணிவிக்கப்படும் மலர்களுள் ஒன்று *(பிர.திர 37)*

## ஔ

**ஔ**

1. நான்முகன் (முதல்வன்) படைத்த எழுத்துகளுள் ஒன்று *(பன் பா. 3; வெண் பா 9; நவநீ.பா 11, சித.பா. 21. இல.விள. 778)*
2. சிவன் படைத்த எழுத்துகளுள் ஒன்று *(சுவாமி. 175)*
3. அந்தண சாதிக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 5; வெண்.பா. 9; நவநீ பா 12; சித.பா. 21; இல.விள 774; தொ.விள. 291; பிர.திர. 135; சுவாமி. 175; மு.வீ. 1033; பொரு விள 33)*
4. நரகர் கதிக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன் பா. 17; வெண்.பா. 19; நவநீ.பா. 21, சித.பா 24; இல.விள 799; தொ விள. 293; பிர.திர. 152; மு.வீ. 1036; பொரு.விள 70)*
5. நஞ்செழுத்துகளுள் ஒன்று *(சித.பா. 20; சுவாமி. 175)*
6. பெண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 27; வெண்.பா. 6; நவநீ.பா. 7; சித.பா. 20; இல.விள. 773; தொ.விள. 289; சுவாமி. 174; மு.வீ. 1031; பொரு.விள. 21)*

7. அலி எழுத்துகளுள் ஒன்று *(பிர.திர. 126)*
8. உத்திராடத்திற்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 41; வெண்.பா. 11; நவநீ.பா. 13; சித.பா. 23; இல.விள. 786; தொ.விள. 292; பிர.திர. 142; மு.வீ. 1034; பொரு.விள. 39)*
9. சொல் என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 7)*; *ஆழி, கார், நீர்* என்னும் மங்கலச் சொற்களுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 3)*
10. இசைக்குரிய குறியீட்டெழுத்துகளுள் ஒன்று *(பிர.தி. 92)*

**ஔகாரக் குறுக்கம்**

1. நஞ்சு எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 24)*
2. தளையும் சீரும் கெடவந்த இடத்துக் குற்றெழுத்தாகக் கருதப்படும் *(சித.பா. 12)*

(எ-டு) பிறிந்த விருந்த பெருமா னுரையை
அறிந்தேன் மௌனமொழி யால்
*(சித.பா.ப. 70)*

**ஔத்தரிய தீட்சை**

சிவதீட்சையின் பன்னிரு வகைகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 62)*

**ஔரித மிருதி**

பதினெண் மிருதிகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 58)*

## க

**க**

1. சிவன் படைத்த எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 4; வெண்.பா. 10; நவநீ.பா. 11; சித.பா. 21; இல.விள. 778)*
2. அயன் படைத்த எழுத்துகளுள் ஒன்று *(சுவாமி. 175)*
3. அந்தண சாதிக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 5; வெண்.பா. 9; நவநீ.பா. 12; சித.பா. 21; இல.விள. 774; தொ.விள. 291, சுவாமி 175; மு.வீ. 1033; பொரு.விள. 33)*
4. அரச சாதிக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.தி. 135)*
5. வானவர் கதிக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 14, வெண்.பா. 18; நவநீ.பா. 20; சித.பா. 24, இல.விள. 798; தொ.விள. 293; பிர.திர. 152, சுவாமி 176, மு.வீ. 1036)*
6. அமுத எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 20; வெண்.பா. 7; நவநீ.பா. 10, சித.பா. 20, இல.விள. 779; தொ.விள. 290; பிர.திர. 128; சுவாமி 175; மு.வீ. 1032; பொரு.விள. 27)*
7. ஆண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 26; வெண்.பா. 6; நவநீ.பா. 7; சித.பா. 20; தொ.விள. 289; பிர.திர. 124; சுவாமி 174; மு.வீ. 1031; பொரு.விள. 20)*
8. அலி எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 28; வெண்.பா. 6, நவநீ.பா. 7; சித.பா. 20; இல.விள. 773; தொ.விள. 289; பிர.திர. 125; மு.வீ. 1031; பொரு.விள. 22)*
9. திருவோணத்திற்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 42; வெண்.பா. 12; நவநீ.பா. 13; சித.பா. 23; இல.விள. 787; தொ.விள. 292; பிர.திர. 143, மு.வீ. 1034; பொரு.விள. 40)*
10. சீர் என்னும் மங்கலச் சொல்லுக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 4; பிர.தீபிகை. 3)*

**கங்குல்**

பருவரல் வளரக் காரணமானவற்றுள் ஒன்று *(பன்.பா. 185)*

**கங்கை**

மங்கலச் சொற்களுள் ஒன்று *(பன்.பா. 68; வெண்.பா. 2; நவநீ.பா. 2; வரை.பா. 7; சித.பா. 18; இல.விள. 771; தொ.விள. 285, பிர.திர. 111, சுவாமி 173; மு.வீ. 1027; பொரு.விள. 3)*

**கட்டியம்**

தலைவன் வரும்போது அவனை எதிரேற்பதற்காகக் கூறுகின்ற சொற்களை முறையே கூறுவது *(பிர.திர. 484)*

**கட்க ஸ்தம்பனம்**

அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 72)*

**கட்டளைக் கலித்துறை**

நான்கடியாய் அடிதோறும் ஒற்றினை விடுத்து உயிரையும் உயிர்மெய்யையும் எண்ணுகையில் ஆதியில் நேரசை வந்தால் பதினாறெழுத்தும் நிரையசை வந்தால் பதினேழெழுத்தும் உடையதாய் வரும் செய்யுள் *(சித.பா. 15)*

**கடகம்**

வெண்பாவிற்கு உரிய இராசிகளுள் ஒன்று *(பன்.பா. 91; வெண்.பா. 70; பிர.மர. 26; இல.விள. 882; தொ.விள. 295; பிர.திர. 417)*

**கடம்**

முப்பத்திரண்டு உபநிடதங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 59)*

**கடம்பு**

இசைக்குரிய மணங்களுள் ஒன்று *(பிர.திர. 92)*

**கடமை**

பெண்பால் மரபுப்பெயர்களுள் ஒன்று *(இல.விள. 917)*; யாடு என்பதின் பெண்பாலைக் குறிக்கும் *(இல.விள. 917 உரை)*

**கடல்**

1. மங்கலச் சொற்களுள் ஒன்று *(பன்.பா. 68; வெண்.பா. 2; நவநீ.பா. 2; சித.பா. 18; இல.விள. 771; தொ.விள. 285; சுவாமி. 173; மு.வீ 1027; பொரு.விள. 3)*
2. அரசர்க்குரிய இருபத்தொரு சின்னங்களுள் ஒன்று *(பிர.திர. 88)*
3. பருவரல் வளரக் காரணமானவற்றுள் ஒன்று *(பன்.பா. 185)*

**கடலை**

இறைவர்க்குப் படைக்கப்படும் பொருள்களுள் ஒன்று *(பிர.திர. 37)*

**கடவுள்**

மங்கலச் சொற்களுள் ஒன்று. (இல.விள.771)

**கடவுளர் ஊர்திகளும், நிறங்களும்**

| வ.எண் | கடவுளர் | ஊர்தி | நிறம் |
|---|---|---|---|
| 1 | செவ்வாய் | புட்பவிமானம் | செந்நிறம் |
| 2 | புதன் | குதிரை | பசுமை |
| 3 | சுக்கிரன் | கருடன் | வெண்மை |
| 4 | வியாழன் (குரு) | யானை | பொன்னிறம் |
| 5 | இராகு | ஆடு | கறுப்பு |
| 6 | கேது | சிங்கம் | சிவப்பு |
| 7 | சூரியன் | தேர் | சிவப்பு |
| 8 | சந்திரன் | விமானம் | வெண்மை |
| 9 | சனி | காகம் | கறுப்பு |

*(பிர.திர. 268)* உரிய நிறங்களைப் பற்றி அறிய அபிதான சிந்தாமணி பயன்படுகிறது *(ப. 434, 435)*

**கடவுளர் வாகனம்**

கடவுளருக்குரிய வாகனம் வருமாறு:

| கடவுளர் | | வாகனம் |
|---|---|---|
| சூரியன் | - | ஓர் உருளையுடைய தேர் |
| சந்திரன் | - | புட்ப விமானம் |
| தேவர் | - | கொடுவரிப் புலி |
| சனி | - | காகம் *(பிர.திர. 267)* |

**கடவுளரின் பிறப்பு**

பாடல் வடிவம் மிகவும் மாறுபட்டுள்ளதால் பொருள் தெளிவு ஏற்படவில்லை *(பிர.திர 281)*

**கடாநிலை**

1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(பன்.பா. 99)*
2. கொற்றவையைப் பரவுகையில் மன்னர்கள் எறியும் எருமைக் கடாவின் தன்மையைப் பற்றிப் பாடும் பகுதி *(பன்.பா. 208)*

**கடிகை வெண்பா**

► நாழிகைக்கவி *(நவநீ.பா. 54, உரை; மு.வீ. 1124; பிர.தீபிகை. 30; பிர.தீபம். 86)*

**கடுவன்**

ஆண்பால் மரபுப்பெயர்களுள் ஒன்று *(இல.விள. 916)*; குரங்கின் ஆண்பாலைக் குறிக்கும். *(இல.விள. 916 உரை)*

**கடைஅளபெடை**

ஓரடியின் இறுதிச் சீரில் அமையும் அளபெடை *(சித.பா. 13)*

**கடைஇயைபு**

ஓரடியின் நான்காம் சீரில் அமையும் இயைபு *(சித.பா. 13)*

**கடைஎதுகை**
ஓரடியின் நான்காம் சீரில் அமையும் எதுகை *(சித.பா. 13)*

**கடைக்கூழை இயைபு**
முதற்சீரொழித்த மூன்று சீரிலும் இடம்பெறும் இயைபு *(சித.பா. 13)*

**கடைக்கூழை எதுகை**
முதற்சீரொழித்த மூன்று சீரிலும் அமையும் எதுகை *(சித.பா. 13)*

**கடைக்கூழை முரண்**
முதற்சீரொழித்த மூன்று சீரும் முரணுதல் *(சித.பா. 13)*
(எ-டு) காவியங் **கருங்கட் செவ்வாய்ப் பைந்தொடி**
பூவிரி சுரிமென் கூந்தலும்
வேய்புரை தோளும் அணங்குமால் எமக்கே.

**கடைக்கூழை மோனை**
முதற்சீரொழித்த மூன்று சீரிலும் இடம்பெறும் மோனை *(சித.பா. 13)*

**கடைக்கொடை**
1. நலம் பொருந்தியன கொடுத்தல் *(பிர.திர 424)*
2. ► கொடை

**கடைதிறப்பு**
பரணியின் உறுப்புகளுள் ஒன்று *(பன்.பா. 143; வெண்.பா. 61; நவநீ.பா. 57-61; பிர.மர. 19; சித.பா. 41; தொ.விள. 259, பிர.திர. 45, 46, சுவாமி. 171; மு.வீ. 1040; பிர.தீபிகை. 6)*

**கடைநிலை**
1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(பன்.பா. 99)*
2. பரிசில் கொடுத்தலைப் பற்றிக் குழப்பிப் பேசும் மன்னனிடம் சினம் கொண்ட புலவர்கள் அவன் வாயிலின்கண் நின்று கூறும் பொருள் உடைய நூல் *(பன்.பா. 229)*
3. புலவர்கள் தொலைவிலிருந்து வருகையில் ஏற்பட்ட வருத்தம் தீர வாயில் காக்கின்றவனிடத்து என் வரவைத் தலைவற்குக் கூறுவாயாக என கடைக்கணின்று கூறுதலைப் பாடும் இலக்கியம். *(மு.வீ. 1099; பிர.தீபிகை 25)*
4. மிகவும் தொலைவில் வருகின்ற வலிமையான தேரையுடைய வேந்தரைக் கண்டு, அவர்தம் வரவினை வாயில் காப்பாளர் தம் தலைவனிடம் அன்புடன் மொழிதல் போல் அமைக்கும் இலக்கியம் *(பிர.தீபம். 66)*

**கடை மாணாக்கர்**
இல்லிக்குடம், ஆடு, எருமையை ஒப்பர் *(பிர.திர 396)*

**கடைமுரண்**
அடி ஈற்றுச்சீர்கள் முரணும் சிலை *(சித.பா. 13)*
(எ-டு) கயன்மலைந் தன்ன கண்ணிணை கரிதே
தடமுலைத் திவளுந் தனிவடம் வெளிதே
நூலின் நுண்ணிடை சிறிதே
ஆடமைத் தோளிக்கு அல்குலோ பெரிதே

**கடைமோனை**
ஓரடியின் இறுதிச்சீரில் அமையும் மோனை *(சித.பா. 13)*

**கடையர்**
குலப் பெயர்களுள் ஒன்று *(பிர.திர. 363)*

**கடையிணை அளபெடை**
அடியின் நான்கு, மூன்றாம் சீர்களில் இடம்பெறும் அளபெடை *(சித.பா. 13)*

**கடையிணை இயைபு**
அடியின் நான்கு, மூன்றாம் சீர்களில் அமையும் இயைபு *(சித.பா. 13)*

**கடையிணை எதுகை**
அடியின் நான்கு, மூன்றாம் சீர்களில் இடம்பெறும் எதுகை *(சித.பா. 13)*

**கடையிணைமுரண்**
அடியின் நாலாம் சீரும் மூன்றாம் சீரும் முரணும், நிலை *(சித.பா. 13)*
(எ-டு) மீன்தேர்ந்து வருந்திய கருங்கால் வெண்குருகு
தேனார் ஞாழல் விரிசினைக் குழூஉம்
தண்ணந் துறைவன் தவிர்ப்பவுந் தவிரான்
தேரோ காணலம் காண்டும்
பீரேர் வண்ணமுஞ் சிறுநுதற் பெரிதே

**கடையிணை மோனை**

நான்கு, மூன்றாம் சீரில் அமையும் மோனை *(சித.பா. 13)*

**கடைலோபம்**

1. ஒன்றும் கொடாத நிலை.
2. ► உலோபம் *(பிர.திர. 424)*

**கண்**

► பாதாதி *(பன்.பா. 214; நவநீ.பா. 44)*

**கண்டசர்க்கரை**

சிற்பத்தொழிற்கு உரிய பத்துப் பொருள்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 60)*

**கண்டம்**

► பாதாதி *(பன்.பா. 214; நவநீ.பா. 44)*

**கண்ட மாலை**

குதிரைக்கு ஆகாத இருபது சுழிகளுள் ஒன்று *(பிர.திர. 388)*

**கண்டாரவம்**

1. வகுப்புறு இராகங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 53)*
2. இரக்கத்திற்கு உரிய இராகங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 55)*

**கண்டி**

ஆண்பால் மரபுப்பெயர்களுள் ஒன்று *(இல.விள. 916)*; எருமையின் ஆண்பாலைக் குறிக்கும் *(இல.விள. 916 உரை)*

**கண்ணாடி செய்தல்**

முப்பத்திரண்டு அறங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 71)*

**கண்படை நிலை**

1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(பன்.பா. 99)*
2. மன்னனிடத்து, காலை, பகல், மாலை எனும் வேளைகளில் மனம் ஆழ்ந்து நான்கு மறைகளில் கூறப்பட்ட முறைப்படி அறத்தியல், அமைச்சியல், அரசியல், இவற்றின் வேறாகிய இயல், இசை நாடகங்களின் இயல்களையும் நன்கு அறிந்தாய். பலகாலம் நீ வாழ்வாயாக. நின் மனத்திற்கு இனிய மகளிரோடு துயில் கொள்க என உரைக்கும் இலக்கியம் *(பன்.பா. 205)*
3. நீண்ட நேரம் அரசவையில் இருந்துவிட்ட மன்னனைத் துயிலும்படி உரிய நேரத்து வேண்டுதலைப் பாடுபொருளாகக் கொண்ட இலக்கியம் *(மு.வீ. 1091, பிர.தீபி 22; பிர.தீபம்.60)*

**கண் மருந்து**

முப்பத்திரண்டு அறங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 71)*

**கண்வளர் கனவு**

பருவரல் வளரக் காரணமானவற்றுள் ஒன்று *(பன்.பா. 185)*

**கணக்கு**

1. நூல் *(பன்.பா. 222)*
2. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(பன்.பா. 99)*
3. மேற்கணக்கு, கீழ்க்கணக்கு என இரு வகைப்படும் *(பன்.பா. 222)*

**கணப்பொருத்தம்**

சீரின் பொருத்தம் என்றும் இதனைக் கூறலாம். ஓரசை, ஈரசை, நாலசைச் சீர்களை ஒழித்து மூவசையால் ஆகிய எட்டுச் சீர்களையே கணம் எனக் குறித்தனர் *(பன்.பா. 56)*

நூலினைத் தொடங்குமிடத்து முதன் மொழியாக இரண்டசைச் சொல் அச்சொல் மங்கலச் சொல்லாக இருப்பினும் அமைதல் கூடாது. அதேபோல் இறைவனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு பாடப்பெறும் நூலாயினும் முதன்மொழியில் நாலசைச் சீர் அமையும்படி பாடுதல் கூடாது. பாட்டுடைத் தலைவராக எவர் அமைந்தாலும் மற்ற பொருத்தங்கள் எல்லாம் பொருந்தி மூன்று அசைகளால் ஆகும் சீரே நூலிற்கு முதலாய் வரும்.

*(இந்.காளி. 10,11,22)*

மூவசைச் சீரே முதல் மொழிக்கு உரித்து. *(பொரு.விள. 10)*

நேர் நேர், நிரை நேர் எனவரும் நேரீற்று ஈரசைச் சீர்களும் நிரை நிரை, நேர் நிரை எனவரும் நிரையீற்று ஈரசைச் சீர்களும் நூலின் முதற்சீர்களாக அமைந்துவரப் பாடப்பெற்றுள்ள நூல்களும் உண்டு.

*(இந்.காளி. 37)*

மூவசைச்சீர் பொருந்திப் பாட்டுக்கியையும்படி முதற்சீராய் வராதபோது மங்கலச் சொல்லமைந்த நிரையீற்று இயற்சீர் முதற்சீராய் நின்றாலும் அவற்றை நீக்காமல் கொள்வர் புலவர் *(பன்.பா. 67)*

மூன்று அசையால் ஆகிய எட்டுக் கணங்களை நன்மை பொருந்திய கணங்கள், தீமை பொருந்திய கணங்கள் என இரண்டாகப் பகுக்கின்றனர்.

நன்மை பொருந்திய கணங்கள்:

| | | | |
|---|---|---|---|
| 1. இயமான கணம் | 2. மதிக்கணம் | 3. நிலக்கணம் | 4. நீர்க்கணம் |
| முற்றுநேர் | ஆதிநிரை | முற்றுநிரை | ஆதிநேர் |
| (தேமாங்காய்) | (புளிமாங்காய்) | (கருவிளங்கனி) | (கூவிளங்கனி) |

தீமை பொருந்திய கணங்கள்

| | | | |
|---|---|---|---|
| 1. சூரிய கணம் | 2. ஆகாய கணம் | 3. தீக்கணம் | 4. வாயுக்கணம் |
| இடைநிரை | இறுதி நேர் | இடைநேர் | இறுதி நிரை |
| கூவிளங்காய் | கருவிளங்காய் | புளிமாங்கனி | தேமாங்கனி |

(பன்.பா. 66; இந்.காளி. 21; வெண்.பா. 20; நவநீ.பா. 22; சித.பா. 25; தொ.விள. 294; பிர.திர. 155)

ஆகாயக்கணம், சூரியக்கணம். வாயுக்கணம், தீக்கணம் நான்கும் ஒழிய, இந்திரக் கணம், நிலக்கணம், நீர்க்கணம் நான்கனுள் ஒன்று முதற்சீராய் பொருந்துவது கணப் பொருத்தம் ஆகும்.

ஈரசைச்சீர் நான்கிற்கும் மூவசைச் சீருக்குக் கூறிய பயனே கொள்ளப்படும். *(இல.விள. 82; பிர.திர. 158)*

ஈரசை, மூவசைகளால் முதற்சீர் அமையும் சில இடங்களில் அவற்றால் நன்மையின்றித் தீமை வருமிடத்தும், இலக்கியத்தில் அமைகின்ற பிற பொருத்தங்களுக்குக் குறைவரும் வகையில் அவை அமையுமிடத்தும் அவற்றை நீக்கிச் சிறப்புற ஏற்புடையதாக அமைக்க வேண்டும். *(பிர.திர. 159)*

நட்சத்திரங்களை மூன்றாகப் பகுத்துத் தலைவனின் நட்சத்திரத்தை முன்வைத்து அதற்குரிய எழுத்தை நோக்க ஏற்புடையதாகக் கருதப்படும் எண்ணின் நாள் இங்குக் கணப்பொருத்த நாளிலும் இயைபு கொள்ளும். *(பிர.திர. 156)*

நன்மை தருவன எனக் கூறப்பட்ட நிலம் முதலான கணங்கள் நூலின் முதற்சீராக அமையுமாறு நூலியற்றுமிடத்து அந்நூலின் பாட்டுடைத் தலைவனின் குடியைப் பெருக்குதலாலும் அவன் வாழ்நாளைப் பெருக்குதலாலும். பெரும் புகழைத் தருதலாலும் செல்வச் செழிப்பைத் தருதலாலும் வேந்தர் முதலிய நால்வருணத்தார் மீது நூல் பாடுமிடத்து அக்கணங்களை முதற்சீராய்க் கொண்டு பாடுதல் வேண்டும். நிலம் முதலான கணங்கள் நன்மையே தரும் எனினும் வேந்தனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு பாடுமிடத்து நன்மை தரும் கணங்களுக்கு உரிய நாளொடு பாட்டுடைத் தலைவனின் நாளும் பொருந்த வேண்டும்; பொருந்தவில்லை எனில் நன்மை தரும் இவையே தீமையைப் பயக்கும். *(இந்.காளி. 23)*

பகைக் கணங்கள் என்று கூறப்பட்ட நான்கு கணங்களுக்கும் உரிய சீர் முதற்சீராய் அமையுமாறு நூல் இயற்றப்படுமாயின் அந்நூலின் பாட்டுடைத் தலைவன். நாட்டை விட்டு வெளியேறுதல், வறுமையுறுதல், வெறுமையுறுதல், கொடு நோய்வாய்ப்படுதல், ஊனமாகுதல் என்னும் துன்பங்களை அடைவான். எனினும் தெய்வத்தைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு பாடும் நூல்களில் அந்தத் தீய கணங்களும் முதற்சீராய் அமையலாம். அவ்வாறு பாடுமிடத்து அக்கணங்களுக்கு ஓதப்பட்ட நாள்களைப் பொருத்தி நூல் பாடுதல் வேண்டும். *(இந்.காளி. 24)*

▶ அட்டவணை 4.

**கணிதம்**

அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 72)*

**கணைக்கால்**

▶ பாதாதி *(பன்.பா. 214; நவநீ.பா. 44)*

**கதி**

நூல்களின் முதற்சீரில் அமைக்கப்படும் பத்துப் பொருத்தங்களுள் ஒன்று. இது நிலை என்றும் வழங்கப்பெறும். இதன் நால்வகை: 1. தேவகதி (வானவர் கதி, தெய்வ கதி என்றும் வழங்கப்பெறும்) 2. மக்கள் கதி, 3. விலங்கு கதி (மிருக கதி என்றும் வழங்கப்பெறும்) 4. நரகர் கதி.

இந்நிலைகள் ஒவ்வொன்றிற்கும் உரிய எழுத்துகள், முதற்சீரில் வரத்தக்க எழுத்துகள், வரக்கூடாத எழுத்துகள் குறித்து வரையறை உண்டு *(இந்.காளி 2; பன்.பா. 13)*

நான்கு கதிகளுள் தேவர், மக்கள் கதிக்குரியனவாக வரையறுக்கப்பட்டுள்ள எழுத்துகள் மொழி முதலில் வரும்; விலங்கு, நரகர் கதிக்குரியனவாக வரையறுக்கப்பட்டுள்ள எழுத்துகள் மொழிக்கு முதலில் வாரா *(இந்.காளி. 2; பன்.பா. 18; நவநீ.பா. 21; தொ.விள. 293; பிர.திர. 152; மு.வீ. 1036; பொரு.விள. 71, 72)*

மொழி முதலில் வரக்கூடாதவை எனக் குறிக்கப்பட்ட வழு எழுத்துகளும், விலங்கு, நரகர் கதிக்குரிய எழுத்துகளும் செய்யுளின் முதற் சீரிலுள்ள மங்கலச் சொல்லின் முதலெழுத்தாக வரின் குற்றமன்று *(பொரு.விள. 73)*

ஏற்புடையனவாகக் கருதப்படாத நரகர், விலங்கு கதிக்குரிய உயிரெழுத்துகளும் மெய்யெழுத்துகளும் முறையே ஏற்புடையனவாகக் கருதப்படும் முதலிரு நிலைகளின் மெய்யெழுத்துகள், உயிரெழுத்துகளோடு கலந்து (ஏறி) வரின் அவையும் ஏற்புடையன *(பிர.திர. 153)*

*தேவகதி* - உயிர்க்குறில், வல்லின மெய் இரண்டிலும் ஈற்றெழுத்தொழியக் கொள்ளும் எழுத்துகள். (அ இ உ எ, க ச ட த ப) *(பன்.பா. 14; வெண்.பா. 18; நவநீ.பா. 20, சித.பா. 24; இல.விள. 798; தொ.விள. 293; பிர.திர. 152; சுவாமி 176; மு.வீ. 1036)*

*மக்கள் கதி* - உயிர்நெடிலில் முதல் நான்கு, ஈற்றெழுத்தொழிந்த மெல்லினம் (ஆ ஈ ஊ ஏ, ங ஞ ண ந ம) *(பன்.பா. 15; வெண்.பா. 18; நவநீ.பா. 20; சித.பா. 24; இல.விள. 798; தொ.விள. 293; பிர.திர. 152; சுவாமி 176; மு.வீ. 1036)*

இவற்றுள் ங ஞ ட என்பன மொழிக்கு முதலில் வராது *(இல.விள 798, உரை)*

*விலங்கு கதி* - ஒ ஓ ய ர ல ற ழ *(பன்.பா. 16; வெண்.பா. 19; நவநீ.பா. 21; சித.பா. 24; இல.விள. 799; தொ.விள. 293; பிர.திர. 152; சுவாமி 176;* (ஒ ஓ ழ இல்லை, ள உண்டு) *மு.வீ. 1036; பொரு.விள. 63)*

இவற்றுள் ழகர, றகர, ளகர னகர உயிர்மெய்கள் எவ்விடத்தும் மொழிக்கு முதலில் வராது. யகர, ரகர உயிர்மெய்கள் உயிர்க்குற்றெழுத்து ஒன்றனைச் சார்ந்தே மொழி முதலாகும் *(இல.விள. 799, உரை)*

*நரகர் கதி* - ஐ ஔ ஃ, வ ள ன *(பன்.பா. 17; நவநீ.பா. 21; சித.பா. 24)*

இவற்றுள் ஆய்தம் தவிர்த்த ஏனையவற்றை நரகர் கதிக்குரியன என்று மற்ற பாட்டியல்கள் கூறுகின்றன *(வெண்.பா. 19; இல.விள. 799; தொ.விள. 293; பிர.திர. 152)*

தெய்வம், மக்கள், மிருக கதியில் சொல்லப்படாத எழுத்துகள் நரகர் கதிக்குரியன என்று சுவாமி. 176 கூறுகிறது. எவையெவை என்ற குறிப்பில்லை.

▶ அட்டவணை 5.

### கதைமொழி மாற்று

தகுதியும், ஒப்பும் உடைய பெண்ணின் சொல்லைத் தானும் பொருந்தி அப்பெண்ணை அவன் பெறுதலைக் கூறும் இலக்கியம் *(பிர.திர. 69)*

### கந்தப் பாம்பு

குதிரைக்கு ஆகாத இருபது சுழிகளுள் ஒன்று *(பிர.திர. 388)*

### கந்தம்

ஐந்து புலன்களுள் ஒன்றான நாற்றம் *(பிர.திர. 378)*

### கபிலம்

உபபுராணம் பதினெட்டுள் ஒன்று *(பிர.தீபிகை 70)*

### கபிலர்

சங்கப் புலவர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை. 85)*

### கம்பவதர்

குலப் பெயர்களுள் ஒன்று *(பிர.திர. 363)*

### கமகன்

1. நால்வகைப் புலவர்களுள் ஒருவன் *(வெண்.பா. 23; நவநீ.பா. 87; இல.விள. 929; மு.வீ. 1021; பிர.தீபிகை 98)*
2. தன் நினைவாற்றலாலோ, கல்விப் பெருமையாலோ எப்பொருளையும் எடுத்து விளக்க வல்லவன். *(வெண்.பா. 67; நவநீ.பா. 87, உரை; இல.விள. 931; மு.வீ. 1013)*
3. தான் கருதும் அரும்பொருளைச் செம்பொருள் நடையில் விளக்குபவன் *(பிர.மர.30; இல.விள. 931; பிர.தீபிகை 98)*

**கயல்**

மங்கலச் சொற்களுள் ஒன்று *(வெண்.பா. 2, உரை; சித.பா. 18, உரை)*

**கயிசிகம்**

முப்பத்திரண்டு இராகங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 51)*

**கரந்துறைப்பாட்டு**

சித்திரகவி வகைகளுள் ஒன்று *(வெண்.பா. 26; நவநீ.பா. 67; இல.விள. 766 (690); மு.வீ. 1019)*; ஒரு செய்யுளுக்குள்ளேயே மற்றொரு செய்யுள் மறைந்திருப்பது. அதாவது இரண்டாவதாக எழுதப்படும் செய்யுள், முதலாவதாக எழுதப்பட்ட செய்யுளின் எழுத்துகளைத் தேர்ந்தெடுத்து அமைக்கப்பட்டிருக்கும்.

**கரந்தை**

1. தவிர்தல் *(பிர.மர. 17)*
2. ஆனிரை மீட்டல் பற்றிய புறத்திணை *(சித.பா. 39)*

**கரந்தை மாலை**

1. நிரை மீட்டலை எப்பாவினாலேனும் முப்பது செய்யுள்களால் பாடும் இலக்கியம் *(பிர.மர. 17)*
2. நிரை மீட்போர் கரந்தைப்பூ மாலை சூடிப் போரிடுவதைப் பாடும் இலக்கியம். (பாவகை, எண்ணிக்கை பற்றிய குறிப்பு இல்லை) *(சித.பா. 39; மு.வீ. 1070)*

**கருசம்**

ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று *(பிர.திர. 500-502; பிர.தீபிகை. 99)*

**கருடன்**

நாராயணியின் வாகனம் *(பன்.பா. 109, உரை)*

**கரும்பின் இளமுலை**

பெண்பால் பிள்ளைப்பாட்டுக்குரிய உவமைகளுள் ஒன்று *(பன்.பா. 115)*

**கருமேந்திரியம்**

வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபத்தம் என்னும் ஐந்து தொழிற்கருவிகள் *(பிர.திர. 378)*

**கருமை**

1. வஞ்சிப்பாவிற்கு உரிய நிறம் *(வெண்.பா. 69; பிர.மர. 25; மு.வீ. 1015; பிர.திர. 417)*
2. கலிப்பாவிற்கு உரிய நிறம் *(இல.விள. 879)*

**கரையாயர்**

குலப் பெயர்களுள் ஒன்று *(பிர.திர. 363)*

**கல்**

சிற்பத்தொழிற்கு உரிய பத்துப் பொருள்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 60)*

**கல்லாக் கிள்ளை**

பெண்பால் பிள்ளைப்பாட்டுக்குரிய உவமைகளுள் ஒன்று *(பன்.பா. 115)*

**கல்லாடர்**

சங்கப் புலவர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை. 85)*

**கலப்பை**

வராகியின் ஆயுதம் *(பன்.பா. 109. உரை)*

**கலம்பகம்**

1. பல பாட்டுகள் சேர்ந்து ஒரு நூலாகும் இலக்கியம் *(பன்.பா. 90)*
2. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(பன்.பா. 99; சுவாமி. 165)*
3. தொடர்நிலைச் செய்யுள் வகைகளுள் ஒன்று *(இல.விள. 805)*
4. இவ்விலக்கியத்தின் மதிப்பு 300 பொன் *(பிர.திர. 86)*
5. ஒருபோகு, வெண்பா, கலித்துறை என்னுமிவை முதல் உறுப்பாக அமைய, புயம், அம்மானை, ஊசல், யமகம் (மடக்கு), களி, மறம், சித்து, காலம், மதங்கி, வண்டு, மேகம், கைக்கிளை, சம்பிரதம், தவம் என்னும் உறுப்புகள் வெண்டுறை, வஞ்சித்துறை, இன்னிசை வெண்பா, அகவற்பா, விருத்தங்கள் பலவற்றுடன் கலந்துவர, வருதற்குரிய மற்ற பாக்களுடன் கூடியதாகி அந்தாதியாக வரும் *(பன்.பா. 129; வெண்.பா. 32; நவநீ.பா. 33; சித.பா. 29; இல.விள. 812; தொ.விள. 258; பிர.திர 32,33; சுவாமி. 170; பிர.தீபம். 95; மு.வீ. 1041; பிர.தீபிகை. 7)*
6. முதல் உறுப்பையடுத்து வருவனவாக வெண்பாப் பாட்டியல் குறிப்பிடுபவை - ஆசிரிய விருத்தம், ஆசிரியப்பா, வஞ்சித்துறை, வஞ்சிவிருத்தம், வெண்டுறை வெண்பா, மருட்பா, கலித்தாழிசை, கலித்துறை, கலிவிருத்தம் *(வெண்.பா. 33)*

7. உறுப்புகளுள் குறம் என்பதையும் பாக்களுள் மருட்பாவையும் சேர்த்துக் கூறுகின்றது. *(நவநீ.பா. 34)*
8. பன்னிரு பாட்டியல் கூறும் முதல் உறுப்புகளுடன் வெண்பாப் பாட்டியல் கூறும் உறுப்புகளையும் சேர்த்துச் சொல்கிறது *(பிர.மர. 5)*
9. பதினெட்டு உறுப்புகள் மட்டுமல்லாது பிச்சியார், கொற்றியார், இடைச்சியார், வலைச்சியார், கீரையார் என்று வேறு சில உறுப்புகளும் உள்ளன *(பன்.பா. 129, உரை; வெண்.பா. 32; இல.விள. 812)*

**கலம்பக மாலை**

1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(பன்.பா. 99)*
2. கலம்பக உறுப்புகளுள் ஒருபோகு, அம்மானை இரண்டையும் நீக்கி ஏனைய உறுப்புகள் இடம்பெறும் வகையில் அந்தாதியாய் இயற்றப்படும் செய்யுள் *(பன்.பா. 155; நவநீ.பா. 39; பிர.மர. 7; சித.பா. 30; இல.விள. 814; தொ.விள. 280; சுவாமி. 170; பிர.தீபிகை. 12)*
3. கலம்பக உறுப்புகளுள் ஒருபோகு, அம்மானை, ஊசல் ஆகிய மூன்றையும் நீக்கி இயற்றப்படும் செய்யுள் *(வெண்.பா. 40; மு.வீ. 1055)*
4. ஊசல், ஒருபோகு, அம்மானை என்ற மூவுறுப்புகளை நீக்கி இயற்றப்படும் இலக்கியம் *(பிர.திர. 15)*
5. கலம்பகத்தை அந்தாதியில் பாடுதல் நன்று: மேலும் பாடப்படுதற்குப் பொதுவாக எல்லாரும் உரியவர்கள் எனினும் மன்னர், மனிதரில் உயர்ந்தோர் ஆகியோரே சிறப்பாக உரியவர்கள் *(பிர.திர. 107)*

**கலவைச் சாந்து**

வஞ்சிப்பாவிற்குரிய நறுமணப் பொருள் *(பன்.பா. 94)*

**கலாநிதி**

விண் மாதர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை. 46)*

**கலாவதி**

விண்மாதர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை 46)*

**கலி அந்தாதி**

1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(பன்.பா. 99)*
2. வல்லினம், மெல்லினம், இடையினம் என்னும் ஓரின எழுத்துகளில் ஓரினத்தெழுத்து உள்ள இடத்தில் மற்றோரின எழுத்து அமையாது குறில் வரும் இடத்தில் குறிலும், நெடில் வரும் இடத்தில் நெடிலும் அமைந்து ஓரடிக்கு நான்கு கலையாக நான்கடியும் ஒரொலியை உடையதாகி முப்பத்திரண்டு கலைகளோடு பொருந்தி முதலடியின் ஓரிடத்தில் குறில்வரின் மற்றைய நான்கடியின் கண்ணும் அவ்வெழுத்தே அமைந்து இதேபோல் நெடிலும் பொருந்தி, முப்பது செய்யுள்களை உடையதாய்க் கட்டளையால் சிறந்திருக்கப் பாடப்பெறும் இலக்கியம் *(பன்.பா. 157)*
3. கலி அந்தாதியில் சில வெண்கலிப்பாக்களும் சிறுபான்மை வரும் *(பன்.பா. 158)*
4. ஒவ்வொர் அடியிலும் நான்கு கலை ஒரொலியாகவும், மற்றொரு நான்கு கலை வேறோரொலியாகவும் அமைய முப்பத்திரண்டு கலைகளைக் கொண்டியற்றப்படும் செய்யுள் வகை *(பன்.பா. 160)*

**கலிங்கம்**

ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று *(பிர.திர. 500-502; பிர.தீபிகை. 99)*

**கலித்தளை**

தளை வகை ஏழனுள் ஒன்று *(சித.பா. 4)*

**கலித்தாழிசை**

பலவடி உடைத்தாய் எல்லா அடியும் தம்முள் அளவொத்து ஈற்றடி நீண்டு அமையும் செய்யுள் *(சித.பா. 11)*

(எ-டு) வாள்வரி வேங்கை வழங்கும் சிறுநெறியெம்
கேள்வரும் போழ்தின் எழாஅல்வாழி வெண்டிங்காள்
கேள்வரும் போழ்தின் எழாலாய்க் குறாலியாரோ
நீள்வரும் நாகத் தெயிறே வாழி வேண்டிங்காள்.

**கலித்துறை**

1. கலம்பக முதல் உறுப்புகளுள் ஒன்று *(பன்.பா. 129; வெண்.பா. 33; நவநீ.பா. 33; பிர.மர. 5; சித.பா. 29; இல.விள. 812; தொ.விள. 258; பிர.திர. 33; மு.வீ. 1041; பிர.தீபிகை. 7; பிர.தீபம். 95)*

2. நான்கடி கொண்டு ஐந்து சீர் உடையதாய் அமையும் செய்யுள் *(சித.பா. 11)*

(எ-டு) யானும் தோழியும் ஆயமும் ஆடும் துறைநண்ணித்
தானும் தேரும் பாகனும் வந்தென் நலனுண்டான்
தேனும் பாலும் போல்வன சொல்லிப் பிரிவானேல்
கானும் புள்ளும் கைதையும் எல்லாம் கரியன்றே?
*(மேற்: யா.கல விருத்தியுரை நூ. 87; யா.காரிகை 33, உரை; சித.பா.ப. 61)*

**கலித்துறை அந்தாதி**

1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(சுவாமி. 165)*
2. கட்டளைக் கலித்துறை நூறு அந்தாதியாய் வரும் இலக்கியம் *(வெண்.பா. 31; நவநீ.பா. 38; பிர.மர.7; சுவாமி. 170)*

**கலிப்பா**

1. வணிக சாதிக்குரிய பா *(பன்.பா. 93; வெண்.பா. 69; நவநீ.பா. 82; பிர.மர. 24; இல.விள. 877: தொ.விள. 297: மு.வீ. 1014; பிர.திர. 417)*
2. மங்கலம் பொருந்திய பாக்களுள் ஒன்று *(பன்.பா. 98)*
3. பிள்ளைப்பாட்டு பாடுதற்குரிய பா வகைகளுள் ஒன்று *(பன்.பா. 110)*
4. துள்ளலோசை கொண்டு அளவடியால் முடியும் செய்யுள் *(சித.பா. 10)*
5. நான்கடியே இதன் அடிச்சிறுமை *(சித.பா. 5)*

(எ-டு) செல்வப்போர்க் கதக்கண்ணன் செயிர்த்தெறிந்த சினவாழி
முல்லைத்தார் மறமன்னர் முடித்தலையை முருக்கிப் போய்
எல்லைநீர் வியன்கொண்மூ இடைநுழையும் மதியம்போல்
மல்லலோங் கெழில்யானை மருமம்பாய்ந் தொளித்ததே
*(மேற்: யா.காரிகை 21, உரை)*

*கலிப்பாவிற்கு உரிய இராசிகள்*

துலாம், குடம் (கும்பம்), மிதுனம் *(பன்.பா. 93; வெண்.பா. 70; பிர.மர. 26; இல.விள. 882; தொ.விள. 297; மு.வீ. 1014)*

*கலிப்பாவிற்கு உரிய கடவுளர்*

சனி, புதன் *(பன்.பா. 93; வெண்.பா. 71)*
கோள் *(பிர.மர. 27)*; மந்தன் (சனி), புந்திகன் (புதன்), *(இல.விள. 883; தொ.விள. 297; மு.வீ. 1014; பிர.திர. 417)*

*கலிப்பாவிற்கு உரிய நாள்கள்*

1. அநுடம், கேட்டை, மூலம், பூராடம், உத்திராடம், திருவோணம் *(பன்.பா. 93; தொ.விள. 297; மு.வீ. 1014; பிர.திர. 417)*
2. அவிட்டம் என்பதையும் சேர்த்துக் கூறுகின்றன சில பாட்டியல்கள் *(வெண்.பா. 70; பிர.மர. 25; இல.விள. 881)*

*கலிப்பாவிற்குரிய நிலம்*

1. நெய்தல் *(பன்.பா. 93; இல.விள. 878)*
2. பன்னிரு பாட்டில், இலக்கண விளக்கம் தவிர்த்த ஏனைய பாட்டியல்கள் மருதம் என்று குறிப்பிடுகின்றன. *(வெண்.பா. 69; பிர.மர. 25; தொ.விள. 297; மு.வீ. 1014; பிர.திர. 417)*

*கலிப்பாவிற்கு உரிய நிறம்*

பொன் *(பன்.பா. 93; வெண்.பா. 69; பிர.மர. 25; இல.விள. 879; தொ.விள. 297; மு.வீ. 1014; பிர.திர. 417)*

*கலிப்பாவிற்கு உரிய பூ*

1. நல்ல நீலம் *(பன்.பா. 93)*
2. கரு நிறப் பூ என்கின்றன மற்ற பாட்டியல்கள் *(வெண்.பா. 71; இல.விள. 884; பிர.திர. 417)*

*கலிப்பாவிற்கு உரிய நறுமணப் பொருள்*

1. சந்தனம் *(பன்.பா. 93)*; கருஞ்சாந்து *(வெண்.பா. 71; இல.விள. 884)*
2. கருமை நிற நறுமணப் பொருள்கள் *(பிர.திர. 417)*

**கலியாண சுந்தரம்**

உறவுப் பெண்ணைக் குறிவென்று மணம் முடித்தலைக் கூறும் இலக்கியம் *(பிர.திர. 49)*

**கலியாணி**

1. வகுப்புறு இராகங்கள் முப்பத்திரண்டுள் ஒன்று (பிர.தீபிகை. 53)
2. வேனிற்கால மாலை நேர இராகங்களுள் ஒன்று (பிர.தீபிகை. 55)

**கலிவிருத்தம்**

1. பிள்ளைப்பாட்டு பாடுதற்குரிய பா வகைகளுள் ஒன்று (பன்.பா. 110)
2. நாற்சீர் நாலடியாய் அமையும் செய்யுள் (சித.பா. 11)

(எ-டு) வேய்தலை நீடிய வெள்ளி விலங்கலின்
ஆய்தலி னொண்சுட ராழியி னான்றமர்
வாய்தலி னின்றனர் வந்தென மன்னன் முன்
நீதலை சென்றுரை நீள்கடை காப்போய்
*(மேற்: சூளாமணி 65; யா.காரிகை 33, உரை; சித.பா.ப. 61)*

**கலிவெண்பா**

அடிவரையறை இல்லாததாய், இரண்டாம் அடியில் தனிச்சொல்லாய் ஒரூஉ எதுகையைப் பெற்றோ, பெறாமலோ வெள்ளடிக்குச் சொன்ன இலக்கணங்களில் குறையாமல் வரும் செய்யுள் *(சித.பா. 8)*

(எ-டு) வெட்சி நிரைகவர்தல் மீட்டல் கரந்தையாம்
உட்காற்மேற் செல்வது வஞ்சியா - முட்கா(து)
எதிரூன்றல் காஞ்சி எயில்காத்தல் நொச்சி
அதுவளைத்தல் ஆகும் உழிஞை - அதிரப்
பொருவது தும்பையாம் போர்க்களத்து மிக்கார்
செருவென் றதுவாகை யாம் (தனிச்சொல் பெற்று வந்த கலிவெண்பா)
*(பழைய செய்யுள், வீரசோழியப் பெருந்தேவனாருரை கா. 106; சித.பா.ப. 35)*

**கலை**

1. ஆண்பால் மரபுப் பெயர்களுள் ஒன்று *(இல.விள. 916)*; புல்வாய், முசு இவற்றின் ஆண்பாலைக் குறிக்கும். *(இல.விள. 916 உரை)*
2. வித்தியா தத்துவம் ஏழனுள் ஒன்று *(பிர.திர. 378)*

**கலைக்கோட்டுத்தண்டு**

பெருங்காப்பியங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 45)*

**கலைமகள்**

1. அடக்கம் நிறைந்தவள் *(பிர.திர. 412)*
2. தாமரையில் குடியிருப்பாள்; இதயத்தில் உருவாகி, எழுத்தை அவயமாகக் கொண்டு சொல்லினை அழகாகவும், நான்கு பாக்களை அந்தக்கரணமாகவும் கொண்டிருப்பாள்.

| | | |
|---|---|---|
| வெண்பா | - | உரு |
| அகவல் | - | கை, கால் |
| கலிப்பா | - | நகில் |
| வஞ்சி | - | குழல் |

இவ்வகையில் பாடும் நல்லறிவுடையோர் சதகோடி உள்ளனர்; இசைஞானிகள் முக்கோடி; முந்துகின்ற இவை அன்றியும் விகடம் முதல் பிற முப்பத்திரண்டு கோடியாக வாணி விளங்குவாள் *(பிர.திர. 427)*

**கலைமகளின் பிறப்பிடம்**

வெள்ளை மலர் *(பிர.திர. 282)*

**கவரி**

மங்கலச் சொற்களுள் ஒன்று *(வெண்.பா. 2, உரை; சித.பா. 18, உரை)*

**கவறை**

குலப் பெயர்களுள் ஒன்று *(பிர.திர. 362)*

**கவி**

1. மங்கலச் சொற்களுள் ஒன்று *(வெண்.பா. 2, உரை)*
2. நால்வகைப் புலவர்களுள் ஒருவர் *(வெண்.பா. 23; நவநீ.பா. 87; இல.விள. 929; மு.வீ. 1021; பிர.தீபிகை. 98)*
3. ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்னும் நான்கு கவியும் பாடுபவர் *(பிர.தீபிகை 98)*

**கவிகேட்கும் மரபு**

பாட்டுடைத் தலைவன் தன்னைப் பலவாறாகப் புனைந்து கொண்டு சுற்றத்தாருடன் இருந்து பாட்டிற்கு உரிய பரிசை உணர்ந்து கற்பகம் போல் பொன்னும் மணியும் ஆடையும் மகிழ்ச்சியோடு அளித்துக் கவியை வாங்கி வந்தனை செய்தல் மரபு *(நவநீ.பா. 103)*

கவிஞர்

1. சாதிக்குரிய மாலை அணிதல், எடுத்த விருதெல்லாம் தாங்கல், கலைமகள் சேர்ந்திருத்தல், சிவிகை வாகனம் கொண்டிருத்தல், தாக்கும் பன்றி, வேழக் கொடி கொண்டிருத்தல். அரசன் பெறுகின்ற அணிகள் எல்லாம் பெற்றிருத்தல் ஆகியவற்றோடு கேள்வி ஞானம் உடைய கவி, கமகன், வாதி, வாக்கி ஆகவும் ஆசு, மதுரம், சித்திரம் வித்தாரம் என்ற நான்கும் ஓதுபவராகவும் இயல், இசை, நாடகம் என்பன பயின்று நாட்டில் ஓங்குகின்ற இலக்கியமும், ஐந்து இலக்கணங்களும் அறிந்திருப்பவராகவும் உள்ளவர் *(பிர.திர. 391)*

1.1 *கவிஞன் சில மரபுகள்*

அஞ்சான்; பிழை செய்தால் இனத்தினர், தெய்வம், பெற்றோர், அரசன் எனப் பாராமல் வசை கூறுவான்; கடவுளை அன்றிப் பிறரை வணங்கான்; மனம் துன்புற்றால் தெய்வத்தையும் வணங்கான்; ஆற்றலுடைய நக்கீரனைப் போன்றவன்; உயர்வுடைய தமிழுக்கு இரங்குபவன் *(பிர.திர. 408)*

1.2 குல வித்தையாயினும் கவிஞன் கற்கவில்லை எனில் சிறப்பில்லை. பாடுகின்ற குலம் எனினும் கலைமகளை நிந்தித்தால் அவன் வாக்கு வன்மை நீங்கும். கவிஞனுக்குக் கொடை அளித்தலில் தாமதம் நேரின் அரசனுக்குத் தீவினை உண்டாகும். அட்டமியிலும் பதினான்காம் நிலையிலும் கவிதை வாசிப்பது கவிஞனுக்குத் தீமைதரும். அமாவாசை, பாட்டிமைகளில் சிறந்த வித்தை கெடும் *(பிர.திர. 435)*

2. *கவிஞரின் உயர்வு*

கலைமகளுடன் தோன்றிப் பொலிந்த ஒன்றே புலவன் நாவில் பிறந்து கவிதை ஆயிற்று என்பர்; பாவின் வகைமை கூறினால் கூறியது கூறல் குற்றம்; விளங்கத் தோன்றினால் வேறுபொருள் தருவதில்லை; முப்பது வயதின் அளவில் கல்வி, செல்வம், குழந்தைகள், வேண்டிய அளவு பெயரும் புகழும் பெறின் நன்மை. கல்வியின் மிகுதி பற்றி அமரர் உலகத்தாருக்கு ஒத்தவர் என்பதால் அமரரைக் குறிக்கும் பெயர் இவருக்கும் உண்டு அரசரின் தகைமை பெற்றவர் என்ற நிலையில் கவிராசர் எனவும் பெயர் இவருக்கு உண்டு *(பிர.திர. 442)*

3. *கவியின் ஆற்றல்*

பா பாடத் தெரிந்தவன் பரமனையே பாட வேண்டும். அவ்வாறு பாடினால் ஏழு பிறப்பும் வாணி அவனை விடமாட்டாள். அவ்வாணியும் அழலாடிய சிவபிரானைப் பூசை செய்வதனாலேயே இந்நிலை அடைந்தாள். மிகுதியான கவிதைகளை உலகில் பெறுபவர்கள் அன்னையான வாணியை ஆயிரம் தானத்துக்கு அதிகமாகக் கோப்பர். கோடி மலரால் பூசை செய்வார் பெறும் பயனை ஒரு கவிதை தந்துவிடும் *(பிர.திர. 434)*

3.1 தெய்வங்கள் மேல் கவிதை இயற்றிக் கட்ட முனைந்தால் அதன் தீவினை கவிஞனையே சாரும்; சீரிய சாதி வழுவி நீசன் தன்னோடு உலக நெறி அல்லாது பொன் நிறைய வாங்குதல், கொடை மறுத்தவன்மீது கவி பாடுதல், பெரும்கொடை காரணமாக நீசன்மீது செம்மையான கவி பாடுதல், நல்ல கவிதைக்கு ஒரு கோடிக்குமேல் பொன் பெறுதல் போன்றவற்றால் திருமகளும் கலைமகளும் அவனைவிட்டு நீங்குவர். வாக்கு அறும் *(பிர.திர. 430)*

4. *கவிஞனின் தொழில் வன்மை*

அணியறையில் ஆடியபின்னே அம்பலத்தில் ஆடப்புகுவான்; அரிய கல்வி பெறுவதற்கு உள்ள வருத்தம் அது முடிந்தவர்க்கே தெரியும். அவன் துணிந்து பாடினால் வண்ணம் அரியது; செய்யுள் அம்மானையால் சொல் பெருகும். கவிக்கு இதுவும் அளவற்றது என்பதால் ஓதவில்லை. கணித்தற்கு அரிய யமகண்டம் கவிஞனாகக் காளமேகம் பாடினான். இறந்து பின் எழுந்து, எண்ணற்ற கவிதைகள் மணிபோன்ற மறையவன் புகன்றான். நல்ல கவிஞனின் வீட்டை அடுத்த வளநகரில் பத்து யோசனை தூரம் உள்ள பிறரும் வாக்கு வன்மை பெறுவர் *(பிர.திர. 441)*

5. *கவிஞன் இயல்பு*

அறிவுடையவர் ஒரு நாளேனும் பாடம் ஓதாது இருக்க மாட்டார். பயிற்சியுடைய வில்லும் சொல்லும் பலகாலம் நிற்கும் எனப்பெரியோர் கூறுவர். எண்ணும் எழுத்தும் கண் எனப் போற்றினால் நாட்டில் பெருமை உண்டாகும். இழி குலத்தினருக்கும் அவ்வாறு பெருமை வரும். அனைவரையும் நாடுகின்ற வள்ளுவர், யாழ்ப்பாணர், நாவலர் ஆகியோரைச் சினப்பவர் உலகத்தில் யாருமிலர். குதித்து வானத்தை அடித்தவனும் இல்லை; பெற்ற தாயைச் சேர்ந்தவனும் இல்லை *(பிர.திர. 439)*

5.1 இலக்கணம் தெரியாதவன் கால் இருந்தும் கண் இல்லாதவன், இலக்கியம் தெரியாதவன் கண் இருந்தும் கால் இல்லாதவனைப் போன்றவன். இவ்விரண்டை முற்றிலும் தெரிந்தவனாக இருப்பினும் இசையும், வாக்கும் இல்லாதவன் ஊமையைப் போன்றவன். இவையனைத்தும் இருந்தாலும் சபையில் ஏற்புடன் பொருந்த இயலாதவன் மிக்க மூடனாம். பெரியோர்களுடன் இணைந்து இருந்து பழகினால் சபை அச்சம்போகும். சால்புடைய மலர்மகளுக்குப் 'பொய்' - தோழி ஆனமையால் கூறுகின்ற கவிதையைப் பொய்நீங்கக் கூறினாலன்றி நலம் இல்லை *(பிர.திர. 440)*

5.2 நல்ல அவைக்கு உரிய இலக்கணங்கள் தெரியாத வாக்கி அரசன் அறியும் சபைக்கு ஆகான் என மறுக்கலாகாது. அவன் சொல்லுகின்ற கவி குறையுடையதல்ல. அவனிடத்தில் கலைமகள் தோன்றினால் விடமாட்டான்; வசையும் பாடுவான். புலவர்களுக்கு நல்ல உபசாரமே பொருட்டாகும் *(பிர.திர. 432)*

6. *கவிஞர்கள் பொருளைக் கருதும் முறை*
வறுமைக் காலத்தில் உப்புக்கும் கூழுக்கும் ஆற்றுதல்; கோடிப்பொன் பெறுவதாக இருப்பினும் செய்யுள் கூறாதிருத்தல்; காலம் அறிந்து உதவும் அரைக்காசையும் ஆயிரம் பொன்னாகக் கருதுதல்; செல்வம் உள்ள காலத்தில் கோடிப் பொன்னும் ஒரு காசாகக் கருதுதல் *(பிர.திர. 411)*

7. *கவிஞர்களின் சினம்*
சிறந்த உபசாரம் இல்லாவிடின் புலவர்கள் சினம் கொள்வர். அவர்களின் சினம் புயல் காற்று, பெருநெருப்பு, கூற்றுவன் போலக் கொடியதாக இருக்கும். கவிஞனின் சினத்தைக் கூறுவதென்றால் வண்டுகள் மொய்க்கும் செந்தாமரை மகளான கலைமகளே சினம் கொள்ளுகின்றாள் எனல் வேண்டும். அறிவில்லாதவர்கள் இதனை அறியமாட்டார்கள். பரவுகின்ற நீர், நெய், தேன், பால் வாயுவோடு புகைக்கும் பாவலர் மிகுதியாக விளங்கி நல்லிடம் செல்வர்.*(பிர.திர. 433)*

8. *கவிதையைக் கவர்தலின் விளைவு*
பிறர் பொருளைத் திருடும் பாதகன் அடையும் நரகத்தைப் பிறர் கவிதையின் பொருளைத் திருடியவன் அடைவான். அவ்வாறு திருடியவனுக்கும், அக் கவிதையைக் கேட்போனுக்கும் பிறன்மனை நயந்தவனைப் பற்றியவர் சாரும் நரகம் வரும். சபையின்கண் அதனைக் கூறக் கேட்டவர்கள் பிறன்மனை நயந்தவர் அடையும் செய்கை பொருந்துவர். அரசனுக்குச் செல்வம் அன்றே நீங்கும். ஒருவன் மீது பாடி அரங்கேற்றாத தமிழை இன்னொருவன் மேல் வைத்துக் கூறுதல் புலவர்க்கு அறம் *(பிர.திர. 443)*

9. *புலவரும் அரசரும் தொடர்புறு விதம்*
கேடும் முடிவும் அற்ற காவலரானமையால் சிறியோரைப் பெரியோரும், முதன்மையானவரைச் சிறியோரும் ஆகிடச் செய்வர். தொன்மையுடைய ஊழும் அரசன் முன் நில்லாது. வருவதைக் கணிக்கும் சோதிடமும் அவர் முன்பு ஆற்றல் இழக்கும். பூவுலகத்திற்கு அவர் தந்தை. குறிப்பறிந்து புகழ்வோரைப் புகழ்வர்; கொடுப்பது கொடுப்பர். மேவுகின்ற புகழே அவருக்குப் பொருளாம். எனவே யானையின் கவுளில் ஒதுக்கப்பட்ட கல் போன்று செல்வதை எண்ணார் *(பிர.திர. 524)*

## கவிஞர் பாடும் இன்பம்

இருவகை: 1. சிற்றின்பம், 2. பேரின்பம்

சிற்றின்பம் - ஒருவனைப் பார்த்து ஏக்கம் அடையாதே, அம்பொத்த கண்களுடைய பெண் கொண்டாட இரப்பாய் என்பவற்றை உரைத்தல்.

பேரின்பம் - உலகோர் துன்பத்தைப் பார்த்து, தன் செயலும் துயரும் இனி நீக்கு, நீயே துணை போன்றவற்றை தெய்வத்திடம் கூறுதல். *(பிர.திர. 414)*

## கவிதை

விரைவு கவி, மந்த கவி என்னும் இரு வகைப்பாடுகளை உடையது. விரைவு கவியானது மிகுந்த நலமுடையவனைச் சேரும்; மந்தகவி பிறரைச் சேரும் *(பிர.திர. 422)*

*மங்கலப்பாட்டு*
குற்றம் உறும் கவிதை பாடினால் முப்பது நாள்களுக்குள் மங்கலப் பாட்டு பாடி அக் குற்றத்தைப் போக்கலாம். இறைவனின் பெயரை வைத்து மங்கலப் பாட்டு பாடினால் செல்வம் மிகும். பெண்களால் விரும்பப்படுவர். மூதுமை, மறுபிறவி நீங்கும் *(பிர.திர. 421)*

*கவிபாடும் முறை*
எந்தச் சாதியானாலும் உயர்த்தி விடுதல் நலம். உயர்ந்த திணையை அஃறிணையாகவும் அஃறிணையை உயர்திணையாகவும் இணைத்துப் பாடுதல், அரியபொருள், செம்பொருளை வைத்துப் பாடுதல் நலம். காப்பில் பொருந்தும் வண்ணம் அமைதலும் நலம்.

*பண்புகள்*
ஞானியின் கவி விரகம் நீக்கும்; காமியின் கவி விரகம் கொள்ளும்; நடுநிலைமையுடையவர் கவிதையில் இரண்டும் பொருந்தும்; படிக்காதவன் கவி குறைபாடுடையது. குலநலன் உள்ள பெருந் தந்தையின் கவிக்கு வாழ்வு ஓங்கிடும்; எழுபது வயதுக்கு மேலுள்ளவர் கவிதைக்கு மேனியுறும் கவனம் நீங்கும். கூறிய பெருங்குலக் கவிஞனின் மிகைவரல் கவிக்கு ஆகும் வலிமையும் உண்டாக்கும். கூனன் முதலிய குறையால் அவத்தை உண்டாகும். நோயால் நோய் வரும். நான்கு குலம் தவறும் கவிக்குப் பிறன்மனை விருப்பம் ஏற்படும் *(பிர.திர. 420)* குலத்திற்கேற்ற நலம் சேர்ந்த கவிதைகளுக்கு அழிவு இல்லை *(பிர.திர. 435)*

உலோபியின் மீது பாடினால் கவிதை தடைபடும். நல்லவன் மீது பாடினால் சுழித்து எழும்பும்; பெண் மயக்கத்தில் ஆட்பட்டவருக்குப் பொருளில் நல்ல பொருள் பொருந்தும். ஞானிக்கு அந்த ஞானச் செயலே பொருந்தும். நடுநிலைமையுடையவர்க்கு அது அத்தன்மைத்து ஆகும். கொடியவர்க்குக் கொடியதாய் வலிமை பொருந்தும் *(பிர.திர. 419)*
கற்றவர்கள் மீது இயற்றிய கவிதை அரன்மீது பாடிய கவிதையாகும் *(பிர.திர. 524)*

*உகந்த நேரம்*

காலையில் கற்றால் பெருக்கம் இல்லை; மாலைக்கும் இரவுக்கும் பெருக்கம் உறும். அன்னம் உறுகின்ற உச்சி நேரத்தில் கலை நீங்கும்; தான் படித்த உருவுக்குத் தக்கதாய் கலைவாணியின் அருளால் நிறைந்த மனனம் தன்னில் நிற்கும்; கல்வியை மறுத்தால் நினைவு கெடும்; கெடுகின்ற ஏட்டுக் கல்வியாகச் சேரும்; கவிகள் அரங்கேற்றுவதற்கு இரவே நலமாம். ஓங்குகின்ற பகல் நலமில்லை; உச்சிக்காலம் அதனினும் நலம் குறைந்ததாம் *(பிர.திர. 436)*

*கவிதையின் ஆற்றல்*

மாயவன் பின் நடந்தது, தூது சென்றது (சுந்தரருக்காக) மணிவேலன் வனத்தில் ஒருவனை மறித்தது, மயில் பாம்பினை விட்டது, கொத்தி எடுத்தது, நீரிலும் நெருப்பிலும் ஏடு மீண்டது, மாய தலை அளித்தது (குமணன்) இறைவன் பின்னே நடந்தது, பெரிய நாட்டை அளித்தது, அரசன் கவிஞனின் பாதங்களைச் சுமந்தது, தொண்டை நாட்டினர் புகழும் எண்ணற்ற பொருள் அளித்தது என்ற இவையனைத்திற்கும் கவிதையின் ஆற்றல்தான் காரணம் *(பிர.திர 409)*

*கவிதையை மாற்றிக் கூறலில் குற்றமின்மை*

ஒருவருக்குப் பாடிய கவிதையை மற்றவருக்கு மாற்றிக் கூறுவதில் குற்றம் எதுவுமில்லை. அத்தகைய கவிதையைக் கொள்ளாதவர் இல்லை. இந்நிலை உலகத்தில் இருப்பதுதான் அதன் நலத்தை அறியாதவர் அறிய மாட்டார்கள். கல்வியுடைய மலர் வாணியாலும் காரணத்தாலும் காரியத்தாலும் வெற்றியுடைய மன்னன் தந்தையாகவும் புலவர் மருமகன் ஆகவும் அமைவர் என்பர் மிக்க அறிவுடைய புலவர் *(பிர.திர. 445)*

*பா மதிப்பு*

வெண்பாவிற்கு முப்பத்திரண்டு பொன், அகவலுக்குப் பதினாறு பொன், கலிக்கு எட்டு பொன், வஞ்சிக்கு நான்கு பொன் *(பிர.திர. 431)*

*பாவினுக்கு இழுக்கு*

துணிதற்கு அரிதான பொருளை உடையதாயிருத்தல், சோர்வு அளித்தல், சொல்லைப் பகுத்துச் சொல்லுதல், அழகு செய்யும் பொருள் மற்றும் ஒன்று உண்டு என உரைப்போர் தணியும் வழிச் செல்லலும் இழுக்கு *(பிர.திர 418)*

*பாடல் வசையால் உண்டாகும் தீமை*

செல்வம் குறையும்; தலைவனின் பெயரையடுத்து நஞ்செழுத்தை வைத்துக் கொடிய தெய்வங்களை உடன் வைத்து இகழ்ந்தும் வாழ்த்தியும் நீங்கள் கெடுங்கள் என்று அறம் பாடினால் மரணம் ஏற்படும். மனம் குன்றினால் வாழ்நாள் போகும். இது பொய்யன்று; பாம்பு, பேய், நோய், மந்திரம் போன்றவற்றால் இறத்தலைப் போல இதனைக் கருதார். மூடர்கள் இறக்கும் காலம் முற்றினால் இச்செயல் வரும் *(பிர.திர. 406)*
பகையுற்றவன் மீது செந்தமிழைப் பாடிக் கட்டினால், கூறப்படுகின்ற அவனுக்கு இடுக்கண் என்றும் பொருந்தும். தகைமையுடைய குரிசிலின் பெயருக்கு அயலில் இருபக்கமும் கொலைத் தொழில் சொல்லைத் தங்கவைத்தால் உடலில் ஊறு ஏற்படும். எருக்கு அல்லது கள்ளிச்செடி வகைகளிடம் வைத்தால் கலைமகள் தங்காமல் நீங்குவாள். எருக்கு அல்லது கள்ளி மலர்களைத் தொடுத்து ஏட்டுடன் எறிந்தால் வீட்டிலோ காட்டிலோ குடுமியுடைய உடல் கட்டுண்டு அழிவான். நோய் முதலாகிய எல்லாம் வந்துறும். *(பிர.திர. 407)*

*கவிதை - இறை உறவு*

அரசனின் செங்கோல் திருமால், அவன் செல்வம் இலக்குமி; அவனது மறைவுடைய செயல்கள் பரன்; அவன் தோள்கள் பரை; நிறைந்த உருவம் அயன்; புலவர்களிடத்துத் தங்குகின்ற கவிதையினைச் சேர்ந்த திறனுடைய கலைமகள் ஆவர். அவளைப் பெறாதவர் மூடர் *(பிர.திர. 446)*

*பாவின் பொருள் நலங்கொள்ளல்*

இழுக்காத கலை, கவிஞன் வைத்த முறையிலேயே வந்தும், அணியுடன், சான்றோரின் உத்திக்கு ஏற்றபடி வேறு பொருள் தோற்றுவித்துக் கொள்ளும் வகையில் இருத்தல் *(பிர.திர. 418)*

## கவிதை ஆக்கத்திற்குப் புலவர்கள் தெரிந்துகொள்ள வேண்டியன

ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் ஆகிய நால்வகைக் கவிகளாலான வெண்பா, அவற்றின் இனம், வினைச்சொல், ஒலிக் குறிப்புச்சொற்கள், பெயர், வினை, உயர்திணை, அஃறிணை, பன்மை, தன்மை, முன்னிலை, அளபெடை, முக்காலம், உயிரெழுத்துப் புணர்ச்சி, பகுபதம், வடசொல், திசைச் சொல், வல்லினம், இடையினம், மெல்லினம், குறில், நெடில், உயிர்மெய், குற்றியலுகரம் முதலான குறுக்கம், தலைவி, தலைவன் பற்றிய செய்திகள், மெய்ப்பாடுகளாகிய ஒன்பது சுவைகள், விருத்தி, பாகம், ரீதி, பொருளணிகள், எழுத்துப் பிறப்பு, வினைமுற்று, பெயர்முற்று ஆகியனவற்றை அறிந்திருத்தல் வேண்டும். *(பிர.தீபிகை. 2)*

**கவிதையின் இராகம்**

பாகம், ரீதி, எழுசுரம் என்பனவற்றுடன், தாளமும் பண்பு பொருந்திய இலயம் பற்றிய ஞானமும் தலைவன் - தலைவி, பொருந்துகின்ற பொருளணிகள், கூறும் வாசனை, சுவை, பெண்களிடமுள்ள மயக்கம், கூடல், விளையாடல் என்பனவும் தோன்ற, மூவகை இசையும் விளங்க, விரைவும், பொருந்தும் மென்மையுமாகக் கவிதை ஒரு இராகமாகச் சொல்லப்படவேண்டும் *(பிர.தீபிகை. 56)*

**கவிப்பெருஞ்சாகரன்**

சங்கப் புலவர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை. 86)*

**கவுடம்**

இருவகை நெறிகளுள் ஒன்று; வண்ணம், வகுப்பு, மிறைக்கவி, செறிவெழுத்து, சொற்செறிவு, வழிமோனை, வழியெதுகை, திரிவு, மடக்கு முதலியவற்றை உடையனவாகவும், செம்மையாகச் சொல்லாமல் சொல்லுவதற்கு அரிதாயும் அமையும் நெறி *(சுவாமி. 178)*

**கவுணியன்**

சங்கப் புலவர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை. 85)*

**கவுத்துகாவாதமுடன்**

அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 72)*

**கவுளி**

முப்பத்திரு இராகங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 51)*

**கவுளிபந்து (கௌளிபந்து)**

வகுப்புறு இராகங்கள் முப்பத்திரண்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 53)*

**கழங்கு**

பெண்பால் பிள்ளைப்பாட்டு நிலைகளுள் ஒன்று *(வெண்.பா. 29; நவநீ.பா. 32, உரை; பிர.மர. 2; சித.பா. 28; இல.விள. 807; தொ.விள. 257; பிர.திர. 3; சுவாமி. 167; மு.வீ. 1039; பிர.தீபிகை. 5)*

**கழுநீர் (நீல நிறமுடையது)**

பெண்டிர் அணியும் மலர் மாலைகளுள் ஒன்று *(பிர.திர. 202)*

**கள்ளக்கவி**

1. புன்கவிஞர்களுள் ஒருவர் *(வெண்.பா. 68; நவநீ.பா. 87)*
2. ஒருவன் பாட்டை மாற்றொருவனுக்குக் கொடுப்பவன் *(வெண்.பா. 68; இல.விள. 934)*
3. நவநீதப்பாட்டியல் இதற்குப் பருணர் பாட்டியலை மேற்கோள் காட்டி இலக்கணம் கண்டுகொள்க என்று கூறுகிறது *(நவநீ.பா. 87, உரை)*

**கள்ளர்**

குலப் பெயர்களுள் ஒன்று *(பிர.திர. 363)*

**களத்தூர்க்கிழார்**

சங்கப் புலவர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை. 86)*

**களவழிநாற்பது**

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 44)*

**களவுகண்ணி**

பெண்மேல் உற்ற அன்பு காரணமாக இரவிலே அரசன் களவுக் கூட்டத்திற்குச் செல்லுதலைக் கூறும் இலக்கியம் *(பிர.திர. 74)*

**களவேள்வி**

போர்க்களம் *(சுவாமி. 171)*

**களி**

1. கலம்பக உறுப்புகளுள் ஒன்று *(பன்.பா. 129; வெண்.பா. 32; நவநீ.பா. 33; பிர.மர. 4; சித.பா. 28; இல.விள. 812; தொ.விள. 258; பிர.திர. 32; மு.வீ. 1041; பிர.தீபிகை. 7; பிர.தீபம். 95)*
2. கள்குடியர்கள் கள்ளைச் சிறப்பித்துக் கூறுவது போல் பாடப்படும் பகுதி *(பன்.பா. 129, உரை; நவநீ.பா. 33; மு.வீ. 1041)*
3. கள்குடியர்கள் கள்ளைச் சிறப்பித்துக் கூறுவதோடு பனை மரத்தையும் சிறப்பித்துக் கூறுவதாக அமையும் பகுதி *(இல.விள. 812, உரை)*

களிறு

1. மங்கலச் சொற்களுள் ஒன்று *(பன்.பா. 68; வெண்.பா. 2, உரை; நவநீ.பா. 2; வரை.பா. 8; சித.பா. 18; இல.விள. 771; தொ.விள. 285, பிர.திர. 111: மு.வீ. 1027; பொரு.விள. 3)*
2. தசாங்கம், சின்னப்பூவில் பாடப்படும் பத்துப்பொருள்களுள் ஒன்று *(பன்.பா. 139; வெண்.பா. 42; நவநீ.பா. 24; சித.பா. 32; தொ.விள. 263; பிர.திர. 15)*
3. ஒன்பது சின்னங்களுள் ஒன்று எனக் கூறுகின்றது *(பிர.மர. 9, உரை)*
4. ஆண்பால் மரபுப் பெயர்களுள் ஒன்று. *(இல.விள. 916)*; வேழம், பன்றியின் ஆண்பாலைக் குறிக்கும். *(இல.விள. 916 உரை)*

கற்பகப் பூ

பெண்டிர் அணியும் மலர் மாலைகளுள் ஒன்று *(பிர.திர. 202)*

கற்பகம்

மங்கலச் சொற்களுள் ஒன்று *(சுவாமி. 173)*

கற்பனை விலாசம்

அடிமுதல் முடிவரையிலான உறுப்புகளுக்கு ஏற்ற கற்பனைகளை அமைத்து இத்தகைய பெண் அந்தணர் செய்யும் வேள்வியில் வந்தாள் எனக் குறிப்பிடும் இலக்கியம் *(பிர.திர. 70)*

கற்பாரியம்

சிற்பநூல் முப்பத்திரண்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 61)*

கன்மம்

மும்மலங்களுள் ஒன்று *(பிர.திர. 381)*

கன்மேந்திரியப் புலன்

வசனம், கேமனம், நதானம், விசர்க்கம், ஆனந்தம் *(பிர.திர. 380)*

இவற்றை முறையே உரை, ஏற்றல், நடத்தல், இரதிபோகம், மலநீக்கம் எனத் தொகையகராதி (ப. 71) விளக்குகின்றது.

கன்று

1. இளமை மரபுப்பெயர்களுள் ஒன்று *(இல.விள. 910)*
2. யானை, குதிரை, கழுதை, கடமை, மான், எருமை, மரை, கவரி, ஒட்டகம், கராம் இவற்றின் இளமைப் பெயர். *(இல.விள. 910 உரை)*

கன்னடம்

1. வேனிற்கால மாலை நேர இராகங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 55)*
2. ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று *(பிர.தீபிகை 99; பிர.திர. 500-502)*

கன்னடியன்

குலப் பெயர்களுள் ஒன்று *(பிர.திர. 362)*

கன்னல்

நாழிகை என்பது இதன்பொருள். இப்பொருத்தம் பற்றிப் பன்னிரு பாட்டியல் மட்டும் குறிப்பிடுகிறது. ஒரு நாளுக்குரிய 30 நாழிகைகளை ஐந்து தெய்வங்கட்குப் பகுத்து, அவற்றுக்குரியனவாக எழுத்துகளையும் வரையறுக்கும் பகுதி.

கிழக்கு - சூரியன், தெற்கு - இயமன், மேற்கு - வருணன், வடக்கு - சோமன், நடு - திசைமுகன் என்னும் ஐந்து நிலைகளுக்கு ஐந்து உயிர்க்குறில்களை உரியனவாகக் கொள்ள வேண்டும். பின்பு ஒரு நாளுக்குரிய 30 நாழிகைகளை ஒவ்வொரு தெய்வ நிலைகட்கும் ஆறு நாழிகைகள் வீதம் ஐந்து தெய்வங்கட்கும் பகுத்தல் வேண்டும். இதில் பாட்டுடைத் தலைவனின் இயற்பெயரின் முதலெழுத்து எந்தத் தெய்வ நிலைக்கு உரியதாக இருக்கிறதோ அந்தத் தெய்வ நிலைக்குரிய முதல் மூன்று நாழிகைகளை இலக்கியம் பாடுதற்குரிய நாழிகைகளாகக் கொள்ள வேண்டும்.

ஐந்து தெய்வங்கட்குரிய எழுத்துகளைப் பன்னிரு பாட்டியல் கூறும் முறை:

அகரம் - சூரியனோடு உதிக்கும்
இகரம் - இன்புற எய்தி இருக்கும்
உகரம் - நடக்கும்
எகரம் - உறங்கும்
ஒகரம் - துஞ்சும் *(பன் பா. 35-37)*

பாட்டுடைத் தலைவனின் இயற்பெயரின் முதலெழுத்து நூலின் முதலெழுத்தாக அமையுமாறு பாடுதல் நலம். *(இந்.காளி. 9)*

| வ.எண் | எழுத்து | தெய்வம் | திசை | தன்மை |
|---|---|---|---|---|
| 1 | அ | சூரியன் | கிழக்கு | உதிக்கும் |
| 2 | இ | இயமன் | தெற்கு | எய்தும் |
| 3 | உ | வருணன் | மேற்கு | நடக்கும் |
| 4 | எ | சோமன் | வடக்கு | உறங்கும் |
| 5 | ஒ | திசைமுகன் | நடு | துஞ்சும் |

**கன்னாடம்**
ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று *(பிர.திர. 500-502; பிர.தீபிகை. 99)*

**கன்னார்**
குலப் பெயர்களுள் ஒன்று *(பிர.திர. 363)*

**கன்னி**
வஞ்சிப்பாவிற்கு உரிய இராசிகளுள் ஒன்று *(பன்.பா. 94; வெண்.பா. 70; பிர.மர. 26; இல.விள. 882; தொ.விள. 298; மு.வீ. 1015)*

**கன்னிகாதானம்**
முப்பத்திரண்டு அறங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 71)*

**கன்னி மயக்கம்**
பெண்ணை அடைவதற்காகத் தவம்புரிந்து அதன் பயனால் பெற்ற அழகுடன் சென்று அவளை அடைதலைக் கூறும் இலக்கியம் *(பிர.திர. 68)*

**கன்னிகா மயக்கம்**
1. காமம் காரணமாகக் கூடம் அமைத்து, தான் விரும்பும் பெண்ணின் அழகுக்கேற்ற அழகைப் பெறுவதற்காக மன்னன் தவம்செய்ய, மன்மதன் அருளால் அவன்போன்ற அழகுடல் பெறலைக் கருவாகக் கொண்ட இலக்கியம் *(பிர.திர. 104)*
2. ► கன்னிமயக்கம் (பிர.திர. 68)
இவ்வகை இலக்கியம் கிடைத்திலது

**கனகப்பரிட்சை**
அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 72)*

**கனகாபிடேகம்**
தூயமின்னல் போன்ற அழகிய தலைவியின் தோழியர்க்குப் பரிசாக வேந்தன் பொற்கிழி அனுப்புதலைப் பாடும் இலக்கியம் *(பிர.திர. 26)*

**கனதம்பம்**
அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 72)*

**கனாநிலை**
பரணியின் உறுப்புகளுள் ஒன்று *(பன்.பா. 143; வெண்.பா. 61; நவநீ.பா 57-61; பிர.திர. 45, 46)*

## கா

**கா**
1. பெண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா 27; வெண்.பா. 6; நவநீ.பா. 7; சித.பா 20; தொ.விள. 289; பிர.திர. 124; சுவாமி. 174; மு.வீ. 1031; பொரு.விள. 21)*
2. திருவோணத்திற்குரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 42; வெண்.பா. 12; நவநீ.பா. 13; சித.பா. 23; இல.விள. 787; தொ.விள. 292, பிர.திர. 143; மு.வீ. 1034; பொரு.விள. 40)*
3. சீர் என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 4; பிர.தீபிகை. 3, 4)*

**காச்சிமீரம்**
ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று *(பிர.திர 500-502; பிர.தீபிகை. 99)*

**காசம்**
ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று *(பிர.திர. 500-502; பிர.தீபிகை. 99)*

**காசிபன்**
1. இசைக்குரிய தேவர்களுள் ஒருவர் *(பிர.திர. 92)*
2. இந்திரனின் தந்தை; மாயையின் மக்களும் இவருக்கு மகவு *(பிர.திர. 272)*

**காசிபன், கத்துருவை**
ஆதிசேடன் முதலிய நாகங்களின் பெற்றோர் *(பிர.திர. 272)*

**காஞ்சி**
ஊன்றல் *(பிர.மர. 17)*

**காஞ்சி மாலை**
1. படையெழுத்து வருவாரை எதிர்த்து நிற்றலை எப்பாவினாலேனும் முப்பது செய்யுள்களால் பாடும் இலக்கியம் *(பிர.மர. 17; சித.பா. 39)*
2. பகைவரின் ஊர்ப் புறத்தே காஞ்சிப்பூ மாலை சூடி ஊன்றலைக் கூறும் இலக்கியம் *(மு.வீ. 1074; பிர.தீபிகை. 16; பிர.தீபம். 46)*

**காண்டிகையுரை**
கருத்து, பொழிப்பு, உதாரணம் என்ற வகையில் அமையும் *(வெண்.பா. 93)*

**காத்தியாயனம்**
1. முப்பத்திரண்டு உபநிடதங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 59)*
2. பதினெண் மிருதிகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 58)*

**காதல்**
1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(சுவாமி. 166)*
2. தன் மையலை இரண்டடிக் கண்ணியால் பாடும் இலக்கியம் *(சுவாமி. 171)*

**காதலுத்தியாபனம்**
இளவேனில் காலத்தில் தெய்வக் கன்னி மீது ஆசையுற்ற அரசன் உவவனம் செல்ல, அதனையறிந்த அவள் அன்புற்று உவகை கொண்டு தூது நீக்கி அவனை அணைதலைப் பாடும் இலக்கியம் *(பிர.திர. 47)*

**காது**
▶ பாதாதி *(பன்.பா. 214; நவநீ.பா. 44)*

**காதைகரப்பு**
சித்திரகவி வகைகளுள் ஒன்று *(வெண்.பா 26, நவநீ.பா. 67; இல.விள. 766 (690); மு.வீ. 1019)* காதை - சொல், கரப்பு - மறைவு. செய்யுளின் இறுதி அடியிலுள்ள ஈற்று அயலெழுத்தை முதலெழுத்தாகக் கொண்டு ஒவ்வோர் எழுத்தாக இடையிட்டுப் படித்துக்கொண்டே செல்ல மற்றொரு செய்யுள் கிடைக்கும் வகையில் அமைந்திருக்கும் பாடல்.

**காதோலை**
முப்பத்திரண்டு அறங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 71)*

**காந்தருவ வாதம்**
அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 72)*

**காந்தருவ வேதம்**
நான்மறைகளுள் ஒன்று; வேளாளர்க்கு உரியது *(பிர.தீபிகை. 58)*

**காந்தருவம்**
1. எண்வகை மணங்களுள் ஒன்று; வல்லுக் கருவியை ஒத்த நகிலுடைய பெண்ணும் தலைவனும் எதிர்ப்பட்டு, கண்பார்வையில் புணர்தல் *(பிர.திர. 359)*
2. நேர்மையாக இருவர் தம் விருப்பாகவே தழுவுதல் *(பிர.தீபிகை. 74)*

**காந்தள்**
இறைவன் அணிதற்குரிய மலர்களுள் ஒன்று *(பிர.திர. 37)*

**காந்தாரம்**
ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று *(பிர.திர. 500-502; பிர.தீபிகை. 99)*

**காந்தாரி**
1. முப்பத்திரு இராகங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 51)*
2. நாடி பத்தனுள் ஒன்று *(பிர.திர. 379)*

**காந்திமதி**
விண்மாதர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை 46)*

**காப்பிட வாராய்**
ஆண்பால் பிள்ளைப்பாட்டு நிலைகளுள் ஒன்று. *(பன்.பா. 102 உரை)*

காப்பியம்
1. பலவகைப் பாட்டுகளைக் கொண்ட நூல்வகை *(பன்.பா. 88)*
2. பெருங்காப்பியத்திற்குச் சொல்லப்பட்ட அறம், பொருள், இன்பம், வீடு நான்கனுள் சில குறைந்து வருவது காப்பியம் *(வெண்.பா. 64; பிர.மர. 21; இல.விள. 854, 630; தொ.விள. 255)* இவ்வாறு குறைந்து வருமாயின் அது சிறுகாப்பியம் எனப்படும் என நவநீதப் பாட்டியல் கூறுகிறது *(நவநீ.பா. 65; சுவாமி. 164; சித.பா. 43)*
3. காப்பியம், பெருங்காப்பியம் என்பன ஒரு திறச்செய்யுளாலோ, பல திறச் செய்யுளாலோ அமைந்தும் உரை விரவியும், பிற மொழி விரவியும் வரும். விரவி வருவதைக் காட்டிலும் விரவாது வருவதே சிறப்புடைத்து *(சித.பா. 43)*
4. சொல்லப்பட்ட தொண்ணூற்றாறுவகைப் பிரபந்தங்கள் இருக்க, கதை கூறும் நிலை வேறும் வேண்டப்படின் எல்லோருக்கும், எல்லா அவையினோர்க்கும் ஏற்புடையதாக எஞ்சும் இலக்கியம் *(பிர.திர. 76)*
5. அறம் பொருள் இன்பம் - இவற்றுள் ஒன்றினை விட்டு மிகுந்ததைச் சிறப்பித்தல் *(பிர.தீபம். 91)*
6. இருவகைக் காப்பியங்களும் ஒருவகைச் செய்யுளாலும் பலவகைச் செய்யுளாலும் இயற்றப்பட்டு உரைநடை விரவியும் பிறமொழிச் சொல் கலந்தும் வரும் *(சுவாமி. 164)*

காப்பின் முதற்கடவுள்
திருமால் *(பன்.பா. 107; நவநீ.பா. 26; இல.விள 808)*

காப்பு
1. ஆண்பால் பிள்ளைப்பாட்டு நிலைகளுள் ஒன்று *(பன்.பா. 102; வெண்.பா. 30; நவநீ.பா. 29; பிர.மர. 2; சித.பா. 28; இல.விள. 806; தொ.விள. 257; பிர.திர. 3; சுவாமி. 167; மு.வீ. 1039; பிர.தீபிகை 5, பிர.தீபம். 94)*
2. பெண்பால் பிள்ளைப்பாட்டு நிலைகளுள் ஒன்று *(பன்.பா. 104; வெண்.பா. 29; நவநீ.பா. 32; பிர.மர. 2; சித.பா. 28; இல.விள. 807; தொ.விள. 257; பிர.திர. 3; சுவாமி. 167; மு.வீ. 1039; பிர.தீபிகை 5; பிர.தீபம். 94)*

காப்புப்பருவ கடவுளர்
▶ அட்டவணை 6.

காப்பு மாலை
1. தொடர்நிலைச் செய்யுள் வகைகளுள் ஒன்று *(இல.விள. 805)*
2. பிள்ளையைக் காக்கவென ஒன்பது அல்லது பதினொரு செய்யுளால் பாடும் இலக்கியம் (நவநீ.பா. 32 *தொ.விள. 253* உரை)
3. மூன்று, ஐந்து. ஏழ் என்னும் எண்ணிக்கையிலும் செய்யுள் அமையும் *(இல.விள. 832; மு.வீ. 1061; பிர.தீபிகை. 13; பிர.தீபம். 35)*

காபி
1. வகுப்புறு இராகங்கள் முப்பத்திரண்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 53)*
2. வேனிற்கால மாலை நேர இராகங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 55)*

காபிலகாலயூபம்
சிற்பநூல் முப்பத்திரண்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 61)*

காம்போசம்
ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று *(பிர.திர. 500-502; பிர.தீபிகை. 99)*

காம்போதி
1. முப்பத்திரண்டு இராகங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 51)*
2. மகிழ்ச்சி இராகங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 55)*
3. வசந்த காலத்தில் உறும் இராகங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 55)*
4. வேனிற்கால மாலை நேர இராகங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 55)*

காமம்
1. ஐம்பூதங்களாலாகிய மனித உடலின் தழலின் கூறுகளுள் ஒன்று *(பிர.திர. 380)*
2. ஐம்பூதங்களாலாகிய மனித உடலின் வானின் கூறுகளுள் ஒன்று *(பிர.திர. 380)*

காமராச மாலை
1. காமநூல் பொருண்மையில் அமையும் இலக்கியம் *(பிர.திர. 43)*
2. இவ்விலக்கியத்தின் மதிப்பு 8000 பொன். *(பிர.திர. 87)*

காமன் ஐங்கணை
1. பருவரல் வளரக் காரணமானவற்றுள் ஒன்று *(பன்.பா. 185)*
2. முல்லை, அசோகு, மாந்தளிர், தாமரை, நீலம் ஆகிய மலர்களால் ஆனது (பன்.பா. 186)

காமன் போரின் இயல்பு

நமது மின்னொத்த மனைவியுடன் நாமும் இதனை இயற்றி மிகுந்த நாட்கள் எல்லாம் நெருங்கினால், நம்மேல் அவள் எய்வாள்; அம்மையாகிய இவள் மேலும் மயக்கம் பொருந்திய மாதர் கூட்டத்தின் மேலும் பாணம் செலுத்துவோம் எனக் கருதி, அரிய முறையில் செம்மை உடைய போர் செய்ய இங்கு எம் இயல்பைச் செய்தல் எம் செய்கைகளை மறுப்பதால் வருமோ? *(பிர.திர. 251)*

காமிகம்

சிவாகமம் இருபத்தெட்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 60)*

காய்

புல், மரத்தின் பொது உறுப்புகளுள் ஒன்று *(இல.விள. 922)*

காய் முன் நிரை

கலித்தளை *(சித.பா. 4)*

காய் முன் நேர்

வெண்சீர் வெண்டளை *(சித.பா. 4)*

கார்

மங்கலச் சொற்களுள் ஒன்று *(பன்.பா. 68; வெண்.பா. 2; நவநீ.பா. 2; சித.பா 18; இல.விள. 771; தொ.விள. 285; பிர.திர. 111; சுவாமி 173; மு.வீ. 1027)*

கார்க்கோடன்

1. அட்ட நாகங்களுள் ஒன்று.
2. சூத்திர சாதியினது.
3. ► அட்டநாகம் 1, 2 *(பிர.திர. 274)*

கார்த்திகை

1. வெண்பாவிற்கு உரிய நாள்களுள் ஒன்று *(பன்.பா. 91; வெண்.பா. 70; பிர.மர. 25; இல.விள. 880; தொ.விள. 295; மு.வீ. 1012; பிர.திர. 417)*
2. தீக்கணத்திற்கு உரிய நாள் *(பன்.பா. 64; இந்.காளி. 36; சித.பா. 25; இல.விள. 800, உரை; பிர.திர. 154)*
3. இடுக்கண் விளைவிக்கும் நாள் *(பன்.பா. 64; சித.பா. 25; இல.விள. 800, உரை; பிர.திர. 154)*

கார்த்திகை நாளுக்கு உரிய எழுத்துகள்

அ, ஆ, இ, ஈ *(பன்.பா. 41; வெண்.பா. 11; நவநீ.பா 13; சித.பா. 23; இல.விள. 785; தொ.விள. 292; பிர.திர. 142; மு.வீ. 1034; பொரு.விள. 37)*

கார் நாற்பது

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று *(பிர.தீபிகை 44)*

காரணம்

சிவாகமம் இருபத்தெட்டுள் ஒன்று *(பிர.தீபிகை 60)*

காருடம்

அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 72)*

காலம்

1. கலம்பக உறுப்புகளுள் ஒன்று *(பன்.பா. 129; வெண்.பா. 32; நவநீ.பா. 33; பிர.மர. 4; சித.பா. 29; இல.விள 812; தொ.விள. 258; பிர.திர. 32; மு.வீ. 1041; பிர.தீபிகை. 7; பிர.தீபம் 295)*
2. தலைவன் பொருள் முதலிய பிரிவை மேற்கொள்கையில் தலைவி கார்காலத்தால் தனக்கு உண்டாகும் துன்பங்களைக் கூறுவது போலப் பாடப்படும் பகுதி *(பன்.பா. 129, உரை; நவநீ.பா. 33; இல.விள. 812; பிர.தீபம் 29, உரை)*
3. வித்தியா தத்துவம் ஏழனுள் ஒன்று *(பிர.திர. 378)*

காலாக்கினி

முப்பத்திரண்டு உபநிடதங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 59)*

காவலர் சாதி

அரச சாதி *(பன்.பா. 92)*

காவியம்

அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 72)*

காவிரிப்பட்டினக் காரிக்கண்ணனார்

சங்கப் புலவர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை. 86)*

**காவேரியார் மகன் எனும் சாத்தன்**
சங்கப் புலவர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை. 86)*

**காளி**
1. சத்த மாதர்களுள் ஒருவர் *(பன்.பா. 109, உரை; நவநீ.பா. 27, உரை)*
 ► வேய்த்தோள் எழுவர்
2. உபபுராணம் பதினெட்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 70)*

**காளியின் ஆயுதம்**
சூலம் *(பன்.பா. 109, உரை)*

**காளியின் வாகனம்**
பேய் *(பன்.பா. 109, உரை)*

**காற்றின் கூறு**
ஓடல், நடை, கிடத்தல், தத்தல், வளைதல் *(பிர.திர. 380)*

**காற்று (வாயு)**
1. கணங்களுள் ஒன்று *(இந்.காளி. 12 ; பன்.பா. 57)*
2. ஐம் பூதங்களுள் ஒன்று *(பிர.திர. 378)*

**கானவேட்டம்**
1. யானை, குதிரைப் படைசூழ வேட்டைக்குச் செல்கையில் கானல்நீர் காரணமாக ஐயுற்று முயல், யானை மீது அம்பு செலுத்தித் திகைக்கும் நேரத்தில் ஒரு பெண்ணிடம் இன்பம் பெறுதலைப் பாடும் இலக்கியம் *(பிர.திர. 54)*
2. மன்னன் மீது ஏற்பட்ட காமம் காரணமாக மேலுலக மாதான அரம்பை பூவுலகில் வந்து, அவனைக் கலந்து மீண்டும் வானுலகு செல்லலைக் கருவாகக் கொண்ட இலக்கியம் *(பிர.திர. 103)* (இவ்வகை இலக்கியம் கிடைத்திலது)

## கி

**கி**
1. ஆண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 26; வெண்.பா. 6; நவநீ.பா. 7; சித.பா. 20; தொ.விள. 289; பிர.திர. 124; சுவாமி. 174; மு.வீ. 1031; பொரு.விள. 20)*
2. திருவோணத்திற்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 42; வெண்.பா. 12; நவநீ.பா. 13; சித.பா. 23; இல.விள. 787; தொ.விள. 292; பிர.திர. 143; மு.வீ. 1034; பொரு.விள. 40)*
3. வேலை, சீர் என்னும் மங்கலச் சொற்களுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 4; பிர.தீபிகை. 3)*

**கிடத்தல்**
ஐம்பூதங்களாலாகிய மனித உடலின் காற்றுக் கூறுகளுள் ஒன்று *(பிர.திர. 380)*

**கிம்புரோடியம்**
முப்பத்திரண்டு உபநிடதங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 59)*

**கிராடம்**
ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று *(பிர.திர. 500-502; பிர.தீபிகை. 99)*

**கிராணம்**
ஞானேந்திரியம் ஐந்தனுள் ஒன்றாகிய மூக்கு *(பிர.திர. 378)*

**கிரிசரம்**
யானைகள் உறையும் மூவகை நிலங்களுள் ஒன்று *(பன்.பா. 163; இல.விள. 872, உரை)*

**கிரியா**
பதினாறு சைவங்களுள் ஒன்று *(பிர.தீபிகை 62)*

**கிருகரன்**
வாயுக்கள் பத்தனுள் ஒன்று *(பிர.திர. 379)*

**கிருதாசி**
விண்மாதர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை 46)*

**கிருது**
விண்மாதர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை 46)*

**கிருஸ்தலை**
விண்மாதர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை 46)*

**கிழான்**
இசைக்குரிய சுவைகளுள் ஒன்று *(பிர.திர. 92)*

**கிள்ளை (கிளி)**
1. பருவரல் வளரக் காரணமானவற்றுள் ஒன்று *(பன்.பா. 185)*
2. தூதுப் பொருள்களுள் ஒன்று *(பிர.திர. 30)*

## கீ

**கீ**
1. பெண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 27; வெண்.பா. 6; நவநீ.பா. 7; சித.பா. 20; தொ.விள. 289; பிர.திர. 124; சுவாமி 174; மு.வீ. 1031; பொரு.விள. 21)*
2. திருவோணத்திற்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 42; வெண்.பா. 12; நவநீ.பா. 13; சித.பா 23; இல.விள. 787; தொ.விள. 292; பிர.திர. 143; மு.வீ. 1034; பொரு.விள. 40)*
3. சீர் என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 4;)*; வேலை, சீர் என்னும் மங்கலச் சொற்களுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 3)*

**கீரணம்**
சிவாகமம் இருபத்தெட்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 60)*

**கீரந்தையார்**
சங்கப் புலவர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை 86)*

**கீரர்**
சங்கப் புலவர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை 85)*

**கீழ்க்கணக்கு**
வெண்பாவால் அமைந்து ஐந்து அடியினின்று மிகாத பாடல்களின் தொகுதி *(பன்.பா. 223)*

**கீழ்க்கதுவாய் அளபு**
தொடை வகை முப்பத்தைந்தனுள் ஒன்று *(சித.பா. 6)*

**கீழ்க்கதுவாய் அளபெடை**
ஓரடியின் முதல், இரண்டு, நான்காம் சீர்களில் இடம்பெறும் அளபெடை *(சித.பா. 6)*
(எ-டு) மீஇன் ஆஅர்ந் துகளுஞ் சீஇர்
*(மேற். யா.கல விருத்தியுரை நு. 41·6; யா.காரிகை 20, உரை; சித.பா.ப. 24)*

**கீழ்க்கதுவாய் இயைபு**
1. ஓரடியின் ஒன்று, இரண்டு, நான்காம் சீரிலுள்ள எழுத்துகள் ஒன்றிவரும் இயைபு *(சித.பா 6)*
(எ-டு) பல்லே தவளம் பாலே சொல்லே
*(மேற்: யா.கல விருத்தியுரை நூ. 46:6; யா.காரிகை 20, உரை; சித.பா.ப. 23)*
2. தொடை வகை முப்பத்தைந்தனுள் ஒன்று *(சித.பா. 6)*

**கீழ்க்கதுவாய் எதுகை**
1. சீர்களில் இடம்பெறும் எதுகை ஓரடியின் முதல், இரண்டு, நான்காம் சீர்களில் இடம்பெறும் எதுகை (சித.பா. 6)
(எ-டு) அன்ன மென்பெடை போலப் பன்மலர்க்
*(மேற். யா.கல விருத்தியுரை நூ. 36:6; யா.காரிகை 20, உரை; சித.பா.ப. 23)*
2. தொடை வகை முப்பத்தைந்தனுள் ஒன்று *(சித.பா. 6)*

**கீழ்க்கதுவாய் முரண்**
1. ஓரடியின் முதல், இரண்டு, நான்காம் சீர்களில் இடம்பெறும் மோனை (சித.பா. 6)
(எ-டு) இருக்கையும் நிலையும் எந்தொழில் இயக்கமும்
*(மேற்· யா.கல விருத்தியுரை நு. 38·6; யா.காரிகை 20, உரை; சித.பா.ப. 24)*
2. தொடை வகை முப்பத்தைந்தனுள் ஒன்று *(சித பா 6)*

**கீழ்க்கதுவாய் மோனை**
1. சீர்களில் இடம்பெறும் மோனை *(சித.பா 6)*
2. ஓரடியின் முதல், இரண்டு, நான்காம் சீர்களில் இடம்பெறும் மோனை *(சித.பா. 6)*
(எ-டு) அவர்மதி அனைய திருநுதல் அரிவை
*(மேற்· யா.கல விருத்தியுரை நு 35:6; யா.காரிகை 20, உரை; சித.பா.ப. 22)*
3. தொடை வகை முப்பத்தைந்தனுள் ஒன்று *(சித.பா. 6)*

## கு

**கு**
1. ஆண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 26; வெண்.பா. 6; நவநீ.பா. 7; சித.பா. 20; தொ.விள. 289; பிர.திர. 124; சுவாமி 114; மு.வீ. 1031; பொரு.விள. 20)*
2. திருவாதிரைக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 42; வெண்.பா. 12; நவநீ.பா. 14; சித.பா. 23; இல.விள 787; தொ.விள. 292; பிர.திர. 143; மு.வீ. 1034; பொரு.விள. 41)*
3. பொன் என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 5)*; சொல் என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.தீபிகை 3)*

குகு

நாடி பத்தனுள் ஒன்று *(பிர.திர. 379)*

குங்குமம்

பெண்டிர் அணியும் மலர் மாலைகளுள் ஒன்று *(பிர.திர. 201)*

குஞ்சரக் குழவி

ஆண்பால் பிள்ளைப்பாட்டுக்கு உரிய உவமைகளுள் ஒன்று *(பன்.பா. 114)*

குட்டி

இளமை மரபுப்பெயர்களுள் ஒன்று *(இல.விள. 910)*; மூங்கா, வெருகு, எலி, அணில், முயல், பன்றி, நாய், நரி, யாடு, குதிரை, நவ்வி புல்வாய் கோடுவாழ் விலங்கு ஆகியவற்றின் இளமைப் பெயர். *(இல.விள. 910 உரை)*

குடகம்

ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று *(பிர.திர. 500-502; பிர.தீபிகை. 99)*

குடம் (கும்பம்)

கலிப்பாவிற்கு உரிய இராசிகளுள் ஒன்று *(பன்.பா. 93; வெண்.பா. 70; பிர.மர. 26; இல.விள. 882; தொ.விள. 297; மு.வீ. 1014)*

குடமுல்லை

பெண்டிர் அணியும் மலர் மாலைகளுள் ஒன்று *(பிர.திர. 202)*

குடிப்பெயர்

1. எண்வகைப் பெயர்களுள் ஒன்று *(பன்.பா. 74)*
2. சேரன், சோழன், பாண்டியன் என்னும் பெயர்களும் இவை போன்ற பிற பெயர்களும்; இவற்றைக் கொண்டு செய்யுளுக்கு உரிய பெயர்ப் பொருத்தம் காணல் முறை *(பன்.பா. 76)*

குடை

1. விருத்த விகற்பத்துக்குரிய ஒன்பது அரச உறுப்புகளுள் ஒன்று *(பன்.பா. 178; வெண்.பா. 42; நவநீ.பா. 41; பிர.மர. 9; சித.பா. 32; தொ.விள. 273; பிர.திர. 16; மு.வீ. 1126)*
2. சில பாட்டியல்கள் கொடை எனக் குறிப்பிடுகின்றன *(இல விள. 853; பிர.தீபிகை 31; பிர.தீபம். 88)*
3. அரசர்க்குரிய இருபத்தொரு சின்னங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 88)*

குடைமங்கலப் பொருள்கள்

1. சாற்றியமாறொத்தல், 2. தனிமை, 3. மிகுதி, 4. சமம், 5. உடன்பாடு, 6. புலன், 7. உண்மை, 8. தலைப்பாடு 9. பாதி. 10. கொடை *(பன்.பா. 121)*

குடைமங்கலம்

1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(பன்.பா. 99)*
2. நேரசையை முதலாகக் கொண்ட வெண்பாக்களின் முதல் இரண்டு அடிகளில் மன்னனின் வள்ளல் தன்மையையும், பின்னிரண்டு அடிகளில் தனிநிலையை இரு மடங்கு புகழ்ந்தும் குடை என முடிக்கும் செய்யுள் *(பன்.பா. 116)*
3. மூன்றாம் அடியின் ஈற்றில் தனிச்சொல் வருமாறு பல வெண்பாக்களால் இயற்றப்பட்டு மூன்று, நான்காம் அடிகளில் பாட்டுடைத் தலைவனாகிய மன்னனை வாழ்த்தி, முதற்பாடலில் அவனின் கொற்றக் குடையை வைத்துப் பாடும் இலக்கிய வகை *(இந்.காளி. 34)*
4. அரசனின் சிறப்பைக் கூறும் குடைமங்கலத்தில் நேரசை வெண்பாவின் அடிகள் கட்டளையை உடையனவாயிருத்தல் வேண்டும் *(பன்.பா. 117)*
5. ஈண்டு கட்டளை என்று சொல்லக் காரணம் வெண்பாவின் ஈற்றடி தவிர்த்து ஏனைய மூன்று அடிகளும் தம்மிடையே பொருந்திய எழுத்துகளின் பகுதியைக் கொண்டிருப்பதே ஆகும் *(பன்.பா. 118)*
6. வெண்பாவின் எழுத்துகளை எண்ணுகையில் குற்றியலுகரம், குற்றியலிகரம், ஒற்று இவற்றைத் தவிர்த்து உயிரையும் உயிர்மெய்யையும் எண்ணிக் கொள்ள வேண்டும் *(பன்.பா. 119)*

குண்டக்கிரியை

முப்பத்திரண்டு இராகங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 51)*

குணசைவம்

பதினாறு சைவங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 62)*

குணப்பெயர்
1. எண்வகைப் பெயர்களுள் ஒன்று *(பன்.பா. 74)*
2. புலவர்களால் அளிக்கப்பட்ட நீங்குதல் இல்லாது பொருந்தியிருக்கும் பெயர் *(பன்.பா. 78)*

குத்துச் சுழி
குதிரைக்கு ஆகாத இருபது சுழிகளுள் ஒன்று *(பிர.திர. 388)*

குதிரை
விருத்த விகற்பத்துக்குரிய ஒன்பது அரச உறுப்புகளுள் ஒன்று *(பன்.பா. 178; வெண்.பா. 42; நவநீ.பா. 41; பிர.மர. 9; சித.பா. 32; இல.விள. 853; தொ.விள. 273; பிர.திர. 16; மு.வீ. 1126; பிர.தீபிகை. 31; பிர.தீபம் 88)*

குதிரைக்கு ஆகாத சுழி
1. பட்டைச் சுழி, 2. மன்னை, 3. பிடி, 4. லிங்காவிற்தம், 5. படிகடந்த மட்டி, 6. பாடைச் சுழி, 7. பூரச்சுழி, 8. முட்டியறுபுல்லு, 9. விலங்குச்சுழி, 10. குத்துச்சுழி, 11. முனையம்புச்சுழி, 12. சோகாவிர்தம், 13. வாங்குமட்டி, 14. தடாவிற்தம், 15. கொள்ளிக்கால், 16. கந்தப்பாம்பு, 17. கண்டமாலை, 18. சுடுகாடு நக்கி, 19. துண்டுபட்ட வெள்ளை, 20. உச்சமட்டி *(பிர.திர. 388)*

குந்தளம்
ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று *(பிர.திர. 500-502; பிர.தீபிகை. 99)*

குந்தியின் புதல்வர்
இயமன், வாயுபகவன், இந்திரன் என்போரையும் தந்தையாகப் பெறுவார்கள் *(பிர.திர. 309)*

குபேரன்
1. படைத்த எழுத்துகள் - ல, வ. *(பன்.பா. 7)*
2. இவ்வெழுத்துகளை எமன் படைத்த எழுத்துகளாகச் சில பாட்டியல்கள் கூறுகின்றன *(வெண்.பா. 10; நவநீ.பா. 11; சித.பா. 21; இல.விள. 778; சுவாமி. 175)*
3. வணிக சாதிக்குரிய எழுத்துகளைப் படைத்த இருவருள் ஒருவர் *(பன்.பா. 7)*
4. வணிகர்க்குரிய தேவதைகளுள் ஒன்று *(நவநீ.பா. 12)*
5. பிள்ளைப் பாட்டு பாடுதற்குரிய காப்புக் கடவுளருள் ஒருவர் *(பன்.பா. 106; நவநீ.பா. 28; இல.விள. 808)*

குமரன்
சிவனின் முக்கண்ணில் தோன்றியவன் *(பிர.திர. 283)*

குமரிக்கண்டம்
தமிழ் மொழி பெறும்; முன்பு கூறிய கண்டங்கள் (இந்திரம், சேருகம், தாம்பிரம், நாகம், கேவத்தி, சவுமியம், காந்திருவம், வருணம்) போலல்லாது, சிறந்த ஆச்சிரமம் இன்றித் தானதவம் இன்றி நற்சிந்தை, சிவதலம் முதலான எல்லாப் பொருளும் இக்கண்டத்தில் விளங்கும். *(பிர.திர. 499)*

குமாரன்
1. ஐவகைத் தானங்களுள் ஒன்று *(பன்.பா. 30; வெண்.பா. 5; நவநீ.பா. 6; சித.பா. 19; இல.விள. 783, தொ.விள. 288, பிர.திர. 121, சுவாமி. 174; பொரு.விள. 17)*
2. நட்பிற்குரிய தானம் *(பன்.பா. 32)*

குயவர்
குலப் பெயர்களுள் ஒன்று *(பிர.திர. 363)*

குயில்
1. பருவரல் வளரக் காரணமானவற்றுள் ஒன்று *(பன்.பா 185)*
2. தூதுப் பொருள்களுள் ஒன்று *(பிர.திர. 30)*

குரவு
பெண்டிர் அணியும் மலர் மாலைகளுள் ஒன்று *(பிர.திர. 202)*

குரா
மஞ்சரிக்கு உரிய பத்துவகை மரங்களுள் ஒன்று *(பிர.திர. 35)*

குரு
1. வெண்பாவிற்கு உரிய கடவுளருள் ஒருவர் *(பன்.பா. 91; வெண்.பா. 71)*
2. வெண்பாவிற்கு உரிய கோள்களுள் ஒன்று என இதனைச் சில பாட்டியல்கள் கருதுகின்றன. *(பிர.மர. 27; இல.விள. 883; தொ.விள. 295; மு.வீ. 1012; பிர.திர. 417)*
3. ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று *(பிர.திர. 500-502; பிர.தீபிகை. 99)*

குருக்

ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று *(பிர.திர. 500-502; பிர.தீபிகை. 99)*

குருக்கத்தி

1. மஞ்சரிக்கு உரிய பத்துவகை மரங்களுள் ஒன்று (பிர.திர. 35)
2. பெண்டிர் அணியும் மலர் மாலைகளுள் ஒன்று *(பிர.திர. 202)*

குருளை

1. இளமை மரபுப்பெயர்களுள் ஒன்று. *(இல.விள. 910)*
2. முயல், பன்றி, நாய், நரி என்பவற்றின் இளமைப் பெயர் *(இல.விள. 910 உரை)*

குரோதம்

ஐம்பூதங்களாலாகிய மனித உடலின் வானின் கூறுகளுள் ஒன்று *(பிர.திர. 380)*

குல்லை

பெண்டிர் அணியும் மலர் மாலைகளுள் ஒன்று *(பிர.திர. 201)*

குலங்கள்

1. இராசபுத்திரன், 2. ராசா, 3. கவறை, 4. தட்டான், 5. சிங்களன், 6. கோமுட்டி, 7. மலையாளி, 8. கொங்கன், 9. மிறாட்டி, 10. கன்னடியன், 11. வாணீயன், 12. ஒச்சன், 13. செம்மான், 14. பாணன், 15. செக்கான், 16. கவுண்டிகன், 17. கூத்தன், 18. முதலி, 19. வேழம்பன், 20. சேணியன், 21. ஆண்டி, 22. தாதன், 23. ரெட்டி, 24. இலாடன், 25. பக்கீரி, 26. பட்டாணி, 27. வள்ளுவன், 28. ராவுத்தன், 29. வன்னியன், 30. நாயக்கன், 31. ரவுத்தன், 32. புலையன், 33. வலையன், 34. பொந்திலியன், 35. மாலிகன், 36. தொழும்பன், 37. குறவன், 38. வல்லம்பர், 39. புனவேடர், 40. கைக்கிளை வேடர், 41. மறவர், 42. கரையாயர், 43. அகம்பிடார். 44. குறும்பர், 45. இடையர், 46. கொல்லர், 47. படையாச்சி, 48. கள்ளர், 49. கடையர், 50. தொம்பர், 51. கன்னார், 52. குயவர், 53. தொட்டியர், 54. பறையர், 55. சக்கிலியர், 56. பள்ளி, 57. ஒட்டர், 58. பள்ளர், 59. தச்சர், 60. வடுகர், 61. மாறாடர், 62. நாவிதர், 63. வண்ணார், 64. சாணார், 65. துலுக்கர், 66. சோனகர், 67. கம்பவதர், 68. ஆரியர், 61. வேற்றுச் சாணார், 70. கைக்கிளர், 71. அம்பட்டர் *(பிர.திர. 363)*

*(இதே நூலின் முந்நூற்று எழுபதாம் நூற்பாவின் மூலம் குலங்களின் எண்ணிக்கை எழுபத்திரண்டு என அறிந்து கொள்ள முடிகிறது. ஆனால் இங்கு எழுபத்தொன்று மட்டுமே கூறப்பட்டுள்ளது.)*

இச் சாதியினர் அனைவரும் சூத்திரர். வழுவாக இன்னும் அவர்வழி வந்தவர் உளர் (பிர.திர. 370)

குலப்பெயர்

1. எண்வகைப் பெயர்களுள் ஒன்று *(பன்.பா. 74)*
2. பார்ப்பார், அரசர், வணிகர், வேளாளர் என்னும் நாற்பெயர் *(பன்.பா. 75)*

குலபதி

சங்கப் புலவர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை. 86)*

குலிந்தம்

ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று *(பிர.திர. 500-502; பிர.தீபிகை. 99)*

குலை

புல்லின் உறுப்புகளுள் ஒன்று *(இல.விள 920)*

குலோதய மாலை

தலைவன் பிறந்த குலத்தின் பெருமையைப் பாடும் இலக்கியம் *(பிர.திர. 9)*

குழந்தை வளர்த்தல்

முப்பத்திரண்டு அறங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 71)*

குழமகன்

1. தலைமகன் *(வெண்.பா. 49, உரை)*
2. பெண்பால் பிள்ளைப்பாட்டு நிலைகளுள் ஒன்று *(பன்.பா. 105)*
3. மங்கையர் தம் கையில் கண்ட இளமைத் தன்மையுடைய குழமகனைக் கலிவெண்பாவால் புகழ்ந்துபாடும் இலக்கியம் *(வெண்.பா. 49; நவநீ.பா. 45; இல.விள. 870; பிர.மர. 14; மு.வீ. 1114; பிர.தீபிகை. 26; பிர.தீபம். 78)*
4. கையில் கண்ட குழமகன் என்பதற்குக் கைவசப்பட்ட தலைமகன் எனவும் கையிற்கண்ட பாலன் எனவும் உரைவிளக்கம் உள்ளது *(வெண்.பா. 49, உரை)*

குழல்

▶ பாதாதி *(பன்.பா. 214; நவநீ.பா. 44)*

குழல்வாராய் காக்காய்

ஆண்பால் பிள்ளைப்பாட்டு நிலைகளுள் ஒன்று *(பன்.பா. 102, உரை)*

குழவி

1. இளமை மரபுப்பெயர்களுள் ஒன்று; *(இல.விள. 910);* குஞ்சரம், எருமை, கடமை, மரை, குரங்கு, முசு, சிதல், எறும்பி என்பவற்றின் இளமைப் பெயரையும், மக்களுள் இளமைப் பெயரையும், ஓரறிவு உயிரில் இளமைப் பெயரையும் குறிக்கும் *(இல.விள. 910 உரை)*

குழுவ நாடகம்

குறவஞ்சியின் ஒரு கூறு; குழுவன் வருதல், பறவை வருதல், நண்பன் வருதல், பறவை சிக்குதல், சேர்ந்த சில ஊர்களின் வயலில் பறவை வேட்டை, சில பறவை அன்றிப் பிற சிக்காது ஓடல், கற்பனை, களியன் விளையாட்டு, மலர் கொய்திடல், சிங்கியைத் தேடல், மூலிகை, சொல்லுதற்குரிய மணிமந்திரம், காட்டுதல், காணுதல், நின்று ஏசல் என்பன அமையும். முன்னதாகச் சரணம், தோடயம், மங்களம் ஆகியவற்றை உடையது *(பிர.திர. 477)*

குழை

மரத்தின் உறுப்புகளுள் ஒன்று *(இல.விள. 921)*

குளகம்

1. செய்யுள் வகைகளுள் ஒன்று *(தொ.விள. 251)*
2. பல பாடல்கள் ஒரு வினை முடிவைக் கொண்டு முடிதல் *(தொ.வின. 252; சுவாமி. 162)*

குளிகன்

1. அட்ட நாகங்களுள் ஒன்று.
2. அந்தண சாதியினது
2. ▶ அட்ட நாகம் 1, 2 *(பிர.திர. 474)*

குளிர்ந்த நீர்ப்பந்தல்

முப்பத்திரண்டு அறங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 71)*

குற்றியலிகரம்

1. நஞ்செழுத்துகளுள் ஒன்று *(பன்.பா 24)*
2. தளையும் சீரும் கெட வந்த இடத்து அலகு பெறாது. (ஒற்றாகக் கருதப்படும். உம்மையால் கருதப்படாத இடமும் உண்டு எனப் புலனாகிறது) *(சித.பா. 12)*

(எ-டு) சிறுநன்றி இன்றிவர்க்கியாஞ் செய்தக்கால் நாளைப்
பெறுநன்றி மன்னும் பெரிதென் - றுறுநன்றி
தானவாய்ச் செய்வதூஉம் தானமன் றென்பவே
வானவாம் உள்ளத் தவர்

*(மேற்: யா.கல விருத்தியுரை நூ. 4, 95; யா.காரிகை 36, உரை; சித.பா.ப. 68)*

குற்றியலுகரம்

1. நஞ்சு எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 24)*
2. குற்றியலுகரத்தை அசையின் காரணமாக ஒற்று எனலாம். நேர்பு, நிரைபு என்ற இரு அசைகளையும் சீர் எனக் கொள்ள இயலாது. ஏனெனில் குற்றியலுகரம் ஒற்றின் இயல்பை உடையது. ஆகையால் அது ஓரசையாகக் கருதப்படும். இவ்வாறு கருதக்காரணம் - வெண்பாவின் இறுதியில் முடியும் ஓரசையாகிய நாள், மலர் என்பன உகரமின்றி முடியாது *(சித.பா. 12)*
3. தளையும் சீரும் கெடவந்த இடத்து அலகு பெறாது. (ஒற்றாகக் கருதப்படும் உம்மையால் ஒற்றாகக் கருதப்படாத இடமும் உண்டு எனப் புலனாகிறது) *(சித.பா. 12)*

(எ-டு) கொன்றுகோடுநீடு குருதிபாயவும்
சென்றுகோடுநீடு செழுமலைபொருவன
வென்றுகோடுநீடு விறல்வேழம்
என்றுமூடுநீடு பிடியுளபோலும்;
அதனால்
இண்டிடை இரவிவண் நெறிவரின்
வண்டுண் கோதை உயிர்வா மூலவே

*(மேற்: யா.கல விருத்தியுரை நூ. 4; யா.காரிகை 36. உரை; சித.பா.ப. 69)*

குறங்கு

▶ பாதாதி *(பன்.பா. 214; நவநீ.பா. 44)*

குறட்டாழிசை
1. பல சீர்களை உடையதாய் இறுதி அடி குறைந்துவரும் செய்யுள் (சித.பா. 8)
   (எ-டு) நீலமாகடல் நீடுவார்திரை நின்றபோற் பொங்கிப் மொன்று மாங்கவை
   காலம்பல் காலஞ்சென்றபின் செல்வர் யாக்கை கழிதலுமே.
   *(மேற்: யா.கல விருத்தியுரை நூ. 15, 66; யா. காரிகை 27, உரை; சித.பா.ப. 37)*
2. குறள்வெண்பா சந்தம் சிதைந்துவரினும், வெண்செந்துறை விழுமியபொருளும் ஒழுகிய ஓசையுமின்றி வரினும் இதன்பாற்படும் (சித.பா. 15)

குறத்திப்பாட்டு
1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(பன்.பா. 99)*
2. இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்னும் மூன்று காலத்து நிகழ்வனவற்றையும் திறம்பட உரைக்கும் நூல் *(பன்.பா. 217)*
3. குறத்திப் பாட்டும் உழத்திப் பாட்டைப் போலப் பத்துப்பாட்டால் பாடப்படும் நூல் *(பன்.பா. 218)*

குறம்
1. கலம்பக உறுப்புகளுள் ஒன்று *(பன்.பா. 129; வெண்.பா. 32; நவநீ.பா. 33; பிர.மர. 4; சித.பா. 29; இல.விள. 812; தொ.விள. 258; பிர.திர. 32; மு.வீ. 1041; பிர.தீபிகை. 7; பிர.தீபம். 295)*
2. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(சுவாமி. 166)*
3. தலைவி, தான் விரும்பிய தலைவனுடன் சேரும் வாய்ப்பினைக் குறத்தி குறிபார்த்து உரைக்கும் பகுதி *(பிர.தீபம் 29, உரை)*

குறவஞ்சி
தலைவன் உலாவர மகளிர் காமமுறல், தலைமை மோகினி வரவு, உலாவரும் தலைவனைக் கண்டு மையல் கொள்ளுதல், சந்திர உதயம், சந்திரன் பழிப்பு, தோழி உற்றது என்ன என வினவுதல், தலைவி தோழிக்குக் கூறுவதைச் சொல்லுதல், தோழி தலைவனை இகழ்ந்து பேசுதல், தலைவி தலைவனைப் போற்றுதல், நற்குலத்தினளான தலைவி தோழியிடம் தூது செல்லும்படி வேண்டுதல், குயில் போன்ற தலைவி தோழியிடம் கூச்சமில்லாமல் தலைவனது அடையாளம் கூறல், குறத்தி வருதல், குறத்தியிடம் தலைவி மலைவளம் கூறக்கேட்டல், மலை நாட்டின் குற்றமற்ற சிறப்பு முதலியவற்றை அவள் கூறுதல், குற்றமல்லாத தலைவனது நாட்டுவளம், உறவுச் சிறப்பு சொல்லுதல், குறத்தி பலவிடத்துக் குறி சொல்லி வந்ததைக் கூறுதல், இணைதல் பற்றிக் குறி கேட்டல், அக் குறத்தி இறைவழிபாடு செய்தல், பெண்ணின் குறிகளை ஆய்ந்து பின்பு நல்வரவு கூறுதல், தலைவி பரிசுகள் கொடுத்தல், குறவன் வருதல், பறவைகள் வருவதனைப் பற்றிச் சொல்லுதல் மடியுடைய வலையால் கண்ணி வைத்தல், பறவைகள் அதில் படுதல், குறத்தியை எண்ணி வருதல், குறவன் தன் தோழனிடம் வளம்நிறைந்த குறத்தியின் அடையாளம் கூறுதல், குறவன் குறத்தியை ஐயுறுதல், பல அணிகலன்கள் முதல் ஆடை பெறுகின்றமையைக் குறவனுக்கு அங்கங்கே கூறுகின்றமை என்னும் பல உறுப்புகளால் கழிநெடிலடிகளுடைய விருத்தம், வெண்பா, கலித்துறை, கொச்சகம், பலவகைக் கலிவிருத்தம், தரவு, அகவல், இடையிடையே கூறும் சிந்து முதலாக, பரிசு கொடுக்கின்ற தலைவன் மீது நாடகத் துறையாகப் பாடப்படும் சிற்றிலக்கியம் *(பிர.தீபிகை 28; பிர.தீபம். 92)*

குறவன்
குலப் பெயர்களுள் ஒன்று *(பிர.திர. 362)*

குறள் வெண்பா
இரண்டடியால் ஆனது; இது இருவகைப்படும்; அவை:
1. நேரிசை வெண்பா, 2. இன்னிசை வெண்பா *(சித.பா. 7)*

குறளடி
1. ஐவகை அடிகளுள் ஒன்று.
2. அடிதோறும் இரண்டு சீர்களால் அமையும் செய்யுள் (சித.பா. 5)
   (எ-டு) திரைத்த சாலிகை
   நிரைத்த போனிரந்
   திரைப்ப தேன்கனே
   விரைக்கொண் மாலையாய்

*(மேற்: சூளாமணி 744; யா.கல விருத்தியுரை நூ. 24; யா. காரிகை 13, உரை; சித.பா.ப. 15)*

குறளடி வஞ்சிப்பா
தனிச்சொல் பெற்றுச் சுரிதகத்தால் அமையும் செய்யுள் *(சித.பா. 11)*
(எ-டு) பூந்தாமரைப் போதலமரத்
தேம்புனலிடை மீன்றிரிதரும்
வளவயலிடைக் களவயின்மகிழ்

வினைகம்பலை மனைச்சிலம்பவும்
மனைச்சிலம்பிய மணமுரசொலி
வயற்கம்பலைக் கயலார்ப்பவும் நாளும்,
மகிழ மகிழ்தூங் கூரன்
புகழ்தல் ஆனாப் பெருவண் மையனே.

*(மேற்: யா.கல விருத்தியுரை நூ. 9, 15, 21, 90; யா.காரிகை 9, 34, உரை; சித.பா.ப. 62)*

## குறிஞ்சி

1. ஆசிரியப்பாவிற்கு உரிய நிலம் *(பன்.பா. 92; வெண்.பா. 69; பிர.மர. 25; இல.விள. 878; தொ.விள. 296; மு.வீ. 1013; பிர.திர. 417)*
2. முப்பத்திரண்டு இராகங்களுள் ஒன்று *(பிர.தீபிகை 51)*

## குறிஞ்சிப்பாட்டு

பெருங்காப்பியங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 45)*

## குறிஞ்சியின் பிறநிலச் சார்புடைப் பகுதிகளின் குலம், மாலை, கொடி

▶ அட்டவணை 7. *(பிர.தீபிகை. 45)*

## குறிப்புமொழி

எழுத்தாலும் சொல்லாலும், புலப்படுதலே அன்றிக் குறிப்பால் புலப்படும் பொருள் *(இல.விள. 907)*

## குறியறி சிந்து

தலைவன் பவனி வரல், மகளிர் கூட்டம், காமுறுதல், தலைவி வரல், உலாத் தலைவனைக் காணல், காமத்தால் துவள்தல், அவளை அங்கிருந்து நீக்கல், காமபாணத்தால் மன்மதன் எதிர்க்க உவாலம்பனம், தலைவனுறுப்பழகு பாங்கியிடம் கூறல், கூடலிழைத்தல், குறவஞ்சியிடம் குறிவினாவல், தலைவனது நாடு முதலியவற்றை அவள் கூறல் போன்றவற்றைச் சிந்து யாப்பால் பாடும் இலக்கியம். *(பிர.திர. 18)*; குறவஞ்சியின் யாப்புவழியில் அமைந்த குழுவ நாடகம் இவ்வகையது *(பிர.திர. 109)*

## குறுந்தொகை

1. பல பாட்டுகள் சேர்ந்து ஒரு நூலாகும் இலக்கியங்களுள் ஒன்று *(பன்.பா. 89)*
2. குறளடிச் செய்யுள்களின் தொகுப்பு *(பிர.தீபம். 53)*

## குறும்பர்

குலப் பெயர்களுள் ஒன்று *(பிர.திர. 363)*

## குன்றக் கூறல்

பத்துவகைக் குற்றங்களுள் ஒன்று; குறைபாடுறக் கூறுதல் *(இல.விள. 897)*

# கூ

## கூ

1. பெண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 27; வெண்.பா. 6; நவநீ.பா. 7; சித.பா. 20; தொ.விள. 289; பிர.திர. 124; சுவாமி 174; மு.வீ. 1031; பொரு.விள. 21)*
2. திருவாதிரைக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 42; வெண்.பா. 12; நவநீ.பா. 14; சித.பா. 23; இல.விள. 787; தொ.விள. 292; பிர.திர. 143; மு.வீ. 1034; பொரு.விள. 41)*
3. பொன் என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 5)*; சொல் என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.தீபிகை 3)*

## கூடசதுக்கம்

சித்திரகவி வகைகளுள் ஒன்று; கூடம்-மறைவு, சதுக்கம் - நான்கன் கூட்டம். ஒரு செய்யுளின் ஈற்றடியில் அமைந்துள்ள எழுத்துகள் ஏனைய மூன்றடிகளிலும் மறைந்து நிற்கும் வகையில் அமையும் பாடல் *(வெண்.பா. 26; நவநீ.பா. 67; இல.விள. 766 (690); மு.வீ. 1019)*

## கூடல் மாலை

பெண் தானாகக் கலவிக்கு ஒருப்படலைப் பாடும் இலக்கியம் *(பிர.திர. 9)*

## கூத்தராற்றுப்படை

ஆற்றுப்படை வகைகளுள் ஒன்று *(வெண்.பா. 52, உரை; இல.விள. 873, (பு. 19); தொ.விள. 266; பிர.திர. 27)*

## கூத்தன்

குலப் பெயர்களுள் ஒன்று *(பிர.திர. 362)*

## கூர்மன்

வாயுக்கள் பத்தனுள் ஒன்று *(பிர.திர. 379)*

**கூர்ச்சரம்**
ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று *(பிர.திர. 500-502; பிர.தீபிகை. 99)*

**கூர்ச்சரி**
முப்பத்திரண்டு இராகங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 51)*

**கூழ் வார்த்தல்**
பரணியின் உறுப்புகளுள் ஒன்று *(பன்.பா. 143; வெண்.பா. 61; நவநீ.பா. 57-61; பிர.திர. 45,46)*

**கூழை அளபெடை**
ஓரடியின் முதல், இரண்டு, மூன்றாம் சீரில் இடம்பெறும் அளபெடை (சித.பா. 6)
(எ-டு) மாஅத் தாஅள் மோஒட் டெருமை
*(மேற்: யா.கல விருத்தியுரை நூ. 41:4; யா.காரிகை 20, உரை; சித.பா.ப. 24)*

**கூழைஇயைபு**
1. தொடை வகை முப்பத்தைந்தனுள் ஒன்று *(சித.பா. 6)*
2. ஓரடியின் ஒன்று, இரண்டு, மூன்றாம் சீரிலுள்ள இறுதியெழுத்து ஒன்றிவரும் இயைபு (சித.பா. 6)
(எ-டு) மாதர் நகிலே வல்லே இயலே
*(மேற்: யா.கல விருத்தியுரை நூ. 40:4; யா.காரிகை 20, உரை; சித.பா.ப. 23)*

**கூழை எதுகை**
1. தொடை வகை முப்பத்தைந்தனுள் ஒன்று *(சித.பா. 6)*
2. ஓரடியின் முதல், இரண்டு, மூன்றாம் சீரில் இடம்பெறும் எதுகை *(சித.பா. 6)*
(எ-டு) நன்னிற மென்முலை மின்னிடை வருத்தி
*(மேற்: யா.கல விருத்தியுரை நூ 36:5; யா.காரிகை 20, உரை; சித.பா.ப. 23)*

**கூழை முரண்**
1. தொடை வகை முப்பத்தைந்தனுள் ஒன்று *(சித.பா. 6)*
2. ஓரடியின் முதல், இரண்டு, மூன்றாம் சீர்களில் இடம்பெறும் முரண் *(சித.பா. 6)*
(எ-டு) சிறிய பெரிய நிகர்மலர்க் கோதைதன்
*(மேற்: யா.கல விருத்தியுரை நூ. 38:4; யா.காரிகை 20, உரை; சித.பா.ப. 24)*

**கூழை மோனை**
1. தொடை வகை முப்பத்தைந்தனுள் ஒன்று *(சித.பா. 6)*
2. ஓரடியின் முதல், இரண்டு, மூன்றாம் சீர்களில் இடம்பெறும் மோனை *(சித.பா. 6)*
(எ-டு) அகன்ற அல்குல் அந்நுண் மருங்குல்
*(மேற்: யா.கல விருத்தியுரை நூ. 35:4; யா.காரிகை 20. உரை; சித.பா.ப. 22)*

**கூற்றுவன்**
1. சூத்திர சாதிக்குரிய எழுத்துகளைப் படைத்தவர் *(பன்.பா. 8)*
2. வணிகர்க்குரிய தேவதை *(நவநீ.பா. 12)*

**கூறியதுகூறல்**
பத்துவகைக் குற்றங்களுள் ஒன்று; முன்னர்க் கூறிய பொருளையே மீண்டும் கூறுதல் (இல.விள. 897)

**கூறிற்று என்றல்**
முப்பத்திரண்டு உத்திகளுள் ஒன்று; முன் கூறப்பட்டதோர் இலக்கணத்தைப் பின் மற்றொரு பொருளுக்கும் கூறவேண்டிய நிலை ஏற்படுகையில் மீண்டும் அதனை விளக்காது முன்னரே கூறப்பட்டுள்ளது என்று குறிப்பிடுதல் *(இல.விள. 898)*

**கூன்**
அடி முதற்கண் பாவினது பொருளைத் தழுவி நிற்கும் தனிச்சொல் (சித.பா. 16); இது பெரும்பான்மை வஞ்சிப்பாவின் ஈற்றிலும் சிறுபான்மை முதலிலும், இடையிலும் வரும். *(சித.பா. 16)*

## கெ

**கெ**
1. ஆண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 26; வெண்.பா. 6; நவநீ.பா. 7; சித.பா. 20; தொ.விள. 289; பிர.திர. 124; சுவாமி. 174; மு.வீ. 1031; பொரு.விள. 20)*
2. புனர்பூசத்திற்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 42; வெண்.பா. 12; நவநீ.பா. 23; இல.விள. 787; தொ.விள. 292; பிர.திர. 143; மு.வீ. 1034; பொரு.விள. 42)*
3. மணி என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 6; பிர.தீபிகை. 3)*

**கெண்டை**
வகுப்புறு இராகங்கள் முப்பத்திரண்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 53)*

## கே

### கே

1. பெண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 27; வெண்.பா. 6; நவநீ.பா. 7; சித.பா. 20; தொ.விள. 289; பிர.திர. 124; சுவாமி. 174; மு.வீ. 1031; பொரு.விள. 21)*
2. புனர்பூசத்திற்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 42; வெண்.பா. 12; நவநீ.பா. 14; சித.பா. 23; இல.விள. 787; தொ.விள. 292; பிர.திர. 143; மு.வீ. 1034; பொரு.விள. 42)*
3. மணி என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 6; பிர.தீபிகை 3)*

### கேகயம்

ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று *(பிர.திர. 500-502; பிர.தீபிகை. 99)*

### கேசாதி பாதம்

முடிமுதல் அடிவரை கலிவெண்பாவால் பாடும் இலக்கியம் *(பன்.பா. 214, உரை; வெண்.பா. 51; நவநீ.பா. 43; பிர.மர. 12; சித.பா. 35; இல.விள. 871; தொ.விள. 262; பிர.திர. 23; மு.வீ. 1107; பிர.தீபிகை. 24; பிர.தீபம். 73)*

### கேசாதிபாதமாலை

▶ கேசாதி பாதம் *(பிர.திர. 23)*

### கேட்டை

1. கலிப்பாவிற்கு உரிய நாள்களுள் ஒன்று *(பன்.பா. 93; வெண்.பா. 70; இல.விள. 881; தொ.விள. 297; மு.வீ. 1014; பிர.திர. 417)*
2. மிக்க செல்வத்தைத் தரும் நாள் *(இந்.காளி. 36; பன்.பா. 60; சித.பா. 25; இல.விள. 800, உரை; பிர.திர. 154)*

*கேட்டைநாளுக்கு உரிய எழுத்துகள்*

நெ, நே, நை *(பன்.பா. 46; வெண்.பா. 14; நவநீ.பா. 16; சித.பா. 23; இல.விள. 791; தொ.விள. 292, பிர.திர. 143; மு.வீ. 1034; பொரு.விள. 52)*

### கேட்பிக்கும் நெறி

நல்ல நாளில் நல்ல முகூர்த்தத்தில் கேட்கத் தகுந்த மங்கலச் சொல்லைத் தெரிந்து கொண்டு சொல்லியவற்றைச் செய்யும் அறிவுடையோர்க்கு உணர்த்தி இழுக்கானவற்றை நீக்கி வழுக்கில்லாத சொற்களை இசைக்க வேண்டும் *(நவநீ.பா. 101)*

### கேட்போர் மனங்கொள்ள வகையில் கூறல்

பத்துவகைக் குற்றங்களுள் ஒன்று; எவ்வகையிலும் கேட்பவர் மனங்கொள்ளாதிருக்கக் கூறுதல் *(இல.விள. 897)*

### கேட்போர்க்கு இன்னாப் பொருளாய்த் தொடர்ச்சியற்றுக்கூறல்

பத்துவகைக் குற்றங்களுள் ஒன்று; கேட்போர்க்குப் புரியா வண்ணம் தொடர்ச்சியற்ற முறையில் கூறுதல் *(இல.விள. 897)*

### கேதார கௌளம்

வகுப்புறு இராகங்கள் முப்பத்திரண்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 53)*

### கேமனம்

கன்மேந்திரியப் புலன்களுள் ஒன்று *(பிர.திர. 380)*

### கேரளம்

ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று *(பிர.திர. 500-502; பிர.தீபிகை. 99)*

## கை

### கை

1. பெண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 27; வெண்.பா. 6; நவநீ.பா. 7; சித.பா. 20; தொ.விள. 289; பிர.திர. 124; சுவாமி. 174; மு.வீ. 1031; பொரு.விள. 21)*
2. புனர்பூசத்திற்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 42; வெண்.பா. 12; நவநீ.பா. 23; சித.பா. 23; இல.விள. 787; தொ.விள. 292; பிர.திர. 143; மு.வீ. 1034; பொரு.விள. 42)*
3. நீர் என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 6)*; மணி என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 3)*

### கைக்கிளர்

குலப் பெயர்களுள் ஒன்று *(பிர.திர. 363)*

**கைக்கிளை**
1. கலம்பக உறுப்புகளுள் ஒன்று *(பன்.பா. 129; வெண்.பா. 32; நவநீ.பா. 33; பிர.மர. 4; சித.பா. 29; இல.விள. 812; தொ.விள. 258; பிர.திர. 32; மு.வீ. 1041; பிர.தீபிகை. 7; பிர.தீபம். 95)*
2. ஒருதலைக்காமம்; காட்சி, ஐயம், துணிவு, குறிப்பறிதல் நான்கும் அமையப் பாடப்படும் பகுதி *(பன்.பா. 129, உரை; நவநீ.பா. 33; இல.விள. 812; பிர.தீபம். 29, உரை)*

**கைக்கிளை மாலை**
1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(பன்.பா. 99)*
2. தொடர்நிலைச் செய்யுள் வகைகளுள் ஒன்று *(இல.விள. 805)*
3. ஆடவரும் மகளிரும் வருந்தும்படி, அறிய மயங்குதற்குக் காரணமாகிய ஒருதலைக் காமத்தைப் பொருளாக உடைய இலக்கியம் *(பன்.பா. 184; வெண்.பா. 37; பிர.மர. 13; சித.பா. 36)*
4. ஐந்து விருத்தங்களால் அமையும் இலக்கியம் *(வெண்.பா. 37, உரை; இல.விள. 827; மு.வீ. 1109)*
5. ஐந்து விருத்தங்களும் தனித்தனியே முப்பது முப்பது செய்யுள்களாக ஒருதலைக் காமமாகப் பாடப்படும் இலக்கியம் *(நவநீ.பா. 42)*
6. இஃதல்லாது முப்பத்திரண்டு வெண்பாவாலும் பாடப்படும் *(மு.வீ. 1110; பிர.தீபிகை. 20; பிர.தீபம். 74)*

**கைக்கிளை வேடர்**
குலப் பெயர்களுள் ஒன்று *(பிர.திர. 363)*

**கைந்நிலை அறுபது**
பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 44)*

**கைப்பில்லாப் பூ**
▶ மஞ்சரி *(பிர.திர. 99)*

**கையறம்**
உடற்குற்றம் பதினெட்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 70)*

**கையறம் ஓதாப் பா**
▶ கையறுநிலை *(வெண்.பா. 56; பிர.மர. 23; சித.பா. 43)*

**கையறுநிலை**
1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(பன்.பா. 99)*
2. தொடர்நிலைச் செய்யுள் வகைகளுள் ஒன்று *(இல.விள. 805)*
3. மண்ணாளும் வன்மை பொருந்திய மன்னர் வானுலகம் அடையப் புலவர்கள் மனங்கலங்கிப் பாடும் நூல் *(பன்.பா. 230; மு.வீ. 1100; பிர.தீபிகை. 25)*
4. கலிப்பா வஞ்சிப்பாவினால் கையறுநிலையைப் பாடார் *(பன்.பா. 231)*
5. தலைவனும் தலைவியும் ஒருங்கே இறந்த பொழுது தலைமகளின் தோழியர் தங்கள் துயரினை வெளிப்படுத்தித் தங்கள் செயலற்ற தன்மையைக் கூறல் *(பிர.தீபம். 67)*

**கைவல்லியம்**
முப்பத்திரண்டு உபநிடதங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 59)*

## கொ

**கொ**
1. பெண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 26; வெண்.பா. 6; நவநீ.பா. 7; சித.பா. 20; தொ.விள. 289; பிர.திர. 124; சுவாமி. 174; மு.வீ. 1031; பொரு.விள. 21)*
2. பூசத்திற்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 42; வெண்.பா. 12; நவநீ.பா. 14; சித.பா. 23 இல.விள. 787; தொ.விள. 292; பிர.திர. 143; மு.வீ. 1034; பொரு.விள. 43)*
3. திரு, திங்கள் என்னும் மங்கலச் சொற்களுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 5)*; சானவி என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 3)*

**கொங்கணம்**
ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று *(பிர.திர. 500-502; பிர.தீபிகை. 99)*

**கொங்கன்**
குலப் பெயர்களுள் ஒன்று *(பிர.திர. 362)*

**கொச்சக ஒருபோகு**
வண்ணக ஒத்தாழிசைக் கலியின்கண் அமைந்துவரும் முறை பிறழத் தரவு, தாழிசை, அராகம், அம்போதரங்கம், தனிச்சொல், சுரிதகம் என்னும் உறுப்புகள் மயங்கி, மிக்கு, குறைந்து வருவது *(பன்.பா. 123)*

### கொச்சகம்

ஒப்பின் பெயர், சிறியவும் பெரியவும் கலந்து அடுக்கியும் தம்முள் ஒப்ப அடுக்கியும் இயற்றப்படும் செய்யுள் *(பன்.பா. 124)*

### கொடி

1. தசாங்கம், சின்னப்பூவில் பாடப்படும் பத்துப் பொருள்களுள் ஒன்று *(பன்.பா. 139; வெண்.பா. 42; நவநீ.பா. 24; சித.பா. 32; தொ.விள. 263; பிர.திர. 15)*
2. அரசர்க்குரிய இருபத்தொரு சின்னங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 88)*

### கொடி ஞாழன் மணிபூதன்

சங்கப் புலவர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை. 86)*

### கொடை

1. குடைமங்கலப் பொருள்களுள் ஒன்று *(பன்.பா. 121)*
2. மூன்று வகைப்படும்: 1. தலைக்கொடை 2. இடைக்கொடை 3. கடைக்கொடை *(பிர.திர. 424)*
3. இக்கொடையாளர் மொத்தம் இருபத்தொரு வள்ளல்கள் *(பிர.திர. 502 - 506)*
4. ► மூவேழு வள்ளல்கள்.

### கொடைச் சிறப்பு

வருந்தி, கோடி பொன் கொடுத்து, அழகு இல்லாத பெண்களைப் பொருந்துவதை விட, அருந்தும்படியான நல்ல அமுதம் போன்றவளின் முகத்தைப் பார்ப்பது மிக உயர்ந்தது. அதுபோல 'நன்று' எனத் தன் தலையை ஆட்டாதவன் கொடுக்கும் கோடிப் பொன்னைவிட, அன்புற்று, சொல்திறன் அறிந்து இன்பம் சேருகின்ற மனிதரின் முகச்செவ்வி மேன்மையுடையது *(பிர.திர. 525)*

### கொடையாளிகள்

1. செங்கை அறுத்த செழியன் (பொற்கை பாண்டியன்); துலையில் ஏறிய சோழன் (சிபி); எலும்பு ஈந்த முனிவன் (ததீசி); நீர் கொடுத்த பார்ப்பான்; விராதன் எறிதல் பொறுத்த தருமன் *(பிர.திர. 511)*
2. தமிழ் நாட்டினில் தமிழுக்கு உதவுபவர்கள் தொண்ணூற்றாறு பெயராம். அவர்களின் புகழினை கீர்த்தி விசேடத்தால் (நூலாக இருக்கலாம்) அறியலாம். இவர்களை வரையறுத்துக் கூறுதல் இயலாது; பாம்பு முதலியன இவர்க்கு இரங்கும் எனில் சொல்லொத்த மானிடர் இரங்குவதற்கு என்ன; விதரண சொர்க்கத்தில் சேருதற்குரிய வள்ளன்மை உடையவர்கள் *(பிர.திர. 512)*
3. கொடையாளியின் உயிர் போர் வீரர் உயிர் போல, பொன்தூண் போலப் போகும் *(பிர.திர. 422)*
4. ஏழையாக இருந்தவன் மன்னவன் ஆனால் இலக்குமி, கலைமகள் இருவரும் அவனிடம் வந்து உரைவர். நாளை கொடுப்பேன் என்பவனின் கொடை, புகழ் சார்ந்த கொடையன்று *(பிர.திர. 437)*
5. கொடைத்தன்மை குறைந்தவரை மிக உயர்த்திப் பாடுதல் நலமன்று *(பிர.திர.)*
6. கலையரங்கு ஏற்றியபோது காலம் தாழ்த்திக் கொடை அளித்தால் அரசனுக்குத் தீவினை உண்டாகும் *(பிர.திர. 435)*
7. புலவனுக்குப் பொருளும் பொன்னும் தருகிறோம் என்று அலைவு பண்ணினால் கலைமகள் அவனிடம் வாழாது நீங்குவாள். தீப் போன்ற அரசப் புலவனது மனதின் இழுக்கை அரசனே பெறுவான்; ஏழாவது நரகத்தைச் சேர்வான் *(பிர.திர. 437)*
8. கவியின் ஊற்றம் நோக்கி உதவினால் பூரிப்புக் கொள்வர். கொடுப்பது குறைந்தால் தலைவனுக்குக் குறை உண்டாகும் *(பிர.திர. 431)*
9. பிறப்பு முதல் இறப்புவரை நல்லகவி கேட்பதில் பிழையில்லை. இறந்தும் இடம் கொடுத்தவர் உண்டு. நந்திவர்மன் ஈமத்தின் மேலிருந்து கவி கேட்டனன். ஆக நல்ல கவிஞன் கவிதை எழுதினால் அதனை மன்னன் எப்போது வேண்டுமானாலும் கேட்கலாம் *(பிர.திர. 517)*

### கொடையளிக்கும் நேரம்

நேரிய பகல் நேரத்திலும் மதியம் வரையும் இரவினிலும் கொடுத்தால் நிதி பெருகும்; மற்றவைக்கு நிதி குறையும் *(பிர.திர. 423)*

### கொடையாளன் உயிர் போகும் முறை

மேலான விதரண சுவர்க்கத்தில் கொடையாளன் உயிர் சேரும்; இடை கடைக் கொடையாளர் உயிர் சீறியெழும் காற்றாகி, கனலாகித் தலையிடத்து எழுந்து ஓடும். இடைக்கொடையாளனின் ஒளிவிடும் உயிர், பொன் தூணாகி வானில் எழும் *(பிர.திர. 423)*

### கொடைவேந்தரின் இயல்பு

எப்போதும் சிரித்த முகத்தினை உடையவர்; விரித்த கையினர்; நடந்து புக விடுப்பவர்; இனிய மொழி கூறுபவர்; கவிஞன் கூறும் கவிதையின் தகைமை அறிந்து தம் மணிமுடி அசைப்பவர்; அக் கவிதையைத் தாம் கொள்ள, மிகுதி அறிந்து அளிப்பவர் *(பிர.திர. 526)*

**கொப்பூழ்**

► பாதாதி *(பன்.பா. 214; நவநீ.பா. 44)*

**கொல்லம்**

ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று *(பிர.திர. 500-502; பிர.தீபிகை. 99)*

**கொல்லர்**

குலப் பெயர்களுள் ஒன்று *(பிர.திர. 363)*

**கொள்ளிக்கால்**

குதிரைக்கு ஆகாத இருபது சுழிகளுள் ஒன்று *(பிர.திர. 388)*

**கொன்றை**

1. இறைவன் அணிதற்குரிய மலர்களுள் ஒன்று *(பிர.திர. 37)*
2. பெண்டிர் அணியும் மலர் மாலைகளுள் ஒன்று *(பிர.திர. 201)*

## கோ

**கோ**

1. பெண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 27; வெண்.பா. 6; நவநீ.பா. 7; சித.பா. 20; தொ.விள. 289; சுவாமி. 174; மு.வீ. 1031; பொரு.விள. 21)*
2. பூசத்திற்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 42; வெண்.பா. 12; நவநீ.பா. 14; சித.பா. 23; இல.விள. 787; தொ.விள. 292; பிர.திர. 143; மு.வீ. 1034; பொரு.விள. 43)*
3. திரு, திங்கள் என்னும் மங்கலச் சொற்களுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 5)*; சானவி என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 3)*

**கோங்கு**

1. இறைவன் அணிதற்குரிய மலர்களுள் ஒன்று *(பிர.திர. 37)*
2. பெண்டிர் அணியும் மலர் மாலைகளுள் ஒன்று *(பிர.திர. 201)*

**கோசலம்**

ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று *(பிர.திர. 500-502; பிர.தீபிகை. 99)*

**கோத்திரப் பெயர்**

1. எண்வகைப் பெயர்களுள் ஒன்று *(பன்.பா. 74)*
2. தந்தையின் குடிப்பெயர் *(பன்.பா. 77)*

**கோதமன்**

சங்கப் புலவர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை. 85)*

**கோமுட்டி**

குலப் பெயர்களுள் ஒன்று *(பிர.திர. 362)*

**கோமூத்திரி**

சித்திரகவி வகைகளுள் ஒன்று *(வெண்.பா. 26, நவநீ.பா. 67; இல.விள. 766 (690); பிர.திர. 56; மு.வீ. 1019)*; நான்கடிச் செய்யுளை இரண்டு அடியாக எழுதி மேலும் கீழுமாக ஓரெழுத்து இடையிட்டு வாசிக்கையில் அப்பாடலே அமையும் இலக்கிய வகை.

**கோயில் சிறப்பு**

பரணியின் உறுப்புகளுள் ஒன்று *(பன்.பா. 143; வெண்.பா. 61; நவநீ.பா. 57-61; பிர.மர. 19; சித.பா. 41; தொ.விள. 259; பிர.திர. 45, 46; மு.வீ. 1040; பிர.தீபிகை. 6)*

**கோவூர் வனக்கிழார்**

சங்கப் புலவர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை. 85)*

**கோவேறு விடுதல்**

முப்பத்திரண்டு அறங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 71)*

**கோவை**

1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(பன்.பா. 99)*
2. தொடர்நிலைச் செய்யுள் வகைகளுள் ஒன்று *(இல.விள. 805)*
3. ஒரு நூல் பல பாட்டுகளை உடையதாக விளங்கும் இலக்கியம் *(பன்.பா. 88)*
4. இவ்விலக்கியத்தின் மதிப்பு 2000 பொன் *(பிர.திர. 86)*
5. அரசனுக்குப் பாடப்பெறும் இலக்கியங்களுள் ஒன்று *(பிர.திர. 81)*
6. அகப்பொருள் இலக்கணத்தைத் தழுவி ஐந்திணையினின்று திரியாததாய் களவு, கற்புக்குரிய கிளவிகளைப் பழமையாகிய முறையில் வரும் கட்டளைக் கலித்துறை நானூற்றால் பாடும் நூல் *(பன்.பா. 221; வெண்.பா. 37; நவநீ.பா. 54; சித.பா. 30; இல.விள. 815; சுவாமி. 167; மு.வீ. 1042; தொ.விள. 277; பிர.தீபிகை. 8; பிர.திர. 42)*

7. காதல் தொடங்கி காந்திருவ மணம் வரை கொடிச்சியும் ஊரனும் குலவுநெறியில் நடப்பது அகப்பொருட் கோவை *(பிர.மர. 7)*
8. திணை, கைகோள், கூற்று, கேட்போர், களன், காலம், பயன், மெய்ப்பாடு, எச்சம், முன்னம், பொருள், துறை என்னும் பன்னிரு அகப்பாட்டு உறுப்புகளையும் கூறி தோழி, தலைவி என்னும் பெண்டிர் கூற்றைச் சமமாக இணைக்க நூறுபாடல்களால் மருதத்தைப் பொருளாகக் கொண்டு அமையும் இலக்கியம் *(பிர.திர. 106; பிர.தீபிகை. 8)*
9. கலித்துறையில் கோவை இலக்கியம் உரைத்தாராயினும், பிற பாக்களில் உரைத்தால் மிகை என்பது இல்லை. திணைமுதலிய பன்னிரு கூறுகளும் அமைவது அழகு. கீரர் ஆசிரியப்பாவில் கோவை செய்தார். பெரும் பூதர் விருத்தப் பாடலின் தொகையாகக் கோவை செய்தார். *(பிர.திர. 497)* (இந்நூல்கள் எவையெனத் தெரியவில்லை)
10. போதிய அளவு கொடையளிக்க வல்லவர் இல்லாததால் குலவுகின்ற வர்க்கம், (வருக்கக் கோவை), பிற (ஒரு துறைக் கோவை) எனப் பகுத்துக் கலித்துறை அல்லாத பா எல்லாவற்றிலும் புனையப்படுவது *(பிர.திர. 471)*

### கோள்களின் மனைவி, மக்கள்

| கோள் | மனைவி | மகன் |
|---|---|---|
| கதிரவன் | உசை, பிரத்தியுசை | இயமன், சனி |
| சந்திரன் | இருபத்தியேழு நட்சத்திரங்கள் | புதன், தனதத்தன், வருணன் |
| செவ்வாய் | இளை | அனலோன் |
| புதன் | தாரை | விச்சுருவா |
| குரு | இலச்சை | வாயு, நிருதி |
| வெள்ளியோன் | அனிட்டை | - |
| சனி | கெடுவி | துப்பிரன் |
| இராகு. கேது | விறுஞ்சை, பிறுஞ்சை | - *(பிர.திர. 271)* |

### கோளரிக் குருளை

ஆண்பால் பிள்ளைப்பாட்டுக்குரிய உவமைகளுள் ஒன்று *(பன்.பா. 114)*

## கௌ

### கௌ

1. பெண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 27; வெண்.பா. 6; நவநீ.பா. 7; சித.பா. 20; தொ.விள. 289; சுவாமி. 174; மு.வீ. 1031, பொரு.விள. 21)*
2. புனர்பூசத்திற்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 42; வெண்.பா. 12; நவநீ.பா. 14; சித.பா. 23 இல.விள. 787; தொ.விள. 292; பிர.திர. 143; மு.வீ. 1034; பொரு.விள. 43)*
3. திரு, திங்கள் என்னும் மங்கலச் சொற்களுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 5)*

### கௌதம்

பதினெண் மிருதிகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 58)*

### கௌதமன்

இசைக்குரிய தேவர்களுள் ஒருவர் *(பிர.திர. 92)*

### கௌமாரி

சத்த மாதர்களுள் ஒருவர் *(பன்.பா. 109, உரை; நவநீ.பா. 27, உரை)*

► வேய்த்தோள் எழுவர்

### கௌமாரி ஆயுதம்

வேல் *(பன்.பா. 109, உரை)*

### கௌமாரி வாகனம்

மயில் *(பன்.பா. 109, உரை)*

### கௌரவரின் பெற்றோர்

காந்தாரி, திருதராட்டிரன் *(பிர.திர. 309)*

## ங்

### ங்

அலி எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 28; வெண்.பா. 6; நவநீ.பா. 7; சித.பா. 20; இல.விள. 773; தொ.விள. 289; பிர.திர. 125; மு.வீ. 1031; பொரு.விள. 22)*

## ங

**ங**

1. சிவன் படைத்த எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 4; வெண்.பா. 10; நவநீ.பா. 11; சித.பா. 21; இல.விள. 778)*
2. அயன் படைத்த எழுத்துகளுள் ஒன்று *(சுவாமி. 175)*
3. அந்தண சாதிக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 5; வெண்.பா. 9; நவநீ.பா. 12; சித.பா. 21; இல.விள. 774; தொ.விள. 291; சுவாமி. 175; மு.வீ. 1033; பொரு.விள. 33)*
4. அரச சாதிக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.திர. 135)*
5. மக்கள் கதிக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 15; வெண்.பா 18; நவநீ.பா. 20; சித.பா. 24; இல.விள. 798; தொ.விள. 293; பிர.திர. 152; சுவாமி. 176; மு.வீ. 1036; பொரு.விள. 27)*
6. ஆண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 26; வெண்.பா. 6; நவநீ.பா. 7; சித.பா. 20; தொ.விள. 289; பிர.திர. 124; சுவாமி. 174; மு.வீ. 1031; பொரு.விள. 20)*
7. நஞ்செழுத்துகளுள் ஒன்று *(சித.பா. 20; சுவாமி. 175)*
8. அமுத எழுத்துகளுள் ஒன்று *(பிர.திர. 128)*

## ஙா

**ஙா**

பெண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 26; வெண்.பா. 6; நவநீ.பா. 7; சித.பா. 20; தொ.விள. 289; பிர.திர. 124; சுவாமி. 174; மு.வீ. 1031; பொரு.விள. 21)*

## ஙி

**ஙா**

ஆண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 26; வெண்.பா. 6; நவநீ.பா. 7; சித.பா. 20; தொ.விள. 289; பிர.திர. 124; சுவாமி. 174; மு.வீ. 1031; பொரு.விள. 20)*

## ஙீ

**ஙீ**

பெண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 26; வெண்.பா. 6; நவநீ.பா. 7; சித.பா 20; தொ.விள. 289; பிர.திர. 124; சுவாமி. 174; மு.வீ. 1031; பொரு.விள. 21)*

## ஙு

**ஙு**

ஆண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 26; வெண்.பா 6; நவநீ.பா. 7; சித.பா. 20; தொ.விள. 289; பிர.திர. 124; சுவாமி. 174; மு.வீ. 1031; பொரு.விள. 20)*

## ஙூ

**ஙூ**

பெண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 27; வெண்.பா. 6; நவநீ.பா. 7; சித.பா. 20; தொ.விள. 289; பிர.திர. 124; சுவாமி. 174; மு.வீ. 1031; பொரு.விள. 21)*

## ஙெ

**ஙெ**

ஆண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 26; வெண்.பா. 6; நவநீ.பா. 7; சித.பா. 20; தொ.விள. 289; பிர.திர. 124; சுவாமி. 174; மு.வீ. 1031; பொரு.விள. 20)*

## ஙே

**ஙே**

பெண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 27; வெண்.பா. 6; நவநீ.பா. 7; சித.பா. 20; தொ.விள. 289; பிர.திர. 124; சுவாமி. 174; மு.வீ. 1031; பொரு.விள. 21)*

## ஙை

**ஙை**

பெண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 27; வெண்.பா. 6; நவநீ.பா. 7; சித.பா. 20; தொ.விள. 289; பிர.திர. 124; சுவாமி. 174; மு.வீ. 1031; பொரு.விள. 21)*

## ஙொ

ஙொ

ஆண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 26; வெண்.பா. 6; நவநீ.பா. 7; சித.பா. 20; தொ.விள. 289; பிர.திர. 124; சுவாமி. 174; மு.வீ. 1031; பொரு.விள. 20)*

## ஙோ

ஙோ

பெண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 27; வெண்.பா. 6; நவநீ.பா. 7; சித.பா. 20; தொ.விள. 289; பிர.திர. 124; சுவாமி. 174; மு.வீ. 1031; பொரு.விள. 21)*

## ஙௌ

ஙௌ

பெண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 27; வெண்.பா. 6; நவநீ.பா. 7; சித.பா. 20; தொ.விள. 289; பிர.திர. 124; சுவாமி. 174; மு.வீ. 1031; பொரு.விள. 21)*

## ச்

ச்

அலி எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 28; நவநீ.பா. 7; வெண்.பா. 6; சித.பா. 20; தொ.விள. 289; இல.விள. 773; பிர.திர. 125; மு.வீ. 1031; பொரு.விள. 20)*

## ச

ச

1. திருமால் படைத்த எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 4; வெண்.பா. 10; நவநீ.பா. 11; சித.பா. 21; இல.விள. 778, சுவாமி. 175; பொரு.விள. 21)*
2. அந்தண சாதிக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 5; வெண்.பா. 9; நவநீ.பா. 12; சித.பா. 21; இல.விள. 774; தொ.விள. 291)*
3. அரச சாதிக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.திர. 135; சுவாமி. 175; மு.வீ. 1033; பொரு.விள. 33)*
4. வானவர் கதிக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 14, வெண்.பா. 18; நவநீ.பா. 20; சித.பா. 24; இல.விள. 798; தொ.விள. 293; பிர.திர. 152; சுவாமி. 176; மு.வீ. 1036)*
5. அமுத எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 20; வெண்.பா. 7; நவநீ.பா. 10; சித.பா. 20; இல.விள. 779; தொ.விள. 290; பிர.திர. 128; சுவாமி. 175; மு.வீ. 1032; பொரு.விள. 27)*
6. ஆண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 26; வெண்.பா. 6; நவநீ.பா. 7; சித.பா. 20; தொ.விள. 289; பிர.திர. 124; சுவாமி. 174; மு.வீ. 1031; பொரு.விள. 20)*
7. இரேவதி நாளுக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 43; வெண்.பா. 13; நவநீ.பா. 15; சித.பா. 23; இல.விள. 788; தொ.விள. 292; பிர.திர. 143; மு.வீ. 1034; பொரு.விள. 44)*
8. பார் என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 8)*; அமுதம், பால் மணி என்னும் மங்கலச் சொற்களுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 3)*

சக்கரம்

1. இறைவனுடைய ஐம்படைகளுள் ஒன்று *(பன்.பா. 179)*
2. சித்திரகவி வகைகளுள் ஒன்று; வண்டிச் சக்கரம் போல் வரையப்பட்ட சித்திரம் ஒன்றில் அதன் குடம், பரிதி, ஆரங்கள் ஆகியவற்றில் உரிய முறையில் எழுத்துகளைப் பொருத்தி இயற்றப்பெறும் செய்யுள் *(வெண்.பா. 26; நவநீ.பா. 67; இல.விள. 766 (690); பிர.திர. 58)*
3. மங்கலச் சொற்களுள் ஒன்று *(நவநீ.பா. 2, உரை)*
4. அரசர்க்குரிய இருபத்தொரு சின்னங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 88)*

சக்கிலியர்

குலப் பெயர்களுள் ஒன்று *(பிர.திர. 363)*

ச கணம்

▸ வாயுக்கணம் ▸ கணப்பொருத்தம் *(பிர.திர. 154; சுவாமி. 177)*

ச கணம்

▸ சூரியகணம் *(பிர.திர. 154; சுவாமி. 177)* (இரு கணங்களைச் 'ச' கணம் என்றழைக்கின்றன இவ்விரு பாட்டியல்களும்)

சகத்திரம்

சிவாகமம் இருபத்தெட்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 60)*

**சகத்திராங்கி (சகத்திராங்கம்)**

1. எல்லாப் பாக்களும் வரும்படி ஆயிரம் பாடலால் அமையும் இலக்கியம் *(பிர.திர. 44)*
2. இவ்விலக்கியத்தின் மதிப்பு 32000 பொன் *(பிர.திர. 87)*

**சகம்**

ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று *(பிர.திர. 500-502; பிர.தீபிகை. 99)*

**சகி**

தூதுப் பொருள்களுள் ஒன்று *(பிர.திர. 30)*

**சகுனம்**

அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 72)*

**சங்கபாலன்**

1. அட்ட நாகங்களுள் ஒன்று.
2. அரச சாதியினது.
3. ➤ அட்டநாகம் 1, 2 *(பிர.திர. 474)*

**சங்கப் புலவர்கள்**

1. கோவூர் வனக்கிழார், 2. கபிலர், 3. பரணர், 4. மாமூலர், 5. கீரர், 6. நல்கூர் வேள்வியார், 7. மருத்துவன் தாமோதரன், 8. அரிசிற்கிழார், 9. கோதமன், 10. நத்தத்தர், 11. ஆலங்குடி வங்கனார், 12. ஆசிரியர் நல்லந்துவன், 13. சிறுமேதாவி, 14. அக்காரக்கனி நச்சுமன், 15. தொடித்தலை விழுத்தண்டி(னார்), 16. சீத்தலைச் சாத்தனார், 17. மாங்குடி மருதனார், 18. கல்லாடர், 19. பொத்தியார், 20. நரிவெரூஉத் தலையார், 21. நாயகன் தேவனார், 22. முதுமொழியினனான கவுணியன், 23. எறிச்சலூர் மலாடனார், 24. மோசிகீரன், 25. அச்சுமன், 26. முகையலூர் சிறுகருந்தும்பியார், 27. உறையூர் முதுக்கூத்தர், 28. பொன்முடியார், 29. பாரதம்பாடிய பெருந்தேவனார், 30. காவிரிப்பட்டினக்காரிக் கண்ணனார், 31. பண்களத்தூர்க்கிழார், 32. மதுரை(யில் மேவுகின்ற) பாடலாசிரியர், 33. தேனீக்குடிக்கீரன், 34. இழிகட் பெருங்கண்ணன் 35. வெள்ளி வீதியார், 36. கீரந்தையார், 37. குலபதி, 38. மதுரைத் தமிழாசிரியர் 39. செங்குன்றூர்க் கிழார், 40. பெருஞ்சித்திரனார், 41. காவேரியார் மகன் எனும் சாத்தன் 42. நப்பாலத்தர், 43. இளவேட்டனார், 44. மதுரைப்பெருமருதர், 45. செயலூர்ச்செங்கணர், 46. உருத்திரசன் மகனார், 47. கொடி ஞாழன் மணிபூதன், 48. மதுரைத் தமிழ் நாயகன், 49. வண்ணக்கஞ் சாத்தர், 50. கவிப்பெருஞ்சாகரன், 51. அரசன் உக்கிர வழுதி *(பிர.தீபிகை. 85, 86)*

**சங்கம்**

மங்கலச் சொற்களுள் ஒன்று *(சுவாமி. 173)*

**சங்கராபரணம்**

வகுப்புறு இராகங்கள் முப்பத்திரண்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 53)*

**சங்கிராமலக்கணம்**

அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 72)*

**சங்கிலித நிர்ணயம்**

பதினெண் மிருதிகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 58)*

**சங்கினி**

நாடி பத்தனுள் ஒன்று *(பிர.திர. 379)*

**சங்கு**

1. இறைவனின் ஐம்படைகளுள் ஒன்று *(பன்.பா. 179)*
2. மங்கலச் சொற்களுள் ஒன்று *(வெண்.பா. 2, உரை; நவநீ.பா. 2,உரை; வரை.பா. 7; சித.பா. 18,உரை)*
3. அரசர்க்குரிய இருபத்தொரு சின்னங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 88)*

**சங்குப் பூ**

பெண்டிர் அணியும் மலர் மாலைகளுள் ஒன்று *(பிர.திர. 201)*

**சச்சற்புடம்**

ஐவகைத் தாளங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 49)*

**சசி**

மங்கலச் சொற்களுள் ஒன்று *(சுவாமி. 173)*

**சட்சு**

ஞானேந்திரியம் ஐந்தனுள் ஒன்றாகிய கண் *(பிர.திர. 378)*

**சட்பிதாபுத்தரிகம்**

ஐவகைத் தாளங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 49)*

**சடானனம்**

வெண்பா, கலித்துறை, அகவல், அகவல் விருத்தம் என்னும் நான்குடன் கலிப்பாவும் தாழிசையும் இணைந்து தொடரும் ஆறு பாடல்களால் ஆன இலக்கியம் *(பிர.திர. 14)*

**சண்பகம்**

1. கலிப்பாவிற்கு உரிய பூ *(பன்.பா. 93)*
2. மஞ்சரிக்குரிய பத்துவகை மரங்களுள் ஒன்று *(பிர.திர. 35)*
3. பெண்டிர் அணியும் மலர் மாலைகளுள் ஒன்று *(பிர.திர. 201)*

**சண்முகப்பா**

► சடானனம்

தாழிசையினை அமைத்து இசை சேர்க்கும் இலக்கியம் *(பிர.திர. 109)*

**சத்தப்பிரமம்**

அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்று *(பிர.தீபகை. 72)*

**சத்தம்**

ஐந்து புலன்களுள் ஒன்றான ஓசை *(பிர.திர. 378)*

**சத்தமாதரின் பிறப்பிடம்**

1. ஏழு உலகங்களையும் ஏழு உருவில் காப்பதற்காகப் பரையின் ஏழிடங்களில் சப்த மாதர்கள் தோன்றினர்.
2. ஏழிடங்களாவன: 1. சென்னி, 2. நெற்றி, 3. முகம், 4. மூக்கு, 5. கண், 6. வாய், 7. கண்டம் *(பிர.திர. 282)*

**சத்தமாதர்**

சத்தமாதரின் பெயர், ஊர்தி, ஆயுதம், நடனம், படை ஆகியன வருமாறு:

| பெயர் | ஊர்தி | ஆயுதம் | நடனம் | படை |
|---|---|---|---|---|
| பிரமாணி | அன்னம் | வேதம் | துடி | குறள் பூத கணம் |
| மயேஸ்வரி | ஏறு | பினாகு | ,, | |
| கவுமாரி | மயில் | அயில் | ,, | |
| நல்நாரணி | கருடன் | சக்கரம் | ,, | |
| வராகி | சிங்கம் | கலப்பை | ,, | |
| இந்திராணி | யானை | வச்சிராயுதம் | ,, | |
| காளி | பேய் | சூலம் | ,, | |

வாழுமிடம் - தனிவுடைய ஏழு மலை *(பிர.திர. 265)*

**சத்தி**

சிவதத்துவம் ஐந்தனுள் ஒன்று *(பிர.திர 379)*

**சதகம்**

1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(சுவாமி. 165)*
2. தொடர்நிலைச் செய்யுள் வகைகளுள் ஒன்று *(இல.விள. 805)*
3. கற்று வல்லோரால் அகப்பொருள் அல்லது புறப்பொருள் மீது நூறு பாடல்களால் பாடப்பெறும் இலக்கியம் *(இல.விள. 847; சுவாமி. 168, மு.வீ. 1117; பிர.தீபிகை. 26; பிர.தீபம். 81)*

**சதயம்**

1. நீர்க்கணத்திற்கு உரிய நாள் *(இந்.காளி 36; பன்.பா. 61; சித.பா. 25; இல.விள. 800, உரை; பிர.திர 154)*
2. சூரியனைப் போலச் சீர்பெருகி விளங்கச் செய்யும் நாள் *(பன்.பா. 61; சித.பா. 25; இல.விள. 800, உரை; பிர.திர. 154)*
3. ► கணப்பொருத்தம்.
4. வஞ்சிப்பாவிற்கு உரிய நாள்களுள் ஒன்று *(பன்.பா. 94; வெண்.பா. 70; பிர.மர. 26; இல.விள. 881; தொ.விள. 298; மு.வீ. 1015; பிர.திர. 417)*
   *சதயம் நாளுக்கு உரிய எழுத்துகள்*
   தொ, தோ, தௌ *(பன்.பா. 45; வெண்.பா. 14; நவநீ.பா. 16; சித.பா. 23; இல.விள. 790; தொ.விள. 292; பிர.திர. 143; மு.வீ. 1034; பொரு.விள. 50)*

**சந்தனம்**

1. வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா ஆகியவற்றுக்குரிய நறுமணப் பொருள் *(பன்.பா. 91-93)*
2. மங்கலச் சொற்களுள் ஒன்று *(சுவாமி. 173)*
3. பெண்டிர் அணியும் மலர் மாலைகளுள் ஒன்று *(பிர.திர. 202)*

**சந்திரகலை**

விண்மாதர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை. 46)*

**சந்திர கணம்**

1. உரிய சீர்: நிரை நேர் நேர் *(இந்.காளி. 16; பன்.பா. 58; வெண்.பா. 20; நவநீ.பா. 22; இல.விள. 800; தொ.விள. 294; பொரு.விள. 76)*
2. ப கணம், எனவும் சில பாட்டியல்கள் இதனைக் கூறுகின்றன *(சித.பா. 26; பிர.திர. 157; சுவாமி. 177)*
3. உரிய நாள்: மிருகசீரிடம் *(இந்.காளி. 36; பன்.பா. 59, சித.பா. 25; இல.விள. 800, உரை)*
4. உரிய நாள் அத்தம் எனவும் கூறப்படுகிறது *(பிர.திர. 154)*
5. பாட்டுடைத் தலைவற்கு நீண்ட வாழ்நாளைக் கொடுக்கும் கணம் *(பொரு.விள. 84)*

**சந்திரஞானம்**

சிவாகமம் இருபத்தெட்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 60)*

**சந்திரன்**

1. அரச சாதிக்குரிய எழுத்துகளைப் படைத்த மூவருள் ஒருவர் *(பன்.பா. 6)*
2. அரசர்க்குரிய தேவதைகளுள் ஒன்று *(நவநீ.பா. 12)*
3. பிள்ளைப்பாட்டு பாடுதற்குரிய காப்புக் கடவுளருள் ஒருவர் *(பன்.பா. 106; இல விள. 808)*
4. வெண்பாவிற்கு உரிய கடவுளருள் ஒருவர் *(பன்.பா. 91)*
5. வெண்பாவிற்குரிய கோள்களுள் ஒன்று எனச் சில பாட்டியல்கள் கூறுகின்றன *(பிர.மர. 27; இல.விள. 883; தொ.விள. 295; மு.வீ. 1012; பிர.திர. 417)*
6. பருவரல் வளரக் காரணமானவற்றுள் ஒன்று *(பன்.பா. 185)*
7. மஞ்சரியில் குறிக்கப்படும் தெய்வங்களுள் ஒன்று.
8. பகலிலும் இரவிலும் வழிபடற்குரியது. *(பிர.திர. 36)*
9. இசைக்குரிய தேவர்களுள் ஒருவர் *(பிர.திர. 9)*
10. உரிய அசை: நிரை நேர் *(இல.விள. 802; பிர.திர. 158)*

**சந்திரன் படைத்த எழுத்துகள்**

ய,ர *(பன்.பா. 4; வெண்.பா. 10; நவநீ.பா. 11; சித.பா. 21; இல.விள. 778; சுவாமி. 175)*

**சந்திரரேகை**

விண்மாதர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை. 46)*

**சந்திரோதயம்**

நிலவு ஒளிவீசுங்கால் காதலினால் ஏற்பட்ட மயக்கத்தினைக் கலித்தாழிசையால் கூறும் இலக்கியம் *(பிர.திர. 51)*

**சப்தத்தாளம்**

1. துருவதாளம் 2. மட்டியம் 3. உரூபகம் 4. சம்பைதாளம் 5. திரிபுடைதாளம் 6. அடைதாளம் 7. ஏகதாளம் *(பிர.தீபிகை. 49)*

**சப்பாணி**

1. ஆண்பால் பிள்ளைப்பாட்டு நிலைகளுள் ஒன்று *(பன்.பா. 102; வெண்.பா. 30; நவநீ.பா. 29; பிர.மர. 2; சித.பா. 28; இல.விள. 806; தொ.விள. 257; பிர.திர. 3; சுவாமி. 167; மு.வீ. 1039; பிர.தீபிகை. 5; பிர.தீபம். 94)*
2. பெண்பால் பிள்ளைப்பாட்டு நிலைகளுள் ஒன்று *(பன்.பா. 104; வெண்.பா. 29; நவநீ.பா. 32; பிர.மர. 2; சித.பா. 28; இல.விள. 807; தொ.விள. 257; பிர.திர. 3; சுவாமி. 167; மு.வீ. 1039; பிர.தீபிகை 5; பிர.தீபம். 94)*

**சபிசதீட்சை**

சிவதீட்சையின் பன்னிரு வகைகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 62)*

**சம்பத்துவேட்டம்**

ஐவகைத் தாளங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 49)*

**சம்பிரதம்**

கலம்பக உறுப்புகளுள் ஒன்று; *(பன்.பா. 129; வெண்.பா. 32; நவநீ.பா. 33; பிர.மர. 4; சித.பா. 29; இல.விள. 812; தொ.விள. 258; பிர.திர. 32; மு.வீ. 1041; பிர.தீபிகை. 7; பிர.தீபம். 95)*; மாயவித்தை வல்லவர் தமது வல்லமையின் சிறப்பைத் தாமே புகழ்ந்து கூறுமாறு பாடப்படும் பகுதி *(பன்.பா. 129, உரை; நவநீ.பா. 33; இல.விள. 812; பிர.தீபம். 29, உரை)*

**சம்பிரத வசனம்**
முறைபிறழ்தல் *(பிர.திர. 473)*

**சம்பைதாளம்**
எழுவகைத் தாளங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 49)*

**சம்வர்த்தம்**
பதினெண் மிருதிகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 58)*

**சமசங்கிராமம்**
தலைவி தனிமைத் துயரத்தைத் தன் பொறுமையால் வெல்ல, தலைவன் போர்மேற் சென்று பகைவரை வெல்லுதலைக் கூறும் இலக்கியம் *(பிர.திர 67)*

**சமதாளம்**
ஒன்பதுவகைத் தாளங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 49)*

**சமநிலை**
1. பாட்டுடைத் தலைவனின் இயற்பெயரின் முதலெழுத்தில் தொடங்கி அவன் பெயர் பிரபந்தச் செய்யுளின் முதலெழுத்தளவும் எண்ண, சமநிலையாக (இரட்டைப்படையாக) வருவது உத்தமம் *(நவநீ.பா. 8)*
2. இரட்டைப்படை எழுத்தின் நிலை *(வெண்.பா. 4, உரை; நவநீ.பா. 5; இல.விள. 784; தொ.விள. 287)*
3. முதற்சீர்க்கண் ஒற்று உட்பட நான்கு, ஆறு, எட்டு என இரட்டைப்படையாக அமையும் எழுத்துகள் *(பொரு.விள. 13)*
4. சமனிலை முதற்சீராகப் பெரும்பாலும் அமைதல் கூடாது; அமையினும் குற்றம் இல்லை *(பொரு.விள 15)*
5. முதற்சீரில் வரும் எழுத்துகள் இரட்டைப் படையாக இருக்கக் கூடாது. அதேசமயம் நாலெழுத்தும் இரண்டெழுத்தும் ஏற்புடையன ஆகும். ஓரெழுத்து சீராய் நில்லாது கலித்துறைக்கும் வெண்பாவுக்கும் சோமன் (நிரை நேர் நேர்) எனும் சீர் நாலெழுத்து உடையதாயினும் பொருந்தும் தகுதியுடையது. நில (நிரை நிரை நிரை) நீர்க் (நேர் நிரை நிரை) கணங்கள் நட்புடையன அல்ல. முன்னோர் வகுத்த விதிகள் இல்லாத போதும் த (நேர் நிரை நேர்) நா (நேர் நேர் நிரை) கணங்களை ஏற்க வேண்டுமாயின் ஒற்றையும் சேர்த்து எழுத்தமைக்க வேண்டும் (பிர.திர. 120)

**சமம்**
1. குடைமங்கலப் பொருள்களுள் ஒன்று *(பன்.பா. 121)*
2. முகநிலைகள் பதினான்கனுள் ஒன்று; தியானமாக மாறாது இருக்கும் நிலை *(பிர.தீபிகை. 73)*

**சமயதீட்சை**
சிவதீட்சையின் பன்னிரு வகைகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 62)*

**சமானன்**
வாயுக்கள் பத்தனுள் ஒன்று *(பிர.திர. 379)*

**சமுகம்**
நேரம் பொருந்துதல், முறையுடையவர் தலைவன் திறன்மொழிதல், பெயர்ப் பெருமை கூறல், உரிய செயல்கள், திறை செலுத்துதல், கட்டியம் முதலான அரச சின்னங்கள் கூறுதல் *(பிர.திர. 473)*

**சமுக விலாசம்**
அரசன் ஒப்பனை செய்து கொண்டு, அத்தாணி மண்டபத்தை அலங்கரித்து அதில் வீற்றிருக்க, வெற்றி காணும்படியாக உலகோர் நிறைசார்ந்த அவையில் பாட, ஒரு பெண் மயல் தீர்த்து நினைக்கின்ற திருமணம் புணர்ந்து தங்குதல் *(பிர.திர. 472)*

**சமுத்தி**
1. அகம், புறம் எனும் இருவகைப் பொருளில் தான் எண்ணிய ஏதேனும் ஒரு கருத்தினை, கூறிய எழுத்து அல்லது சொல்லினால் தெளிவுறப் பாடும் இலக்கியம்
2. கொடுத்த பொருளைச் சொன்ன யாப்பில் எக்குறையும் இன்றிப் பாடும் இலக்கியமும் இப்பெயர் பெறும் *(பிர.தீபம். 97)*

**சயித்திகம்**
சிற்பநூல் முப்பத்திரண்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 61)*

**சரம்**
நடை; யானைகள் உலவும் இடம் *(பன்.பா. 163, உரை)*

### சருப்பதோபத்திரம்

1. சித்திரகவி வகைகளுள் ஒன்று; *(வெண்.பா. 26; நவநீ.பா. 67; இல.விள. 766(690))*
2. வரிசைக்கு எட்டு கட்டங்களாக எட்டு வரிசைகளுக்கு அறுபத்து நான்கு கட்டங்கள் அமைந்த சதுரங்கக்கட்டம் ஒன்றில் செய்யுளைப் பொருத்தி அதனை இடமிருந்து வலமாகவும் வலமிருந்து இடமாகவும், மேலிருந்து கீழாகவும் கீழிருந்து மேலாகவும் வாசிக்க எவ்வகை மாற்றமுமின்றி வரும் செய்யுள். *(பி.திர. 59)*

### சருவோத்தமம்

சிவாகமம் இருபத்தெட்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 60)*

### சலத்தம்பனம்

அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்று *(பிர.தீபிகை 72)*

### சலோசம்

பரத்தையின் வீட்டில் சேர்ந்து அவளைப் பொருந்திய தலைவனுக்குச் செவ்வணியும் விரும்பத்தக்க வெள்ளணியும் அணிந்து தோழியை அனுப்புகின்ற அன்புக்குரிய தலைவியை வாயில்களின் உதவியுடன் காணுதல், பெற்ற மைந்தனாலே பெருங்கொடை அளித்தல், பின்பு கூடல் என்னும் இவற்றை உள்ளடக்கிய இலக்கிய வகை *(பிர.திர. 483)*

### சவ்வீரம்

ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று *(பிர.திர. 500-502; பிர.தீபிகை. 99)*

### சவுரம்

சிற்பநூல் முப்பத்திரண்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 61)*

### சவுண்டிகன்

குலப் பெயர்களுள் ஒன்று *(பிர.திர 362)*

### சவுனகீயம்

முப்பத்திரண்டு உபநிடதங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 59)*

### சனற்குமாரம்

உபபுராணம் பதினெட்டுள் ஒன்று *(பிர தீபிகை. 70)*

### சனி

1. கலிப்பாவிற்கு உரிய கடவுளருள் ஒருவர் *(பன் பா. 93)*
2. அரசர்க்கு உரிய தேவதைகளுள் ஒன்று *(வெண்.பா. 71; பிர.மர 27; இல விள 883; தொ விள. 297; மு வீ 1014; பிர.திர. 417)*
3. மஞ்சரியில் குறிக்கப்படும் கிரகங்களுள் ஒன்று; நண்பகலிலும் இரவிலும் விடியலிலும் கருதி வழிபடப்படும். *(பிர.திர. 36)*

## சா

### சா

1. பெண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 27; வெண்.பா. 6, நவநீ.பா. 7; சித.பா. 20)*
2. இரேவதி நாளுக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 43; வெண்.பா. 13; நவநீ. பா. 15; சித.பா. 23; இல.விள. 788; தொ.விள. 292; பிர.திர. 143; மு.வீ. 1034; பொரு.விள. 44)*
3. பார் என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 8)*; அமுதம், பால், மணி என்னும் மங்கலச் சொற்களுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.தீபிகை 3)*

### சாங்கியாயன நீயம்

முப்பத்திரண்டு உபநிடதங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 59)*

### சாசற்புடம்

ஐவகைத் தாளங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 49)*

### சாணார்

குலப் பெயர்களுள் ஒன்று *(பிர திர 363)*

### சாதகம்

1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(பன்.பா 99)*
2. குழந்தை பிறந்ததைப் பற்றிப்பாடும் நூல். குழந்தை பிறந்ததும் அப்போது நிகழும் சகாப்தம், ஆண்டு, உதயாதி நாழிகை, பக்கம், (பூர்வபக்கம் அமரபக்கம்) அன்றைய கிழமை, இராசி ஆகியவை நூலில் பொருந்தப் பாடும் பகுதி. *(பன் பா. 100; பிர.திர. 2; மு.வீ. 1038, பிர.தீபம். 93, பிர.தீபிகை. 5)*
3. இவ்விலக்கியத்தின் மதிப்பு 100 பொன் *(பிர.திர. 85)*
4. பிரபந்த இலக்கணம் கூறும் நூல்களனைத்தும் சாதகம் என்னும் இலக்கிய வகையை முதலாவதாக மொழிகின்றன. *(பிர.திர. 85)*

**சாதகக்கவி**

▶ சாதகம் *(மூ.வீ. 1038)*

**சாதாளம்**

பதினெண் மிருதிகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 58)*

**சாத்தன்**

1. பிள்ளைப் பாட்டு பாடுதற்குரிய காப்புக் கடவுளருள் ஒருவர் *(பன்.பா. 106; நவநீ.பா. 28)*
2. சங்கப் புலவர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை. 86)*

**சாத்திகம்**

சிற்பநூல் முப்பத்திரண்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 61)*

**சாத்துவிகம்**

முக்குணங்களுள் ஒன்று *(பிர.திர. 381)*

**சாத்ரதீட்சை**

சிவதீட்சையின் பன்னிரு வகைகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 62)*

**சாதாக்கியம்**

சிவதத்துவம் ஐந்தனுள் ஒன்று *(பிர.திர. 379)*

**சாதி அமையும் முறை**

தொழிலாலும் பிறப்பாலும் சாதி அமையும். பூணூலிட்டு அந்தணர் ஒழுக்கம் கொண்டிருப்பாராயின், அந்தணருக்குப் பிறந்தவர் போன்று கருதப்படுவர். பூணூலணிந்து கொலைத் தொழில் புரிந்து நிலம் புரப்பாராயின் அரசகுலத்தினர். பூணூலணிந்து வணிகம் செய்தால் வணிகக் குலத்தினர். இவ்வுலகில் இத்தகு பிறப்புவகையில் பிறந்தவர் பலப்பலர். கோவசியர், பார்வசியர் வழியினர், தவறிப் பூணூல் அணியாதவராகத் தந்தை வழியினர் ஆவர். அவர்களுக்குப் பிறந்த சாதியினர் அளவில்லாதவர் எனக் கூறல் வேண்டும் *(பிர.திர. 365)*

**சாம்பவம்**

உபபுராணம் பதினெட்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 70)*

**சாமரம்**

அரசர்க்குரிய இருபத்தொரு சின்னங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 88)*

**சார்த்துக்கவி**

1. புன்கவிஞர்களுள் ஒருவர் *(வெண்.பா. 68; நவநீ.பா. 87, உரை; இல.விள. 934)*
2. ஒருவன் கவியிசையில் வேறொரு செய்யுள் புணர்ப்பவன் *(வெண்.பா. 68; நவநீ.பா. 87, உரை; இல.விள. 934)*

**சார்பு நூல்**

1. புடைநூல் *(இல.விள. 902)*
2. முதல்நூல், வழிநூல் இவற்றை ஓரளவு ஏற்று அவற்றிலிருந்து வேறுபாடுகள் சிலவற்றையும் கொண்டு அமையும் நூல் *(இல.விள. 902)*

**சாரங்கம்**

முப்பத்திரண்டு இராகங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 51)*

**சாரர்**

அரசர்க்கு உரிய ஐவர் குழுவில் ஒருவர் *(பிர.தீபிகை. 89)*

**சாரிகை**

வட்டமாய் யானை ஓடுகை *(பன்.பா. 171)*

**சாரிகையின் விகற்பம்**

யானையின் நடை வகைகளுள் ஒன்று; சாரிகை என்பது வட்டமாய் ஓடுதலைக் குறிக்கும் *(பன்.பா. 171)*

**சாலவம்**

ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று *(பிர.திர. 500-502; பிர.தீபிகை. 99)*

**சாவந்தி (ஸாமந்த)**

வகுப்புறு இராகங்கள் முப்பத்திரண்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 53)*

**சாவேரி**

1. வகுப்புறு இராகங்கள் முப்பத்திரண்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 53)*
2. மகிழ்ச்சி இராகங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 55)*
3. முப்பத்திரண்டு இராகங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 51)*

**சாற்றியமாறுஒத்தல்**

குடை மங்கலப் பொருள்களுள் ஒன்று *(பன்.பா. 121)*

## சி

### சி
1. ஆண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 26; வெண்.பா. 6; நவநீ.பா. 7; சித.பா. 20; தொ.விள. 289; பிர.திர 124; சுவாமி. 174, மு.வீ. 1031; பொரு.விள. 20)*
2. இரேவதி நாளுக்கு உரிய எழுத்துகளுள் ஒனறு *(பன்.பா. 43; வெண்.பா. 13; நவநீ.பா. 15; சித.பா. 23; இல.விள. 788; தொ.விள. 292; பிர.திர. 143; மு.வீ. 1034; பொரு.விள. 44)*
3. நீர் என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 6)*; தரு, வேழம் என்னும் மங்கலச் சொற்களுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.தீபிகை 3)*

### சிங்கம்
1. ஆசிரியப் பாவிற்கு உரிய இராசிகளுள் ஒன்று *(பன்.பா. 92; வெண்.பா. 70; பிர.மர. 26; இல.விள. 882; தொ.விள. 296; மு.வீ. 1013)*
2. அரசர்க்குரிய இருபத்தொரு சின்னங்களுள் ஒனறு *(பிர.தீபிகை. 88)*

### சிங்களம்
ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று *(பிர.திர. 500-502; பிர.தீபிகை. 99)*

### சிங்களன்
குலப் பெயர்களுள் ஒன்று *(பிர.திர. 362)*

### சிங்நுவை
ஞானேந்திரியம் ஐந்தனுள் ஒன்றாகிய நா *(பிர.திர. 378)*

### சிங்குவை
நாடி பத்தனுள் ஒன்று *(பிர.திர. 379)*

### சித்தம்
சிவாகமம் இருபத்தெட்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 60)*

### சித்திரகவி
1. நால்வகைக் கவிகளுள் ஒருவர் *(வெண்.பா. 23; நவநீ.பா. 87; இல.விள. 930; தொ.விள. 299; மு.வீ. 1016; பிர.திர. 392; பிர.தீபிகை. 98)*
2. நால்வகைக் கவிகளுள் ஒன்று *(வெண்.பா. 26)*

### சித்திரகவிகள்
▶ அட்டவணை 8.

### சித்திரதாளம்
ஒன்பதுவகைத் தாளங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 49)*

### சித்திரவயிரவன்
நாடி பத்தனுள் ஒன்று *(பிர.திர. 379)*

### சித்திரை
1. ஆசிரியப் பாவிற்கு உரிய நாள்களுள் ஒன்று *(பன்.பா. 92; வெண்.பா. 70; தொ.விள. 296; மு.வீ. 1031; பிர.திர. 417)*
2. ***உரிய எழுத்துகள்***
பெ, பே, பை, பொ, போ, பௌ *(பன்.பா. 47; வெண்.பா 15; நவநீ.பா. 17; சித.பா. 23; இல.விள. 792; தொ.விள. 292; பிர.திர. 144; மு.வீ. 1034; பொரு.விள. 56)*

### சித்திரவுபாய செயம்
எந்தவொரு செயலிலும் தனக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லாது விருதுகள் பெற்ற பெண்ணை வெல்லுதலைக் கூறும் இலக்கியம் *(பிர.திர 50)*

### சித்து
1. கலம்பக உறுப்புகளுள் ஒன்று *(பன்.பா. 129; வெண்.பா. 32; நவநீ.பா. 33; பிர.மர. 4; சித.பா 29; இல.விள. 812; தொ.விள. 258; மு.வீ. 1041; பிர.தீபிகை 7; பிர.தீபம். 95)*
2. சித்தர்கள் இரசவாத வித்தையினால் ஓர் உலோகத்தை மற்றோர் உலோகமாக மாற்றக்கூடிய தங்கள் வல்லமையை ஒரு தலைவனிடம் புகழ்ந்து கூறுதல் தோன்றப் பாடப்படும் பகுதி *(பன்.பா. 129, உரை; நவநீ.பா. 33; இல.விள. 812; மு.வீ. 1041; பிர.தீபம். 29, உரை)*
3. சித்திரகவி வகைகளுள் ஒன்று *(வெண்.பா. 26)*

### சித்ரம்
சிற்பநூல் முப்பத்திரண்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 61)*

**சிதல்**

அறுவகை அறிவுபெறும் உயிர்களுள் ஒன்று; உற்றுணர்தல், நாச்சுவை கோடல், இவற்றுடன் மோந்து அறிதலாகிய மூக்கு உணர்வும் உடையன *(இல.விள. 913)*

**சிந்தடி**

1. அடி வகைகள் ஐந்தனுள் ஒன்று *(சித.பா. 5)*
2. அடிதோறும் மூன்று சீர்களால் அமையும் செய்யுள் *(சித.பா. 5)*

(எ-டு) இருது வேற்றுமை யின்மையாற்
சுருதி மேற்றுறக் கத்தினோ
டரிது வேற்றுமை யாகவே
கருது வேற்றடங் கையினாய்.

*(மேற்: சூளாமணி - 742; யா.கல விருத்தியுரை நூ. 24; யா.காரிகை 13, உரை; சித.பா.ப. 15)*

**சிந்தடி வஞ்சிப்பா**

தனிச்சொல் பெற்று ஆசிரிய சுரிதகத்தால் அமையும் செய்யுள் *(சித.பா. 11)*

(எ-டு) தொன்னலத்தின் புலம்பலைப்பத் தொடித்தோண்மேல்
பன்னலத்த கலந்தொலையப் பரிவெய்தி
என்னலத்தகை இதுவென்னென எழில்காட்டிச்
சொன்னலத்தகைப் பொருள் கருத்தினிற் சிறந்தாங்
கெனப் பெரிதும்,
கலங்கஞர் எய்தி விடுப்பவும்
சிலம்பிடைச் செலவும் சேணிவந்தற்றே.

(மேற்: யா.காரிகை 22. உரை; சித.பா.ப. 62)

**சிந்தாமணி**

பெருங்காப்பியங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 45)*

**சிந்தியம்**

சிவாகமம் இருபத்தெட்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 60)*

**சிந்து**

ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று *(பிர.திர. 500-502; பிர.தீபிகை. 99)*

**சிந்துமோகினி**

1. பெண்ணின் செயலை இணக்குவதை வண்ணக ஒத்தாழிசையில் பாடுவது *(பிர.திர. 46)*
2. இவ்விலக்கியத்தின் மதிப்பு 2,00,000 *(பிர.திர. 88)*

**சிரவணம்**

முப்பத்திரண்டு உபநிடதங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 59)*

**சிருட்டம்**

சிற்பநூல் முப்பத்திரண்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 61)*

**சில குலத்திற்குரியன**

| குலம் | நாடு | ஊர் | குங்குமம் | விலங்கு |
|---|---|---|---|---|
| சோனகர் | பச்சைமலை, கறுப்பாறு, வச்சிரம் | காயல்பட்டினம் | மாலை | பசியபுரவி, வெள்ளையானை சிங்கக் கொடி |
| துலுக்கர் | மதுரை | | - | - |
| அகம்பிடார் | - | பாலை | | புலி |

*(பிர.திர. 326)*

**சிலேடா சாகரம்**

வான்மழைக்கும் இறைவனுக்கும் உவமித்து. பின்னர்க் கடலுக்கும், பெண்ணிற்கும் வேந்தனின் இயல்பு பொருந்தி வரும்படி சிஃறாழிசைக் கொச்சகக் கலியால் அமையும் இலக்கியம். மன்னனின் புகழ் சிலேடையாகத் தரப்படலால் இப்பெயர் பெற்றது. *(பிர.திர. 52)*

**சிவசங்கற்பம்**

முப்பத்திரண்டு உபநிடதங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 59)*

**சிவதத்துவம்**

ஐந்து. அவை: 1. சுத்தவித்தை, 2. ஈச்சுரம், 3. சாதாக்கியம், 4. சத்தி, 5. சிவம் *(பிர.திர. 379)*

**சிவதருமம்**

உபபுராணம் பதினெட்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 70)*

**சிவதீட்சையின் பன்னிரு வகை**

1. சமயதீட்சை 2. நிர்வாண தீட்சை 3. விசேடதீட்சை 4. நயனத்தீட்சை 5. ஔத்தரிய தீட்சை 6. சாத்ரதீட்சை 7. மானததீட்சை 8. நிர்பீஜதீட்சை 9. பரிசத்தீட்சை 10. வாகுதீட்சை 11. சபிதீட்சை 12. யோகதீட்சை *(பிர.தீபிகை. 62)*

**சிவம்**

சிவதத்துவம் ஐந்தனுள் ஒன்று *(பிர.திர. 379)*

**சிவன்**

மஞ்சரியில் குறிக்கப்படும் வழிபடு தெய்வங்களுள் ஒருவர் *(பிர.திர. 36)*

***சிவன் படைத்த எழுத்துகள்***

க,ங *(பன்.பா. 4; வெண்.பா. 10; நவநீ.பா. 11; சித.பா. 21; இல.விள. 778)*

**சிவனின் புதல்வர் ஐவர்க்கும் பொதுவிதி**

தந்தையாகிய அரனாரின் அணியில் சில பெறுகின்றனர்; சில பெறார். நிலைபெறுகின்ற அணிகளில் கண்கள், கரங்கள், முகம் இவற்றின் எண்ணிக்கையை உட்படுத்தி முன்னே உரைக்காவிடில் இருகண், இருகரம், முகம் என அறிந்துகொள்ள வேண்டும். வயிரவன், வீரபத்திரன் போன்றவருக்குக் காதல் தொடர்பான சொல்லும் பொருளும் தவிர்க்கப்படல் வேண்டும் *(பிர.திர. 234)*

**சிவாகமங்கள்**

1. காரணம், 2. யோகசம், 3. சிந்தியம், 4. ரௌரவம், 5. சுப்பிரபேதகம், 6. காமுகம், 7. பேதம், 8. சூக்குமம், 9. சித்தம், 10. சகத்திரம், 11. தீபதம், 12. விசயம் 13. வீரம், 14. நிசுவாசம், 15. புரோற்கீதம், 16. இலளிதம், 17. விமலம், 18. சுவாயம்புவம், 19. விம்பம், 20. சருவோத்தமம், 21. பாரமேச்சுரம், 22. விமலம், 23. அனலம், 24. கீரணம், 25. வாதுளம், 26. அசிதம், 27. அஞ்சுமான், 28. சந்திரஞானம் *(பிர.தீபிகை. 60)*

**சிற்பத்தொழிற்கு உரியன**

1. மண், 2. கல், 3. உலோகம், 4. செங்கல், 5. மெழுகு, 6. மரம், 7. கண்டசர்க்கரை, 8. சுதை, 9. வண்ணம், 10. தந்தம் *(பிர.தீபிகை. 60)*

**சிற்ப நூல்கள்**

1. விச்சுவேசம், 2. விசுவகருமம், 3. விச்சுவசாரம், 4. விச்சுவகாசிபம், 5. இந்திரம், 6. விசாலம், 7. விச்சுவபோதம், 8. வித்தாரம், 9. அனுமான், 10. விருத்தம், 11. வாத்துபோதம், 12. நளம், 13. வித்தியாபதி, 14. மானசாரம், 15. தாவட்டம், 16. சிருட்டம், 17. அரிடிகம், 18. கற்பாரியம், 19. பாராசரீயம், 20. பானு, 21. மகதந்திரம், 22. காபிலகாலயுபம், 23. சயித்திகம், 24. சவுரம், 25. ஆதிசாரம், 26. வச்சிரம், 27. வெகுச்சுருதம், 28. நாமசங்கிதை, 29. சித்ரம், 30. மானபேதம், 31. சாத்திகம் *(பிர.தீபிகை. 61)* 32. மயம் *(பிர.தீபிகை. 61, உரை)*

**சிற்பம்**

அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 72)*

**சிற்றில்**

ஆண்பால் பிள்ளைப்பாட்டு நிலைகளுள் ஒன்று *(பன்.பா. 102; வெண்.பா. 30; நவநீ.பா. 29; பிர.மர. 2; சித.பா. 28; இல.விள. 806; தொ.விள. 257; பிர.திர. 3; சுவாமி. 167; மு.வீ. 1039; பிர.தீபிகை. 5; பிர.தீபம். 94)*

**சிற்றில் இழைத்தல்**

பெண்பால் பிள்ளைப்பாட்டு நிலைகளுள் ஒன்று *(பன்.பா. 105)*

**சிற்றின்பம்**

► கவிஞர் பாடும் இன்பம் *(பிர.திர. 414)*

**சிறப்பியற் பெயர்**

சாதியில் உள்ளவர் தாமே கொள்ளும் பெயர் *(பன்.பா. 82)*

**சிறப்புப்பாயிரத்துள் இடம்பெறுவன**

1. ஆக்கியோன் பெயர், வழி, எல்லை, நூலின் பெயர், யாப்பு, பொருண்மை, கேட்போர், பயன், காலம், களன் *(பிர.திர. 397)*
2. இப்பத்துடன் காரணம் என்பதும் இடம்பெறும் *(பிர.திர. 398)*

**சிறப்புப் பாயிரம்**

1. நூல்பெயர், இயற்றியோன் பெயர், நூலியற்றக் காரணம், நூலின் பொருள், காலம், வழி, எல்லை, யாப்பு, நூலுரைக்கும் பயன், நூலினைப் படிப்பதால் ஏற்படும் பயன், அரங்கேற்றப்பட்ட இடம், முன்னிலை வகித்தோர், நூலியற்றுகையில் உதவியவர், பார்வையிட்டவர்கள் செவிமடுத்தோர், சாத்துக்கவிகள் என்பவற்றை உரைக்கும் செய்யுள் *(வெண் பா. 88-89; நவநீ.பா. 70-71)*

2. தெய்வ வணக்கம், அதிகாரம் சொல்லும் கருத்து, அதிகாரங்களின் வரிசை முறை என்பவற்றை உணர்த்தும் செய்யுள் *(வெண்.பா 87; நவநீ.பா. 69)*
3. நூலாசிரியர் தன் நூலுக்கு இன்றியமையாததாகக் கருதி உரைக்கும் நூன்முகம் *(இல.விள. 889)*

## சிறப்புப் பாயிரம் கூறற்குரியர்

தன் ஆசிரியன், தன்னொடு கற்றோன், தன் மாணவன், உரைகாரன் *(பிர.திர. 399)*

## சிறப்புப் பெயர்

1. எண்வகைப் பெயர்களுள் ஒன்று *(பன்.பா. 74)*
2. சிறப்புடைய வேந்தன் கொடுக்கும் பெயர் *(பன்.பா. 81)*

## சிறுகரந்தை

பெண்டிர் அணியும் மலர் மாலைகளுள் ஒன்று *(பிர.திர. 202)*

## சிறுகாப்பியம்

► காப்பியம் *(நவநீ.பா. 65)*

## சிறுசோறாக்கல்

பெண்பால் பிள்ளைப்பாட்டு நிலைகளுள் ஒன்று *(பன்.பா. 105)*

## சிறுதேர்

ஆண்பால் பிள்ளைப்பாட்டு நிலைகளுள் ஒன்று *(பன்.பா. 102; வெண்.பா. 30; நவநீ.பா. 29; பிர.மர. 2; சித.பா. 28; இல.விள. 806; தொ.விள. 257; பிர.திர. 3; சுவாமி. 167; மு.வீ. 1039; பிர.தீபிகை. 5; பிர.தீபம். 94)*

## சிறுபஞ்சமூலம்நூறு

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 44)*

## சிறுபறை

ஆண்பால் பிள்ளைப்பாட்டு நிலைகளுள் ஒன்று *(பன்.பா. 102; வெண்.பா. 30; நவநீ.பா. 29; பிர.மர. 2; சித.பா. 28; இல.விள. 806; தொ.விள 257; பிர.திர. 3; சுவாமி. 167; மு.வீ. 1039; பிர.தீபிகை. 5; பிர.தீபம். 94)*

## சிறுபாணாற்றுப்படை

பெருங்காப்பியங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 45)*

## சிறுமேதாவி

சங்கப் புலவர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை. 85)*

## சிறைச்சோறு

முப்பத்திரண்டு அறங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 71)*

## சின்னப்பூ

1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(பன்.பா. 99)*
2. தொடர்நிலைச் செய்யுள் வகைகளுள் ஒன்று *(இல.விள. 805)*
3. மலை, யாறு, நாடு, ஊர், பரி, களிறு, கொடி, முரசு, மாலை, பெயர் என்ற பத்தினையும் அமைத்து நேரிசை வெண்பாவின் முதல் குறளில் சின்னத்தின் தொழிலைப் பொருத்தி பின்வரும் குறளில் பாட்டுடைத் தலைவர்களின் இயற்பெயர்களை வைத்து அவர்களுக்கு உரிமை தோன்றத்தக்க செயல்களை வைத்துப் பாடும் இலக்கியம் *(பன்.பா. 139)*
4. மேற்கூறிய கருத்துடன் நேரிசை வெண்பா நூறாலோ தொண்ணூறாலோ எழுபதாலோ ஐம்பதாலோ பாடப்படும் இலக்கியம் *(பன்.பா. 139; வெண்.பா. 42; நவநீ.பா. 40; சித.பா. 32)*
5. நூறு, தொண்ணூறு, எழுபது, ஐம்பது என்பதுடன் முப்பது என்னும் பாடல் எண்ணிக்கையும் குறிப்பிடப்படுகிறது. *(இல.விள. 846; தொ.விள.263; மு.வீ. 1125)*
6. தசாங்கத்துக்குப் பத்தாய் நூறு வெண்பாவால் அமையும் இலக்கியம் *(பிர.திர. 15)*
7. தசாங்கத்துக்குப் பத்தாய் நூறு பாடல்களால் அமையும் இலக்கியம் *(பிர.தீபம். 87)*
8. பத்து தசாங்கங்களுள் பெயர் என்பதற்குப் பதிலாக ஆணை என்பதைக் குறிப்பிடுகிறது. *(நவநீ.பா. 40)*
9. தசாங்கப்பத்து என்கிறதே தவிர எவையெவை எனக்கூறவில்லை *(பிர.மர. 9; பிர.தீபிகை. 31)* *பிரபந்த மரபியலின் உரையாசிரியர் ஒன்பது தசாங்கங்களைப் பட்டியலிடுகிறார். ஆனால் இவை பிற பாட்டியல்களிலிருந்து வேறுபடுகின்றன.*
10. பத்து சின்னங்களுமோ அல்லது அவற்றுள் ஏழோ அல்லது மூன்றோ செய்யுள்களில் இடம்பெறும் *(பன்.பா. 141)*

## சின்ன மாலை

► புகழ்ச்சி மாலை *(பிர.திர. 28)*

**சினை**

மரத்தின் உறுப்புகளுள் ஒன்று *(இல.விள. 921)*

**சிஃறாழிசைக் கொச்சகக் கலிப்பா**

1. தாழிசைகள் சிலவற்றைக் கொண்டு அமையும் செய்யுள் *(சித.பா. 11)*
2. இடையிடையே தனிச்சொற்பெற்று நேரிசையொத்தாழிசைக் கலிப்பாவில் சிறிது வேறுபட்டு தன்தளையால் வரும் செய்யுள்.

(எ-டு) பருஉத்தடக்கை மதயானைப் பணையெருத்தின் மிசைத்தோன்றிக்
குருஉக்கொண்ட வெண்குடைக்கீழ்க் குடைமன்னர் புடைசூழப்
படைப்பரிமான் தேரினொடும் பரந்துலவு மறுகினிடைக்
கொடித்தானை யிடைப்பொலிந்தான் கூடலார் கோமானே
(இது தரவு)
ஆங்கொருசார்,
உச்சியார்க் கிறைவனாய் உலகமெலாங் காத்தளிக்கும்
பச்சையார் மணிப்பைம்பூட் புரந்தரனாப் பாவித்தார்
வச்சிரங்கைக் காணாத காரணத்தான் மயங்கினரே ஆங்கொருசார்,
அக்காலம் அணிநிரைகாத் தருவரையாற் பனிதவிர்த்து
வக்கிரனை வடிவழித்த மாயவனாப் பாவித்தார்
சக்கரங்கைக் காணாத காரணத்தாற் சமழ்த்தனரே.
ஆங்கொருசார்,
மால்கொண்ட பகைதணிப்பான் மாத்தடிந்து மயங்காச்செங்
கோல்கொண்ட சேவலங் கொடியவனாப்பாவித்தார்
வேல்கண்ட தின்மையால் விம்மிதராய் நின்றனரே.
(இவை மூன்றும் தாழிசை)
அதாஅன்று
(தனிச்சொல்)
கொடித்தேர் அண்ணல் கொற்கைக் கோமான்
இன்புகழ் ஒருவன் செம்பூட் சேஎய்
என்றுநனி யறிந்தனர் பலரே; தானும்
ஐவருள் ஒருவனென் றறியல் ஆகா
மைவரை யானை மடங்கா வென்றி
மன்னவன் வாழியென் றேத்தத்
தென்னவன் வாழி திருவொடும் பொலிந்தே.
*(யா.கல விருத்தியுரை நூ. 86; யா.காரிகை 32, உரை; சித.பா.ப. 53, 54)*

**சீ**

**சீ**

1. பெண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 27; வெண்.பா. 6; நவநீ.பா. 7; சித.பா. 20; தொ.விள. 289; பிர.திர. 124; சுவாமி. 174; மு.வீ. 1031; பொரு.விள. 21 )*
2. இரேவதி நாளுக்கு உரிய எழுத்துகளுள் ஒனறு *(பன்.பா. 43; வெண்.பா. 13; நவநீ.பா. 15; சித.பா. 23; இல.விள. 788; தொ.விள. 292; பிர.திர. 143; மு.வீ. 1034; பொரு.விள. 44)*
3. நீர் என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 6)*; தரு, வேழம் என்னும் மங்கலச் சொற்களுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 3)*

**சீட்டுக்கவி**

தெய்வ வணக்கம், குரு வணக்கம், புலவனின் பெரும்புகழ், தலைவனின் சிறப்பு இவற்றை ஆசிரிய விருத்தத்தால் பாடும் இலக்கியம் *(பிர.தீபம். 96)*

**சீத்தலைச்சாத்தனார்**

சங்கப் புலவர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை 85)*

**சீர்**

மங்கலச் சொற்களுள் ஒன்று *(பன்.பா. 68; வெண் பா. 2; வரை.பா. 4; சித.பா. 18; தொ.விள. 285; பிர.திர.111; சுவாமி. 173; பொரு.விள. 3)*

**சீர் அளபெடை**

ஒரே அடியில் அடுத்தடுத்த சீர்கள் அளபெடுத்துவரும் நிலை *(சித.பா 6)*

**சீர் இயைபு**

ஒரே அடியில் இரண்டு சீர்களின் இறுதி எழுத்து ஒன்றாகவே வரும் நிலை *(சித. பா. 6)*

**சீர் எதுகை**

ஓரடியிலுள்ள சீர்களின் இரண்டாமெழுத்து ஒன்றி வரும்நிலை *(சித.பா. 6)*

**சீர் முரண்**

ஓரடியிலேயே முரணான சொற்கள் அடுத்தது வருதல் *(சித.பா. 6);*

**சீர்மெய்க்கீர்த்தி**

1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(பன்.பா. 99)*
2. தொடர்நிலைச் செய்யுள் வகைகளுள் ஒன்று *(இல.விள. 805)*
3. நான்கு முதலிய சீர்களை உடைய இரண்டடி ஒரு தொடையாய் அமைந்த பாட்டில் மன்னனின் உண்மைப் புகழைச் சொல்லி, அவனுடைய வரலாறுகளைச் சொல்லி நின்பெருந்தேவியோடு இன்புற்று வாழ்க எனச்சொல்லி, இயற்பெயர்க்குப் பின் ஆயுள் மேன்மேலும் வளர்க என வாழ்த்திப் பொருந்தும்படி பாடப்படும் இலக்கியம் *(பன்.பா. 198)*
4. வெண்பாப் பாட்டியல் இதனை மெய்க்கீர்த்தி என்கிறது. மேலும் ஆசிரியம் விரவிய சொற்சீரடிகளால் மன்னரது உண்மைக் கீர்த்தியைத் தொடுத்துப் பாடும் இலக்கியம் என்றும் கூறுகிறது. *(வெண்.பா. 56; நவநீ.பா. 53; இல.விள. 831)*
5. ஆசிரியப்பாவுடன் வஞ்சிப்பாவையும் சேர்த்துச் சில பாட்டியல்கள் கூறுகின்றன *(நவநீ.பா. 53; பிர.மர. 13)*
6. இவ்விலக்கிய வகையை மெய்க்கீர்த்தி எனச் சிதம்பரப் பாட்டியல் குறிப்பிடுகிறது. ஆனால் 'பா' வகைபற்றி எதுவும் கூறவில்லை *(சித.பா. 36)*

**சீர்மோனை**

ஓரடியிலுள்ள சீர்களின் முதலெழுத்து ஒன்றாகவே வருதல் *(சித பா. 6)*

**சீயநோக்கு**

நூற்பாவின் கிடக்கை முறைகளுள் ஒன்று; சிங்கம் நடக்கையில் இருமருங்கும் பார்த்துக் கொண்டே செல்வது போலத் தனக்கு முன்னும் பின்னும் உள்ள நூற்பாக்கள் தன் பொருளைத் தொடர்பு கொண்டு இயங்குமாறு அமையும் நிலை *(இல.விள. 892)*

**சீயம்**

வராகியின் வாகனம் *(பன்.பா. 109, உரை)*

**சீனம்**

ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று *(பிர.திர. 500-502; பிர.தீபிகை. 99)*

## சு

**சு**

1. ஆண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 26; வெண்.பா. 6; நவநீ.பா. 7; சித.பா. 20; தொ.விள. 289; பிர.திர. 124; சுவாமி. 174; மு.வீ. 1031; பொரு.விள 20)*
2. அச்சுவினி நாளுக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 43; வெண் பா. 13; நவநீ.பா. 15; சித.பா. 23; இல.விள. 788; தொ.விள. 292; பிர.திர 143; மு.வீ. 1034; பொரு.விள. 45)*
3. சொல் என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 7);* பூ என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.தீபிகை 3)*

**சுக்கிலத்தம்பனம்**

அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 72)*

**சுக்கிலம்**

ஐம்பூதங்களாலாகிய மனித உடலின் நீர்க் கூறுகளுள் ஒன்று *(பிர.திர. 380)*

**சுடர்**

மங்கலச் சொற்களுள் ஒன்று *(வெண்.பா. 2, உரை)*

**சுடுகாடு நக்கி**

குதிரைக்கு ஆகாத இருபது சுழிகளுள் ஒன்று *(பிர.திர. 388)*

**சுண்ணம்**

முப்பத்திரண்டு அறங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 71)*

**சுத்தம்**

பதினாறு சைவங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 62)*

**சுத்தவித்தை**

சிவதத்துவம் ஐந்தனுள் ஒன்று *(பிர.திர. 379)*

**சுதை**

சிற்பத் தொழிற்கு உரிய பத்துப் பொருள்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 60)*

**சுப்பிரபேதகம்**
சிவாகமம் இருபத்தெட்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 60)*

**சுபானனை**
விண்மாதர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை. 46)*

**சுயம்வரம்**
மகளின் திருமணத்திற்காகத் தந்தை பல நாடுகளுக்கும் ஓலையனுப்ப, மன்னர்கள் பலரும் வந்து குழுமி, போட்டியில் பங்குபெற்று, வெற்றிபெற்றவன் அவளை மணம்புரிதலைக் கலிவெண்பாவில் கூறும் இலக்கியம் *(பிர.திர. 66)*

**சுரிதகம்**
1. கலிப்பாவின் உறுப்புகளுள் ஒன்று. *(சித.பா 16)*
2. வெண்பாவாலோ ஆசிரியப்பாவாலோ முடியும் உறுப்பு. *(சித.பா. 16)*

**சுருட்டி**
வகுப்புறு இராகங்கள் முப்பத்திரண்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 53)*

**சுருதி**
விண்மாதர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை. 46)*

**சுரோத்திரம்**
ஞானேந்திரியம் ஐந்தனுள் ஒன்றாகிய காது *(பிர.திர. 378)*

**சுவர்க்ககணம்**
உரிய அசை நேர்நேர் *(இல.விள. 802; பிர.திர. 158)*

**சுவர்க்கம்**
1. இந்திர உலகத்தின் மேல் வீரசுவர்க்கம்; அதன்மேல் அமைவது விதரண சொர்க்கம்; அதில் கொடுப்பன எல்லாம் ஒன்று பத்தாக முந்திவர, கோடி மாதர்கள் முயங்கி அயனின் வாழ்நாளளவும் தீங்கின்றி இருப்பர்; பின்பு வருகின்ற ஊழி இறுதியில் இந்த விதரண சுவர்க்கம் மாயவனின் பெருவயிற்றில் பாதுகாப்பாக வைக்கப்படும்; ஊழிப்பெருக்கு முடிவதுவரை அந்த வயிற்றினகத்தில் வைத்துப் பாதுகாத்து உதவுகின்ற உலகம்போலப் பின்பு தன்நிலையில் நிறுத்தப்படும் *(பிர.திர. 513)*
2. யுக முடிவில், உலகமெல்லாம் பொடியாகிச் சிவத்தில் ஒடுங்கும். வீரமுறும் சொர்க்கம் பரன் முகத்தில் சேர்ந்திருக்கும். இவ்வாறு நிலவுகின்ற சொர்க்கம் சந்திரனிடம் அடங்கி, அரனின் விழியிலிருந்து பின்பு வரும்; வீர சொர்க்கத்தில் பின்பு சேருபவர் மலர்ச்சியுடைய சூரியனிடையே போவார்; கொடையாளர், சந்திரனின் வழியே செல்வர்; கலை மதியம், ஆதியான மால் தொடர்ந்த சசாசுரனைக் காத்து, திருமால் வருவதனைக் கண்டு மான் உருவாய்ச் சமைத்தமை இங்குக் கருதத்தகும் *(பிர.திர. 514)*

**சுவாதி**
ஆசிரியப்பாவிற்கு உரிய நாள்களுள் ஒன்று *(பன்.பா. 92; வெண்.பா. 70; தொ.விள. 296; மு.வீ. 1013; பிர.திர. 417)*

**சுவாயம்புவம்**
சிவாகமம் இருபத்தெட்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 60)*

**சுவேதாசுவதரம்**
முப்பத்திரண்டு உபநிடதங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 59)*

**சுழிகுளம்**
1. சித்திரகவி வகைகளுள் ஒன்று; *(வெண்.பா. 26; நவநீ.பா 67; இல.விள. 766(690))*
2. ஓரடிக்கு எட்டு எழுத்துகள் வீதமுள்ள நான்கடிச் செய்யுளை மேலிருந்து கீழும், கீழிருந்து மேலுமாகச் சுழித்து வாசிப்பினும் வேறுபாடின்றி வரும் வகையில் அமையும் செய்யுள். (பிர.திர. 59)

**சுழிமுனை**
நாடி பத்தனுள் ஒன்று *(பிர.திர. 379)*



## சூ

**சூ**
1. பெண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 27; வெண்.பா. 6; நவநீ.பா. 7; சித.பா. 20; தொ.விள. 289; பிர.திர. 124; சுவாமி 174; மு.வீ. 1031; பொரு.விள. 21)*
2. அச்சுவினி நாளுக்கு உரிய எழுத்துகளுள் ஒனறு *(பன்.பா. 43; வெண்.பா. 13; நவநீ.பா. 15; சித.பா. 23; இல.விள. 788; தொ.விள. 292; பிர.திர. 143; மு.வீ. 1034; பொரு.விள. 45)*
3. சொல் என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 7)*; பூ என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 3)*

சூக்குணம்
வாக்கு நான்கனுள் ஒன்று (பிர.திர. 380)

சூக்குமம்
சிவாகமம் இருபத்தெட்டுள் ஒன்று (பிர.தீபிகை. 60)

சூத்திரர்
▶ வேளாளர் (பிர.மர. 6)

*சூத்திரர் இயல்பு*

1. அந்தணர், அரசர், வணிகர் இட்ட பணிகளைச் செய்தல், ஏருழல், ஈதல், வார்த்தை பிழையாமை, தவறு செய்யாமை, உறுதியுடன் நிற்றல் (வெண்.பா. 86)
2. நல்லறம் புரிதல், செல்வமுடைமை, ஒழுக்கமுடைமை, சுற்றம் காத்தல், மன்னர்க்கு இறையிருத்தல், ஒற்றுமை கோடல், புகழப்படும் கருமத்தைத் தொடங்கல், விருந்தோம்பல். (நவநீ.பா.154)
3. வாணிபம் செய்தல், உபகாரம், ஆசாரம் வாய்ந்த செயல், உழவைப் பேணல், இரு பிறப்பாளர் நெறிவழுவாமல் அவர் ஏவுதலைச் செய்தல், ஆநிரை போற்றல் (நவநீ.பா. 80)
4. உழுது உணவு உண்டாக்குதல் இல.விள. 927)
5. ஒற்றுமைக் குணம் மிகுதல், போர் செய்தல், பிற சாதியார் வழிபடும்படிச் செயல்புரிதல் (பிர.திர. 306)

*சூத்திர சாதிக்குரிய எழுத்துகள்*
ழ, ள (பன்.பா. 8; வெண்.பா. 10; நவநீ.பா. 12; சித.பா. 21; இல.விள. 777; சுவாமி 291; மு.வீ. 1033; பொரு.விள. 36)

*சூத்திர சாதிக்குரிய எழுத்துகளைப் படைத்தவன்*
கூற்றுவன் (பன்.பா. 8)

சூத்திர சாதியின் எண்ணிக்கை
▶ குலங்கள் (பிர.திர. 370)

சூரசேனம்
ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று (பிர.திர. 500-502; பிர.தீபிகை. 99)

சூரிய கணம்
1. உரிய நாள் புனர்பூசம் (இந்.காளி. 36; பன்.பா. 62)
2. பூச நட்சத்திரம் எனச் சில பாட்டியல்கள் கூறுகின்றன. (இல.விள. 800, உரை: பிர.திர. 154)
3. தீமை பொருந்திய கணங்களுள் ஒன்று (இந்.காளி. 21; பன்.பா. 66; வெண்.பா. 20; நவநீ.பா. 23; சித.பா. 25; தொ.விள. 294; பிர.திர. 155)
4. பெருமிதத்தைக் குலைக்கும் (பொரு விள. 87)
5. ▶ கணப்பொருத்தம்

சூரியன்
1. அரச சாதிக்குரிய எழுத்துகளைப் படைத்த மூவருள் ஒருவர் (பன்.பா. 6)
2. அரசர்க்குரிய தேவதைகளுள் ஒன்று. (நவநீ.பா. 12)
3. ஆசிரியப்பாவிற்கு உரிய கடவுளருள் ஒருவர் (பன்.பா. 92; வெண்.பா. 71; பிர.மர. 27; இல.விள. 883; தொ.விள. 296; மு.வீ. 1013; பிர.திர. 417)
4. பிள்ளைப்பாட்டு பாடுதற்குரிய கடவுளருள் ஒருவர் (பன்.பா. 106; நவநீ.பா. 28; இல.விள. 808)
5. தீக்கணங்களுள் ஒன்று (இந்.காளி. 2; பன்.பா. 5)
6. மஞ்சரியில் குறிக்கப்படும் வழிபடு தெய்வங்களுள் ஒன்று; பகலிலும் இரவிலும் வழிபடற்குரியது (பிர.திர. 36)
7. இசைக்குரிய தேவர்களுள் ஒருவர் (பிர.திர. 92)

*சூரியன் படைத்த எழுத்துகள்*
ப, ம (பன்.பா. 4; வெண்.பா. 10; நவநீ.பா. 11; சித.பா. 21; இல.விள. 778; சுவாமி 175)

சூலம்
1. காளியின் ஆயுதம் (பன்.பா. 109, உரை)
2. மங்கலச் சொற்களுள் ஒன்று (நவநீ.பா. 2, உரை)

## செ

செ
1. ஆண்பால் எழுத்துகளுள் ஒன்று (பன்.பா. 26; வெண்.பா. 6; நவநீ.பா. 7; சித.பா. 20; தொ.விள. 289; பிர.திர. 124; சுவாமி 174; மு.வீ. 1031; பொரு.விள. 20)
2. அச்சுவினி நாளுக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று (பன்.பா 43; வெண்.பா. 13; நவநீ.பா. 15; சித.பா. 23; இல.விள. 788; தொ.விள. 292; பிர.திர. 143; மு.வீ. 1034; பொரு.விள. 45)
3. சொல் என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று (வரை.பா. 7); பூ என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று (பிர.தீபிகை. 3)

**செக்கான்**
குலப் பெயர்களுள் ஒன்று *(பிர.திர 362)*

**செக(ஜகன்)மோகனம்**
வகுப்புறு இராகங்கள் முப்பத்திரண்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 53)*

**செங்கதிர்**
மங்கலச் சொற்களுள் ஒன்று *(பன்.பா. 68; இல.விள. 771; தொ.விள. 285; மு.வீ. 1027)*

**செங்கல்**
சிற்பத் தொழிற்கு உரிய பத்துப் பொருள்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 60)*

**செங்கழுநீர்**
பெண்டிர் அணியும் மலர் மாலைகளுள் ஒன்று *(பிர.திர. 202)*

**செங்கீரை**
1. ஆண்பால் பிள்ளைப்பாட்டு நிலைகளுள் ஒன்று *(பன்.பா. 102; வெண்.பா. 30; நவநீ.பா. 29; பிர.மர. 2; சித.பா. 28; இல.விள. 806; தொ.விள. 257; பிர.திர. 3; சுவாமி. 167; மு.வீ. 1039; பிர.தீபிகை 5; பிர.தீபம். 94)*
2. பெண்பால் பிள்ளைப்பாட்டு நிலைகளுள் ஒன்று *(பன்.பா. 104; வெண்.பா. 29; நவநீ.பா. 32; பிர.மர. 2; சித.பா. 28; இல.விள. 807; தொ.விள. 257; பிர.திர. 3; சுவாமி. 167; மு.வீ. 1039; பிர.தீபிகை 5; பிர.தீபம். 94)*

**செங்குன்றூர்க்கிழார்**
சங்கப் புலவர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை. 86)*

**செங்கோல்**
1. விருத்த விகற்பத்துக்குரிய ஒன்பது அரச உறுப்புகளுள் ஒன்று *(பன்.பா. 178; வெண்.பா. 42; நவநீ.பா. 41; பிர.மர. 9; சித.பா. 32; இல.விள. 853; தொ.விள. 273; பிர.திர. 16; மு.வீ. 1126; பிர.தீபிகை. 31; பிர.தீபம். 88)*
2. அரசர்க்குரிய பத்து உறுப்புகளுள் ஒன்று *(சித.பா. 32; தொ.விள. 263)*
3. அரசர்க்குரிய இருபத்தொரு சின்னங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 88)*

**செதிள்**
புல், மரத்தின் பொது உறுப்புகளுள் ஒன்று *(இல.விள. 922)*

**செந்தமிழ் மாலை**
1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(பன்.பா. 99)*
2. எப்பொருளேனும் அமைய இருபத்தெழுவகைப் பாட்டுகளால் அமையும் நூல் *(பன்.பா. 194)*
3. செந்தமிழ் மாலையை வெண்பா முதலிய நான்குவகைப் பாவினாலும் தாழிசை முதலிய அவற்றின் இனத்தினாலும் பாடுவாரும் உளர். அன்றி, நான்கு நூற்பாவினாலும் ஒரு பாவின் இனத்தினாலும் பாடுவாரும் உளர் *(பன்.பா. 195, உரை)*

**செந்தொடை**
மோனை முதலாகிய தொடையும், தொடை விகற்பங்களும் இன்றி இயற்றப்பெறும் செய்யுள் *(சித.பா. 5)*

(எ-டு) பூத்த வேங்கை வியன்சினை யேறி
மயிலினம் அகவும் நாடன்
நன்னுதற் கொடிச்சி மனத்தகத் தோனே.

(மேற்: தமிழ் நெறி விளக்கம் -17; யா.கல விருத்தியுரை நூ. 50; யா.காரிகை 18, உரை; தொல்.செய்யு.நூ. 100, பேரா.)

**செந்நெல்லரிசி**
இறைவர்க்குப் படைக்கப்படும் பொருள்களுள் ஒன்று *(பிர.திர. 37)*

**செம்மான்**
குலப் பெயர்களுள் ஒன்று *(பிர.திர. 362)*

**செம்மை**
ஆசிரியப்பாவிற்கு உரிய நிறம் *(பன்.பா. 92; வெண்.பா. 69; பிர.மர. 25; இல.விள. 879; தொ.விள. 296; மு.வீ. 1013; பிர.திர. 417)*

**செய்யுள் குற்றம்**
நிச்சயித்தற்கரிய பொருளையோ இடிபோன்ற சொல்லையோ, பல பொருளுக்கு ஏற்ற சொல்லையோ பொருத்துகை *(வெண்.பா. 74)*

## தீ

**தீ**

1. பெண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 27; வெண்.பா 6; நவநீ.பா 7; சித.பா. 20; தொ.விள. 289; பிர.திர. 124, சுவாமி 174; மு.வீ. 1031; பொரு.விள. 21)*
2. விசாக நாளுக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 45; வெண்.பா. 14; நவநீ.பா. 16; சித.பா. 23; இல.விள. 790; தொ.விள. 292; பிர.திர. 143; மு.வீ. 1034; பொரு.விள. 49)*
3. நீர் என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 6; பிர.தீபிகை. 3, 4)*
4. ஐம் பூதங்களுள் ஒன்று *(பிர.திர. 378)*

**தீக்கணம்**

1. நிரை நேர் நிரை என்னும் சீர் உடையது *(இந்.காளி 18; பன்.பா. 64; வெண்.பா. 20; நவநீ.பா. 23, இல.விள. 800; தொ.விள. 294; பிர.திர. 157; பொரு.விள. 81)*
2. இதனை ர கணம் என்று சில பாட்டியல்கள் கூறுகின்றன *(சித.பா. 26; பிர.திர. 157; சுவாமி 177)*
3. உரிய நாள் கார்த்திகை *(இந்.காளி 36; பன்.பா. 64; சித.பா. 25; இல.விள. 800, உரை; பிர.திர. 154)*
4. நோயை விளைவிப்பது *(பொரு.விள. 89)*
5. தீமை பொருந்திய கணங்களுள் ஒன்று *(இந்.காளி 21; பன்.பா. 66; வெண்.பா. 20; நவநீ.பா. 23; சித.பா. 25; தொ.விள. 294, பிர.திர. 155)*

**தீப்தம்**

சிவாகமம் இருபத்தெட்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 60)*

**தீய அவை**

அவையின் திறமறியாதவர், ஆராய்ந்தறிந்து சொல்லாதவர், குற்றச் சொற்களை உரைப்பவர், நாணமில்லாதவர், சுவையுணராதவர், ஆயகலைகள் தெரியாதவர், அஞ்ச வேண்டியவற்றுக்கு அஞ்சாதவர் ஆகியோர் உள்ள அவை *(வெண்.பா. 79; நவநீ.பா. 90; பிர.திர. 413)*

**தீயபசி**

உடற்குற்றம் பதினெட்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 70)*

## து

**து**

1. ஆண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 26; வெண்.பா 6; நவநீ.பா 7; சித.பா. 20; தொ.விள 289; பிர.திர. 124; சுவாமி 174; மு.வீ. 1031; பொரு.விள. 20)*
2. விசாக நாளுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 45; வெண்.பா. 14; நவநீ.பா. 16; சித.பா. 23; இல.விள. 790; தொ.விள 292; பிர.திர. 143; மு.வீ 1034; பொரு.விள. 49)*
3. பொன் என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 5)*; செல்வம், வேலை என்னும் மங்கலச் சொற்களுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 3)*

**துக்கம்**

உடற்குற்றம் பதினெட்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 70)*

**துண்டுபட்ட வெள்ளை**

குதிரைக்கு ஆகாத இருபது சுழிகளுள் ஒன்று *(பிர.திர. 388)*

**துதம்**

முகநிலை பதினான்கனுள் ஒன்று; வேண்டாமையைக் குறிக்க இடம் வலமாகத் தலையாட்டும் நிலை *(பிர.தீபிகை. 73)*

**தும்பி**

மெய்யுணர்வு, நாவுணர்வு, மூக்குணர்வு கண்ணுணர்வு என்னும் நான்கறிவுடைய உயிர்களுள் ஒன்று *(இல.விள. 913)*

**தும்பிப்பரிட்சை**

அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 72)*

**தும்பை**

1. பொருதல் *(பிர.மர. 17)*
2. இறைவன் அணிதற்குரிய மலர்களுள் ஒன்று *(பிர.மர. 17)*
3. பெண்டிர் அணியும் மலர் மாலைகளுள் ஒன்று *(பிர.திர. 201)*

**தும்பை மாலை**

1. மாற்றாருடன் போரிடுதலை எப்பாவினாலும் முப்பது செய்யுள்களால் பாடும் இலக்கியம் *(பிர.மர. 17; சித.பா. 39)*
2. தும்பைப்பூ மாலை சூடிப் பொருதுவதைப் பாடும் இலக்கியம் *(மு.வீ. 1077; பிர.தீபிகை. 17; பிர.தீபம். 48)*

**துயில்**

ஐம்பூதங்களாலாகிய மனித உடலின் தழலின் கூறுகளுள் ஒன்று *(பிர.திர. 380)*

**துயிலெடை நிலை**

1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(பன்.பா. 99)*
2. கண்துயில் கொண்டிருக்கும் மன்னர்முன் சூதர்கள் வந்து குளிர்ந்த பொழுதான விடியற்காலத்தில் இயற்கையை நன்கு பொருந்தச் சொல்லி, திறை செலுத்தியவர்கள், இனி திறை செலுத்த வேண்டியவர்களாகிய மன்னர்கள் உன்னைப்போற்றி, உன் மொழிப்படி நடக்க விரும்பி வந்திருக்கிறார்கள். ஆகலின் எழுந்தருள்க என உரைக்கும் பகுதி *(பன்.பா. 206)*
3. படையின் வலிமை காரணமாகப் பாசறையில் மனக் கவலை எதுவும் இல்லாது உறங்குகின்ற அரசருக்கு நல்ல புகழ் கொடுத்தலை விரும்பிக் கருதிய சூதர்கள் உறக்கம் நீக்குவதான கூற்றுகளைப் பாடுபொருளாகக் கொண்டு பாடும் இலக்கியம் *(பிர.தீபிகை. 22)*
4. பாசறையின்கண் பகைவரை வென்ற மகிழ்வில் அரசன் கொண்டுள்ள இன்துயிலினை, அவனைப் புகழ்ந்துரைக்கும் பாடலால், பாணர் வாழ்த்தி எழுப்புதல் *(பிர.தீபம் 61)*

**துர்வாசம்**

உபபுராணம் பதினெட்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 70)*

**துருவதாளம்**

1. சப்தத் தாளத்துள் (எழுவகைத்தாளங்களுள்) ஒன்று
2. ஒன்பதுவகைத் தாளங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 49)*

**துலாம்**

கலிப்பாவிற்கு உரிய இராசிகளுள் ஒன்று *(வெண்.பா. 70; பிர.மர. 26; இல.விள. 882; தொ.விள. 297; மு.வீ. 1014)*

**துலுக்கர்**

குலப் பெயர்களுள் ஒன்று *(பிர.திர. 363)*

**துவக்கு**

ஞானேந்திரியம் ஐந்தனுள் ஒன்றாகிய மெய் *(பிர.திர. 378)*

**துளுவம்**

ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று *(பிர.திர. 500-502; பிர.தீபிகை. 99)*

**துனிவிசித்திரம்**

பெண்கலவி பாடிப் பின்பு பிரிவை விரித்து ஊடற்சிறப்பை உரைக்கும் இலக்கியம் *(பிர.திர. 6)*

## தூ

**தூ**

1. பெண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 27; வெண்.பா 6; நவநீ.பா 7; சித.பா. 20; தொ.விள. 289; பிர.திர 124; சுவாமி. 174; மு.வீ. 1031; பொரு.விள. 21)*
2. விசாக நாளுக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 45; வெண்.பா. 14; நவநீ.பா. 16; சித.பா. 23; இல.விள. 790; தொ.விள. 292; பிர.திர. 143; மு.வீ. 1034; பொரு.விள. 49)*
3. பொன் என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 5)*; செல்வம், வேலை என்னும் மங்கலச் சொற்களுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 3)*

**தூக்கானந்தம்**

ஆனந்தக் குற்றங்களுள் ஒன்று; இசைக் கருவிகளைக் கொண்டு பாடப்படும் பாடலின்கண் தலைவனின் பெயரை உயரவும் இறுகவும் பிளந்தும் பாடுவதால் வருவது *(இல.விள. 887)*

**தூசங்கொளல்**

சித்திரகவி வகைகளுள் ஒன்று; ஒருவர் ஒரு வெண்பாவைச் சொன்னால் அந்த வெண்பாவின் இறுதி எழுத்தை முதலெழுத்தாகக் கொண்டு மற்றொருவர் வேறொரு வெண்பாவைப் பாடுவது *(வெண்.பா. 26; நவநீ.பா. 67)*

**தூதர்**

அரசர்க்கு உரிய ஐவர் குழுவில் ஒருவர் *(பிர.தீபிகை. 89)*

**தூது**

1. கலிவெண்பாவால் பாடப்படும் இலக்கியங்களுள் ஒன்று *(நவநீ.பா. 45)*
2. மையலைக் கூறி உயர்திணை, அஃறிணைப் பொருள்களைத் தூதுசொல்ல விடுவது *(பிர.மர. 15; சித.பா. 38; சுவாமி. 172; மு.வீ. 1112; பிர.தீபிகை. 26; பிர.தீபம். 76)*
3. வெண்பாவால் பாடப்படுவது *(சித.பா. 38)*

4. ஊடல் நீக்கத்திற்காக இருதிணைப் பொருளையும் தூதாக விடுப்பது *(இல.விள. 874)*
5. எகினம், மயில், கிள்ளை, எழிலி, பூவை, சகி, குயில், நெஞ்சு, தென்றல், வண்டு எனும் பத்துத் தூதுப் பொருள்களையும் தனியே விரித்து 'தலைவனின் மாலையைப் பெற்று அன்பு பெருக வா' என்பது. *(பிர.திர. 30)*
6. கலம்பகத்தின் உறுப்புகளுள் ஒரு போகு, அம்மானை, ஊசல் நீக்கி ஏனையவற்றை அவற்றின் விதிப்படி இயற்றப்படும் பன்மணிமாலைச் செய்யுளுள் இடம்பெறச் செய்வனவற்றுள் ஒன்று; தலைவனைப் பிரிந்த தலைவி, அவனிடம் அஃறிணைப் பொருளையோ, அன்றித் தோழியையோ தன் கருத்தினை உணர்த்துமாறு தூது அனுப்புவதாகப் பாடுவது *(பிர.தீபம். 29, உரை)*
7. அரசனுக்குப் பாடப்பெறும் இலக்கியங்களுள் ஒன்று *(பிர.திர. 81)*
8. இவ்விலக்கியத்தின் மதிப்பு 100 பொன் *(பிர.திர. 86)*
9. எகினம் முதலிய தூதனுப்பப்படும் பொருள்களால் தூது பத்துவகைப்படும் என்னும் எண்ணம் தோன்றுகிறது. அவை பத்து அல்ல, ஒன்றே என நல்லோர் கூறின், ஒன்றன்று என்க. மீண்டும் இதனைச் சான்றோர் மறுப்பின் அனுப்பப்படும் பொருள்களும், அவற்றிற்கேற்பக் கூறும் சொற்களும் பத்து வகையாக மாறுபட்டு நிற்பதைக் கூறி மறுக்க வேண்டும்; மரபுச் செய்திகளைக் கூறித் தூது ஒன்றன்று; அனுப்பப்படும் பொருள்களால் பல வகைப்பாடுகளைக் கொண்டது என்று நிலைநிறுத்த வேண்டும் *(பிர.திர. 79, 80)*

10.

| வ.எண் | தூது விடுத்தவர் | தூது பெறுபவர் | தூதுப்பொருள் |
|---|---|---|---|
| 1 | இந்திரன் | இந்திராணி (லோமன் மகள்) | அன்னம் |
| 2 | மாயவன் | அம்பரீடன் மகள் | தோகை |
| 3 | இந்திரன் | அகலிகை | கிளி |
| 4 | அர்ச்சுனன் | பாண்டியனின் மகள் | மழை |
| 5 | சிசுபாலன் | உருக்குமணி | பூவை |
| 6 | சந்திரன் | தன் மனைவி | தோழி |
| 7 | அனலோன் | சுவாகா | குயில் |
| 8 | இராமன் | சீதை | நெஞ்சு, கண் |
| 9 | இந்திரன் | உறுவசி, திலோத்தமை | தென்றல் |
| 10 | சுவாயம்பு (மனு) | பிரமன் மகள் | வண்டு |

*(பிர.திர. 491, 492)*

(தூது இலக்கியங்கள் பொதுவாக முடிவினைக் காட்டாத போதும் ஒருசில நன்முடிவை உணர்த்துகின்றன. மறுக்கப்பட்ட தூதுநிலை இருப்பதாகத் தெரியவில்லை ஆனால் ருக்குமணிக்கு சிசுபாலன் விட்ட தூது தோல்வியில் முடிந்தது மாறுபாடாகும்)

3. தடுப்பதற்கு யாரும் இல்லாமையால் தூது இலக்கியம் பலவற்றைச் சாதி அறியாத மக்கள் பல இனங்களின் மேல் பாடினர் *(பிர.திர. 471)*

*தூதுப் பொருள்கள்*

1. 1. எகினம், 2. மயில், 3. கிள்ளை, 4. எழிலி, 5. பூவை, 6. சகி, 7. குயில், 8. நெஞ்சு, 9. தென்றல், 10. வண்டு *(பிர.திர. 30)*
2. மக்களே மக்களுக்குத் தூது செல்வதற்கு உரியர். தூதுப் பொருள்கள் பத்து எனக் கூறியுள்ளனர். அவற்றின் காரணம், அன்னம், பூவை, அஞ்சுகம் என்பன பேசும். நெஞ்சு, சகி, என்பன நலன் செய்யும். மயில், வண்டு, குயில், மேகம், தென்றல் இவற்றைச் சொல்வது ஏன் எனில் தகுதியுடைய மழை, காற்று வழியாக இவை பேசும். எனவே இவற்றையும் பிறவற்றையும் தூது அனுப்புவதாகக் காவியங்கள் உரைக்கின்றன *(பிர.திர. 490)*

தூது புறனடை

காம மயக்கத்தை வகுத்துக் கூறுதல், துன்பம் தருகின்ற இரவினை விலக்க மொழிதல், தலைவியின் மயக்கம் எனும் இவ் வகைகளையும் தூதில் பாடுதல் நலம். பத்து தூதுக்கும் இவ்வகையில் கூறுவது புகழ்ச்சியாம்; பாடாவிட்டால் குற்றம் கூறலாம் *(பிர.திர. 474)*

தூதுப் பொருள்களுக்குப் புறனடை

| | | |
|---|---|---|
| ஓதிமத்திற்கு | - | வன்பகம், தாரா |
| மயில் | - | கோழி |
| கிளி | - | அதே சாதியின் பிற கிளிகள் |
| எழிலி | - | புகை, சோலைமுகில்கள் |
| பூவை | - | மாடப்புறவு, பெரும்புறவு |
| பாங்கி | - | அரம்பை, பிறர் |
| குயில் | - | காகம், கரிச்சான், வாலி |
| நெஞ்சு | - | உடம்பு, ஆன்மா |
| தென்றல் | - | வானம், மாரனின் மலையமாருதம் |
| வண்டு | - | அந்தச் சாதியின் அறுகால் பறவை *(பிர.திர. 468)* |

## தெ

### தெ
1. ஆண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 26; வெண்.பா 6; நவநீ.பா 7; சித.பா. 20; தொ.விள. 289; பிர.திர. 124; சுவாமி. 174; மு.வீ. 1031; பொரு.விள. 20)*
2. விசாக நாளுக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 45; வெண்.பா. 14; நவநீ.பா. 16; சித.பா. 23; இல.விள. 790; தொ.விள. 292; பிர.திர. 143; மு.வீ. 1034; பொரு.விள. 49)*
3. பொன் என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 5)*; செல்வம், வேலை என்னும் மங்கலச் சொற்களுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 3)*

### தெங்கணம்
ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று *(பிர.திர. 500-502; பிர.தீபிகை. 99)*

### தெய்வக் கையுறை
தெய்வத்தைத் துதித்து பெண்ணைக் கையுறையாக அளித்தலைப் பாடும் இலக்கியம் *(பிர.திர. 17)*

**தெய்வ கணம்** - 1. இயமானன், 2. திங்கள், 3. நிலம், 4. நீர், 5. சூரியன், 6. வானம், 7. அங்கி, 8. காற்று *(இந்.காளி. 12; பன்.பா. 57)*

### தெய்வம்
1. எண்வகை மணங்களுள் ஒன்று; வேதம் ஓதி, நெய்யூற்றி வேள்விசெய்து தீயின் முன்னர்க் கைப்பிடித்து உரியவர்க்கு அளித்தல் *(பிர.திர. 358)*
2. இருபத்தைந்து அம்சம் ஈடேறும்படியான யாகத்தில் இருத்துதற்கு ஈடாகிய பெரிய காணிக்கைக்கு ஈடாகக் கட்டழகியை அளித்தல் *(பிர.தீபிகை. 74)*

### தெசோபித்து
முப்பத்திரண்டு உபநிடதங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 59)*

### தெரிவை
1. மகளிரின் ஏழு பருவங்களுள் ஒன்று *(பன்.பா. 135; வெண்.பா .48 நவநீ.பா 46; பிர.மர. 14; சித.பா. 37; இல.விள. 863; பிர.திர. 198; தொ.விள. 260)*
2. இருபத்தாறு முதல் முப்பத்தொன்று வயது *(6 வருடம்)* வரையிலான பருவம் *(வெண்.பா. 48; சித.பா. 37; இல.விள. 863)*
3. வயது வரையறையைக் கூறுவதில் பாட்டியல்கள் சில வேறுபடுகின்றன. இருபத்தைந்து முதல் முப்பது வயது வரையிலான பருவம் என நவநீதப் பாட்டியலும் இருபத்தாறு முதல் முப்பது வயது வரையான பருவம் எனப் பிரபந்த மரபியலும் கூறுகின்றன *(பிர.மர. 14)*

### தென்றல்
1. பருவரல் வளரக் காரணமானவற்றுள் ஒன்று *(பன்.பா. 185)*
2. தூதுப் பொருள்களுள் ஒன்று *(பிர.திர. 30)*

## தே

### தே
1. பெண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 27; வெண்.பா 6; நவநீ.பா 7; சித.பா. 20; தொ.விள. 289; பிர.திர. 124; சுவாமி. 174; மு.வீ. 1031; பொரு.விள. 21)*
2. விசாக நாளுக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 45; வெண்.பா. 14; நவநீ.பா. 16; சித.பா. 23; இல.விள. 790; தொ.விள. 292; பிர.திர. 143; மு.வீ. 1034; பொரு.விள. 49)*
3. பொன் என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 5)*; செல்வம், வேலை என்னும் மங்கலச் சொற்களுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 3)*

### தேக்கு
பெண்டிர் அணியும் மலர் மாலைகளுள் ஒன்று *(பிர.திர. 202)*

### தேசாட்சரி
முப்பத்திரண்டு இராகங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 51)*

### தேசீ
முப்பத்திரண்டு இராகங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 51)*

### தேர்
மங்கலச் சொற்களுள் ஒன்று *(பன்.பா. 68; வெண்.பா. 2; நவநீ.பா. 2; சித.பா. 18; இல.விள. 771; தொ.விள. 285; பிர.திர. 111; சுவாமி. 173; மு.வீ. 1027; பொரு.விள. 3)*

### தேரைப்பாய்வு
நூற்பாவின் கிடக்கை முறைகளுள் ஒன்று; தவளை சிறிது இடைவெளி விட்டுத் தத்திச் செல்வது போல் ஒரு நூற்பா தன்னையடுத்த ஒன்றிரண்டு நூற்பாக்களை விடுத்து அடுத்த நூற்பாவோடு பொருள் தொடர்புற அமையும் நிலை *(இல.விள. 892)*

**தேவக்கிரியை**
முப்பத்திரண்டு இராகங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 51)*

**தேவகாந்தாரி**
வகுப்புறு இராகங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 53)*

**தேவபாடை**
வலம்சுழிக்கும் எழுத்துகளைக் கொண்ட மொழி *(பிர.திர. 456)*

**தேவபாணி**
1. தேவப் பிரணவம் என்னும் வடசொல்லின் திரிபு *(பன்.பா. 125)*
2. திருமால், சிவபெருமான், முருகப்பெருமான் மீது பாடுதற்குரியது *(பன்.பா. 126-127)*
3. பாடுதற்குரிய வரையறுத்த காலங்களும் உள *(பன்.பா. 127)*
4. அரசன் குடிகளுக்கு வேண்டிய முறையைச் செய்தாலும் தெய்வத்தை முன்னிலையாக அல்லது படர்க்கையாக வைத்து அரசனுடைய அறிவையும் மரபையும் வாழ்த்துவது *(பன்.பா. 128)*

**தேவர்**
கலம்பகத்தில் நூறு செய்யுள்களால் பாடப்படுவர் *(பன்.பா. 130; வெண்.பா. 34; நவநீ.பா.35; பிர.மர. 6; சித.பா. 30; இல.விள. 813; தொ.விள. 258; பிர.திர. 34; சுவாமி. 170; மு.வீ. 1041; பிர.தீபிகை. 7)*

**தேவர் முப்பத்து மூவர்**
உருத்திரன் - பதினொன்று; வசு - எட்டு; அச்சுவினிதேவர்கள் - இரண்டு; ஆதித்தர் - பன்னிரண்டு; மொத்தம் - முப்பத்து மூன்று *(பிர.தீபிகை. 81)*

**தேவர் வாழ்த்து**
பரணியின் உறுப்புகளுள் ஒன்று *(பன்.பா 143; வெண்.பா. 61; நவநீ.பா. 57-61; பிர.மர. 19; சித.பா. 41; தொ.விள. 259; பிர.திர. 45,46; சுவாமி. 171; மு.வீ. 1040; பிர.தீபிகை. 6)*

**தேவதத்தன்**
வாயுக்கள் பத்தனுள் ஒன்று *(பிர.திர. 379)*

**தேவர், அசுரர் தோற்றம்**
காசியப முனிவரின் மனைவியர் இருவர்.

1. அதிதி 2. திதி

அதிதி மரபில் பிறந்தவர்கள் தேவர்கள்;

திதி மரபில் பிறந்தவர்கள் அசுரர்கள்.

காசியபமுனிவர்
அதிதி திதி
தேவர் அசுரர் *(பிர.திர. 272)*

**தேவராத்திரம் (தேவராஷ்ட்ரம்)**
வகுப்புறு இராகங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 53)*

**தேவலோகப் பொருள்கள்**

| வ.எண் | பொருள் | வடிவம் | நிறம் |
|---|---|---|---|
| 1 | சங்கநிதி | சங்கு | வெண்மை |
| 2 | பத்மநிதி | தாமரை | செம்மை |
| 3 | ஐவகைக் கற்பகத்தரு | பெரியமரம் | பொன்மை |
| 4 | காமதேனு | பசு | வெண்மை |
| 5 | சிந்தாமணி | கல் | செம்மை *(பிர.திர. 280)* |

**தேவாங்க வரையுள்**
தேவலோகப் பெண்ணைச் சிறைவைத்துப் பின்வந்து பொருந்துதலைக் கூறும் இலக்கியம் *(பிர.திர. 73)*

**தேன்**
1. இறைவர்க்குப் படைக்கப்படும் பொருள்களுள் ஒன்று *(பிர.திர. 37)*
2. இசைக்குரிய சுவைகளுள் ஒன்று *(பிர.திர. 92)*

**தேனின் தேறல்**
பெண்பால் பிள்ளைப்பாட்டுக்குரிய உவமைகளுள் ஒன்று *(பன்.பா. 115)*

**தேனீர்க்குடிக்கீரன்**
சங்கப் புலவர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை. 86)*

## தை

**தை**
1. பெண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 27; வெண்.பா 6; நவநீ.பா 7; சித.பா. 20; தொ.விள. 289; சுவாமி. 174; மு.வீ. 1031; பொரு.விள. 21)*
2. விசாக நாளுக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 45; வெண்.பா. 14; நவநீ.பா. 16; சித.பா. 23; இல.விள. 790; தொ.விள. 292; பிர.திர. 143; மு.வீ. 1034; பொரு.விள. 49)*
3. நீர் என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 6)*; செல்வம், வேலை என்னும் மங்கலச் சொற்களுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 3)*

## தொ

**தொ**
1. ஆண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 26; வெண்.பா 6; நவநீ.பா 7; சித.பா. 20; தொ.விள. 289; சுவாமி. 174; மு.வீ. 1031; பொரு.விள. 20)*
2. சதய நாளுக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 45; வெண்.பா. 14; நவநீ.பா. 16; சித.பா. 23; இல.விள. 790; தொ.விள 292; பிர.திர. 143; மு.வீ. 1034; பொரு.விள. 50)*
3. கங்கை என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 7)*; சீர், மதி என்னும் மங்கலச் சொற்களுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 3)*

**தொகுத்த மொழியால் வகுத்தனர் கோடல்**
முப்பத்திரண்டு உத்திகளுள் ஒன்று; நூற்பா வாயிலாக ஒரு வாய்பாட்டை எடுத்தோதி, அவ்வாய் பாட்டைப் பற்றாகக் கொண்டு பல வாய்பாடுகளும் வந்து அதற்குப் பொருந்துவதற்கு வாய்ப்புக் கொள்ள வைத்தல் *(இல.விள. 898)*

**தொகுத்துச் சுட்டல்**
முப்பத்திரண்டு உத்திகளுள் ஒன்று; விரிவாகப் பின்னர் விளக்க வேண்டியவற்றை முதலிலேயே தொகுத்துக் கூறல் *(இல.விள. 898)*

**தொகைச் செய்யுள்**
▶ அகலக்கவி *(இல.விள. 817)*

**தொகைநிலைச் செய்யுள்**
▶ அகலக்கவி *(தொ.விள. 253; மு.வீ. 1081; பிர.தீபிகை. 18; பிர.தீபம். 51)*

**தொகைவெண்பா**
ஐம்பது அல்லது எழுபது அல்லது தொண்ணூறு வெண்பாக்களால் பெயர் பெற்று முடியும் இலக்கியம் *(நவநீ.பா. 38)*

**தொட்டியர்**
குலப் பெயர்களுள் ஒன்று *(பிர.திர. 363)*

**தொடர்நிலைச் செய்யுள்**
1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(பன்.பா. 99)*
2. இச் செய்யுள் இருவகைப்படும். அவை: 1. சொற்றொடர்நிலை, 2. பொருள் தொடர்நிலை *(பன்.பா. 224)*. ▶ *செய்யுள் வகை*
3. வித்து, எண்டுளி, கொடியைப் போலத் தலைவனுடைய வரலாறும் ஒன்றோடொன்று காரணகாரியத் தொடர்பாய்ப் பொருந்திவர எல்லாப் பொருட்கும் இயைந்ததாகிய வெண்பா, விருத்தம், ஆசிரியப்பா, ஒருதொடையான் அமைக்கப்பெற்ற கொச்சக உறுப்பு ஆகிய செய்யுள்களால் அவ்வரலாறுகள் தன்கண் நடத்தப்படுதலைப் பெறப் பாடப்படும் இலக்கியம் *(பன்.பா. 224)*
4. பொருட்டொடர்நிலைச் செய்யுள்கள் பல பாட்டுக்கள் தொடுக்கப்பட்டுத் தலையானவை, இடையானவை, கடையானவை என்று சொல்லப்படுதலையும் பொருந்தப்பெறும். *(பன்.பா. 225)*
5. அவற்றுள் தலையான காப்பியங்கள் என்று சொல்லப்படுவன உலகவழக்கு, செய்யுள்வழக்கு என்பவற்றோடும் ஐந்தியலோடும் பொருந்தி அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நாற்பொருளைக் கற்போருக்குத் தெளிவாக்கும். மேலும் வெற்றி, வெற்றி பெறுவதற்குக் காரணமாகிய மந்திரம் இவை முதலாகிய காப்பியத்தின்கண் வருதற்கு உரியனவாகிய யாவும் நாடகத்தின்கண் நிலைபெறும் சந்தியைப்போல ஒன்றோடொன்று தொடர்புற்று இருக்க அமைக்கப்பெற்று, அவை யாவும் அறிவுடையார் ஒப்புப்படி இனிது அமைந்திருக்கும் வகையில் இயற்றப்பெறும் இலக்கிய வகை. *(பன்.பா. 226)*

**தொடர்நிலைச் செய்யுள் வகை**
1. பிள்ளைக்கவி, 2. கலம்பகம், 3. பன்மணி மாலை, 4. மும்மணிக்கோவை,

5. அகப்பொருட்கோவை, 6. தொகைபடு செய்யுள், 7. இணைமணி மாலை, 8. இரட்டைமணி மாலை, 9. மும்மணி மாலை, 10. நான்மணி மாலை, 11. இருபா இருபஃது 12. ஒருபா ஒருபஃது, 13. ஒலி அந்தாதி, 14. இன்னிசை, 15. வருக்க மாலை, 16. கைக்கிளை, 17. மங்கல வள்ளை, 18. மற்றை இரட்டை (வேறு இரட்டை மணிமாலை) 19. நற்கீர்த்தி நேரிசை, 20. மெய்க்கீர்த்திமாலை, 21. காப்பு மாலை, 22. வேனில் மாலை, 23. பல்சந்த மாலை, 24. அங்கமாலை, 25. வசந்த மாலை, 26. நவமணி மாலை, 27. பரணி, 28. தசாங்கப் பத்து, 29. பதிற்றந்தாதி, 30. நூற்றந்தாதி, 31. அட்டமங்கலம், 32. அலங்காரப் பஞ்சகம், 33. ஊசல், 34. சின்னப் பூ, 35. சதகம், 36. எண் செய்யுள், 37. ஐந்திணைக்கோவை, 38. நாழிகை வெண்பா, 39. நானாற்பது, 40. மொழிவிழி (நயனப்பத்து), 41. இணைமுலைப் பத்து, 42. வில் விருத்தம், 43. வாள் விருத்தம், 44. வேல் விருத்தம், 45. கோல் விருத்தம், 46. வேழவிருத்தம், 47. குதிரை விருத்தம், 48. நாடு விருத்தம், 49. ஊர் விருத்தம், 50. கொடை விருத்தம், 51. காப்பியம் *(இல.விள. 805). ஒப்புநோக்குக: பா இனம் (பன்.பா. 99)*

**தொடித்தலை விழுத்தண்டி(னார்)**

சங்கப் புலவர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை. 85)*

**தொடை**

மோனை, எதுகை என இரு வகைத்து *(பன்.பா. 120)*

*தொடையால் பாடல் பெயர்பெறல்*

செய்யுளொன்றில் பல தொடைகள் விரவி வந்தால் முதலில் இடம் பெறும் தொடையே அதற்குப் பெயராக அமையும் *(சித.பா. 14)*

**தொடையானந்தம்**

ஆனந்தக் குற்றங்களுள் ஒன்று; பாட்டுடைத் தலைவனுக்குச் சொல்லப்படும் அடை அளபெடுக்கும் குற்றம்.

(எ-டு) **வாஅம்** புரவி வழுதியோ டெம்மிடைத்
**தோஒம்** நுவலுமிவ் வூர். *(இல.விள. 887)*

**தொடை வகைகள்**

1. அடிமோனை, 2. அடியியைபு, 3. அடியெதுகை, 4. அடிமுரண், 5. அடியளபெடை, 6. இணைமோனைத் தொடை, 7. பொழிப்பு மோனைத் தொடை, 8. ஒரூஉ மோனைத் தொடை, 9. கூழை மோனைத்தொடை, 10. மேற்கதுவாய் மோனைத் தொடை, 11. கீழ்க்கதுவாய் மோனைத் தொடை, 12. முற்றுமோனைத் தொடை, 13. இணைஇயைபுத் தொடை, 14. பொழிப்பு இயைபுத் தொடை, 15. ஒரூஉ இயைபுத் தொடை, 16. கூழை இயைபுத் தொடை, 17. மேற்கதுவாய் இயைபுத் தொடை, 18. கீழ்க்கதுவாய் இயைபுத் தொடை, 19. முற்று இயைபுத் தொடை, 20. இணை எதுகைத் தொடை, 21. பொழிப்பு எதுகைத் தொடை, 22. ஒரூஉ எதுகைத் தொடை, 23. கூழை எதுகைத்தொடை, 24. மேற்கதுவாய் எதுகைத் தொடை, 25. கீழ்க்கதுவாய் எதுகைத் தொடை, 26. முற்று எதுகைத் தொடை, 27. இணை முரண் தொடை, 28. பொழிப்பு முரண் தொடை, 29. ஒரூஉமுரண்தொடை, 30. கூழைமுரண் தொடை, 31. மேற்கதுவாய்முரண் தொடை, 32. கீழ்க்கதுவாய் முரண்தொடை, 33. முற்று முரண்தொடை, 34. இணைஅளபுத் தொடை, 35. பொழிப்பு அளபுத் தொடை, 36. ஒரூஉ அளபுத்தொடை, 37. கூழைஅளபுத் தொடை, 38. மேற்கதுவாய் அளபுத்தொடை, 39. கீழ்க்கதுவாய் அளபுத்தொடை, 40. முற்றுஅளபுத் தொடை *(சித.பா. 6)*

**தொம்பர்**

குலப் பெயர்களுள் ஒன்று *(பிர.திர. 363)*

**தொலைவு அளவு**

| | | |
|---|---|---|
| பகுதி | - | ஒன்பதாயிரம் யோசனை. |
| உவாமதி | - | பதினெட்டாயிரம் யோசனை |
| வெள்ளி | - | மூவாயிரத்து முந்நூற்று எழுபத்தைந்து யோசனை |
| வியாழன் | - | ஈராயிரத்து ஐந்நூற்று முப்பத்தொருகால் |
| சனி, செவ்வாய்- | | அறநூற்று முப்பத்திரண்டே முக்கால் மாகாணி |
| புதன் | - | நூற்றைம்பதும், எட்டு நாலுமா முந்திரியும் |
| இராகு, கேது | - | மதியின் மண்டலம் |
| பிற நாட்கள் | - | புதனின் மண்டலத்தின் அளவு *(பிர.திர. 269, 270)* |

**தொழும்பன்**

குலப் பெயர்களுள் ஒன்று *(பிர.திர. 362)*

## தோ

### தோ

1. பெண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 27; வெண்.பா 6; நவநீ.பா 7; சித.பா. 20; தொ.விள. 289; சுவாமி. 174; மு.வீ. 1031; பொரு.விள. 21)*
2. சதய நாளுக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 45; வெண்.பா. 14; நவநீ.பா. 16; சித.பா. 23; இல.விள. 790; தொ.விள. 292; பிர.திர. 143; மு.வீ. 1034; பொரு.விள. 50)*
3. கங்கை என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 7)*; சீர், மதி என்னும் மங்கலச் சொற்களுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 3)*

### தோகை

மங்கலச் சொற்களுள் ஒன்று *(வெண்.பா. 2, உரை; சித.பா. 18, உரை)*

### தோட்டி

1. மங்கலச் சொற்களுள் ஒன்று *(நவநீ.பா. 21, உரை)*
2. அரசர்க்குரிய இருபத்தொரு சின்னங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 88)*

### தோடி

முப்பத்திரண்டு இராகங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 51)*

### தோடு

1. புல்லின் உறுப்புகளுள் ஒன்று *(இல.விள. 920)*
2. மரத்தின் உறுப்புகளுள் ஒன்று *(இல.விள. 921)*

### தோரணம்

யானையின் இருவகை நடைகளுள் ஒன்று; முன்னே ஊன்றிய முன் காற்குறிக்கண் பின்காலை வைக்கும் நடை வகை *(பன்.பா. 170, உரை)*

### தோல்

1. புல், மரத்தின் பொது உறுப்புகளுள் ஒன்று *(இல.விள. 922)*
2. ஐம்பூதங்களாலாகிய மனித உடலின் நிலக் கூறுகளுள் ஒன்று *(பிர.திர. 379)*

### தோள்

► பாதாதி *(பன்.பா. 214; நவநீ.பா 44)*

## தௌ

### தௌ

1. பெண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 27; வெண்.பா 6; நவநீ.பா 7; சித.பா. 20; தொ.விள. 289; சுவாமி. 174; மு.வீ. 1031; பொரு.விள. 21)*
2. சதய நாளுக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 45; வெண்.பா. 14; நவநீ.பா. 16; சித.பா. 23; இல.விள. 790; தொ.விள. 292; பிர.திர. 143; மு.வீ. 1034; பொரு.விள. 50)*
3. சொல் என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 7)*

## ந்

### ந்

அலி எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 28; வெண்.பா 6; நவநீ.பா 7; சித.பா. 20; இல.விள. 773; தொ.விள. 289; பிர.திர. 125; மு.வீ. 1031; பொரு.விள. 22)*

## ந

### ந

1. இந்திரன் படைத்த எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 4; நவநீ.பா. 11; சித.பா. 21; இல.விள. 778; சுவாமி. 175)*
2. புதன் படைத்த எழுத்துகளுள் ஒன்று *(வெண்.பா. 10)*
3. அரச சாதிக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 6; வெண்.பா. 9; நவநீ.பா. 12; சித.பா. 21; இல.விள. 775; தொ.விள. 291; சுவாமி. 175; மு.வீ. 1033; பொரு.விள. 34)*
4. வணிக சாதிக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.திர. 135)*
5. மக்கள் கதிக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 15; வெண்.பா. 18; நவநீ.பா. 20; சித.பா. 24; இல.விள. 798; தொ.விள. 293; பிர.திர. 152; சுவாமி. 176; மு.வீ. 1036)*
6. அமுத எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 20; வெண்.பா. 7; நவநீ.பா. 10; சித.பா. 20; இல.விள. 779; தொ.விள. 290; பிர.திர. 128; சுவாமி. 175; மு.வீ. 1032; பொரு.விள. 27)*

7. ஆண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 26; வெண்.பா 6; நவநீ.பா 7; சித.பா. 20; தொ.விள. 289; பிர.திர. 124; சுவாமி. 174; மு.வீ. 1031; பொரு.விள. 20)*
8. அனுட்ட நாளுக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 46; வெண்.பா 14; நவநீ.பா. 16; சித.பா. 23; இல.விள. 791; தொ.விள. 292; பிர.திர. 143; மு.வீ. 1034; பொரு.விள. 51)*
9. சீர் என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 4);* உலகு என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 3)*

**நகணம்**

▶ இயமான கணம் *(சித.பா. 25; பிர.திர. 154; சுவாமி. 177)*

**நஞ்சு எழுத்துகள்**

▶ உண்டி அட்டவணை *(பன்.பா. 22-24; இந்.காளி. 4; வெண்.பா. 8; நவநீ.பா. 9; சித.பா. 20; இல.விள. 780; தொ.விள. 290; பிர.திர. 128-131; மு.வீ. 1032; சுவாமி. 175)*

**நட்சத்திரமாலை**

இருபத்தேழு நாள்மீன்களின் பெயர் திரிபாய் அமையுமாறு சந்த இன்பத்தால் அமையும் இலக்கியம் *(பிர.திர. 27)*

**நட்டம்**

அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 72)*

**நட்புத் தானம்**

பாலன், குமாரன், அரசன் *(பன்.பா. 32)*

**நடனகுஞ்சித சுவர்க்கை**

விண்மாதர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை. 46)*

**நடுத்தானம்**

▶ தானப் பொருத்தம் *(பிர.திர. 162)*

**நடை**

ஐம்பூதங்களாலாகிய மனித உடலின் காற்றுக் கூறுகளுள் ஒன்று *(பிர.திர. 380)*

**நத்தத்தர்**

சங்கப் புலவர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை. 85)*

**நதானம்**

கன்மேந்திரியப் புலன்களுள் ஒன்று *(பிர.திர. 380)*

**நதிசரம்**

யானைகள் உறையும் நிலங்களுள் ஒன்று *(பன்.பா. 163; இல.விள. 872, உரை)*

**நதிவிசேடம்**

நதியைப் பாடுபொருளாகக் கொண்டு, பிறவற்றைச் சிறப்பற்றன எனக் கூறிக் குறியிடத்திற்கு ஆற்று மலரை உவமித்துக் காம குணமுடையார் கூறும் இலக்கியம் *(பிர.திர. 71)*

**நந்தி**

1. உபபுராணம் பதினெட்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 70)*
2. சிலாதரனின் மைந்தன் *(பிர.திர. 283)*
3. நான்கு கரம் உடையவன்; காளை முகத்தினன்; கோல் உடையவன் *(பிர.திர. 284)*

**நந்தியாவட்டம்**

பெண்டிர் அணியும் மலர் மாலைகளுள் ஒன்று *(பிர.திர. 201)*

**நந்து**

1. ஈரறிவு உயிர்களுள் ஒன்று.
2. மெய், நா என்பவற்றால் உணரும் ஈரறிவுயிர் *(இல.விள. 913)*

**நப்பாலத்தர்**

சங்கப் புலவர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை. 86)*

**நயனத்தீட்சை**

சிவதீட்சையின் பன்னிருவகைகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 62)*

**நயனப்பத்து**

1. ▶ பணைமுலை நயனம் *(பன்.பா. 215, உரை)*
2. தலைவியின் கண் குறித்து ஆசிரிய விருத்தத்தாலோ கட்டளைக் கலித்துறையாலோ பத்துப் பாடல்களால் பாடப்படுவது *(வெண்.பா. 47; நவநீ.பா. 50; பிர.மர. 8; சில பாட்டியல்களில் பாவகை குறிக்கப்பெறவில்லை (சித.பா. 31; இல.விள. 852; தொ.விள. 253, உரை; மு.வீ.1104; பிர.தீபிகை. 23; பிர.தீபம். 70; பிர.திர. 22)*

**நயனிலை**
பாட்டுக்கும், பாட்டுடைத் தலைவற்கும் நன்மையைப் பயக்கும் நிலைமையினதாகிய முதற்சீர் *(பொரு.விள. 11)*

**நரகர்**
நான்கு நிலைகளுள் ஒன்று *(இந்.காளி. 2; பன்.பா. 13)*

**நரகர்கதி**
1. ஐ, ஔ, ஆய்தம், வ, ள, ன என்பன உரிய எழுத்துகளாம் *(பன்.பா. 17; நவநீ.பா 21; சித.பா. 24)*
2. மேற் குறிப்பிட்டவற்றுள் ஆய்தம் தவிர்த்த எழுத்துகளைச் சில பாட்டியல்கள் கூறுகின்றன *(வெண்.பா. 19; இல.விள. 799; தொ.விள. 293; மு.வீ. 1036; பிர.திர. 152; பொரு.விள. 70)*
3. தெய்வம், மக்கள், விலங்குக் கதியில் சொல்லப்படாத எழுத்துகள் எனச் சுவாமிநாதம் குறிப்பிடுகிறது *(சுவாமி. 176)*

**நரம்பு**
ஐம்பூதங்களாலாகிய மனித உடலின் நிலக் கூறுகளுள் ஒன்று *(பிர.திர. 379)*

**நரிவெரூவுத்தலையார்**
சங்கப் புலவர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை. 85)*

**நரை**
உடற்குற்றம் பதினெட்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 70)*

**நல்கூர் வேள்வியார்**
சங்கப் புலவர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை. 85)*

**நல்ல அவை**
1. புகழ், தருமநெறியில் நின்று பொய், காமத்தை இகழ்ந்து சினம், செற்றம் இல்லாதவராய் நிகழ்கலைகள் எல்லாவற்றையும் உணர்ந்தோர் உள்ள இடம் *(வெண்.பா. 77; நவநீ.பா 89)*
2. மேற்கூறியவற்றோடு உலோபம், மோகம், மதம், மாற்சரியம் இல்லாதவர் உள்ள இடம் *(இல.விள. 936)*
3. நல் அவை, நிறை அவை அறியாதவன் உரைத்த தமிழுக்கு உகந்து நற்கவி என்று உரைப்பனவும் நற்சபை *(பிர.திர. 413)*

**நல் வாக்கு**
பாவின்கண் அமைந்து மகிழ்வுடன் துன்பம் நினையாது உரைத்தல் *(பிர.திர. 419)*

**நவகண்டம்**
1. இந்திரம், 2. சேருகம், 3. தாம்பிரம், 4. நாகம், 5. கேவத்தி, 6. சவுமியம், 7. காந்திருவம், 8. வருணம், 9. குமரி *(பிர.திர. 499)*

**நவரத்தினம்**
சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(சுவாமி. 166)*

**நவமணி மாலை**
1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(பன்.பா. 99)*
2. தொடர்நிலைச் செய்யுள் வகைகளுள் ஒன்று *(இல.விள. 805)*
3. வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா என்னும் நான்குவகைப் பாக்கள், தாழிசை, துறை, விருத்தம் என்னும் மூவகை இனங்கள் கலந்து ஒன்பது பாட்டுகள் பொருந்திய வகை *(பன்.பா. 183; இல.விள. 837; மு.வீ. 1051; பிர.தீபிகை. 11; பிர.தீபம். 25)*
4. அந்தாதியாய் ஒன்பது விருத்தங்கள் அமையும் இலக்கியம் எனச் சில பாட்டியல்கள் கூறுகின்றன *(வெண்.பா. 46; பிர.மர. 11)*
5. ஒன்பது ஆசிரிய விருத்தத்தால் அமையும் இலக்கியம் எனக் குறிப்பிடுகின்றன சில பாட்டியல்கள் *(நவநீ.பா. 52; சித.பா. 34; தொ.விள. 274)*
6. நவமணிகளைத் திரிபு என்னும் அணியாக இடம் பெறும் வகையால் ஒன்பது பாடல்களால் பாடப்பெறும் இலக்கியம் *(பிர.திர. 21)*

**நவரோசு**
வகுப்புறு இராகங்கள் முப்பத்திரண்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 53)*

**நவவீரர்**
அன்னைமார்; எழுவர் *(பிர.திர. 287)*

**நவவீரரின் அன்னையர்**
பார்வதியின் காற்சிலம்பின் ஒன்பது பரல்களில் இருந்து பிறந்தவர்கள் *(பிர.திர. 287)*

நளம்
சிற்ப நூல் முப்பத்திரண்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 61)*

நற்கீர்த்தி நேரிசை
தொடர்நிலைச் செய்யுள் வகைகளுள் ஒன்று *(இல.விள. 805)*

நற்றாய்
பருவரல் வளரக் காரணமானவருள் ஒருவர் *(பன்.பா. 185)*

நற்றிணை
பல பாடல்கள் சேர்ந்து ஒரு நூலாகும் இலக்கிய வகையுள் ஒன்று *(பன்.பா. 89, உரை)*

நன்று
மங்கலச் சொற்களுள் ஒன்று *(வெண்.பா. 2, உரை)*

நனை
மரத்தின் உறுப்புகளுள் ஒன்று *(இல.விள. 921)*

## நா

நா
1. பெண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 27; வெண்.பா 6; நவநீ.பா 7; சித.பா. 20; தொ.விள. 289; பிர.திர. 124; சுவாமி. 174; மு.வீ. 1031; பொரு.விள. 21)*
2. அனுட நாளுக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 46; வெண்.பா. 14; நவநீ.பா. 16; சித.பா. 23; இல.விள. 791; தொ.விள. 292; பிர.திர. 143; மு.வீ. 1034; பொரு.விள. 51)*
3. சீர் என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 4)*; உலகு என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 3)*

நாகங்கள்
1. நச்சுப் பல் கொண்டவை; நச்சுப் பல்களாவன: காளி, காளாத்தி, இமன், இமதூதன் *(பிர.திர. 276)*
2. மணம் கொண்டவை; மணங்களாவன: கஸ்தூரி, தாழை, பாதிரி, இருப்பை *(பிர.திர. 276)*
3. பிறந்த ஏழு நாட்கள் கதிரவனைப் பார்த்து விளங்கும். நஞ்சம் உறும்; மேல்வாயில் இருக்கும் விடப்பல்லில் கரிய துளை உண்டாகும். சேரும் பல்நாகத்தின் இந்த நெறிகள் உலகில் அனைத்துப் பாம்புகளுக்கும் உரியவை. சிறந்த கருடன் முதலியவற்றுக்குச் சினம் தீர்ந்து அஞ்சும் இப்பெரும் பாம்புகள் *(பிர.திர. 277)*
4. பெண் நாகங்கள்; மண், நீர், காற்று, அறுகுவேர், வண்டு, ஓந்தி, எலி, தவளை, மீன் என்பனவற்றை இரையாகக் கொள்ளும் *(பிர.திர. 275)*
5. இவற்றின் தங்குமிடங்களாவன: கோயில், மரப்பொருந்து, புற்று (மரப்பொந்து என்பதன்றி மரமும் மனையும் கொள்ளலாம்) *(பிர.திர. 275)*
6. சங்கு, சக்கரம், வில், பறவைக்கால் என்பவற்றைப் படத்தின் அடையாளமாகக் கொண்டிருக்கும் *(பிர.திர. 275)*
7. செம்மை, பொன்மை, வெண்மை, கருமை என்னும் நிறங்களைக் கொண்டிருக்கும் *(பிர.திர. 275)*

நாகபந்தம்
1. சித்திரகவி வகைகளுள் ஒன்று
2. பாம்பின் படத்தை மரபின்படி வரைந்து அதில் உரிய முறையில் எழுத்துகள் பொருந்தும் வகையில் இயற்றப்பெறும் செய்யுள் *(வெண்.பா. 26; நவநீ.பா. 67; இல.விள. 766(690))*

நாகன்
வாயுக்கள் பத்தனுள் ஒன்று *(பிர.திர. 379)*

நாகு
1. பெண்பால் மரபுப்பெயர்களுள் ஒன்று *(இல.விள. 917)*; எருமை, மரை, பெற்றம் இவற்றில் பெண்ணினையும் நீர்வாழ் சாதியுள் நந்தின் பெண்ணினையும் குறிக்கும் *(இல.விள. 917 உரை)*

நாட்டியம்
பரதம் முதலியன அமைவது *(பிர.திர. 393)*

நாட்டை
1. முப்பத்திரண்டு இராகங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 51)*
2. யுத்த இராகங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 55)*
3. வைகறை நேர இராகங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 56)*

நாடகம்
1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(சுவாமி. 166)*
2. அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 72)*

நாடி

பத்து வகைகளை உடையது. அவையாவன:
1. பிங்கலை, 2. சுழிமுனை, 3. காந்தாரி, 4. அத்தி, 5. சிங்குவை, 6. அலம்புருடை, 7. குரு, 8. சங்கினி, 9. சித்திரன் 10. வயிரவன் *(பிர.திர. 379)*

நாடு

1. அரசர்க்கு உரிய ஒன்பது உறுப்புகளுள் ஒன்று *(பன்.பா. 178; வெண்.பா. 42;நவநீ.பா. 41; பிர.மர. 9; சித.பா. 32; இல.விள. 853; தொ.விள. 273; பிர.திர. 16; மு.வீ. 1126; பிர.தீபிகை. 31; பிர.தீபம். 88)*
2. தசாங்கம், சின்னப் பூவில் பாடப்படும் பத்துவகைப் பொருள்களுள் ஒன்று *(பன்.பா. 139; வெண்.பா. 42; நவநீ.பா. 24; சித.பா. 32; தொ.விள. 263; பிர.திர. 15)*
3. ஒன்பது சின்னங்களுள் ஒன்று (பிர.மர. 9, உரை)
4. 1. கொச்சி நாடு, 2. சோழ நாடு, 3. தொண்டை, 4. கூடல், 5. கச்சி, 6. கொங்கு, 7. பொதியம், 8. கொலுத்தாம், 9. பட்டம் 10. வள்ளியூர் *(பிர.திர. 361)*
5. செந்தமிழ் நாடென்பது பாண்டிய நல்நாடு. கொடுந்தமிழ் நாடென்பது தென்பாண்டி, குட்டம், குடம், கற்கா, வெண்பூழி, அருவா *(பிர.திர. 456)*
6. கொடுந்தமிழ் நாட்டின் பிற பகுதிகள் - அருவா வடதலை, சீதம், மலாடம், புனல்நாடு எனப் பன்னிரண்டாம் *(பிர.திர. 457)*

நாடுகள்

1. அங்கம், 2. கலிங்கம், 3. கன்னாடம், 4. கிராடம், 5. அவந்தி, 6. குரு, 7. குலிந்தம், 8. அருணன், 9. குருக், 10. குடகம், 11. மகதம், 12. மச்சம், 13. போடம், 14. ஆந்திரம், 15. சூரசேனம், 16. கொங்கணம், 17. கன்னடம், 18. கேகயம், 19. சோனகம், 20. குந்தளம், 21. இலாடம், 22. நிடதம், 23. கோசலம், 24. விதர்ப்பம், 25. திராவிடம், 26. சாலவம், 27. கொல்லம், 28. நேபாளம், 29. யவனம், 30. தெங்கணம், 31. பல்லவம், 32. பாண்டியம், 33. பப்பரம், 34. சிந்து, 35. காந்தாரம், 36. சீனம், 37. சிங்களம், 38. காசம், 39. மலையாளம், 40. காம்போசம், 41. காச்சிமீரம், 42. ஒட்டியம், 43. மாளவம், 44. வங்கம், 45. யுகந்தரம், 46. கூர்ச்சரம், 47. பாஞ்சாலம், 48. வங்காளம், 49. கருசம், 50. துளவம், 51. சகம், 52. கேரளம், 53. சோழம், 54. சவ்வீரம், 55. மராடம், 56. புலிந்தம் *(பிர.திர. 500-502; பிர.தீபிகை. 99)*

நாதகுலம்

அரசர், செட்டிகுலம், பூவசியர் குலம் என்பவற்றின் பெண்டிரை இணையப் பெற்ற மக்கள், பூணூல் தரித்து, செங்கோல் பிடித்து நடப்பவரால் ஆனது *(பிர.திர. 366)*

நாமகள் (பாமகள்)

காப்புக் கடவுளருள் ஒருவர் *(பன்.பா. 106; இல.விள. 808; பிர.திர. 89)*

நாமசங்கிதை

சிற்பநூல் முப்பத்திரண்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 61)*

நாமமாலை

1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(பன்.பா. 99)*
2. தொடர்நிலைச் செய்யுள் வகைகளுள் ஒன்று *(இல.விள. 805)*
3. பலவகை அடிமயக்கம் அமைந்த வஞ்சிப்பாவினால் ஆடவரைப் புகழ்ந்து பாடும் நூல் *(பன்.பா. 176; நவநீ.பா. 48; சித.பா. 36)*
4. அடிமயக்கம் என்பதை அகவலடியும், கலியடியும் மயங்கி வந்தது என்கின்றன சில பாட்டியல்கள் *(வெண்.பா. 57, உரை; இல.விள 866, பிர.தீபம். 27))*
5. வஞ்சிப்பாவில் பாடப்படும் இலக்கியம் எனக்கூறுகின்றன *(பிர.மர. 13; தொ.விள. 269)*
6. அகவலடியும் .கலியடியும் மயங்கிய வஞ்சிப்பாவால் ஆண்மகனைப் புகழும் இலக்கியம் *(மு.வீ. 1053; பிர.தீபிகை. 11)*

நாயக்கன்

குலப் பெயர்களுள் ஒன்று *(பிர.திர. 362)*

நாயகன் தேவனார்

சங்கப் புலவர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை. 85)*

நாயன்மார்கள்

1. திருநீலகண்டர் 2. இயற்பகையார் 3. தடுத்தாட்கொண்டவர் 4. விறல்மிண்டன் 5. இளையான்குடி மாறன் 6. கண்ணப்பன் 7. பரவை நாச்சியார் 8. திரு நீலநக்கர் 9. மூர்த்தியார் 10. எறிபத்தனார் 11. ஏனாதி நாயனார் 12. ஆனாய நாயனார் 13. சண்டேசர் 14. காரைக் காலம்மை 15. திருநாவுக்கரசர் 16. அமர்நீதியார் 17. உருத்திர பசுபதி 18. திருமூல தேவர்

19. சிறுதொண்டர் 20. நமிநந்தி 21. சத்தி நாயனார் 22. மூர்க்க நாயனார் 23. திருக்குறிப்புத் தொண்டர் 24. மெய்ப்பொருள் நாயனார் 25. சோமாசி 26. சாக்கிய நாயனார் 27. சிறப்புலி, 28. குலச்சிறை 29. அரிவாட்டாயர் 30. சேர் தண்டியடிகள் 31. முருகன் 32. ஏயர்கோன் கலிக் காமனார் 33. குங்கிலியக் கலையர் 34. பெரிய மிழலைக் குறும்பன் 35. பொய்யடிமை இல்லாத புலவர் 36. அப்பூதி அடிகள் 37. நரசிங்க முனையர் 38. நல்ல மானக்கஞ்சாறர் 40. சேரமான் 41. காரியார் 42. வாயிலா நாயன் 43. நெடுமாறன் 44. மருவு புகழ்ச்சோழன் 45. அதிபத்தி 46. கலி 47. கலிக்காமனார் 48. பரமனைப் பாடுவார் 49. கூற்றுவர் 50. முனையடுவார் 51. கணநாதர் 52. கோட்புலி 53. கழற்சிங்கர் 54. திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனார் 55. கணம்புல்ல நாயன் 56. செருத்துணை 57. இடங்கழி 58. ஐயடிகள் காடவர்கோன் 59. பத்தராய்ப் பணிவார் 60. புகழ்த்துணை 61. கோச்சோழர் 62. நேசர் 63. சடையர் 64. உடம்பில் முழுநீறு பூசுபவர் 65. பூசலர் 66. மங்கையர்க்கரசியர் 67. ஆரூர் பிறந்தவன் 68. முப்போதும் திருமேனி தீண்டுவாரும், சித்தம் சிவன்பால் வைத்தவரும் (73 என்று உரையில் சொல்லப்பட்டுள்ளது - இது மேலும் ஆய்வதற்குரியது) *(பிர.தீபிகை. 82-84)*

**நாரசிங்கம்**
உபபுராணம் பதினெட்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 70)*

**நாரணன்**
1. அந்தண சாதி எழுத்துகளைப் படைத்த நால்வருள் ஒருவர் *(பன்.பா. 5)*
2. அந்தண சாதிக்குரிய தேவதைகளுள் ஒன்று *(நவநீ.பா. 12)*

**நாரதீயம்**
உபபுராணம் பதினெட்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 70)*

**நாராயணம்**
முப்பத்திரண்டு உபநிடதங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 59)*

**நாராயணி**
1. சத்த மாதர்களுள் ஒருவர் *(பன்.பா. 109, உரை; நவநீ.பா. 29, உரை)*
   ► வேய்த்தோள் எழுவர்
2. முப்பத்திரண்டு இராகங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 51)*

**நாராயணியின் ஆயுதம்**
ஆழி *(பன்.பா. 109, உரை)*

**நாராயணியின் வாகனம்**
கருடன் *(பன்.பா. 109, உரை)*

**நால்வகைக் கவிகள்**
1. ஆசு, மதுரம் சித்திரம் வித்தாரம் என்னும் நால்வகைக் கவிதைகள் புனைவோர் *(வெண்.பா. 23; நவநீ.பா. 87; பிர.மர. 30)*
2. இவர்கள் முறையே கடுங்கவி, இன்கவி, அருங்கவி, பெருங்கவி எனவும் வழங்கப்படுவர் *(நவநீ.பா. 87, உரை)*
3. ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்னும் நால்வகைப்பாக்கள் *(இல.விள. 763)*
4. மேற்குறித்த நால்வகைப்பாக்களும் அவற்றைப்பாடுவோரும் *(இல.விள. 930; மு.வீ. 1016; பிர.திர. 392; பிர.தீபிகை. 98)*

**நால்வகைத் தோற்றம்**
பை, முட்டை, நிலம், வியர்வை *(பிர.திர. 372)*

**நாலசைச்சீர்**
நால்வகைச் சீர்களுள் ஒன்று *(பன்.பா. 54)*

**நாலடிநானூறு**
பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 44)*

**நாலுபாதச்சைவம்**
பதினாறு சைவங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 62)*

**நாவாய்**
மங்கலச் சொற்களுள் ஒன்று *(நவநீ.பா. 2, உரை)*

**நாவிதர்**
குலப் பெயர்களுள் ஒன்று *(பிர.திர. 363)*

**நாவிதன்கூலி**
முப்பத்திரண்டு அறங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 71)*

## நாழிகைக் கவி

1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(பன்.பா. 99)*
2. தொடர்நிலைச் செய்யுள் வகைகளுள் ஒன்று *(இல.விள. 805)*
3. ஒரு நாளுக்குரிய அறுபது நாழிகைகளை முப்பது முப்பது நாழிகைகளாகப் பகல், இரவு என்பவற்றுக்குப் பிரித்துப் பொருந்தும் அவற்றை எட்டு, ஏழு, ஏழு, எட்டு என நான்கு யாமத்திற்கும் பகுத்து அந் நாழிகைகளின் சிறப்பு விளங்கும்படியாகப் பாடப்படும் வெண்பா *(பன்.பா. 180)*
4. வேந்தர்கள், கடவுளரை முன்னிலையாக வைத்து நான்கு பகுதியுடைய முப்பது நாழிகைகளைத் தொகுத்துப் பாடப்படும் நேரிசை வெண்பாக்களை உடைய இலக்கியம் *(பன்.பா. 181)*
5. அரசருக்கும் தேவருக்கும் நிகழும் காரியங்கள் கடிகையளவில் தோன்றி நடப்பதாக முப்பத்திரண்டு நேரிசை வெண்பாக்களால் பாடப்படும் இலக்கியம் *(வெண்.பா. 45; நவநீ.பா. 54; பிர.மர. 18; சித.பா. 40; இல.விள. 850; மு.வீ. 1124; பிர.தீபிகை. 30; பிர.தீபம். 86)*
6. நான்கு யாமங்களுள் முதல், நான்காம் யாமம் ஒவ்வொன்றினுக்கும் நாழிகைகளை ஏழு, ஒன்று ஆகவும் இரண்டு, மூன்றாம் யாமம் ஒவ்வொன்றினுக்கும் ஆறு, ஒன்று ஆகவும் கொண்டு ஏழு நாழிகைக்கும் ஏழு வெண்பாப் பாடி எட்டாம் நாழிகையின் வெண்பாவில் யாமம் ஒன்று எனப் பாடுதல் வேண்டும். நான்காம் யாமத்தின் முதல் ஏழு நாழிகைகளுக்கும் அவ்வாறே ஏழு வெண்பாக்களைப் பாடி எட்டாம் நாழிகையில் யாமம் நான்கு என்று பாடுதல் வேண்டும் இரண்டாம் யாமத்தின் முதல் ஆறு நாழிகைக்கும் ஆறு வெண்பாப் பாடி ஏழாம் நாழிகையில் யாமம் இரண்டு என்று பாடுதல் வேண்டும் *(பன்.பா. 182)*
7. நாழிகைச்செய்யுள், நாழிகைக்கவி, நாழிகை வெண்பா, கடிகை வெண்பா என்பன ஒரே பிரபந்தத்தைக் குறிப்பன *(நவநீ.பா. 54, உரை; பிர.மர. 18, உரை)*

## நாழிகைச் செய்யுள்

► நாழிகைக் கவி *(நவநீ.பா. 54, உரை)*

## நாழிகை வெண்பா

► நாழிகைக் கவி *(வெண்.பா. 45; நவநீ.பா. 54, உரை)*

## நாள்

மங்கலச் சொற்களுள் ஒன்று *(பன்.பா. 68; சித.பா. 18; சுவாமி. 173)*

நட்சத்திரம் என்பது இதன்பொருள். ஒவ்வொரு நட்சத்திரத்திற்கும் உரிய எழுத்துகளைக் கூறி அவற்றுள் எவையெவை முதற்சீரின்கண் வரும், வாரா என்பவற்றையும் கூறும் பகுதி.

இருபத்தேழு நட்சத்திரங்களும் இருபத்தேழு நாளுக்கு உரியனவாகக் கருதப்படுகின்றன. கார்த்திகை தொடங்கி, மிருகசீரிடம் வரையிலான 27 நட்சத்திரங்களும் எழுத்துகளுக்குப் பிரித்துத் தரப்படுகின்றன. இவ்வாறு பிரிக்கப்பட்ட பின் 27 நட்சத்திரங்களும் ஒன்பது ஒன்பது என மூன்றாகப் பிரித்துக் கொள்ளப்படுகின்றன. பின் பாட்டுடைத் தலைவனின் இயற்பெயரின் முதலெழுத்துக்கு உரிய நாள் அல்லது பிறந்த நாளிலிருந்து தொடங்கி எழுத்துகளை எண்ண வேண்டும். அவ்வாறு எண்ணுகையில் ஒன்று, மூன்று, ஐந்து, ஏழு என்னும் நட்சத்திரங்களுக்கு உரிய எழுத்துகளை விட்டுவிடவேண்டும். ஏனெனில் இவை முதன்மொழிக்குப் பொருந்தா. இரண்டு, நான்கு, ஆறு, எட்டு என்னும் நட்சத்திரங்களுக்கு உரிய எழுத்துகளைப் பொருத்தமுடையனவாகக் கொண்டு அவ்வெழுத்துகளை முதலெழுத்தாக உடைய மங்கலச் சொற்களில் ஏதேனும் ஒரு சொல்லினை இலக்கியத்தின் முதல் மொழிக்குரிய சொல்லாக அமைப்பதே நாள் பொருத்தமாகும்.

நட்சத்திரங்களின் முப்பிரிவுக்குச் சன்மம், அனுசன்மம், உபசன்மம் என்று பெயர். *(பன். பா. 51, உரை; வெண்.பா. 71; இல.விள. 796; சித.பா. 24; தொ.விள. 292; சுவாமி. 176; பொரு.விள. 54)*

மூன்றாம் கூறாகிய உபசன்மத்தில் மூன்று, ஐந்து, ஏழு ஆகிய எண்களுக்கு உரிய நட்சத்திரங்களின் எழுத்துகள் நூலின் முதலெழுத்தாக வரும். *(இந்.காளி. 35; பொரு.விள. 65)*

பாட்டுடைத் தலைவனின் இயற்பெயரெழுத்துக்குரிய நட்சத்திரத்தில் தொடங்கி மங்கலச் சொல்லெழுத்து நாளளவும் எண்ண மேற்கூறியவாறு வரல் பொருந்தும் *(நவநீ.பா. 19; சித.பா. 24; மு.வீ. 1035)*

மூன்றாகப் பகுக்கையில் பிறந்த நட்சத்திரமும் அதற்கு மூன்றாவதாக வருவதும் ஏற்புடையன அல்ல. *(பிர.திர. 147)*

இரண்டு, நான்கு, ஆறு, எட்டு, ஒன்பதாம் எண்களில் பொருந்தும் நாட்களை அமைத்தால் செல்வம் உண்டாகும். *(பன்.பா. 52; தொ.விள. 292; பிர.திர. 147)*

வைநாசிகம், அட்டம ராசியை விலக்குதல் நன்று.

தலைவனின் பெயர் வடமொழிச் சொல்லாக இருந்து அதற்கு நட்சத்திரங்கள் பல பொருந்தினால் அங்கு இலக்கணம் கருதப்படாது. பிற பொருத்தங்கள் பொருந்தி நிற்பின் வடசொற்களை நீக்குதல் இல்லை.

சுழன்றுவரும் நாட்களில் ஏற்புடைய நாள் பொருத்தமாக முதன்மொழியின்கண் இணையும். குற்றமற்ற உயிர்மெய் எழுத்திற்கே நாள் வகுக்கப்படுமே தவிர மெய்யெழுத்திற்கு வகுக்கப்படாது. எல்லா எழுத்துகளுக்கும் இவையே நாட்கள். இவையொழிய அமையும் எழுத்துகள் எல்லாம் மொழிமுதலாகப் பொருந்தாதன. *(பிர.திர. 148-151)*

| சன்மம் | | | அனுசன்மம் | | உபசன்மம் | |
|---|---|---|---|---|---|---|
| வ. எண் | நாள் | எழுத்துகள் | நாள் | எழுத்துகள் | நாள் | எழுத்துகள் |
| 1 | கார்த்திகை | அ ஆ இ ஈ | பரணி | சொ,சோ,சௌ | அத்தம் | பு பூ |
| 2 | பூராடம் | உ ஊ எ ஏ ஐ | அவிட்டம்* | ஞு ஞூ ஞெ ஞே ஞொ ஞி | சித்திரை | பெ பே பை பொ போ பௌ |
| 3 | உத்திராடம் | ஒ ஓ ஔ | சோதி(சுவாதி) | த தா | மகம் | ம மா மி மீ மு மூ |
| 4 | திருவோணம் | க கா கி கீ | விசாகம் | தி தீ து தூ தெ தே தை | ஆயிலியம் | மெ மே மை |
| 5 | திருவாதிரை | கு கூ | சதயம் | தொ தோ தௌ | பூரம் | மொ மோ மௌ |
| 6 | புனர்பூசம் | கெ கே கை | அநுடம் | ந நா நி நீ நு நூ | உத்திரட்டாதி | ய யா |
| 7 | பூசம் | கொ கோ கௌ | கேட்டை | நெ நே நை | மூலம்* | யு யூ யோ |
| 8 | இரேவதி | ச சா சி சீ | பூரட்டாதி | நொ நோ நௌ | உரோகிணி | வ வா வி வீ |
| 9 | அச்சுவினி | சு சூ செ சே சை | உத்திரம் | ப பா பி பீ | மிருக சீரம் | வெ வே வை வௌ |

*அவிட்டம், மூலம் என்னும் இரு நட்சத்திரங்களுக்கான எழுத்துகளைக் கூறுகையில் ஒவ்வொரு பாட்டியலும் வெவ்வேறான மூன்று எழுத்துகளைக் கூறுகின்றன.

*(நூற்பா எண்: பன்.பா. 41-50; வெண்.பா. 11-16; நவநீ.பா. 13-18; சித.பா. 23; இல.விள. 785-795; தொ.விள. 292; பிர.திர. 142-144, மு.வீ. 1034; பொரு.விள 37-63)*

### நாற்சாதியினரின் தெய்வங்கள்

அந்தணர் - பிரம்மா
அரசர் - திருமால்
வணிகர் - சிவன்
வேளாளர் - தேவர்கள்

சிவபிரானை முதலாகக் கொண்ட வணிகரை எல்லாச் சாதியினரும், எல்லோரும் கொள்வர்; பெரியோரின் கூற்றிற்கு ஏற்ப, மறுக்கவும் செய்வர். இது குற்றமோ குறையோ அன்று *(பிர.திர. 307)*

### நாற்சாதியினருக்குரிய நிலம் முதலியன

அரசர், அவருக்குச் சமமான வணிகர் முடிய அமையும் நாற்சாதியினர், அரிய தெய்வம் விரும்பினால் எந்நிலத்திலும் இருப்பர். குறையற்ற நிலங்களில் இருத்தலால், அந்தந்த நிலத்திற்குரிய பூவையே அணிவார்கள். நிலம் மயங்கினால் பூவகையும் மயங்கும். செல்வம் பெருகவேண்டின் நிலத்திற்குரிய முறைகள் பிழையாமல் கூறப்படுவனவே நன்மை. பிறவற்றைக் கூறுவது நன்றன்று *(பிர.திர. 327)*

### நாற்பத்துமூன்று தொடை

யாப்பின் தொகைகளுள் ஒன்று

| | | |
|---|---|---|
| மோனைத் தொடை | - | 8 |
| இயைபுத் தொடை | - | 8 |
| எதுகைத் தொடை | - | 8 |
| முரண் தொடை | - | 8 |
| அளபெடைத் தொடை | - | 8 |
| அந்தாதித் தொடை | - | 1 |
| இரட்டைத் தொடை | - | 1 |
| செந்தொடை | - | 1 |
| | | -- |
| | | 43 *(தொ.விள. 300)* |

**நாற்பது**

1. தொடர்நிலைச் செய்யுள் வகைகளுள் ஒன்று *(இல.விள. 805)*
2. இடம், பொருள், காலம் ஆகிய இவற்றுள் ஒன்றினை நாற்பது வெண்பாவால் பாடும் இலக்கியம் *(மு.வீ. 1113; இல.விள. 851; பிர.தீபிகை. 26)*
3. இடம் பற்றி வருவது களவழி நாற்பது; காலம் பற்றிவருவது கார் நாற்பது; பொருள்பற்றி வருவது இன்னா நாற்பது, இனியவை நாற்பது *(பிர.தீபிகை. 26; இல.விள. 851, உரை)*
4. நாள், இன்பம், துன்பம், பொருள், இடம், வெற்றி, புண்ணியம் எட்டுள் ஒன்றினை நாற்பது வெண்பாவில் பாடுவது *(பிர.மர. 77)*
5. நாள் முதல் புண்ணியம் வரை ஏழு பொருண்மைகளை மட்டுமே நவின்று எட்டு என்று கூறியுள்ளமை ஐயப்பாட்டிற்கு இடமளிக்கிறது. பொருள் என்பதில் அகம், புறம் எனும் இரண்டினை அடக்குகிறாரா அன்றிப் பிறநூல்கள் கூறி இவர் விடுத்த அறம் ஏடெழுதுவோரால் தவறுதலாக விடுபட்டிருக்குமா என்னும் வினா எழுகிறது *(பிர.தீபம். 77, உரை)*

**நான்கறிவு**

மெய், வாய், மூக்கு, கண் என்னும் நான்கால் அறியப்படும் அறிவு *(இல.விள. 912)*

**நான்காரைச் சக்கரம்**

பதினேழு எழுத்துகளை உடைய பாடல் அமையும்படி உள்ள சக்கரம், *(பிர.திர. 58)*

**நான்கு கதிகள்**

வானவர், மக்கள், நரகர், விலங்கு *(இந்.காளி. 2; பன்.பா. 13)*

**நான்மணிக்கடிகை நூறு**

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 44)*

**நான்மணிக்கோவை**

1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(சுவாமி. 165)*
2. வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா நான்கிலும் பத்துப்பத்துப் பாடல்களைக் கொண்டு அந்தாதியாய் அமையும் இலக்கியம் *(சுவாமி. 169)*

**நான்மணி மாலை**

1. பல பாடல்கள் சேர்ந்து ஒரு நூலாகும் இலக்கிய வகையுள் ஒன்று *(பன்.பா. 90, உரை)*
2. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(பன்.பா. 99)*
3. தொடர்நிலைச் செய்யுள் வகைகளுள் ஒன்று *(இல.விள. 805)*
4. வெண்பா, கலித்துறை, ஆசிரியப்பா, (ஆசிரிய) விருத்தம் ஆகியவை இயைந்து அந்தாதியாய் நாற்பது செய்யுள்களில் இயற்றப்படுவது *(பன்.பா. 153; வெண்.பா. 38; நவநீ.பா. 36; பிர.மர. 10; சித.பா. 33; இல.விள. 821; பிர.திர. 11; மு.வீ. 1052; பிர.தீபிகை. 11; பிர.தீபம். 26)*
5. ஆசிரியப்பா, ஆசிரிய விருத்தம் இரண்டு மட்டும் இயைந்து அந்தாதியாய் நாற்பது செய்யுள்களால் இயற்றப்படுவது *(பன்.பா. 154; தொ.விள. 272)*

**நானாற்பது**

► நாற்பது *(இல.விள. 851)*

## நி

**நி**

1. ஆண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 26; வெண்.பா 6; நவநீ.பா 7; சித.பா. 20; தொ.விள. 289; பிர.திர. 124; சுவாமி. 174; மு.வீ. 1031; பொரு.விள. 20)*
2. அனுட நாளுக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 46; வெண்.பா. 14; நவநீ.பா. 16; சித.பா. 23; இல.விள. 791; தொ.விள. 292; பிர.திர. 143; மு.வீ. 1034; பொரு.விள. 51);*
3. சீர் என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 4);* உலகு, சீர் என்னும் மங்கலச் சொற்களுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 3)*

**நிசுவாசம்**

சிவாகமம் இருபத்தெட்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 60)*

**நிடதம்**

ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று *(பிர.திர. 500-501; பிர.தீபிகை. 99)*

**நிணம்**

ஐம்பூதங்களாலாகிய மனித உடலின் நீர்க் கூறுகளுள் ஒன்று *(பிர.திர. 380)*

**நிதி**

மங்கலச் சொற்களுள் ஒன்று *(சுவாமி. 173)*

நிமித்தம்

பரணியின் உறுப்புகளுள் ஒன்று *(பன்.பா. 143; வெண்.பா. 61; நவநீ.பா. 57-61; பிர.திர. 45, 46)*

நியதி

வித்தியா தத்துவம் ஏழனுள் ஒன்று *(பிர.திர. 378)*

நிரை நேர்

1. உரிய கணம் சந்திரன் *(இல.விள. 802; பிர.திர. 158)*
2. உரிய தெய்வம் இலக்குமி *(இல.விள. 802; சுவாமி. 177)*

நிரை நேர் நேர்

1. புளிமாங்காய் *(சித.பா. 25)*
2. சந்திர கணத்திற்கு உரிய சீர் *(இந்.காளி. 16; பன்.பா. 59; வெண்.பா. 20; நவநீ.பா. 22; சித.பா. 26; இல.விள. 800; தொ.விள. 294; பிர.திர. 157; சுவாமி. 177; மு.வீ. 1037; பொரு.விள. 76)*
3. இதனைப் 'ப' கணம் என்று சில பாட்டியல்கள் கூறுகின்றன *(சித.பா. 25; பிர.திர. 154; சுவாமி. 177)*

நிரை நேர் நிரை

1. புளிமாங்காய் *(சித.பா. 25)*
2. தீக் கணத்திற்கு உரிய சீர் *(இந்.காளி. 18; பன்.பா. 64; வெண்.பா. 20; நவநீ.பா. 22; சித.பா. 26; இல.விள. 800; தொ.விள. 294; பிர.திர. 157; சுவாமி. 177; மு.வீ. 1037; பொரு.விள. 81)*
3. இதனை 'ர' கணம் என்று சில பாட்டியல்கள் கூறுகின்றன *(சித.பா. 25; பிர.திர. 154; சுவாமி. 177)*

நிரை நிரை

1. உரிய கணம் நிலம் *(இல.விள. 802; பிர.திர. 158)*
2. உரிய தெய்வம் சுரபி *(இல.விள. 802)*
3. அரசன் *(சுவாமி. 177)*

நிரை நிரை நேர்

1. கருவிளங்காய் *(சித.பா. 25)*
2. ஆகாய கணத்திற்கு உரிய சீர் *(இந்.காளி. 13; பன்.பா. 63; வெண்.பா. 20; நவநீ.பா. 23; சித.பா. 26; இல.விள. 800; தொ.விள. 294; பிர.திர. 157; சுவாமி. 177; மு.வீ. 1037; பொரு.விள. 78)*
3. இக் கணத்தைத் 'த' கணம் என்று சில பாட்டியல்கள் கூறுகின்றன *(சித.பா. 25; பிர.திர. 154; சுவாமி. 177)*

நிரை நிரை நிரை

1. கருவிளங்கனி *(சித.பா. 25)*
2. நிலக் கணத்திற்கு உரிய சீர் *(பன்.பா. 60; இந்.காளி. 14; வெண்.பா. 20; நவநீ.பா. 22; சித.பா 26; தொ.விள. 294; பிர.திர. 157; சுவாமி. 177; பொரு.விள. 75)*
3. பூ கணம் என இலக்கண விளக்கம் கூறுகிறது *(இல.விள. 800)*
4. ம கணம் என்றும் கூறப்படுகிறது *(சித.பா. 25; பிர.திர. 154; சுவாமி. 177)*

நிரையொன்றாசிரியத் தளை

தளை வகை ஏழனுள் ஒன்று; விளமுன் நிரை வருவது *(சித.பா. 4)*

நிவிர்த தாளம்

ஒன்பதுவகைத் தாளங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 49, உரை)*

நிர்க்குணச்சைவம்

பதினாறு சைவங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 62)*

நிர்பீஜதீட்சை

சிவதீட்சையின் பன்னிரு வகைகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 62)*

நிர்வாணதீட்சை

சிவதீட்சையின் பன்னிரு வகைகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 62)*

நிரோட்டகம்

1. சித்திரகவி வகைகளுள் ஒன்று *(வெண்.பா. 26, உரை)*
2. ஒரு செய்யுளை உ, ஊ, ஒ, ஓ, ஒள ஆகிய ஐந்து உயிரெழுத்துகளும் ப, ம, வ எனும் மூன்று மெய்யெழுத்துகளும் இல்லாமல் பாடுவது *(இல.விள. 766 (690))*

**நிலக்கணம்**

1. இக் கணத்திற்கு உரிய சீர் நிரை நிரை நிரை என்பதாகும் *(இந்.காளி. 14; பன்.பா. 60; வெண்.பா. 20; நவநீ.பா. 22; சித.பா. 26; இல.விள. 800; தொ.விள. 294; பொரு.விள. 75)*
2. நன்மை பொருந்திய கணங்களுள் ஒன்று *(இந்.காளி. 21; பன்.பா. 66: வெண்.பா. 20; நவநீ.பா. 22; சித.பா. 25; இல.விள. 800; தொ.விள. 294; பிர.திர. 154)*
3. இக்கணத்திற்கு உரிய நாள் கேட்டை *(இந்.காளி. 36; பன்.பா. 60; சித.பா. 25; இல.விள. 800, உரை; பிர.திர. 154)*
4. இக்கணம் செல்வத்தைப் பெருகச் செய்யும் *(பொரு.விள. 83)*
5. இதனை 'ம' கணம் என்றும் சில பாட்டியல்கள் கூறுகின்றன *(சித.பா. 26; பிர.திர. 157; சுவாமி. 177)*
6. பூ கணம் எனவும் கூறப்படும் *(இல.விள. 800)*

**நிலத்தின் கூறுகள்**

1. தோல், 2. மயிர், 3. எலும்பு, 4. நரம்பு, 5. தசை *(பிர.திர. 379)*

**நிலம்**

1. ஈரசைச் சீர்க்குரிய கணங்களுள் ஒன்று *(இந்.காளி. 12; பன்.பா. 57)*
2. உரிய அசை - நிரை நிரை *(இல.விள. 802; பிர.திர. 158)*
3. மங்கலச் சொற்களுள் ஒன்று *(பன்.பா. 68; வெண்.பா. 2; நவநீ.பா. 2; சித.பா. 18, உரை; இல.விள. 771; தொ.விள. 285; பிர.திர. 111; மு.வீ. 1027; பொரு.விள. 3)*

| வ.எண் | நிலவகை | குலம் | கண்ணி/மாலை | கொடி | நூ.எண் |
|---|---|---|---|---|---|
| 1. | கடைக் குறிஞ்சி | தொழும்பர்கள் | சண்பக மலர் | நரி | 316 |
| 2. | இடைக் குறிஞ்சி | குறவர்கள் | தினை மாலை | ஓதி | ,, |
| 3. | தலைக் குறிஞ்சி | வேடர்கள் | பாலை | கரடி | ,, |
| 4. | கடைப் பாலை | புல்லிய வேடர்கள் | மரா | ஞாளி | 317 |
| 5. | இடைப் பாலை | மறவர் | பாலை | புலி | ,, |
| 6. | தலைப் பாலை | கைக்கோளர் | முல்லை | புலி | ,, |
| 7. | கடைமுல்லை | குறும்பர்கள் | கொன்றை | வானரம் | 318 |
| 8. | இடைமுல்லை | இடையர்கள் | துளசி | குரங்கு | ,, |
| 9. | தலைமுல்லை | கரையாயர் | முல்லை | குரங்கு | ,, |
| 10. | கடை மருதம் | வைசியர் | கற்பகம் | கற்பகம் | 319 |
| 11. | இடை மருதம் | அகம்பிடார் | கற்பகம் | கற்பகம் | ,, |
| 12. | தலை மருதம் | கள்ளர் | கற்பகம் | கற்பகம் | ,, |
| 13. | கடை நெய்தல் | வலை படையாச்சியர் | புனலை மலர் | குளமீன் | 320 |
| 14. | இடை நெய்தல் | குயவர், பிறர் | குமுதம் | அன்னம் | ,, |
| 15. | தலை நெய்தல் | கடையர்கள் | நெய்தல் | வலியான் | ,, *(பிர.திர.)* |

**நிலவகைகள்**

ஐவகை நிலங்களோடு (குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை) தலை, இடை, கடை என்பது பொருந்தக் கிடைக்கும் நிலவகை பதினைந்து. இவ்வாறே ஐவகை நிலமும் தனித்தனியே மற்ற நான்கு நிலத்துடன் பொருந்தக் கிடைக்கும் நிலவகை இருபது. ஆக, மொத்தம் - முப்பத்தைந்து *(பிர.திர. 315)*

**நிலைமண்டில ஆசிரியப்பா**

எல்லா அடியும் தம்முள் ஒத்து இயற்றப்படும் செய்யுள் *(சித.பா. 9)*

(எ-டு) வேரல் வேலி வேர்க்கோட் பலவின்
சாரல் நாட செவ்வியை ஆகுமதி
யாரஃ தறிந்திசி னோரே சாரற்
சிறுகோட்டுப் பெரும்பழந் தூங்கி யாங்கிவள்
உயிர்தவச் சிறிது காமமோ பெரிதே

(மேற்: குறுந்தொகை 18; யா.கல விருத்தியுரை நூ. 53, 74; யா.காரிகை 28, உரை; சித.பா.ப. 40)

**நிறமுடைய மரங்கள்**

பருவரல் வளரக் காரணமானவை *(பன்.பா. 185)*

நிறை அவை

1. நலன், அடக்கம், செம்மை, நடுநிலை, ஞானம், குலம் இவற்றை உடையோரும் அவரால், மொழியப்படுவனவற்றைக் கேட்போரும் நிறைந்திருக்கும் அவை *(வெண்.பா. 78)*
2. வெண்பாப் பாட்டியல் சொல்வனவற்றோடு, வன்மையற்றவரையும் வல்லாராக்கி வினவிக் கேட்போர் உள்ள அவை என்கிறது இலக்கண விளக்கம் *(இல.விள. 936)*
3. ஒரு திறம் பற்றாது, எல்லாப் பொருளையும் உணர்ந்து நிற்பினும் பிறர் உரைப்பதையும் முழுமையாகக் கேட்டு, அறிநெறி நீங்காத அந்தணர், அரசர், வணிகர், வினைஞர் ஆகியோர் உள்ள அவை *(நவநீ.பா. 89)*

நிறைகுடம்

மங்கலச் சொற்களுள் ஒன்று *(நவநீ.பா. 2, உரை)*

நீ

நீ

1. பெண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 27; வெண்.பா 6, நவநீ.பா 7; சித.பா. 20; தொ.விள. 289; பிர.திர. 124; சுவாமி. 174; மு.வீ 1031; பொரு.விள. 21)*
2. அனுட நாளுக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 46; வெண்.பா. 14; நவநீ.பா. 16; சித.பா. 23; இல.விள 791; தொ.விள. 292; பிர.திர. 143; மு.வீ. 1034; பொரு.விள. 51)*
3. சீர் என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 4)*; உலகு, சீர் என்னும் மங்கலச் சொற்களுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 3)*

நீசகுலம்

அந்தண குலத்தினர் அக்குலப் பெண்டிரையே திருமணம் புரியாது இணைந்தும், அவ் அந்தணர் தாமும் பிற குல மகளிரை மாறிப் புணர்ந்தும்; அரசு குலத்தவர் அக்குல மங்கையரை மணம் செய்யாது இணைந்தும் வணிகக் குலத்தினர் முன்குலத்தின் பெண்டிரை மாறிப் புணர்ந்தும்; இவ்வாறு எழுபதுடன், இரண்டு முறைகளில் மூன்று சாதிகளுக்கும் இணைவால் பிறந்தவர்கள் மொத்தம் 96 பேர். இவை அயனாரின் படைப்பு. ஈசன் இவர்க்கு நீசன் எனப் பெயர் அளித்தார் *(பிர.திர. 368)*

நீதி சாத்திரம்

அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 72)*

நீர்

1. மங்கலச் சொற்களுள் ஒன்று *(வெண்.பா. 2; நவநீ.பா. 2; வரை.ப. 6; சித.பா. 18; தொ.விள. 285; பிர.திர. 111, பொரு.விள. 3)*
2. உரிய அசை - நேர் நிரை *(இல.விள 802; பிர.திர. 158)*
3. ஐம்பூதங்களுள் ஒன்று *(பிர.திர. 378)*
4. ஐம்பூதங்களாலாகிய மனித உடலின் நீர்க் கூறுகளுள் ஒன்று *(பிர.திர. 380)*

நீர்க்கணம்

1. இக் கணத்திற்கு உரிய சீர் நேர் நிரை நிரை *(இந்.காளி. 13; பன்.பா. 61; வெண்.பா. 20; நவநீ.பா 22, சித.பா. 26; இல.விள. 800; தொ.விள. 294; பொரு விள. 77)*
2. நன்மை பொருந்திய கணங்களுள் ஒன்று *(இந்.காளி. 21; பன்.பா. 66; வெண்.பா. 20; நவநீ.பா. 22; சித.பா. 25; இல.விள. 800; தொ.விள. 294; பிர.திர. 154)*
3. உரிய நாள் சதயமாகும் *(பன்.பா. 61; இந்.காளி 36; சித.பா. 25, இல விள. 800, உரை; பிர.திர. 154)*
4. இக் கணம் பாட்டுடைத் தலைவற்குச் சீரும் சிறப்பும் கொடுக்கும் *(பொரு.விள. 85)*
5. இதனை 'ய' கணம் என்றும் சில பாட்டியல்கள் கூறுகின்றன *(சித.பா. 26; பிர.திர. 157; சுவாமி. 177)*

நீர்வேட்டல்

உடற்குற்றம் பதினெட்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 70)*

நீராடல்

பெண்பால் பிள்ளைப் பாட்டு நிலைகளுள் ஒன்று *(பிர.திர. 3)*

நீராட வாராய்

ஆண்பால் பிள்ளைப்பாட்டு நிலைகளுள் ஒன்று *(பன்.பா. 102, உரை)*

நீலம்

1. வஞ்சிப் பாவிற்கு உரிய மலர் *(பன்.பா. 94)*
2. வஞ்சிப்பாவிற்கு உரிய நிறம் *(பன்.பா. 94; தொ.விள. 298)*
3. காமனின் ஐங்கணைக்குரிய மலர்களுள் ஒன்று *(பன்.பா. 186)*

**நீலாம்பரி**

1. வகுப்புறு இராகங்கள் முப்பத்திரண்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 53)*
2. இரக்கத்திற்கு உரிய இராகங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 55)*

**நீலி**

காப்புக் கடவுளருள் ஒருவர் *(பன்.பா. 106; நவநீ.பா. 28; பிர.திர. 89)*

## நு

**நு**

1. ஆண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 26; வெண்.பா 6; நவநீ.பா 7; சித.பா. 20; தொ.விள. 289; பிர.திர. 124; சுவாமி. 174; மு.வீ. 1031, பொரு.விள. 20)*
2. அனுட நாளுக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 46; வெண்.பா. 14; நவநீ.பா. 16; சித.பா 23; இல.விள. 791; தொ.விள. 292; பிர.திர. 143; மு.வீ. 1034; பொரு.விள. 51)*
3. எழுத்து என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 4)*; உலகு, சொல் என்னும் மங்கலச் சொற்களுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 3)*

**நுட்பவுரை**

உரைவகைகளுள் ஒன்று *(இல.விள. 903, உரை)*

**நுதலியது அறிதல்**

முப்பத்திரண்டு உத்திகளுள் ஒன்று; சூத்திரத் தொடரை வெளிப்படையாக நோக்குகையில் அதனால் பயன் இல்லாதது போலத் தோன்றினாலும், கருதி உணரப்படும் பொருள் இன்னது என்று கொள்ளுமாறு இருத்தல் *(இல.விள. 898)*

## நூ

**நூ**

1. பெண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 27; வெண்.பா 6; நவநீ.பா 7; சித.பா. 20; தொ.விள. 289; பிர.திர. 124; சுவாமி. 174; மு.வீ. 1031; பொரு.விள. 21)*
2. அனுட நாளுக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 46; வெண்.பா. 14; நவநீ.பா. 16; சித.பா. 23; இல.விள. 790; தொ.விள. 292; பிர.திர. 143; மு.வீ. 1034; பொரு.விள. 51)*
3. எழுத்து என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 4)*; உலகு, சொல் என்னும் மங்கலச் சொற்களுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 3)*

**நூல்**

1. அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நாற்பயனையும், முதல், வழி, சார்பு என்னும் மூவகை நூல்களையும் கருத்து முதலிய பதின் மூன்றுரையையும், ஓத்தினையும், சூத்திரத்தையும் எழுவகை மதத்தையும் பத்துக் குற்றத்தையும் முப்பத்திரண்டு உத்தியையும் கொண்டிருப்பது *(வெண்.பா. 91; நவநீ.பா. 72)*
2. ஆற்றொழுக்கு, அரிமா நோக்கம், பருந்தின் வீழ்வு, தவளைப்பாய்த்து, சொற்பொருள் அறம், பொருள் உரைத்தல், பயன், முறைமை ஆகியவற்றை உடையது *(வெண்.பா. 92)*
3. *நூலின் பெயர் அமையும் முறை*
   நிறைந்த முதல் நூல், கருத்தன், அளவு, மிகுதி, பொருள் கொடுத்தோன், அரும்தன்மை முதலிய காரணங்களாலும் இடுகுறியாலும் நூலுக்குத் திறனுடைய பெயர் சேரும் *(பிர.திர. 399)*
4. *நூலின் நுவல் திறன்*
   காலம், இடம் முதலியன ஏற்புடையதாக நோக்கி, விரையாது வெகுளாது உரைத்தலும் பிறவுமாம் *(பிர.திர. 395)*
5. *நூல் இயல்பு*
   நூல், நுவல்வோன், நுவல்திறன், பெறுபவன், பெறுபவனின் கூற்று என்னும் ஐந்தும் அமைய, நூலானது பொது, சிறப்பு என்னும் இரு வரலாறும் பெற்று, முதல், வழி, சார்பு என்னும் மூவகையுள் ஒன்றாய், நான்கு அழகிய பயன் உடையதாய் எழுவகை மதம் தழுவி, பத்துக்குற்றம் நீங்கி ஊனமற்று, முப்பத்திரண்டு உத்திகளுடன் ஓத்து, படலம் என்னும் உறுப்புகள் பெற்று, சூத்திரம், காண்டிகை, சிறப்புடைய விருத்தி, விகற்ப நடை என்பன உடையதாய் நுவல்வோன் வரலாறானது, குலம், நிலம், மலை, கோல், மலர் என்பனவற்றின் தன்மையுடையது *(பிர.திர. 394)*

**நூல் அரங்கேற்றம்**

1. தரையினைச் சாணமிட்டு மெழுகித் தானியங்களைப் பரப்பி, ஒளிபொருந்திய மணிகளால் அலங்கரித்து அன்றலர்ந்த மலர்களைத் தூவி, விளக்கேற்றித் தோரணம் கட்டிப் பீடம் பொருத்திப் பூரண கலசத்தில் நாமகளை ஏற்றுவித்தல் *(வெண்.பா. 97; நவநீ.பா. 102)*
2. சித்திரம் வரைந்த அழகிய விதானத்தில் மாலைகளைத் தொங்கிவிட்டுத் தோரணம், வாழை மரம் கட்டி, பூரண கும்பம், பொன் முளைப் பாலிகை, வெண்பொரி தீபம் வைத்து அவையைப்

பொலிவுறச் செய்து பலவகை இசைக்கருவிகள் ஒலிக்கப் பாவையர் ஆட, பாணரும் மகளிரும் பல்லாண்டு இசைக்க, அந்தணர் வாழ்த்த, புதிய ஆடையை அணிந்து கேட்பவரும், இயற்றியவரும் உரிய இருக்கைகளில் எதிரெதிராய் அமர்ந்து மங்கலப் பாடலை ஏற்று நூலியற்றியவருக்குப் பொன், பூமி, வத்திரம் (ஆடை) கொடுத்துதவி ஏழடி புலவனுடன் நடந்து பின் மீள்வது கடன் *(பிர.மர. 51; சித.பா. 45)*; பொன், பூமி, ஆடைகளுடன் தேர், யானை, குதிரை முதலியனவும் புலவனுக்கு வழங்கப்படும் *(இல.விள. 939)*

3. மேற்கூறியவற்றுடன் அட்டமங்கலம் ஏந்தல், யானைகள் மீது நீர்க்குடம் பொருந்தல் என்பனவும் பிரபந்தத் திரட்டில் குறிப்பிடப்படுகின்றன *(பிர.திர. 401, 402)*
4. ஏட்டை எடுத்து, கிழக்கு அல்லது வடக்கினை முகமாக்கி, இசைகின்ற சூலம் கண்டு, நல்ல நாள் அறிந்து இருந்து, தலைவன் மேற்கு அல்லது தெற்கு முகமாக அமையக் கூறும் செய்திகளை அறிந்து, ஒரு இருக்கையாதலன்றி, போடுகின்ற வேறு இருக்கை ஏற்புடையதாக, இருக்கப் புலவர்கள் எதிரே அமர்ந்து தர்க்கம் செய்து வெற்றியாகச் சோர்வு இன்றித் தமிழை அரங்கேற்றுவது சிறப்புடையது *(பிர.திர. 403)*

**நூல் இலக்கணம்**

முதலும் முடிவும் மாறுகோள் இலாது, தொகை வகையால் பொருளை நன்கு விளக்கி, விளக்கமான உரையோடு பத்து குற்றம் இல்லாததாய், முப்பத்திரண்டு உத்தியோடு ஒரு பொருள் குறித்த சூத்திரம், அதற்கு இனமான இயல் உணர்த்திப் பலபொருட்கும் பொதுவாகிய படலமும், படலம், ஓத்து, சூத்திரம் ஆகிய மூன்றை அடக்கிய பிண்டத்தையும் உடையதாய் விளங்கும் *(இல.விள. 890)*

**நூலின் வகை**

முதல், வழி, சார்பு என்னும் மூவகை *(இல.விள. 899)*

**நூற்பா அகவல்**

சூத்திரத்தைக் குறித்த யாப்பும் பொருளும் உடைத்தாய் நாற்சீரடியாகவோ பல அடியாகவோ வரும் செய்யுள் *(சித.பா. 15)*

**நூற்பாவின் அழகு**

சூத்திரத்திற்கு முன் உள்ள கட்டுரையைச் சூத்திரமாகக் கூறல், காண்டிகை உரையைக் குற்றமற்ற சூத்திரமாகச் செய்தல், கருத்தினை எடுத்துக் கூறல், எய்தியதனை விலக்கிக் கூறுதல், பாட்டிடை வைத்த குறிப்பு, பாவின்று எழுந்த கிளவி, பொருளொடு புணராப் பொய்மொழி, பொருளொடு புணர்ந்த நகைமொழி என்னும் நான்கு உரையால் ஆராய்ந்து தெளிவுபடுத்திக் கூறல், சில்வகை எழுத்துகளால் பல்வகை உரைகளை உள்ளடக்கி நுண்மையும், வண்மையும் உடைத்தாய், துளக்கல் ஆகாத் துணைமை எய்தி, அளக்கலாகா அரும் பொருளுடைத்தாய் அமைதல் இயல்பு *(இல.விள. 893)*

**நூற்பா இலக்கணம்**

சிறிய கண்ணாடியாயினும் பெரிய பொருள் முழுதையும் காட்டுவதுபோல் சிலவகை எழுத்துகளால் பொருள் முழுதினையும் விளக்கி, உய்த்துணர்தல் இலாது தொடர்மொழியில் பொருளை நன்கு விளக்கி, தொகை, வகை, விரி என்பதனுள் ஒன்றைக் கொண்டு தொடர்ச்சியாய் இயற்றப்படுவது *(இல.விள. 891)*

**நூற்பாவின் கிடக்கை முறை**

1. ஆற்றொழுக்கு நிலை, 2. தேரைப்பாய்வு, 3. சீயநோக்கு, 4. பருந்தின் வீழ்வு என்னும் நான்கு நிலையினது *(இல.விள. 892)*

**நூற்றந்தாதி**

நூறு வெண்பாவாலோ, நூறு கலித்துறையாலோ பொருளின் தன்மை விளங்க அந்தாதியாய்ப் பாடப்பெறும் இலக்கியம் *(இல.விள. 842; மு.வீ. 1084; பிர.தீபிகை. 19; பிர.தீபம். 55)*

## நெ

**நெ**

1. ஆண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 26; வெண்.பா 6; நவநீ.பா 7; சித.பா. 20; தொ.விள. 289; பிர.திர. 124; சுவாமி. 174; மு.வீ. 1031; பொரு.விள. 20)*
2. கேட்டை நாளுக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 46; வெண்.பா. 14; நவநீ.பா. 16; சித.பா. 23; இல.விள. 791; தொ.விள. 292; பிர.திர. 143; மு.வீ. 1034; பொரு.விள. 52)*
3. பொன் என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 5)*; அமுதம், சிந்து, மணி என்னும் மங்கலச் சொற்களுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 3)*

**நெஞ்சு**

தூதுப் பொருள்களுள் ஒன்று *(பிர.திர. 30)*

**நெடில்மோனை**

நெடிலெழுத்தால் அமையும் மோனை *(சித.பா. 13)*

(எ-டு) ஆர்கலி உலகத்து மக்கட்கெல்லாம்
ஓதலிற் சிறந்தன் றொழுக்க முடைமை

*(மேற்: முதுமொழிக்காஞ்சி 1; யா.கல.விருத்தியுரை நூ. 19; யா.காரிகை நூ. 41 உரை; சித.பா.ப. 78)*

**நெடிலடி**

1. அடி வகைகளுள் ஒன்று *(சித.பா. 5)*
2. அடிதோறும் ஐந்து சீர்களால் அமையும் செய்யுள் *(சித.பா. 5)*

(எ-டு) வென்றான் வினையின் றொகையாய விரிந்து தன்கண்
ஒன்றாய்ப் பரந்த உணர்வின்னொழி யாது முற்றுஞ்
சென்றான் திகழுஞ் சுடர்சூழொளி மூர்த்தி யாகி
நின்றான் அடிக்கீழ்ப் பணிந்தார்வினை நீங்கி நின்றார்

*(மேற்: சூளாமணி 1; யா.கல.விருத்தியுரை நூ. 24; யா.காரிகை 23, உரை; சித.பா.ப. 16)*

**நெடிலெதுகை**

நெடிலெழுத்தால் அமையும் எதுகை *(சித.பா. 13)*

(எ-டு) ஆவா வென்றே அஞ்சினர் ஆழ்ந்தார் - ஒருசாரார்
கூகூ வென்றே கூவிளி கொண்டார் - ஒருசாரார்
மாமா வென்றே மாய்ந்தனர் நீந்தார் - ஒருசாரார்
ஏகீர் நாய்கீர் என்செய்தும் என்றார் - ஒருசாரார்

*(மேற்: யா.கல.விருத்தியுரை நூ. 37; யா.காரிகை 27, 41, உரை; சித.பா.ப. 77)*

இஃது இரண்டாம் எழுத்து ஒன்றாதாயினும், இரண்டாம் எழுத்தின்மேல் ஏறிய நெடில் ஒப்புமை நோக்கி, நெடில் எதுகை என வழங்கப்படும்.

**நெடுந்தொகை**

பல பாட்டுகள் தொக்கி ஒரு நூலாகும் இலக்கிய வகையுள் ஒன்று *(பன்.பா. 89)*

**நெடுந்தொகை**

நெடிலடிகளை உடைய செய்யுள்களின் தொகுப்பு *(பிர.தீபம். 52)*

**நெடுநல்வாடை**

பெருங்காப்பியங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 45)*

**நெய்**

1. இறைவர்க்குப் படைக்கப்படும் பொருள்களுள் ஒன்று *(பிர.திர. 37)*
2. இசைக்குரிய சுவைகளுள் ஒன்று *(பிர.திர. 92)*

**நெய்தல்**

1. இசைக்குரிய மணங்களுள் ஒன்று *(பிர.திர. 92)*
2. கலிப்பாவிற்கு உரிய நிலம் *(பன்.பா. 93; பிர.மர. 25)*
3. வஞ்சிப்பாவிற்கு உரிய நிலம் *(வெண்.பா. 69; இல.விள. 878; தொ.விள. 298; மு.வீ. 1015; பிர.திர. 417)*

**நெற்றி**

► பாதாதி *(பன்.பா. 214; நவநீ.பா. 44)*

## நே

**நே**

1. பெண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 27; வெண்.பா 6; நவநீ.பா 7; சித.பா. 20; தொ.விள. 289; பிர.திர. 124; சுவாமி. 174; மு.வீ. 1031; பொரு.விள. 21)*
2. கேட்டை நாளுக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 46; வெண்.பா. 14; நவநீ.பா. 16; சித.பா. 23; இல.விள. 791; தொ.விள. 292; பிர.திர. 143; மு.வீ. 1034; பொரு.விள. 52)*
3. பொன் என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 5)*; அமுதம், சிந்து, மணி என்னும் மங்கலச் சொற்களுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 3)*

**நேபாளம்**

ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று *(பிர.திர. 500-502; பிர.தீபிகை. 99)*

### நேர் நேர் நேர்

1. தேமாங்காய் *(சித.பா. 25)*
2. இயமான கணத்திற்கு (இந்திரக்கணம்) உரிய சீர் *(இந்.காளி. 17; பன்.பா. 58; நவநீ.பா. 22; சித.பா. 26; தொ.விள. 294; மு.வீ. 1037; பொரு.விள. 74)*
3. துறக்க கணம் எனச் சில பாட்டியல்கள் கூறுகின்றன *(வெண்.பா. 20; பிர.திர. 157)*
4. சுவர்க் கணம் எனச் சில பாட்டியல்கள் கூறுகின்றன *(இல.விள. 800; சுவாமி. 177)*
5. இக் கணத்தை ந கணம் என்றும் சிதம்பரப் பாட்டியல் கூறுகிறது *(சித.பா. 25; பிர.திர. 154; சுவாமி. 177)*

### நேர் நேர்

1. உரிய கணம்; சுவர்க்கம். (ஈரசைச் சீரில் தேமா,புளிமா எனும் இரண்டினை ஏற்புடைய கணமான காய்ச்சீரிலும் கருவிளம், கூவிளம் எனும் இரண்டினைக் கனிச்சீரிலும் வைக்க என்றதனால் மூவசைச் சீரின் கணம் இதற்குக் கருதப்படுகிறது *(இல.விள. 802; பிர.திர. 158)*
2. உரிய தெய்வம் பிரமன் *(இல.விள. 802; சுவாமி 177)*

### நேர் நேர் நிரை

1. தேமாங்கனி *(சித.பா. 25)*
2. வாயு கணத்திற்கு உரிய சீர் *(இந்.காளி. 20; பன்.பா. 65; வெண்.பா. 20; நவநீ.பா. 23; சித.பா. 26; இல.விள. 800; தொ.விள. 294; பிர.திர. 157; சுவாமி. 177; மு.வீ. 1037; பொரு.விள. 80)*
3. ச கணம் என்றும் சில பாட்டியல்கள் இதனைக் கூறுகின்றன *(சித.பா. 25; பிர.திர. 154; சுவாமி. 177)*

### நேர் நிரை

1. உரிய கணம்; நீர் *(இல.விள. 802; பிர.திர. 158)*
2. தெய்வம்; கருடன் *(இல.விள. 802; சுவாமி. 177)*

### நேர் நிரை நேர்

1. கூவிளங்காய் *(சித.பா. 25)*
2. சூரிய கணத்திற்கு உரிய சீர் *(இந்.காளி. 19; பன்.பா. 62; வெண்.பா. 20; நவநீ.பா. 23; சித.பா. 26; இல.விள. 800; தொ.விள. 294; பிர.திர. 157; சுவாமி. 177; மு.வீ. 1037; பொரு.விள. 79)*
3. வ கணம் என்றும் இதனைச் சிதம்பரப் பாட்டியல் கூறுகிறது *(சித.பா. 25)*
4. ச கணம் என்று சில பாட்டியல்கள் கூறுகின்றன *(பிர.திர. 154; சுவாமி. 177)*; (வாயு கணத்தையும் இந்நூல்கள் ச கணம் என்கின்றன)

### நேர் நிரை நிரை

1. கூவிளங்கனி *(சித.பா. 25)*
2. நீர்க் கணத்திற்கு உரிய சீர் *(இந்.காளி. 13; பன்.பா. 61; வெண்.பா. 20; நவநீ.பா. 22; சித.பா. 26; இல.விள. 800; தொ.விள. 294; பிர.திர. 157; சுவாமி. 177; மு.வீ. 1037; பொரு.விள. 77)*
3. ய கணம் என்று சில பாட்டியல்கள் கூறுகின்றன. *(சித.பா. 25; பிர.திர. 154; சுவாமி. 177)*

### நேரசை

தளை, சீர் தட்டுமிடத்து செய்யுளின் தொடக்கத்தில் குற்றெழுத்துகள் இரட்டித்து அதாவது விட்டிசைத்து வரினும் நேரசையாகக் கொள்ளப்படும் *(சித.பா. 12)*

(எ-டு) அஅவனும் இஇவனும் உஉனுங் கூடியங்கால்
எஎவனை வெல்வா ரிகல்

*(மேற்: யா.கல.விருத்தியுரை நூ. 7; யா.காரிகை 37, உரை; சித.பா.ப. 72)*

### நேரிசை சிந்தியல் வெண்பா

நேரிசை வெண்பாப் போலத் தனிச்சொல் பெற்று மூன்றடியாய் வரும் செய்யுள் *(சித.பா. 8)*

(எ-டு) அறிந்தானை யேத்தி யறிவாங் கறிந்து
செறிந்தார்க்குச் செவ்வ னுரைப்பச் - சிறந்தார்
சிறந்தமை யாராய்ந்து கொண்டு
(நேரிசை சிந்தியல் வெண்பா)

*(மேற்: யா.கல.விருத்தியுரை நூ. 59; யா.காரிகை 25, உரை; சித.பா.ப. 35)*

### நேரிசையாசிரியப்பா

அளவடியாய் அகவலோசை பெற்று ஈற்றயலடி முச்சீராய் வரும் செய்யுள் *(சித.பா. 9)*

(எ-டு) அணிமலர் அசோகின் தளிர்நலங் கவற்றி
அரிக்குரற் கிண்கிணி அரற்றுஞ் சீறடி

அம்பொற் கொடிஞ்சி நெடுந்தேர் அகற்றி
அகன்ற அல்குல் அந்நுண் மருங்குல்
அரும்பிய கொங்கை அவ்வளை அமைத்தோள்
அவிர்மதி அனைய திருநுதல் அரிவை
அயில்வேல் அனுக்கி அம்பலைத்து அமர்ந்த
கருங்கயல் நெடுங்கண் நோக்கமென்
திருந்திய சிந்தையைத் திறைகொண் டனவே

*(மேற்: யா.கல.விருத்தியுரை நூ. 35; யா.காரிகை 20, உரை; சித.பா.ப. 40)*

**நேரிசையொத்தாழிசைக்கலி**

தரவொன்று தாழிசை மூன்று, தனிச்சொல், சுரிதகம் பெற்று அமையும் செய்யுள் *(சித.பா. 10)*

(எ-டு) வானெடுங்கண் பனிகூர வண்ணம்வே றாய்த்திரிந்து
தோணெடுந் தகைதுறந்து துன்பங்கூர் பசப்பினவாய்ப்
பூணொடுங்கு முலைகண்டும் பொருட்பிரிதல் வலிப்பவோ,
**(தரவு)**

சூருடைய கடுங்கடங்கள் சொலற்கரிய என்பவரால்
பீருடைய நலந்தொலையப் பிறவரோ பெரியவரே

சேணுடைய கடுங்கடங்கள் செலற்கரிய என்பவால்
நாணுடைய நலந்தொலைய நடப்பரோ கலமிலரே

சிலம்படைத்த வெங்கானஞ் சீரிலவே என்பவால்
புலம்படைத்த நலம்தொலையப் போவரோ பொருளிலரே
- **(மூன்றும் தாழிசை)**

என வாங்கு
**(தனிச்சொல்)**

அருளெனும் இலராய்ப் பொருள்வயிற் பிரிவோர்
பன்னெடுங் காலமும் வாழியர்
பொன்னெடுந் தேரோடுந் தானையிற் பொலிந்தே
**(சுரிதகம்)**

*(மேற்: யா.கல.விருத்தியுரை நூ. 82; யா.காரிகை 30, உரை; சித.பா.ப. 46)*

**நேரிசை வெண்பா**

குறள் வெண்பா இரண்டாய் ஓராசு பெற்றும் ஈராசு பெற்றும் இரு ஆசுகளுமே பெறாததுமாய் எதுகைக்கு ஏற்ற தனிச்சொல் பெற்று ஒரு விகற்பமாகவோ இருவிகற்பமாகவோ முடியும் செய்யுள் *(சித.பா. 7)*

(எ-டு) வஞ்சியே னென்வன்றன் ஊருரைத்தான் யானுமவன்
வஞ்சியான் என்பதனால் வாய்நேர்ந்தேன் - வஞ்சியான்
வஞ்சியேன் வஞ்சியேன் என்றுரைத்தும் வஞ்சித்தான்
வஞ்சியாய் வஞ்சியார் கோ.

*(மேற்: யா.கல.விருத்தியுரை நூ. 60; யா.காரிகை 23, உரை; சித.பா.ப. 30)*

**நேரொன்றாசிரியத் தளை**

1. தளை வகை ஏழனுள் ஒன்று
2. மாமுன் நேர் வருவது *(சித.பா. 4)*

## நை

**நை**

1. பெண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 27; வெண்.பா 6; நவநீ.பா 7; சித.பா. 20; தொ.விள. 289; சுவாமி 174; மு.வீ. 1031; பொரு.விள. 21)*
2. கேட்டை நாளுக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 46; வெண்.பா. 14; நவநீ.பா. 16; சித.பா. 23; இல.விள. 791; தொ.விள. 292; பிர.திர. 143; மு.வீ. 1034; பொரு.விள. 52)*
3. தேர் என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 9)*; அமுதம், சிந்து, மணி என்னும் மங்கலச் சொற்களுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 3)*

## நொ

**நொ**

1. ஆண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 26; வெண்.பா 6; நவநீ.பா 7; சித.பா. 20; தொ.விள. 289; சுவாமி 174; மு.வீ. 1031; பொரு.விள. 20)*
2. பூரட்டாதி நாளுக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 46; வெண்.பா. 14; நவநீ.பா. 16; சித.பா. 23; இல.விள. 791; தொ.விள. 292; பிர.திர. 143; மு.வீ. 1034; பொரு.விள. 53)*
3. நீர் என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 6)*; அமுதம் என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 3)*

**நொச்சி**
மதில் காத்தல் *(பிர.மர. 17)*

**நொச்சி மாலை**
1. மதில் காத்தலை எப்பாவினாலேனும் முப்பது செய்யுள்களால் பாடும் இலக்கியம் *(பிர.மர. 17; சித.பா. 39)*
2. நொச்சிப் பூமாலை சூடி மதில் காத்தலைப் பாடும் இலக்கியம் *(மு.வீ. 1075; பிர.தீபிகை. 16; பிர.தீபம். 47)*

**நொண்டி**
வன்செயல் காரணமாகத் தண்டிக்கப்பட்டு மனந்திருந்தி, இறையருளால் குறை நீங்கி வாழ்தலைக் கலிவெண்பா, சிந்து யாப்புகளில் பாடும் இலக்கியம் *(பிர.திர. 14)*

## நோ

**நோ**
1. பெண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 27; வெண்.பா 6; நவநீ.பா 7; சித.பா. 20; தொ.விள. 289; பிர.திர. 124; சுவாமி 174; மு.வீ. 1031; பொரு.விள. 21)*
2. பூரட்டாதி நாளுக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 46; வெண்.பா. 14; நவநீ.பா. 16; சித.பா. 23; இல.விள. 790, தொ.விள. 292; பிர.திர. 143; மு.வீ. 1034; பொரு.விள. 52)*
3. நீர் என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 9)*; அமுதம் என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 3)*

**நோய்**
உடற்குற்றம் பதினெட்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 70)*

**நோவுகள் சிலவற்றுக்கு மருந்து**
முப்பத்திரண்டு அறங்களுள் ஒன்று *(பிர.தீபிகை 71)*

**நோன்பு நோற்றல்**
பெண்பால் பிள்ளைப்பாட்டு நிலைகளுள் ஒன்று *(பன்.பா. 105)*

## நௌ

**நௌ**
1. பெண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 27; வெண்.பா 6; நவநீ.பா 7; சித.பா. 20; தொ.விள. 289; சுவாமி 174; மு.வீ. 1031; பொரு.விள. 21)*
2. பூரட்டாதி நாளுக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 46; வெண்.பா. 14; நவநீ.பா. 16; சித.பா. 23; இல.விள 791; தொ.விள. 292; பிர.திர. 143; மு.வீ. 1034; பொரு.விள. 52)*
3. சொல் என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா 7)*

## ப்

**ப்**
அலி எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 28; வெண்.பா. 6; நவநீ.பா. 7; சித பா. 20; தொ.விள. 289; இல.விள. 773; மு.வீ. 1031; பொரு.விள 22)*

## ப

**ப**
1. சூரியன் படைத்த எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 4; வெண்.பா. 10; நவநீ.பா. 11; சித.பா. 21; இல.விள. 778; சுவாமி 175)*
2. அரச சாதிக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 6; வெண்.பா. 9; நவநீ.பா. 12; சித.பா. 21; இல.விள. 775; தொ.விள. 291; சுவாமி 175; மு.வீ. 1033; பொரு.விள. 34)*
3. வேளாள சாதிக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.திர. 135)*
4. வானவர் கதிக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 14; வெண்.பா. 18; நவநீ.பா. 20; சித.பா. 24; இல.விள. 798; தொ.விள. 293; பிர.திர. 152; சுவாமி 176; மு.வீ. 1036)*
5. அமுத எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 20; வெண்.பா. 7; நவநீ.பா. 10; சித.பா. 20; இல.விள. 779; தொ.விள. 290; பிர.திர. 128; சுவாமி 175; மு.வீ. 1032; பொரு.விள. 27)*
6. ஆண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 26; நவநீ.பா. 7; வெண்.பா. 6; சித.பா. 20; தொ.விள. 289; பிர.திர. 124; சுவாமி 174; மு.வீ. 1031; பொரு.விள. 20)*
7. உத்திர நாளுக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 47; வெண்.பா. 15; நவநீ.பா. 17; சித.பா. 23; தொ.விள. 292; இல.விள. 792; பிர.திர. 144; மு.வீ. 1034; பொரு.விள. 54)*
8. உலகு என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 8)*; பூ, தரணி, தேர் என்னும் மங்கலச் சொற்களுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 3,)*

பஃறாழிசைக் கொச்சகக் கலிப்பா
தாழிசைகள் பலவற்றைக் கொண்டு அமையும் செய்யுள் *(சித.பா. 11)*
(எ-டு) தண்மதியேர் முகத்தாளைத் தனியிடத்து நனிகண்டாங்
குண்மதியும் உடனிறையும் உடன்றளர முன்னாட்கண்
கண்மதியோர்ப் பிவையின்றிக் காரிகையின் நிறைசுவர்ந்து
பெண்மதியின் மகிழ்ந்தநின் பேரருளும் பிறதாமோ
(தரவு)
இளநலம் இவள்வாட இரும்பொருட்குப் பிரிவாயேல்
தளநல முகைவெண்பல் தாழ்குழல் தளர்வாளோ
தகைநலம் இவள்நாடத் தரும்பொருட்குப் பிரிவாயேல்
வகைநலம் இவள்வாடி வருந்தியில் இருப்பாளோ,
அணிநலம் இவள்வாட அரும் பொருட்குப் பிரிவாயேல்
மணிநலம் மகிழ்மேனி மாசொடு மடிவாளோ
நாம்பிரியேம் இனியென்று நன்னுதலைப் பிரிவாயேல்
ஓம்பிரியேம் எனவுரைத்த உயர்மொழியும் பழுதாமோ
குன்றளித்த திரள்தோளாய் கொய்புனத்துக் கூடியஞான்(று)
அன்றளித்த அருண்மொழியால் அருளுவதும் அருளாமோ;
சில்பகலும் ஊடியக்கால் சிலம்பொலிச்சீ றடிபரவிப்
பல்பகலும் தலையளித்த பனிமொழியும் பழுதாமோ;
(இவை ஆறும் தாழிசை)
அரும்பெறல் இவளினும் தரும்பொருள் அதனினும்
பெரும்பெறல் அரியன வெறுக்கையும் அற்றே
அதனால்
விழுமிய தறிமதி வாழி
கெழுமிய காதலில் தரும்பொருள் சிறிதே
*(மேற்: யா கல விருத்தியுரை நூ. 86; யா.காரிகை 32, உரை; சித.பா.ப. 55)*

பஃறொடை வெண்பா
தனிச்சொல்லின்றி ஒரு விகற்பமும் பலவிகற்பமும் பெற்று ஐந்தடி முதலாகப் பன்னிரண்டடியளவு பெற்றுவரும் செய்யுள் *(சித.பா 7)*
(எ-டு) பன்மாடக் கூடல் மதுரை நெடுந்தெருவில்
என்னொடு நின்றார் இருவர் அவருள்ளும்
பொன்னோடை நன்றென்றாள் நல்லளே பொன்னோடைக்
கியானைநன் றென்றாளும் அந்நிலையள் யானை
எருத்தத் திருந்த இலங்கிலைவேற் றென்னன்
திருத்தார்நன் றென்றேன் தியேன்
(ஆறடியால் வந்த பலவிகற்பப் பஃறொடை வெண்பா)
*(மேற்· யா.கல விருத்தியுரை நூ. 62; யா.காரிகை 24, உரை; தொல்.செய்யு. 114 இளம்.; சித.பா.ப. 32)*

பக்கீரி
குலப் பெயர்களுள் ஒன்று *(பிர.திர. 362)*

பக்வபஞ்சம்
முப்பத்திரண்டு உபநிடதங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 59)*

ப கணம்
► சந்திர கணம் *(சித.பா. 25; பிர.திர. 154; சுவாமி. 177)*

பகுதி
மங்கலச் சொற்களுள் ஒன்று *(பிர.திர. 111)*

பகைக்குரிய தானம்
மரணம் *(பன்.பா. 33)*

பங்காளம்
முப்பத்திரண்டு இராகங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 51)*

பச்சிலை
பெண்டிர் அணியும் மலர் மாலைகளுள் ஒன்று *(பிர.திர. 201)*

**பசி**

பரணியின் உறுப்புகளுள் ஒன்று *(பன்.பா. 143; வெண்.பா. 61; நவநீ.பா. 57-61; பிர.திர. 45, 46)*

**பசுவுக்கு வாயுறை**

முப்பத்திரண்டு அறங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 71)*

**பசுவைப் போன்று சுழலும் வண்ணம் காதசைத்தல்**

அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 72)*

**பஞ்சரத்தினம்**

1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(சுவாமி. 166)*
2. பாவினங்களில் சிலவற்றையும் பதம் (நாட்டியம் ஆடுவதற்கு ஏற்பப் பாடப்படும் பாடல்கள்) தருகின்ற சிந்து பலவற்றையும் பத்து உறுப்புகள், கலவி, மையல், தூது, பவனி (உலா) கதை, சாதிகம், வாதாடல், கொம்பை, குரவை, புலவி தொடங்கிச் சிறுகாப்பியம்போல உரைநடையும் பிறமொழியும் கலந்து பாடப்படுவன *(சுவாமி. 172, உரை)*

**பட்டாணி**

குலப் பெயர்களுள் ஒன்று *(பிர.திர. 362)*

**பட்டாபிடேகம்**

1. தான் இதுவரை ஆட்சி செய்துவந்த அரசைத் தன் குமரனுக்குக் கொடுப்பதைக் கூறும் இலக்கியம் *(பிர.திர. 74)*
2. அரசன் தனக்கு முப்பத்திரண்டு வயதாகையில் பதினாறு வயதான தன் மகனை அரசாட்சியின்பால் நெறிப்படுத்தி இன்பம் அடைதலைக் கருவாகக் கொண்ட இலக்கியம் *(பிர.திர. 101)*

**பட்டினப்பாட்டு**

பெருங்காப்பியங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 45)*

**பட்டைச் சுழி**

குதிரைக்கு ஆகாத இருபது சுழிகளுள் ஒன்று *(பிர.திர. 388)*

**படல இலக்கணம்**

பல்வேறு செய்திகளையும் அவற்றின் பொருள் இயைபு நோக்கிப் பொதுவகையால் தொகுத்துக் கூறும் இலக்கணம் *(இல விள 895)*

**படிகடந்த மட்டி**

குதிரைக்கு ஆகாத இருபது சுழிகளுள் ஒன்று *(பிர.திர 388)*

**படிமதாளம்**

ஒன்பதுவகைத் தாளங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 49)*

**படைமஞ்சரீ**

முப்பத்திரண்டு இராகங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 51)*

**படையாச்சி**

குலப் பெயர்களுள் ஒன்று *(பிர.திர. 363)*

**பண்ணை விசித்திரம்**

நாட்டு வளம், குடிப்பெருமை, நதியில் நீர் வரவு, தலைவன் தகுதி, நெல்வகை, மாடுகளின் வகை கூறல், காவலில் வைக்கப்படல், நாற்றுநடுதல், பள்ளியர் ஏசல் முதலானவற்றைச் சிந்து யாப்பில் பாடும் இலக்கியம் *(பிர.திர. 19)*

**பணைமுலை நயனம்**

1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(பன்.பா. 99)*
2. தொடர்நிலைச் செய்யுள் வகைகளுள் ஒன்று *(இல விள. 805)*
3. பருத்த தனங்களையும், கண்களையும் ஆசிரிய விருத்தம் பத்தால் பாடும் நூல் *(பன்.பா. 215)*

**பணைமுலைப்பத்து**

► பணைமுலை நயனம் *(பன்.பா. 215, உரை)*

**பத்துவகைக் குற்றங்கள்**

1. கூறியது கூறல், 2. மாறுகொளக் கூறல், 3. குன்றக்கூறல், 4. மிகைபடக் கூறல், 5. பொருளிலமொழிதல், 6. மயங்கக் கூறல், 7. கேட்போர்க்கு இன்னாப் பொருளாய்த் தொடர்ச்சியற்றுக் கூறல், 8. பழித்த மொழியால் இழுக்கிக் கூறல், 9. தானே ஒரு பொருளைக் கற்பித்துக் கூறல், 10. கேட்போர் மனங்கொள்ளா வகையில் கூறல் *(இல.விள. 897)*

**பத்துப்பாட்டு**

1. பல பாட்டுகள் சேர்ந்து ஒரு நூலாகும் இலக்கிய வகையுள் ஒன்று *(பன்.பா. 89, உரை)*
2. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(பன்.பா. 99)*

**பத்துப் பொருத்தங்களுக்குரிய உயிர் மெய்**

பத்துப் பொருத்தத்திற்கும் பொதுவாக அமைகின்ற உயிரெழுத்துகளில் பொருந்தாத தனித்த உயிரெழுத்து பொருத்தத் தன்மையுடைய மெய்யின் மீதேறி வரின் பொருந்தும் தன்மையைப் பெறும். இவ்வாறே பத்துப் பொருத்தங்கட்கும் பொதுவான பதினெட்டு மெய்யெழுத்துகளில் பொருந்தாத ஒற்றுகள் பொருத்த இயல்புடைய உயிருடன் இணைந்து வருகையில் தம் மாத்திரை அளவு காரணமாகப் பொருந்தும். *(பிர.திர. 161)*

**பத்துப்பொருத்தம்**

யாப்பின் தொகைகளுள் ஒன்று *(தொ.விள 300)*

**பதம்**

நாட்டியம் ஆடுவதற்கு ஏற்பப் பாடப்பெறும் பாடல்களைக் கொண்ட இலக்கியம் *(சுவாமி. 172)*

**பதிகம்**

1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(பன்.பா. 99; சுவாமி. 165)*
2. ஆசிரியத்துறை, ஆசிரிய விருத்தம், கலிவிருத்தம் ஆகிய இவற்றின்கண் நான்கடி முதல் எட்டடி வரையிலான உயர்ந்த வெண்பாவை வைத்துப் பத்து அல்லது இருபது பாட்டுகள் அமையப் பாடப்படும் நூல் *(பன்.பா 197)*
3. பத்துப்பத்துப் பாடலாய்ப் பாடப்பெறும் இலக்கியம். பா கூறப்பெறவில்லை *(சுவாமி. 168)*
4. ஒரு பொருளைப் பத்துச் செய்யுளால் பாடும் இலக்கியம் *(மு.வீ. 1116; பிர.தீபிகை. 26)*
5. பல பொருள்களைப் பத்துச் செய்யுளால் பாடும் இலக்கியம் எனப் பிரபந்த தீபம் கூறுகிறது *(பிர.தீபம். 80)*

**பதிற்றந்தாதி**

1. தொகைநிலைச் செய்யுள் வகைகளுள் ஒன்று *(இல.விள. 805)*
2. பத்து வெண்பாவாலோ, பத்துக் கலித்துறையாலோ பொருளின் தன்மை விளங்க அந்தாதியாய்ப் பாடப்பெறும் இலக்கியம் *(இல.விள. 841; சுவாமி. 170; மு.வீ. 1083; பிர.தீபிகை. 19; பிர.தீபம். 54)*

**பதிற்றுப்பத்தந்தாதி**

1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(சுவாமி. 165)*
2. ► பதிற்றந்தாதி *(சுவாமி. 170)*

**பதிற்றுப்பத்து**

பல பாட்டுகள் சேர்ந்து ஒரு நூலாகும் இலக்கிய வகையுள் ஒன்று *(பன்.பா. 89, உரை)*

**பதினெண் கீழ்க்கணக்கு**

பல பாட்டுகள் சேர்ந்து நூலாகும் இலக்கிய வகை *(பன்.பா. 89, உரை)*

**பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள்**

1. நாலடிநானூறு, 2. இன்னாமை நாற்பது, 3. நான்மணிக்கடிகைநூறு, 4. இனியநாற்பான், 5. கார் நாற்பது, 6. களவழிநாற்பது, 7. ஐந்திணை ஐம்பது, 8. ஐம்பால்மொழி ஐம்பது, 9. ஆசாரக்கோவை நூறு, 10. திரிகடுகம் நூறு, 11. பழமொழிகள் நானூறு, 12. சிறுபஞ்ச மூலம் நூறு, 13. முதுமொழிக்காஞ்சி நூறு, 14. ஏலாதி எண்பது, 15. கைந்நிலை அறுபது, 16. திணைமாலை நூற்றைம்பது, 17. திணைமொழி ஐம்பது, 18. வள்ளுவ மாலை *(பிர.தீபிகை. 44)*

**பதினெண் புராணம்**

| வ.எண் | பதினெண் புராணம் | கிரந்த எண்கள் |
|---|---|---|
| 1. | பதும புராணம் | ஐம்பத்தைந்து ஆயிரம் |
| 2. | வராகம் | இருபத்து நான்காயிரம் |
| 3. | பாகவதம் | பதினெட்டு ஆயிரம் |
| 4. | பவுடிகம் | பதினாலாயிரத்து ஐநூறு |
| 5. | லிங்கம் | பதினொன்று ஆயிரம் |
| 6. | மச்சம் | பதினான்கு ஆயிரம் |
| 7. | பிரமகைவர்த்தம் | பதினெட்டு ஆயிரம் |
| 8. | மார்க்கண்டம் | பதினாயிரம் |

| | | |
|---|---|---|
| 9. | ஆக்கினேயம் | பதினாலாயிரத்து நானூறு |
| 10. | வாமனம் | பன்னீராயிரம் |
| 11. | பிரமாண்டம் | ஏழாயிரம் |
| 12. | கூர்மம் | பதினேழு ஆயிரம் |
| 13. | நாரதீயம் | ஐந்து ஆயிரம் |
| 14. | சைவம் | முப்பத்து மூன்று ஆயிரம் |
| 15. | வைணவம் | இருபத்து மூன்றாயிரம் |
| 16. | விதி (பிரமம்) | பதினாயிரம் |
| 17. | காருடம் | பத்தொன்பதாயிரம் |
| 18. | காந்தம் | இலட்சம் |

*(பிர.தீபிகை. 69)*

பதின்சீர்க் கழிநெடிலடி

அடிதோறும் பத்துச் சீர்களால் அமையும் செய்யுள் *(சித.பா 5)*

(எ-டு) கொங்கு தங்கு கோதை யோதி மாத ரோடு
கூடி நீடு மேடை நெற்றி
வெங்கண் யானை வேந்தர் போந்து வேத கீத
நாத வென்று நின்று தாழ
அங்க பூர்வ மாதி யாய வாதி நூலி
னீதி யோது மாதி யாய
செங்கண் மாலை காலை சென்று சேர்நர் சேர்வர்
சோதி சேர்ந்த சித்தி தானே

*(மேற்: யா.கல விருத்தியுரை நு. 25; யா.காரிகை 13, உரை, சித.பா.ப. 18)*

பதினெண் புராணம்

▶ அட்டவணை

பதினெண் ஸ்ருதி

1. காத்தியாயன மிருதி, 2. சங்கலிகித நிர்ணயம், 3. மனுமிருதி 4. கௌதம மிருதி, 5. பாரத்வாஜம், 6. அத்திரி, 7. யாக், 8. ஆவற்கியம், 9. அங்கிரன், 10. வசிட்டன் 11. சாதாளம், 12. தக்கம், 13. அரியமம், 14. சம்வர்த்தம், 15. விஷ்ணு 16. ஔரித மிருதி 17. ஆபஸ்தம்பம், 18. வியாசர் *(பிர.தீபிகை. 58)*

பந்துவராளி

வகுப்புறு இராகங்கள் முப்பத்திரண்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 53)*

பப்பரம்

ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று *(பிர.திர. 500-502; பிர.தீபிகை. 99)*

பயம்

ஐம்பூதங்களாலாகிய மனித உடலின் தழல் கூறுகளுள் ஒன்று *(பிர.திர. 380)*

பயிரவி

முப்பத்திரண்டு இராகங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 51)*

பயோதரப் பத்து

▶ பணைமுலை நயனம்

ஆசிரிய விருத்தத்தால் அல்லது கலித்துறையால் பத்துப்பாடல்களால் பாடப்படுவது *(வெண்.பா. 47; நவநீ.பா. 50; பிர.மர. 8)*; பா குறிக்கப்பெறவில்லை *(சித.பா. 31; இல.விள. 852; மு.வீ. 1105; பிர.தீபிகை. 23; பிர.தீபம். 71)*

பரசு (பருஜீ)

வகுப்புறு இராகங்கள் முப்பத்திரண்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 53)*

பரடு

▶ பாதாதி *(பன்.பா. 214; நவநீ.பா. 44)*

பரணர்

சங்கப் புலவர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை. 85)*

பரணி

1. இயமான கணத்திற்கு உரிய நாள் *(இந்.காளி 36; பன்.பா. 58; சித.பா. 25; இல.விள. 800, உரை; பிர.திர. 154)*
2. வாழ்நாளைப் பெருக்குவது *(பன்.பா. 58, சித.பா. 25; இல.விள. 800, உரை; பிர.திர. 154)*
3. ஒரு நூல் பல பாட்டுகளை உடையதாகும் இலக்கிய வகையுள் ஒன்று *(பன்.பா. 88, உரை)*
4. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(பன்.பா. 99; சுவாமி 166)*
5. தொடர்நிலைச் செய்யுள் வகைகளுள் ஒன்று *(இல.விள. 805)*
6. வஞ்சிப்பாவிற்கு உரிய நாள்களுள் ஒன்று *(பன்.பா. 94; வெண்.பா. 70; இல.விள. 881; தொ.விள. 298; பிர.திர. 417; மு.வீ. 1015)*
7. வஞ்சி மாலை சூடிப் போரெடுத்துச் சென்று, உழிஞை மாலை சூடிப் பகைவர்களின் மதிலை வளைத்து. தும்பை மாலை சூடி மாற்றானின் படைகளில் குருதி ஆற்றை ஓடச்செய்யும் தொடுகழல் மன்னனின் ஒப்பற்ற தன்மையை ஏத்திப்பாடும் இலக்கியம் *(பன்.பா. 142)*
8. போர்க்களம் புகுந்து மாற்றானின் யானைப்படையைக் கொன்று போர் செய்யும் மன்னனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு நாற்சீர் முதலாக எனைத்துச் சீரானும் கலித்தாழிசையடித் தொகை இரண்டின் மேலேறாமல் முதல்தொடங்கி முடிவளவும் பாடப்படும் இலக்கியம் *(வெண்.பா. 60; நவநீ.பா. 56, பிர.மர. 19; பிர.தீபிகை 6)* வெண்பாப் பாட்டியலோடு ஒத்துப் போகிறது.

8.1 வெண்பாப் பாட்டியல் கூறுவனவற்றில் கலித்தாழிசை தவிர ஏனையவற்றைக் கூறுகிறது *(சித.பா. 41)*

8.2 வெண்பாப் பாட்டியல் கூறுவனவற்றுள் சீர், பா கூறவில்லை *(இல.விள. 838)*

8.3 ஆயிரம் யானை கொன்ற வீரனை அளவடி முதல் பல அடியால், பல தாழிசையால் பாடும் இலக்கியம் *(தொ.விள. 259)*

8.4 மூன்று நாழிகைப் பொழுதில் ஆயிரம் யானைகளைப் போரில் கொன்றவனுக்கு நீண்ட ஈரடித் தாழிசைகளால் பாடப்படும் இலக்கியம் *(பிர.திர. 45)*

9. அரசனுக்கும் இறைவனுக்கும் உரிய இலக்கியம் *(பிர.திர. 81)*
10. இவ்விலக்கியத்தின் மதிப்பு 1,00,000 பொன் *(பிர.திர. 88)*

பரணி பாடற்குரியோர்

பரணி பாடுவதில் வாக்குவாதம் உண்டாகி, மன்னன் பெரியவர்களை நோக்கி நீங்கள் தவறுபடாமல் கூறுங்கள் எனக் கூற. அப்பெரியவர்கள் ஆயிரம் யானை, தகுதியுடைய குதிரைகள், உலக மனிதர்கள் ஆகியவற்றை ஒரு முகூர்த்தத்தில் கொல்லுபவர்கள்; ஒரு முகூர்த்தத்தில் கொல்லும் ஆற்றல் உடையேன் என நினைக்கும் எதிர் இல்லாத தவமுடைய அரசர் உரியவர். *(பிர.திர. 488)*

பரணி பெறுபவர்

1. போர்க்களத்தில் யானைகளை அழித்தவரைப் பாடும் இலக்கியம் *(பன்.பா. 144)*
2. எழுநூறு யானைகளைக் கொன்றவரைப் பாடும் இலக்கியம் *(பன்.பா. 145)*
3. ஆயிரம் யானைகளைக் கொன்றவரைப் பாடும் இலக்கியம் *(சுவாமி 171)*

பரணி நாளுக்கு உரிய எழுத்துகள்

சொ, சோ, சௌ *(பன்.பா. 43; வெண்.பா. 13; நவநீ.பா. 15; சித.பா. 23; இல.விள. 788; தொ.விள 292, பிர.திர 143; மு.வீ. 1034; பொரு.விள. 45)*

பரணியில் கூறப்படுவன

1. தேவர் வாழ்த்து, கடை திறப்பு, பாலை நிலத்தியல்பு, கோயில் சிறப்பு, பேய்கள் காளியை ஏத்துதல், இந்திரசாலம், கனாநிலை, நிமித்தம், பசி, ஓகை, அமர்நிலை நிமித்தம், மன்னவன் வாகை, மன்னன் ~~மரபு~~ போர்க்களம் காணுதல், கூழ் வார்த்தல், மன்னனை வாழ்த்துதல் *(பன் பா. 143)*
2. இறுதியில் கூறப்பட்ட நான்கும் வெண்பாப் பாட்டியலின் உரையில் அமைந்துள்ளன *(வெண்.பா. 61)*
3. கூழ் சமைக்கப் பேய்கள் செய்த ஆயத்தங்கள் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. *(நவநீ.பா. 57, 61)*
4. பன்னிரு பாட்டியலில் முதலில் கூறப்பட்ட நான்குடன் காளிகோட்டம், நிலையிய கழுது, காளிக்குப் பேய் சொலல், பேய்க்குக் காளி சொலல், தலைவன் கீர்த்தி அருளுதல், அவன்செலல், ஆர்ப்பரித்துப் போராடல், பொருகளம் விரும்பல் என்பனவும் கூறப்படுகின்றன. *(பிர.மர. 19; சித.பா. 41);* அளவடி முதலா எனைத்துச் சீராலும் இரண்டடியாகக் கேட்போர் உள்ளம் மகிழ்ச்சி கூரப் பாடப்பெறும் இலக்கியம் *(இல.விள. 839)*

5. தேவர் வாழ்த்து, கடைதிறப்பு, பாலைநிலத்தியல்பு, கோயில் சிறப்பு என்ற நான்குடன் பேய் சிறப்பு, காளி உரையாடலில் வெளிப்படும் தலைவன் புகழ், போர் பற்றிப் பாடுதல் என்பனவும் கூறப்படுகின்றன. *(தொ.விள. 259)*
6. பன்னிரு பாட்டியல் கூறும் முதல் ஐந்துடன் காளிமொழிதல், அரசன் போருக்கு எழுதல், வெற்றிபெறல், களவேள்வி *(சுவாமி. 171)*
7. முதல் ஐந்துடன் தலைவனின் கீர்த்தி விளங்க அவன்வழி அகம் புறப்பொருள் தோன்ற இருசீரடி, முச்சீரடி ஒழித்து ஏனைய அடிகளால் ஈரடிப் பலதாழிசையால் பாடப்படும் இலக்கியம் *(மு.வீ. 1040; பிர.தீபிகை. 6)*

**பரதகண்டம்**

ஒன்பது கூறுகளுடன் விளங்கும் *(பிர.திர. 498)*

**பரமாங்கிஷம்**

முப்பத்திரண்டு உபநிடதங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 59)*

**பராசரம்**

உபபுராணம் பதினெட்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 70)*

**பராவிருத்த ஆனனம்**

1. முகநிலை பதினான்கனுள் ஒன்று.
2. நாளும் வேண்டாததற்கு முகம் மாறும் நிலை *(பிர.தீபிகை. 73)*

**பராவிருத்த வதனம்**

▶ பராவிருத்த ஆனனம் *(பிர.தீபிகை. 73, உரை)*

**பரி**

1. மங்கலச் சொற்களுள் ஒன்று *(பன்.பா. 68; நவநீ.பா. 2; சித.பா. 18; தொ.விள. 285; சுவாமி. 173; மு.வீ. 1027)*
2. தசாங்கம், சின்னப்பூவில் பாடப்படும் பத்துவகைப் பொருள்களுள் ஒன்று *(பன்.பா. 139; வெண்.பா. 42; நவநீ.பா. 24; சித.பா. 32; தொ.விள. 263; பிர.திர. 15)*
3. ஒன்பது சின்னங்களுள் ஒன்று எனக் கூறப்படுகிறது *(பிர.மர. 9, உரை)*

**பரிசத்தீட்சை**

சிவதீட்சையின் பன்னிரு வகைகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 62)*

**பரிசில் நல்காதார் உறுவது**

புலவர் உரைத்த பாவினை ஏற்று அவரின் மனம் மகிழப் பரிசில் அளிக்கவில்லை எனில் அவர் மொழிந்த புகழ்மொழியெல்லாம் வசைமொழியாகும்; உலகில் உயர்ந்த நிலையில் இருந்தாலும் அதனால் மகிழ்ச்சி ஏற்படாது பெரும்பழியே உண்டாகும். *(நவநீ.பா. 105)*

**பரிசில் வழங்காதான் அழிவு**

1. தன் மீது பாடப்பெற்ற நூலை ஒருவர் ஏற்காதபோது, பாடியவர் அப்பெயரை அழித்து வேறொரு பெயரை எழுதி வழுக்கள் சேர்த்துப் பாடப்பட்டவன் இயற்பெயர் உள்ள செய்யுள்தோறும் செந்நூல் சுற்றி அதன்மீது சிவந்த மலரை அணிவித்துத் தெருக்கோடியில், (சந்திப்பு) அல்லது காளி கோட்டத்து அல்லது மயானத்தின்கண் அல்லது எருக்கம்பூ முளைத்த பாம்புப் புற்றிடத்து அல்லது பாழடைந்த வீடு என்னும் இவற்றில் ஏதேனும் ஓரிடத்தில் வைத்து மனம் நொந்து சுடினே பன்னிரண்டு மாதங்களில் அவருக்கு இறப்பு நேரிடும். இங்ஙனம் செய்யாது இதயம் நொந்து இருப்பினும் சுற்றத்தோடு சேர்ந்து அழிவான் என ஓதுகிறார் அகத்தியர் *(பிர.மர. 34)*; (செல்வம் அவனிடம் போய்ச் சேரும்) (சித.பா. 46); சுடப்படும் இடமாக மடைப்பள்ளியின் வெளிப்பகுதி சுட்டப்பெறுகிறது. மூன்று வருடத்தில் இறப்பர் என்றும் கூறப்பட்டுள்ளது. *(பிர.திர. 405)*
2. கொடுக்கப்படும் பொருளுள் எதாவது குறைந்தால் குறை உண்டாகும். அன்றியும் உரிய பொருள் கொடாது பாராமுகமாய், உதாசீனமாகப் பேசி, உபசாரம் செய்யாதிருந்தால், கள் நிறைந்த மலர்போன்ற கண்களை உடைய கலைமகள் அகல, மூதேவி நிற்பாள்; அத்தகையவர் நாட்டில் வாழும் நிலைமை நீங்கிக் காட்டில் வாழ்வர் *(பிர.திர. 404)*

**பரிபாடல்**

பல பாட்டுகள் தொக்கி ஒரு நூலாகும் இலக்கிய வகையுள் ஒன்று *(பன்.பா. 89, உரை)*

**பரியாசம்**

குலவும் பவனி, பெண்ணின் காம மயக்கம், பாங்கியர் தொகுதி, வெண்ணிலவு முதலியவற்றோடு உரைக்கும் காமம்மிக்க கழிபடர் கிளவி (உவாலம்பனம்). விரகதாபம் கூறுதல், தூது செல்லவேண்டியவரிடத்தில் தலைவனின் வளமை, நகர், நாடு என்பனவற்றைக் கூறுதல், தலைவன் வருவான் என்பதனை நிமித்தம் வழி உணர்தல், தலைவனைக் கூடல், மறுநாள் வேடம் புனைந்து சேர்தல், பாங்கிக்குத் தலைவனின் புகழைக் கூறல், தலைவன் கடிதம் எழுதுதல் சித்தவேடத்தில் வருதல், தலைவி ஐயுறுதல் ஆகிய பொருண்மை *(பிர.திர. 484)*

**பரிவாகிதமுகம்**

முகநிலைகள் பதினான்கனுள் ஒன்று; நல்ல மதம் காரணமாக ஒரு புறம் சாய்த்துத் தலையைச் சுற்றும் நிலை *(பிர.தீபிகை. 73)*

**பருதி**

மங்கலச் சொற்களுள் ஒன்று *(சுவாமி. 173; பொரு.விள 3)*

**பருந்தின் வீழ்வு**

நூற்பாவின் கிடக்கை முறைகளுள் ஒன்று; வானில் பறக்கும் பருந்து தரையிலிருக்கும் தன் உணவைக் கண்டவழி அதைக் கவர்ந்து செல்வது போல் ஒரு நூற்பா, பல நூற்பாக்களை அடுத்துள்ள நூற்பாவோடு பொருள் தொடர்பு கொள்வதாக அமையும் நிலை *(இல.விள. 892)*

**பருவ மாலை**

1. எழுவகைப் பருவ மகளிருக்கும் உரிய வயது, எழுவகைத் துறைக் கல்வியைப் பொருத்தமுற விளக்கும் இலக்கியம் *(பிர.திர. 11)*
2. பருவமாலை அந்தாதி இணைவுடன் அமைவது நலம். பொதுநிலையில் இது எப்பாவாலும் உருவாகலாம் *(பிர.திர. 108)*

**பருவரல்**

1. நற்றாய், 2. செவிலித்தாய், 3. சேரியர், 4. ஆயர்தீங்குழல், 5. தென்றல், 6. சேமணி, 7. அன்றில், 8. சந்திரன், 9. கடல், 10. வீணை, 11. மாலை, 12. கங்குல், 13. காமன்ஐங்கணை, 14. கண்வளர் கனவு, 15. நிறமுடைய மரங்கள், 16. வேனிற்காலம், 17. குயில், 18. கிளி, 19. தளிர்படுக்கை, 20. பலகாலம் பழகிய நிலம், 21. சோலை, 22. பார்ப்பனப் பாங்கன், 23. வேளாண்பாங்கன். 24. பாங்கியர் என்னுமிவை ஒருதலைக் காமத்தால் துன்பம் ஏற்படுத்துபவை. *(பன்.பா. 185)*

**பல்சந்த மாலை**

1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(பன்.பா. 99)*
2. தொடர்நிலைச் செய்யுள் வகைகளுள் ஒன்று *(இல.விள. 805)*
3. கலம்பகத்திற்குச் சொல்லப்பட்ட உறுப்பு வகைகளை நீக்கி முன்னோர் பாடிய செய்யுளை முதலாகக் கொண்டு அச்செய்யுள்கள் பத்து முதலாக நூறு அளவாக அமைக்கப்பெறும் இலக்கியம் *(பன்.பா. 149)*
4. ஒவ்வொரு சந்தத்துக்கும் பத்துப் பத்துச் செய்யுளாக நூறு செய்யுள் வரும் வகையில் பாடப்படும் இலக்கியம் *(வெண்.பா. 31; நவநீ.பா. 38; இல.விள. 834; மு.வீ. 1054; பிர.தீபிகை 11; பிர.தீபம். 28, பிர.திர. 6)*
5. அகவல், விருத்தம் வகுப்பு இவற்றில் பத்து முதலாக நூறு சந்தம் வரை அந்தாதித்துப் பாடுவது *(சித.பா. 35; பிர.மர. 12)*
6. அந்தாதியாக நூறு ஆசிரிய விருத்தம் பாடி, பத்துப்பாடலுக்கு ஒரு சந்தம் வீதம் வேறுபட்ட பத்துச் சந்தங்களில் செய்யுள்களைத் தொடுப்பது *(தொ.விள. 275)*

**பல்பொருட்கு ஏற்பின் நல்லது கோடல்**

முப்பத்திரண்டு உத்திகளுள் ஒன்று; ஒரு நூற்பா பல பொருளைத் தருவதாக இருப்பின் தெளிவு வேண்டி ஒரே பொருளைத் தருவதாக அதனை மாற்றி அமைக்காது, பயில்வோர் நல்ல பொருளைக் கொண்டு பயனுறுவர் என்று விடுதல் *(இல.விள. 898)*

**பல்லதி**

முப்பத்திரண்டு இராகங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 51)*

**பல்லவம்**

ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று *(பிர.திர. 500-502; பிர.தீபிகை. 99)*

**பலதுறை**

ஊர் முதலியனவற்றை முற்றுருவகமாகப் பாடி அடையாளங்களைப் பழித்துப் போற்றியும் பொருந்தி வருகின்ற திரிபு, யமகம், சிலேடை, விகடம் என்பனவற்றை உடைய இலக்கிய வகை *(பிர.திர. 473)*

**பலதொகை**

எகினம் முதலிய பத்துவகைகளைத் தூதனுப்புதல், அவை மீண்டு வராமையால் உற்ற துன்பம் பாடி சோலையில் புலம்பி உருவெளித்தோற்றத்தை அவன் எனக் கருதிப் பேசுதல், இருள் யானைமீது வரும் மதனன் செய்யும் ஐங்கணைப் போர் பாடி, தலைவ்னின் பவனியை உலாவாக ஆக்கி, இவள் மாலை கொண்டு அவனிடத்தில் புகுதலும் அவர்கள் கண்ணொடு கண்கலத்தலும் பின்னர்க் கூடுதலும் எனப் பலவற்றையும் பேசும் இலக்கியவகை *(பிர.திர. 482)*

பல பாட்டுகள் தொக்கி ஒரு நூலாகும் இலக்கியம்
1. கலித்தொகை குறுந்தொகை, நெடுந்தொகை, கலம்பகம், மும்மணிக்கோவை *(பன்.பா. 89,90)*
2. நற்றிணை, ஐங்குறுநூறு, புறநானூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், பத்துப்பாட்டு, பதினெண் கீழ்க்கணக்கு, நான்மணிமாலை இரட்டைமணிமாலை, ஒருபாஒருபஃது *(பன்.பா. 90, உரை)*

பல பொருட்பாட்டு
சித்திரகவி வகைகளுள் ஒன்று *(வெண்.பா. 26)*

பல நினைப்பு
உடற்குற்றம் பதினெட்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 70)*

பவளமல்லி
பெண்டிர் அணியும் மலர் மாலைகளுள் ஒன்று *(பிர.திர. 201)*

பவனிக்காதல்
1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(சுவாமி. 165)*
2. தலைவன் உலா வருகையில் அவனைக் கண்டு அன்புற்ற தலைவி தன் வருத்தத்தைப் பிறரிடம் சொல்லி வருத்தப்படும் முறையை நேரடிக் கூற்றாகக் கூறும் இலக்கியம் *(சுவாமி. 168)* (உலாவில், இது புலவர் கூற்றாக அமையும். இதுதான் இவ்விரண்டிற்கிடையே உள்ள வேறுபாடு) *(மு.வீ. 1121; பிர.தீபிகை. 26; பிர.தீபம். 82)*

பவுளி
முப்பத்திரண்டு இராகங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 51)*

பழகிய நிலம்
பருவரல் வளரக் காரணமானவற்றுள் ஒன்று *(பன்.பா. 185)*

பழம்
புல், மரத்தின் பொது உறுப்புகளுள் ஒன்று *(இல.விள. 922)*

பழமொழிநானூறு
பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 44)*

பழனம்
மங்கலச் சொற்களுள் ஒன்று *(வெண்.பா 2, உரை; சித.பா. 18; சுவாமி. 173)*

பழித்த மொழியால் இழுக்கிக் கூறல்
பத்துவகைக் குற்றங்களுள் ஒன்று; பழிப்புடைய சொல்லால் இழிபு தோன்றக் கூறுதல் *(இல.விள. 897)*

பள்ளர்
குலப் பெயர்களுள் ஒன்று *(பிர.திர. 363)*

பள்ளி
குலப் பெயர்களுள் ஒன்று *(பிர.திர. 363)*

பள்ளு
சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(சுவாமி. 166)*

பற்பன்
1. அட்ட நாகங்களுள் ஒன்று
2. சூத்திர சாதியினது
3. ► அட்டநாகம் *(பிர.திர. 274)*

பறந்தலைச் சிறப்பு
► செருக்கள வஞ்சி *(பிர.தீபிகை. 16)*

பறழ்
இளமை மரபுப்பெயர்களுள் ஒன்று *(இல.விள. 910)*; மூங்கா, வெருகு, எலி, அணில், முயல், பன்றி, நாய், நரி என்பவற்றின் இளமைப் பெயர் *(இல.விள. 910 உரை)*

பறைநிலை
1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(பன்.பா. 99)*
2. கடவுளர் திருவிழா, அரசர்களின் முடிசூட்டு விழாவில், நாடு, நகரத்தின்கண் மன்னர் நன்மை அடையும்படிக் காக்க வேண்டும் என வஞ்சிப்பாவினால் அரசர்பால் அன்பு அமைந்ததாகிய சொற்கள் பொருந்தும்படிப் பாடப்படும் நூல் *(பன்.பா. 211)*

**பறையர்**

குலப் பெயர்களுள் ஒன்று *(பிர.திர. 363)*

**பன்மணி மாலை**

1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(சுவாமி. 166)*
2. தொடர்நிலைச் செய்யுள் வகைகளுள் ஒன்று *(இல.விள. 805)*
3. கலம்பக உறுப்புகளுள் ஒருபோகு, அம்மானை, ஊசல் மூன்றையும் ஒழித்து ஏனைய உறுப்புகளால் பாடுவது *(வெண்.பா. 40; நவநீ.பா. 39; சித.பா. 30; பிர.மர. 7; இல.விள. 814; தொ.விள. 280; பிர.திர. 15; மு.வீ. 1055; பிர.தீபிகை. 12; பிர.தீபம். 29)*
4. ► கலம்பக மாலை

**பன்னிரு ஆழ்வார்கள்**

► அட்டவணை 9.

**பன்னிரு உயிர்**

1. பிரமன் படைத்த எழுத்துகள் *(பன்.பா. 3; வெண்.பா. 10; நவநீ.பா. 11; சித.பா. 21; இல.விள. 778;*
2. சிவன் படைத்த எழுத்துகள் *(சுவாமி. 175)*

**பா**

**பா**

1. பெண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 27; வெண்.பா 6; நவநீ.பா 7; சித.பா. 20; தொ.விள. 289; பிர.திர. 124; சுவாமி. 174; மு.வீ. 1031; பொரு.விள. 21)*
2. உத்திர நாளுக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 47; வெண்.பா. 15; நவநீ.பா. 17; சித.பா. 23; இல.விள. 792; தொ.விள. 292; பிர.திர. 144; மு.வீ. 1034; பொரு.விள. 54)*
3. உலகு என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 8)*; பூ, தரணி, தேர் என்னும் மங்கலச் சொற்களுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 3)*
4. ஒவ்வொரு பாவிற்கும் பொருத்தமான சாதி, கடவுள், நாள், இராசி நறுமணப் பொருள், பூ, நிறம், நிலம் ஆகியன பாட்டியல் நூல்களில் கூறப்படும். இது பாப்பொருத்தம் எனப்படும். பன்னிரு பாட்டியல், வெண்பாப் பாட்டியல் இரண்டும் சந்திரன், குருவைக் கடவுளர் எனக் குறிக்கின்றன. பிற பாட்டியல்களனைத்தும் இவற்றைக் கோள் எனக் கூறுகின்றன.
   ► அட்டவணை 10.

**பாக்களைத் தொகுத்துக்கூறும் முறை**

1. வெண்பா, 2. ஆசிரியப்பா என இரண்டாகக் கூறலும், வெண்பாவில் கலிப்பாவும், ஆசிரியப்பாவில் வஞ்சிப்பாவும் எனக்கூறலும் முறை *(சித.பா. 14)*

**பாகம் (நெறி)**

கவுடம், வைதருப்பம் என இரு வகைத்து *(சுவாமி. 178)*

**பாங்கியர்**

பருவரல் வளரக் காரணமானவருள் ஒருவர் *(பன்.பா. 185)*

**பாஞ்சாலம்**

ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று *(பிர.திர. 500-502; பிர.தீபிகை. 99)*

**பாட்டிடை வைத்த குறிப்பு**

உரைவகைகளுள் ஒன்று; பாட்டிற்கு இடையிடையே இடம்பெறும் உரைநடைக் குறிப்பு *(இல.விள. 903)*

**பாட்டியல் நுவல்வன**

பாட்டின் இலக்கணம், நூலின் இலக்கணம், உரை இலக்கணம், பிசி இலக்கணம், முதுசொல் இலக்கணம், மந்திர இலக்கணம், குறிப்புமொழி இலக்கணம், வருணத்து இலக்கணம், புலவர் இலக்கணம், அவையின் இலக்கணம், அகலக்கவி இலக்கணம் அகலக்கவியைப் பாடுவோர் இலக்கணம், கொள்வோர் இலக்கணம் *(இல.விள. 761)*

**பாட்டின் இலக்கணம்**

பாட்டு என்று சிறப்பித்துச் சொல்லப்படுவது, மூவேந்தரின் எல்லைக்கண் தொன்று தொட்டு வழங்கப்பெறும் யாப்பு என்னும் உறுப்பால் ஒலிக்கப்பெறும் செய்யுள் *(இல.விள. 762)*

**பாட்டி**

பெண்பால் மரபுப்பெயர்களுள் ஒன்று *(இல.விள. 917)*; பன்றி, நாய், நரி இவற்றின் பெண்பாலைக் குறிக்கும். *(இல.விள. 917 உரை)*

பாட்டின் பலன்

1. எழுத்து, சொல், பொருள் முதலான ஐந்திலக்கணத்திலும், மங்கலம் முதலாய் அமைந்த மொழியினும் சான்றோர் வகுத்த நெறிகளினின்று வழுவாது யாப்பு முறையில் நின்று விளங்கும் செய்யுளைக் கேட்டால் செல்வம், சீர்த்தி சிறக்கும்; வாரிசுகள் சிறக்க தருமம் உடைத்தாய்த் துயரமின்றி நோயின்றி மரபு நீடும் *(பிர.மர. 35; சித.பா. 47)*
2. பாட்டு குற்றமுடையதாக இருப்பின் செல்வம் அகலும்; தீராத நோய் வரும்; சுற்றமும் புகழும் நீங்கும்; முடிவு நெருங்கி வந்திடும் *(பிர.மர. 35)*
3. குற்றமிலாப் பாட்டின் பலன், குற்றமுடைய பாட்டின் பலன் என்பவையெல்லாம் மக்களுக்கு மட்டுந்தான்; தேவர்க்காயின் பாதிப்பலன் கலி புனைந்தவரைச் சாரும் *(பிர.மர. 35)*

பாட்டு (பத்துப்பாட்டு)

1. சிறுமை நூறடி ஆக, உயர்வு நூற்றுப்பத்து, நூற்றுப் பத்தின் மிக்கதாகப் பாடப்படும் நூல் *(பன்.பா 227)*
2. பத்துப்பாட்டு ஆசிரியப்பாவால் பாடப்பெறும் *(பன்.பா. 228)*

பாடைச் சுழி

குதிரைக்கு ஆகாத இருபது சுழிகளுள் ஒன்று *(பிர.திர. 388)*

பாண்

1. கலம்பக உறுப்புகளுள் ஒன்று *(பன்.பா. 129, உரை; வெண்.பா. 32; பிர.மர. 4; சித.பா. 29; இல.விள. 812; பிர.திர. 32; மு.வீ. 1041; பிர.தீபிகை. 7; பிர.தீபம். 95)*
2. பரத்தைபால் சென்ற தலைவன், தலைவயின் ஊடலைத் தணித்து வருமாறு பாணனை அனுப்பத் தலைவி பாணன்பால் வெகுண்டு கூறுதல் தோன்றப் பாடப்படும் பகுதி *(பன்.பா. 129. உரை; இல.விள. 812; பிர.தீபம். 29, உரை)*

பாண்டவரின் பெற்றோர்

குந்தியும் பாண்டுவும் *(பிர.திர. 309)*

பாண்டியம்

ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று *(பிர.திர. 500-502; பிர.தீபிகை. 99)*

பாண்டியன்

குடிப்பெயர்களுள் ஒன்று *(பன்.பா. 76)*

பாண்டு

குந்தியின் கணவர்; பாண்டவரின் தந்தை *(பிர.திர. 309)*

பாணன்

1. ► பாண் *(தொ.விள. 258)*
2. குலப் பெயர்களுள் ஒன்று *(பிர.திர. 362)*

பாணாற்றுப்படை

ஆற்றுப்படை வகைகளுள் ஒன்று *(வெண்.பா. 52, உரை; இல.விள. 873, பு. 19; தொ.விள. 266; பிர.திர. 27)*

பாணி

ஐந்து கருமேந்திரியங்களுள் ஒன்றான கை *(பிர.திர. 378)*

பாதம்

ஐந்து கருமேந்திரியங்களுள் ஒன்றான கால் *(பிர.திர. 378)*

பாதாதி

1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(பன்.பா. 99)*
2. தொடர்நிலைச் செய்யுள் வகைகளுள் ஒன்று *(இல.விள. 805)*
3. பாதம் முதலாக முடிவரையிலான உறுப்புகளை வருணித்துப் பாடும் நூல் *(பன்.பா. 214)*

3.1 *பாதம் முதலான உறுப்புகள்*

உள்ளங்கால், அடியின் நகங்கள், அடியின் விரல்கள், புறவடிகள், பரடுகள், பாதங்கள், கணைக்கால்கள், முழந்தாள்கள், தொடைகள், அல்குல், கொப்பூழ், வயிறு, வயிற்றின் வரைகள், இடை, வயிற்றின் மயிர் ஒழுங்கு, தனங்கள், கைந்நகங்கள், கைவிரல்கள், முன்கைகள், உள்ளங்கைகள், இரண்டு தோள்கள், கழுத்து, முகம், பற்கள், வாய், மூக்கு, கண்கள், காதுகள், புருவங்கள், நெற்றி என்பனவற்றுடன் விதந்து கூறப்படாத இரண்டு உறுப்புகள் (தலைமயிர், கன்னம்) *(பன்.பா. 214)*

4. கலி வெண்பாவால் பாடப்படும் இலக்கியம் எனச் சில பாட்டியல்களில் பாவகை குறிக்கப்படுகிறது. *(வெண்.பா. 805; நவநீ.பா. 43; இல.விள. 871; மு.வீ. 1106; பிர.திர. 23)*
5. முப்பத்திரண்டு உறுப்புகளையும் கலி வெண்பாவால் பாடும் இலக்கியம் என்கிறது. ஆனால் உறுப்புகள் எவையெவை என்று கூறப்பெறவில்லை *(பிர.மர. 12)*

பாதாதிகேசம்
▶ பாதாதி *(வெண்.பா. 51; நவநீ.பா. 43; பிர.மர. 12; சித.பா. 35; இல.விள. 871; மு.வீ. 1106; பிர.தீபிகை. 24; பிர.தீபம். 72)*

பாதாதிகேசமாலை
▶ பாதாதி *(பிர.திர. 23)*

பாதாதிகேசம், கேசாதிபாதம்
மன்னனின் தலைமுதல் வருணனை, தசாங்கம், வளம், மெய்க்கீர்த்தி, பவனி, வட்டை, கன்னி, தனியே புறநகர் நீங்கல், அன்னம் முதலால் தனிமை புலம்பல், காவலன் கூறுகின்ற கன்னியின் பாதாதிகேச வருணனை, நெருங்கிய கொக்கோகப் பொருண்மை, முப்புணர்ச்சி, அமைச்சர் நெறிசூழ்தல், திருமணம், தன்நகர் வரவு, வாழிகூறல் இவை முன் பின்னாக மாறினாலும் நலமே. *(பிர.திர. 475)*

பாதி
குடைமங்கலப் பொருள்களுள் ஒன்று *(பன்.பா. 121)*

பாதிரி
1. மஞ்சரி என்னும் இலக்கியத்திற்குரிய பத்துவகை மரங்களுள் ஒன்று *(பிர.திர. 35)*
2. பெண்டிர் அணியும் மலர் மாலைகளுள் ஒன்று *(பிர.திர. 201)*

பாயிர வகை
இரண்டு வகை: 1. பொதுப்பாயிரம், 2. சிறப்புப்பாயிரம் *(இல.விள. 889)*

பாயுரு
ஐந்து கருமேந்திரியங்களுள் ஒன்றான குதம் *(பிர.திர. 378)*

பார்
மங்கலச் சொற்களுள் ஒன்று *(பன்.பா. 68; வரை.பா. 4; சித.பா. 18; சுவாமி. 173)*

பார்(பாராகம்)
முப்பத்திரண்டு உபநிடதங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 59)*

பார்கவம்
உபபுராணம் பதினெட்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 70)*

பார்ப்பனப் பாங்கன்
பருவரல் வளரக் காரணமானவருள் ஒருவர் *(பன்.பா. 185)*

பார்ப்பார்
1. குலப்பெயர்களுள் ஒன்று *(பன்.பா. 75)*
2. வேந்தனிடம் சிறப்புப் பெயர் பெறுபவர்களுள் ஒருவர் *(பன்.பா. 83)*
3. கலம்பகத்தில் தொண்ணூற்றைந்து செய்யுள்களால் பாடப்படுவர் *(பிர.மர. 63)*

பார்ப்பு
இளமை மரபுப் பெயர்களுள் ஒன்று *(இல.விள. 910)*; பறப்பன, தவழ்வன, கோடுவாழ் விலங்குகள் என்பனவற்றின் இளமைப் பெயர் *(இல.விள. 910 உரை)*

பாரத்வாஜம்
பதினென் மிருதிகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 58)*

பாரதம்பாடிய பெருந்தேவனார்
சங்கப் புலவர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை. 86)*

பாரமேச்சுரம்
சிவாகமம் இருபத்தெட்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 60)*

பாராகம்
▶ பார் *(பிர.தீபிகை. 59. உரை)*

பாராசரீயம்
சிற்பநூல் முப்பத்திரண்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 61)*

பாரிசாதம்
பெண்டிர் அணியும் மலர் மாலைகளுள் ஒன்று *(பிர.திர. 201)*

பால்
1. ஆண், பெண், அலி *(பன்.பா. 25; வெண்.பா. 6; நவநீ.பா. 7; சித.பா. 20; இல.விள. 773; பிர.திர. 124)*
2. மக்களுள் ஆண், பெண், அலி என்னும் முப்பாலுக்குரிய எழுத்துகள், அவற்றுள் முதற்சீரின்கண் வரத்தக்கவை, வரத்தகாதவை ஆகியவற்றை உணர்த்தும் பகுதி *(பன்.பா. 25; சித.பா. 20)*

3. மங்கலச் சொற்களுள் ஒன்று *(சுவாமி 173)*
4. இறைவர்க்குப் படைக்கப்படும் பொருள்களுள் ஒன்று *(பிர.திர. 37)*
5. இசைக்குரிய சுவைகளுள் ஒன்று *(பிர.திர. 92)*
6. எழுத்துகளை ஆண், பெண், அலி என்று மூவகையாகப் பாட்டியலார் பகுக்கின்றனர். இவ்வாறு பகுக்கப்படும் எழுத்துகளை முதற்சீரின்கண் வருபவை, வரக்கூடாதவை என வரையறுத்து உரைக்கின்றனர் *(பன்.பா. 25; வெண்.பா. 6; நவநீ.பா. 7; இல.விள. 773; பிர.திர. 124)*
7. ஆண்பால், பெண்பாலுக்குச் சொல்லப்பட்ட எழுத்துகள் அவ்வவ்பாலுக்கே உரியன அலிப்பாலுக்குச் சொல்லப்பட்ட எழுத்துகள் விரவி வரினும் குற்றமன்று *(பின்.பா. 29)*
8. ஆண்பால், பெண்பால் எழுத்துகள் மயங்கி வரினும் குற்றமன்று. அலி எழுத்துகள் முதற்சீரின் முதலெழுத்தாக வரும் தன்மையுடையன அல்ல *(வெண்.பா. 6)*
9. அலி எழுத்துகள் மொழிக்கு முன்வராது *(இல.விள. 773)*
10. ஆண், பெண் பாலிற்கு உரிய எழுத்துகள் அந்தந்த பாலிற்கே உரியன சில இடங்களில் மயங்கிவரினும் வழுவாகக் கருதப்பெறாது. அலி எழுத்துகள் முதற்சீரின் முதலெழுத்தாக வராது *(பொரு.விள. 24-26)*
11. ஆண், பெண், அலிப்பால்களைப் பற்றிக் குறிப்பிடுகையில் உயிர் ஆண்பால் எழுத்துடன் சேருபவை ஆண் எனவும் உயிர் பெண் எழுத்துடன் சேரும் மெய் உயிர்மெய் எனவும் குறிப்பிடுகிறது. ஆனால் உயிர் அலியுடன் சேரும் மெய் பற்றிக் குறிப்பிடவில்லை. (பிர.திர.124) புறனடை
12. உயிர் பன்னிரண்டும் மெய் பதினெட்டும் முறையே ஆண்பால், பெண்பால்கட்கு உரியன என்று கூறுவாரும் உளர் *(பொரு.விள. 23)*
13. ► அட்டவணை 11.

பாலன்

1. ஐவகைத் தானங்களுள் ஒன்று *(பன்.பா. 30; வெண்.பா. 5; நவநீ.பா. 6; சித.பா. 19; இல.விள. 783; தொ.விள. 288; பிர.திர. 121; சுவாமி 174; பொரு.விள. 17)*
2. நட்பிற்குரிய தானங்களுள் ஒன்று *(பன்.பா. 32)*

பாலை

மஞ்சரிக்குரிய பத்து மரவகைகளுள் ஒன்று *(பிர.திர. 35)*

பாலை நிலத்தியல்பு

பரணியின் உறுப்புகளுள் ஒன்று *(பன்.பா. 143; வெண்.பா. 61; நவநீ.பா. 57-61; பிர.மர. 19; சித.பா. 41; தொ.விள. 295; பிர.திர. 45, 46; சுவாமி 171; மு.வீ. 1040; பிர.தீபிகை. 6)*

பாவாணர் நிலை

அருள் இல்லாத பெரிய தீவினை செய்தவராயினும், பிறர் பொருளை வாங்குபவர் ஆயினும் மனமுவந்து உதவி செய்தால் நலனாம். மயக்கம் அற்ற நாவுடைய வாணருக்குப் பிழைப்பு இதுவேயாகும். தெய்வம் திருவாவடுதுறையில் சம்பந்தருக்குப் பெரும் பொருள் கொடுத்தது. மருவுகின்ற மனம், வாக்கு, காயம் மூன்றினால் வகையாக வரும் பாவம் இருந்தாலும் அது நீங்க வேண்டும் என நினைத்துச் சிவபிரானை ஆயிரம் மதுரகவியால் பாடினால் அப்பாவம் அகலும்; அவற்றை மீண்டும் மீண்டும் பாடுவதனால் கல்வியும் மேம்படும் *(பிர.திர. 438)*

பாவின் ஒலி

நால் வகைப் பிறப்புடைய பா, ஒலியாகிய வாணியின் அகத்தைக் குடியிருப்பாகக் கொள்ளும்; நினைத்தால் நாதம் சேரும். வாயுவுடன் சேர்ந்து உந்தியெழும்பி, கண்டத்தில் ஆற்றல் சேரும். வாய் திறக்கும் அங்காத்தலாகி நாவின் நடுவில் பிறந்து நானுனியில் கால்நீட்டி இருக்கும். ஏற்புடைய வலி, மெலி, இடையினங்கள் உயிராய், நெஞ்சு, கண்டம், சீரிய மூக்கு என்பன இடமாகி இதழ், நா, பல், அண்ணத்தில் வினையாகித் தோற்றம் கொள்ளும். இவ்வாறு தொழிற்படாது செய்கைகளினால் தோற்றம் பெறும் அதுவே ஊமை செய்வதுவும் ஆகும்; ஓசையில் பயன் இல்லாது எழுத்துக்குப் பயன் இல்லை; ஒலியேறினால் பயன் உண்டாகும். எழுத்தும் அடுத்துச் சேரும்; ஒளி பெறுகின்ற எழுத்து இத்தகைய இயல்பினது என்று கூறத்தெரியாது. பல மொழி எழுத்துகளும் ஓசையைப் பற்றி அமையும்; உலகத்தில் ஓவியம்போல மனதில் ஓவியம் போலக் கலந்திருந்து வெளிக்காட்டினால் தெரியும். பூனை, நாய், மிருகம், மனிதர் ஒலியை எழுதலாமா? கூறிய ஒலி காரியமாயின் கூறும் ஒலி காரணமாம். *(பிர.திர. 428-429)*

பாவின்று எழுந்த கிளவி

உரை வகைகளுள் ஒன்று; பா இல்லாது உரைநடையாகவே அமைந்த கிளவி *(இல.விள. 903)*

பாளை

புல்லின் உறுப்புகளுள் ஒன்று *(இல.விள. 920)*

**பாற்கரம்**

முப்பத்திரண்டு உபநிடதங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 59)*

**பானு**

சிற்பநூல் முப்பத்திரண்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 61)*

## பி

**பி**

1. ஆண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 26; வெண்.பா 6; நவநீ.பா 7; சித.பா. 20; தொ.விள. 289; பிர.திர. 124; சுவாமி. 174; மு.வீ. 1031; பொரு.விள. 20)*
2. உத்திர நாளுக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 47; வெண்.பா. 15; நவநீ.பா. 17; சித.பா. 23; இல.விள. 792; தொ.விள. 292; பிர.திர. 144; மு.வீ. 1034; பொரு.விள. 54)*
3. பூ, தரணி, தேர் என்னும் மங்கலச் சொற்களுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 3)*

**பிங்கலை**

நாடி பத்தனுள் ஒன்று *(பிர.திர. 379)*

**பிச்சி**

1. இறைவன் அணிதற்குரிய மலர்களுள் ஒன்று *(பிர.திர. 37)*
2. பெண்டிர் அணியும் மலர் மாலைகளுள் ஒன்று *(பிர.திர. 201)*

**பிசிதோன்றுநிலை**

1. ஒப்புமை பொருந்திவரும் உவமைப் பொருள், 2. ஒன்று சொல்ல மற்றொன்று தோன்றும் துணிவுடைமை என்னும் இவ்விரண்டன்கண் பிசி தோன்றும் *(இல.விள. 904)*

**பிடி**

பெண்பால் மரபுப் பெயர்களுள் ஒன்று *(இல.விள. 917)*; யானையின் பெண்பாலைக் குறிக்கும் *(இல.விள. 917 உரை)*

**பிடிச் சுழி**

குதிரைக்கு ஆகாத இருபது சுழிகளுள் ஒன்று *(பிர.திர. 388)*

**பிண்ட இலக்கணம்**

சூத்திரம், ஓத்து, படலம் என்னும் மூன்றையும் விளக்கும் இலக்கணம் *(இல.விள. 896)*

**பிணவல்**

பெண்பால் மரபுப் பெயர்களுள் ஒன்று *(இல.விள. 917)*; பன்றி, புல்வாய், நாய் இவற்றின் பெண்பாலைக் குறிக்கும் *(இல.விள. 917, உரை)*

**பிணவு**

1. பெண்பால் மரபுப் பெயர்களுள் ஒன்று *(இல.விள. 917)*; பன்றி, புல்வாய், நாய் இவற்றின் பெண்பாலைக் குறிக்கும் *(இல.விள. 917, உரை)*

**பிணை**

பெண்பால் மரபுப் பெயர்களுள் ஒன்று *(இல.விள. 917)*; புல்வாய், உழை, கவரி இவற்றின் பெண்பால் பெயர் *(இல.விள. 917, உரை)*

**பியாக்கடை**

இரக்கத்திற்கு உரிய இராகங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 55)*

**பியாகடை**

1. வகுப்புறு இராகங்கள் முப்பத்திரண்டுள் ஒன்று (பிர.தீபிகை. 53)
2. ▶ பியாக்கடை

**பிரகதாருணியம்**

முப்பத்திரண்டு உபநிடதங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 59)*

**பிரகம்பிதம்**

முகநிலைகள் பதினான்கனுள் ஒன்று; சிறிதாகத் தலையை அசைக்கும் நிலை *(பிர.தீபிகை. 73)*

**பிரசாபத்தியம்**

1. எண்வகை மணங்களுள் ஒன்று; பெண்ணை ஏற்கும் தலைவன் கொடுத்த பொருளுக்கு இரட்டிப்பான பொருளைப் பெண்ணுக்கு அளித்து, உரிமைச் சுற்றத்துடன் அவளை அளிப்பது *(பிர.திர. 358)*
2. சிறந்த காளை இருபத்தொன்றினைத் தான் கருதிய வரனிடத்தில் விருப்பமாக அளித்தல் *(பிர.தீபிகை. 74)*

**பிரபந்தங்கட்கு நாள், கோள்**

இடுகுறியாலும் காரணத்தாலும் பெயர்பெற்ற தொண்ணூற்றாறு பிரபந்தங்களுக்கு உரிய நாளை அறிய அசுவதி முதல் ரேவதி ஈறான இருபத்தேழு நட்சத்திரங்களை மூன்று முறை அடுக்கிப்

(27x3=81) பின்வரும் பிரபந்தங்கட்கு அசுவதி முதல் சுவாதி ஈறான பதினைந்து நட்சத்திரங்களையும் கொள்ள வேண்டும்.

கோள்களுள் இராகு, கேது இரண்டையும் நீக்கிப் பிற ஏழையும் பதின்மூன்றுமுறை அடுக்கி (7x13=91) எஞ்சிய ஐந்து பிரபந்தங்கட்குச் சுக்கிரனைக் கொள்ளவேண்டும் *(பிர.திர. 90)*

► அட்டவணை 12.

பிரபந்தங்கட்குப் புறனடை

1. பிரபந்தங்களுக்குக் கூறிய நாள், இராசி பிற அரசனுக்குப் பொருந்தினால் உலகில் மிகுந்த நன்மை விளையும். இறைவனின் நாள் முதல் எட்டு நாளில் 'பொருத்தவியல்' படி தப்பினால் ஏற்புடையது அன்று; தீமையை விளைவிக்கும். *(பிர.திர. 426)*
2. வெண்கலிப்பா யாப்பைப் பெற்றுவரும் பிரபந்த வகைகள் செப்பலோசை பெற்று வெண்டளை வழுவாது வரும். சந்தம் ஒவ்வோரிடத்து வந்து இணையும்போது அதன் காரணமாக வெண்டளை வழுவினாலும் அது நன்றென்றே கொள்ளப்படும் *(பிர.திர. 93)*
3. காம மயக்கத்தை வகுத்துக் கூறுதல், துன்பம் தரும் இரவை விலக்க மொழிதல், தலைவியின் மயக்கம் மற்றும் எவற்றையும் பிரபந்தங்களில் பாடுதல் நலம். *(பிர.திர. 474)*

பிரபந்தங்கட்குரிய இசை

குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்னும் ஏழிசையையும் அடுக்கிப் பொருத்த வேண்டும் *(பிர.திர. 91)*

பிரபந்தங்கட்குரிய இராசி

பன்னிரண்டு இராசிகளை எட்டுமுறை அடுக்கிப் (12x8=96) பிரபந்தங்களுக்குக் கொள்ளல் வேண்டும் *(பிர.திர. 91)*

பிரபந்தங்கட்குரிய நிறம்

வெண்மை, கருமை, செம்மை, பசுமை, பொன்மை என்னும் ஐந்து நிறங்களையும் அடுக்கிப் பொருத்த வேண்டும் *(பிர திர. 91)*

பிரபந்தங்களின் வகை

1. பிள்ளைக்கவி, அகக்கோவை, புறக்கோவை, வருக்கக்கோவை, உலா, பவனிக்காதல், இன்பமடல், வளமடல், அனுராகமாலை, விரகமாலை, உலாமடல், சதகம், பதிகம், இரட்டை மணிக்கோவை, மும்மணிக்கோவை, நான்மணிக்கோவை, மாலை, அலங்கார பஞ்சமம், வெண்பா, கலித்துறை, விருத்தத்தந்தாதி, பதிற்றுப்பத்தந்தாதி, கலம்பகம்.
2. பன்மணிமாலை, பரணி திக்குவிசையம், காதல், வண்ணம், பஞ்சரத்தினம், நவரத்தினம், ஏசல், குறம், மறம், பள்ளு, நாடகம், கலி, பாலை, முல்லை, வஞ்சி, கடிகமாலை, விலாசம், தூது, மஞ்சரி *(சுவாமி 165, 166)*
3. சிந்து, தசாங்கம், கலவி, தூது, மையல், பவனி, கதை, சாதிகம், வாதாடல், கொம்மை(கும்மி), குரவை, புலவி *(சுவாமி 172)*
*(நூற்பா மற்றும் உரையில் 'சாதிகம்' என உள்ளது. சாதிகம் என்னும் இலக்கியவகை ஒன்று இல்லாததால் அது சாதகம் என்பதாக இருக்கலாம் எனக் கருத இடமேற்படுகிறது)*
4. யாப்புநிலை - சந்தங்கள் காரணமாகப் பல வேறுபாடுகளாகி, ஈரடியாயும் பிறவாலும் அமைத்து எழுதுதல் நன்று. புதிதான பிரபந்தங்களை உயர்வுடையோருக்குப் பாடிப் பெண்களை இரத்தல் முதலானவற்றைக் கூறுதல் நன்று. அவருக்கு இது சிறப்போ எனில் புகழ்தல் சிறப்பு. எனக்கு என்றும் இன்ப நோக்கு *(பிர.திர. 489)*

பிரபந்தங்களுக்குரிய கடவுளர்

விநாயகன், முருகன், வீரபத்திரன், ஐயனார், பைரவன் ஆகிய ஐந்து மூர்த்திகள், தேவர் உலகத்தின் சேனைத் தலைவரான ஆதித்தர் பன்னிருவர், அச்சுவினிகள் இருவர், உருத்திரர் பதினொருவர், வசுக்கள் எண்மர் ஆகிய முப்பத்துமூவர்; பயிரவர் எண்மர்; சந்திரன், வியாழன், அங்காரன், புதன், வெள்ளி எனும்கோள் ஐவர்; மன்மதன் இந்திரன், ஆதிசேடன்; சப்த கன்னியர்; பார்வதி, கங்கை, இலட்சுமி, நிலத்திற்கும் வானிற்கும் உரிய சரஸ்வதியர், காளி, துர்க்கை, தர்மதேவதை; திருமாலின் தசாவதாரங்கள்; ஏழுமுனிவர்; அருணன், வருணன்; பைரவி என்னும் தெய்வங்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு பாட்டியல் நூல்களில் இடம்பெறுவர். விநாயகனும், மாரனும் எல்லாப் பாட்டியல்களிலும் இடம்பெறுவர் *(பிர.திர. 82-84)*

பிரபந்தப் பொதுப்பொருள்

காம மயக்கத்தை வகுத்துக் கூறுதல், துன்பம் தரும் இரவை விலக்க மொழிதல், தலைவியின் மயக்கம், மற்றும் எவையும் பிரபந்தங்களில் பாடு பொருளாகலாம் *(பிர.திர. 474)*

பிரம்மபாலம்

முப்பத்திரண்டு உபநிடதங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 59)*

**பிரம்மா**

மஞ்சரியில் குறிக்கப்படும் வழிபடு தெய்வங்களுள் ஒருவர் *(பிர.திர. 36)*

**பிரமபிந்து**

முப்பத்திரண்டு உபநிடதங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 59)*

**பிரமம்**

முப்பத்திரண்டு உபநிடதங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 59)*

**பிரம மணம்**

1. எண்வகை மணங்களுள் ஒன்று; கன்னிப் பருவம் அடையும் முன்னர் அல்லது கன்னிப் பருவம் அடைந்த ஒரு மாதத்தில், ஒத்த அந்தணனுக்கு நீர்வார்த்து அளித்தல் *(பிர.திர. 358)*
2. கணவனாக வரிக்கப்படுபவனின் நெறியறிந்து பெண்ணை அலங்கரித்துக் கொடுத்தல் *(பிர.தீபிகை. 74)*

**பிரமன்**

1. காப்பிற்குரிய கடவுளருள் ஒருவர் *(பன்.பா. 106; நவநீ.பா. 28; இல.விள. 808; பிர.திர. 89)*
2. வசிட்டன், அகத்தியர், காசிபன், தக்கன் இவர்களின் தந்தை *(பிர.திர. 272)*

**பிராணன்**

வாயுக்கள் பத்தனுள் ஒன்று *(பிர.திர. 379)*

**பிராமணர்**

► பார்ப்பார் *(நவநீ.பா. 35)*

**பிரிவுசுரம்**

தலைவன் பிரிவு காரணமாகத் தலைவி உற்ற வருத்தத்தை விரித்துரைக்கும் இலக்கியம் *(பிர.திர. 67)*

**பிரிவால் வருந்தும் மகளிர்க்குப் பகையாவன**

பனிநீர், முத்து, மலர்க் கொத்து, மலர் விரவிய பஞ்சணை, கடல், களபம், மழை, தண்மை பொருந்திய செடிகள், கதலி, அடர்ந்த இருள். இப்பத்தையும் பகையாக உடையவர் தமக்கு இனிதாகக் கொண்ட ஊரினையும், அன்பு பூண்ட கடவுளரையும் கூட அம்மயக்கம் காரணமாக நீக்குவர். *(பிர.திர. 192)*

**பிரிவாற்றாமைக்குரிய குறிகள்**

ஆடை தளர்தல், வளையல், பொன் அணிகள், நாணம் ஆகியவற்றைத் துறத்தல், பசலை படர்தல், மடல் ஏறுதல் என்பர். கள்ளுண்டார்போல் இருத்தல், கூடல் இழைத்துப் பார்த்தல், கண்களில் நீர்வழிய இருத்தல், மலர் பரப்பிய பஞ்சணையில் இருப்பினும் வெம்மையை உணர்தல் அருகில் உள்ள குறிப்பிடத்தக்க அன்பான பொருட்களையும் துறக்கின்ற மயக்கத்தினராதல் *(பிர.திர. 190)*

**பிள்ளை**

இளமை மரபுப்பெயர்களுள் ஒன்று *(இல.விள. 910)*; பறப்பன, தவழ்வனவற்றுள்ளும்; நாய் அல்லாத ஏனையவற்றுள்ளும்; கோடுவாழ் விலங்கினுள்ளும்; மக்களுள்ளும்; ஓரறிவுயிருள்ளும் இளமைப்பெயருக்கு உரியது *(இல.விள. 910 உரை)*

**பிள்ளைக்கவி**

1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(சுவாமி. 165)*
2. ஒரு நூல் பல பாட்டுகளை உடையதாகும் இலக்கிய வகையுள் ஒன்று *(பன்.பா. 88, உரை)*
3. புன்கவிஞர்களுள் ஒருவர் *(வெண்.பா. 68; நவநீ.பா. 87, உரை; இல.விள. 934)*
4. தனக்கென ஒருநடை இன்றி முன்னோர் மொழிந்த சொல்நடை, பொருள்நடை கண்டு கவிபாடுவோன் *(வெண்.பா. 68; இல.விள. 934)*
5. ► பிள்ளைப்பாட்டு *(வெண்.பா. 28; நவநீ.பா. 29; பிர.மர. 2; தொ.விள. 257; சுவாமி. 167; பிர.தீபிகை. 5; பிர.தீபம். 94)*

**பிள்ளைத்தமிழ்**

► பிள்ளைப்பாட்டு *(சித.பா. 28; இல.விள. 806; பிர.திர. 3; மு.வீ. 1039)*

**பிள்ளைப்பா**

1. இருகைகளை ஊன்றி ஒருகாலை உயர்த்தி முகத்தை ஆட்டும் செங்கீரைப் பருவம், சந்திரனை அழைத்துச் சாம பேத தான தண்டங்களில் கூறும் அம்புலிப்பருவம் முதலியவற்றைக் கூறல், காப்புப் பருவத்தில் முப்பத்துமூன்று தேவரைப் பாடல் ஆகியனவற்றைக் கருவாகக் கொண்ட இலக்கியம். *(பிர.திர. 105)*
2. ► பிள்ளைத்தமிழ்

பிள்ளைப்பாட்டு

1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(பன்.பா. 99)*
2. தொடர்நிலைச் செய்யுள் வகைகளுள் ஒன்று *(இல.விள. 805)*
3. ஒற்றைப்படை மாதங்களில் (3-12) காப்பு முதலாக உரியோர் கேட்கும்படி அமைவது *(பன்.பா. 101; தொ.விள 257; இல.விள. 811; சித.பா. 28)*
4. இரண்டு மாதம் முதல் நாற்பத்தெட்டு வயது வரையிலான பருவத்தை விருத்தப்பாவால் பாடுவது *(பிர.திர 3-5)*
5. பாட்டுடைத் தலைவனை அவன் சுற்றத்தோடு தேவர் கொலையகற்றிக் காக்கவென வகுப்பாலும் ஆசிரிய விருத்தத்தாலும் பாடுவது *(வெண்.பா. 28; சித.பா. 28)*
6. காப்புக் கவிகளை 3, 5, 7, 9, 11 எனத் தொகுத்துக் காப்பு மாலை என்று பாடும் வகையும் உண்டு *(வெண்.பா 28, உரை)*
7. சிற்றில், சிறுபறை, சிறுதேர் மூன்றிலும் செய்யுள் குறைந்து வரும். ஆசிரியவிருத்தம், வண்ணத்தால் ஐம்பதுக்கு மேற்பட்ட செய்யுளால் அமையும் இலக்கியம் *(பிர.மர. 2)*
8. காப்பு முதலான பத்துப் பருவங்களை எண்சீர்க்கு மேற்பட்ட அடிகளால் அடுக்கி வகுப்பாலும் ஆசிரிய விருத்தத்தாலும் பாடுவது *(சுவாமி. 167; மு.வீ. 1039; பிர.தீபிகை. 5; பிர.தீபம். 94)*
9. பிறப்பு, உவகை, காப்பு, வளர்ச்சி, அச்சமூட்டல், செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வருகை, அம்புலி, சிற்றில், குழமகன், ஊசல், என்னும் பதினான்கு பருவங்களோடு இவை போன்ற பிற பருவங்களும் அமையப் பாடப்படுவது. பருவங்கள் ஒன்று, மூன்று, ஐந்து, ஏழு, ஒன்பது, பதினொன்று என்னும் எண்ணளவுகளில் ஏதேனும் ஒன்றினை உடையதாகப் பாடப்பெற வேண்டும். பருவங்களின் பாடல் எண்ணளவு பன்னிரண்டினை மிகுதல் கூடாது. பருவங்களுக்குரிய பாடல்கள் மேற்கூறியவாறு ஒற்றைப்படை எண்ணளவினதாய் இருத்தல் வேண்டும். இரட்டைப்படை எண்ணளவு உடையதாகப் பாடுவது குற்றம் *(இந்.காளி. 32)*
10. பிறப்பு, உவகை, வளர்ச்சி, அச்சமுறுத்தல் ஆகிய நான்கு பருவங்களும் ஐந்து, மூன்று, ஏழு என்னும் எண்ணளவுடைய பாடல்களைப் பெறுமாறு அமைப்பது சிறப்பு. ஒரு பாடல் வருமாறு இப் பருவங்களை அமைப்பது இழிவு. பன்னிரு பாட்டியல் உவகையை மட்டும் குறிப்பிடுகிறது *(இந்.காளி. 33; பன்.பா. 113)*
11. நால் வருணத்தார் மீதும் பாடப்பெறுவது. அவ்வாறு பாடுகையில் அந்தந்த வருணத்தாரின் தொழிலுக்கு ஏற்பச் செயல் திறனை எடுத்துக்கூறிப் புகழ்ந்துரைக்க வேண்டும் *(இந்.காளி. 32)*
12. முனிவர்க்கு, முடிபுனைந்த மன்னர்க்கு, அமரர்க்குப் பாடலாம். குறுநில மன்னர், உலோபியர்க்குப் பாடலாகாது. பாடின் இரத்தச் சேதம், தன்னுயிர்ச்சேதம் வரும் *(நவநீ.பா. 29)*
13. ஆசிரியவிருத்தம், கலிப்பா, கலிவிருத்தம் இவற்றால் பிள்ளைப்பாட்டு பாடப்பெறும். நெடுவெண் பாட்டாய் அமையும் என்றும் கூறுவர் *(இந்.காளி. 32; பன்.பா. 110, 111)*
14. ஆசிரிய விருத்தத்தின் எழுத்தின் பகுதிகளை நான்கடிக்கும் ஒப்ப எண்ணிக் கொள்ள வேண்டும் *(பன்.பா. 112)*
15. நவநீதப் பாட்டியல், பிரபந்த தீபிகை இரண்டும் எந்தெந்தப் பருவங்களை எந்தெந்த மாதங்களில் பாடவேண்டும் என்பதைப் பின்வருமாறு கூறுகின்றன.

| | | |
|---|---|---|
| மூன்றாம் திங்கள் | - | காப்பு |
| ஐந்தாம் திங்கள் | - | செங்கீரை |
| ஏழாம் திங்கள் | - | தால் |
| ஒன்பதாம் திங்கள் | - | சப்பாணி |
| பதினோராம் திங்கள் | - | முத்தம் |
| பதிமூன்றாம் திங்கள் | - | வாரானை |
| பதினேழாம் திங்கள் | - | சிறுபறை |
| பத்தொன்பதாம் திங்கள் | - | சிற்றில் சிதைத்தல் |
| இருபத்தோராம் திங்கள் | - | சிறு தேருருட்டல் *(நவநீ.பா. 30)* |

பிரபந்த தீபிகை இறுதி மூன்றில் வேறுபடுகிறது

| | | |
|---|---|---|
| ஒன்றரை வருடம் | - | அம்புலி |
| இரண்டு ஆண்டு | - | சிற்றில் சிதைத்தல் |
| மூன்றாம் ஆண்டு | - | பறை முழக்குதல் |
| நான்காம் ஆண்டு | - | தேர் ஊர்தல் *(பிர.தீபிகை. 5)* |

16. பிள்ளைப்பாட்டில் சுற்றத்தவர்களைக் கூறுமிடத்துத் தந்தை, தாய், பாட்டன், பாட்டி என்னும் இவர்களை முன் அமைத்துக் கூறுதல் முறை *(பன்.பா. 103)*
17. விரிசடைக் கடவுளையும் சத்த மாதர்களையும் காப்பில் வைத்துப் பாடுகையில் அரக்கர் முதலியவர்களை அவர்கள் கொன்றமையையும், அக்கொடியவர்கள் பால் இயற்றிய கொடுமையையும் பாடுதல் கூடாது *(பன்.பா. 109; நவநீ.பா. 27)*

18. பெயர், சின்னம், கங்கை, திங்கள், கடுக்கை மாலை, மங்கலமழு, மலைமகள் ஆகியவற்றை விளக்கிக் கூற வேண்டும் *(பன்.பா. 109)*
   1. காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வருக, அம்புலி, சிற்றில் இழைத்தல், சிறசோறாக்கல், குழமகன், ஊசல், காமன் நோன்பு நோற்றல் என்னும் பருவங்கள் பாடப்படுவது *(பன்.பா. 104, 105)*
   2. முதல் ஏழுடன் கழங்கு, அம்மானை, ஊசல் சேர்த்துப் பத்து பருவங்கள் பாடுதற்குரியன *(வெண்.பா. 29; நவநீ.பா. 32, உரை; பிர.மர. 2; சித.பா. 28; இல.விள. 807; தொ.விள. 257; சுவாமி. 167; மு.வீ. 1039; பிர.தீபிகை. 5; பிர.தீபம். 94)*
   3. பிள்ளைப் பாட்டில் விரும்பிப் பாடுதற்குரிய பருவங்களாவன, சிற்றில் இழைத்தல், சிறுசோறாக்கல், குழமகன், (பாவை வைத்து விளையாடல்) ஊசல், பன்னிரண்டு வயதில் காமன் நோன்பு நோற்றல், என்பனவாம் *(பன்.பா. 105)*
   4. பெண்பால் பிள்ளைத் தமிழானது பெண்டிர் பூப்படையும் காலம்வரை பாடப்பெறும் பூப்படைந்த பெண்டிர் மீது பிள்ளைப்பாட்டுப் பாடலாகாது *(இந்.காளி. 30)*
   5. மூன்று, ஐந்து, ஏழாம் ஆண்டிலும் பிள்ளைக் கவியைப் பாடலாம் *(இல.விள. 810; தொ.விள. 257)*

### பிள்ளைப்பாட்டு பருவங்கள்
அச்சோவா எனல், புறம் புல்குவான் எனல், அப்பூச்சி காட்டுகின்றான் எனல், முலையுணாய் எனல், நீராட வாராய் எனல், குழல்வாராய் காக்காய் எனல், ஓர்கோல் கொண்டுவா எனல், இன்று முற்றும் எனல் *(பன்.பா. 102, உரை)*

### பிறப்பு
உடற்குற்றம் பதினெட்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 70)*

### பிறர்துயர் காத்தல்
முப்பத்திரண்டு அறங்களுள் ஒன்று. *(பிர.தீபிகை. 71)*

### பிறவிபேதம்
நான்கு வகைத் தோற்றம் (பை, முட்டை, நிலம், வியர்வை) எழுவகைப் பிறவி (தேவர், மக்கள், விலங்கு, புள், ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம்) இவற்றின் யோனிபேதம் எண்பத்து நான்கு நூறாயிரம். இவற்றை இன்னும் வகைப்படுத்தி வேறு வேறாகக் கூறில் அடங்காது. மிகுந்த ஒன்பது லட்சம் மானுடபேதம் அதில் கூறப்படுகின்ற முதல் பேதத்தின் தாள்பேதமே மேலே இடம்பெற்றுள்ளது *(பிர.திர. 372)*

### பிறன் உடன்பட்டது தான் உடம்படுதல்
முப்பத்திரண்டு உத்திகளுள் ஒன்று; இயற்கையாக மனங்கொள்ளத்தக்க வாய்ப்பு இல்லையாயினும் தொன்றுதொட்டு வந்த வழக்கினால் இது கொள்ளத்தக்க பொருள் என்று கூறி விடுத்தல் *(இல.விள. 898)*

### பிறன்கோட்கூறல்
முப்பத்திரண்டு உத்திகளுள் ஒன்று; தான் இயற்றும் நூலில் ஏற்ற இடங்களில் பிறர் கருத்தை வெளியிட்டு அந்நூல் இலக்கணத்தையும் கற்போர் உணருமாறு செய்தல் *(இல.விள. 898)*

### பிறிதுபடுபாட்டு
சித்திரகவி வகைகளுள் ஒன்று; செய்யுளின் அடியையும் தொடையையும் சீரமைப்பால் வேறுபடுத்தி எழுதினாலும் அதன் சொல், பொருள் வேறுபடாது பிறிதொரு செய்யுளாய் நிறைவடைவது *(இல.விள 766 (690))*

### பின் இயைபு
இரண்டு நான்காம் சீரில் அமையும் இயைபு *(சித.பா. 13)*

### பின் எதுகை
இரண்டு நான்காம் சீரில் அமையும் எதுகை *(சித.பா. 13)*

### பின்முரண்
நான்காம் சீரும் இரண்டாம் சீரும் முரணும் நிலை *(சித.பா. 13)*

(எ-டு) சாரல் **ஓங்கிய** தடந்தாள் **தாழை**
கொய்ம்மலர் **குவிந்து** தண்ணிழல் **விரிந்து**
தமியம் **இருந்தன** மாக **நின்று**தன்
நலனுடைப் **பனிமொழி** நன்குபல **பயிற்றி**
வீங்குதொடிப் **பணைத்தோள்** நெகிழத்
துறந்தோன் **நல்லெனம்** மேனியோ **தீதே**

(முதற்சீருக்குப் பின்னும் மூன்றாம் சீருக்குப் பின்னும் மறுதலைப்பட்டன)

**பின்மோனை**

இரண்டு நான்காம் சீரில் அமையும் மோனை *(சித.பா. 13)*

**பினாகம்**

மயேச்சுவரியின் ஆயுதம் *(பன்.பா. 109, உரை)*

## பீ

**பீ**

1. பெண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 27; வெண்.பா 6; நவநீ.பா 7; சித.பா. 20; தொ.விள. 289; பிர.திர. 124; சுவாமி. 174; மு.வீ. 1031; பொரு.விள. 21)*
2. உத்திர நாளுக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 47; வெண்.பா. 15; நவநீ.பா. 17; சித.பா. 23; இல.விள. 792; தொ.விள. 292; பிர.திர. 144; மு.வீ. 1034; பொரு.விள. 54)*
3. பூ, தரணி, தேர் என்னும் மங்கலச் சொற்களுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 3)*

## பு

**பு**

1. ஆண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 26; வெண்.பா 6; நவநீ.பா 7; சித.பா. 20; தொ.விள. 289; பிர.திர. 124; சுவாமி. 174; மு.வீ. 1031, பொரு.விள. 20)*
2. அத்த நாளுக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 47; வெண்.பா. 15; நவநீ.பா. 17; சித.பா. 23, இல.விள. 792; தொ.விள. 292; பிர.திர. 144; மு.வீ. 1034; பொரு.விள. 55)*
3. பொன் என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 5)*; பார், பொன், சொல் என்னும் மங்கலச் சொற்களுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 3)*

**புகழ்**

மங்கலச் சொற்களுள் ஒன்று *(பன்.பா. 68; நவநீ.பா. 2; சித.பா. 18; இல.விள. 771; தொ.விள. 285; பொரு.விள. 3)*

**புகழ்ச்சி மாலை**

1. பலவகை அடிமயக்கம் அமைந்த வஞ்சிப்பாவினால் மகளிரைப் புகழ்ந்து பாடும் இலக்கியம் *(பன்.பா 176, உரை; வெண்.பா. 57, நவநீ.பா 48; சித.பா. 36; தொ.விள. 269; பிர.திர. 28)*
2. அகவல் அடியும் கலி அடியும் மயங்கிய வஞ்சிப்பா எனச் சில பாட்டியல்கள் கூறுகின்றன *(இல.விள 866, மு.வீ. 1057; பிர.தீபிகை. 12; பிர.தீபம். 31)*

**புகழுடையவர் வாழ்வு**

எவ்வழியாகவேனும் புகழ் தேடினவர்கள், பதினான்கு உலகத்தினவரும் போற்றச் சிறப்பொடு பொலிந்து வாழ்வார். நிலைபெற்ற கோடி புகழ் நலம் பெறச் செய்தவர்கள் முடிவில்லாத அண்டத்தில் தம் செயலே தமக்கு இணையாக வாழ்வர் *(பிர.திர. 516)*

**புஞ்சிகை**

விண்மாதர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை. 46)*

**புட்கலைமான்**

சுவாயம்பு மனுக்குலத்தின் குழந்தை *(பிர.திர. 287)*

**புடைநூல்**

▶ சார்பு நூல் *(இல.விள 902)*

**புதன்**

1. கலிப்பாவிற்கு உரிய கடவுளருள் ஒருவர் *(பன்.பா. 93; வெண்.பா 71; பிர.மர. 27; இல.விள. 883; தொ.விள. 297; மு.வீ. 1014; பிர.திர. 417)*
2. மஞ்சரியில் குறிக்கப்படும் கிரகங்களுள் ஒன்று
3. பகலிலும் இரவிலும் வழிபடற்குரியது *(பிர.திர. 36)*

**புயம்**

1. கலம்பக உறுப்புகளுள் ஒன்று *(பன்.பா. 129; வெண்.பா. 32; நவநீ.பா. 33; பிர.மர. 4; சித.பா. 29; இல.விள. 812; தொ.விள. 258; மு.வீ. 1041; பிர.திர. 32; பிர.தீபிகை. 7; பிர.தீபம். 295)*
2. பாட்டுடைத் தலைவனின் தோள்களைப் பலவகையாகப் புகழ்ந்து பாடும் பகுதி *(பன்.பா. 129, உரை; இல.விள. 812, உரை)*

**புயல்**

மங்கலச் சொற்களுள் ஒன்று *(பன்.பா. 68; வெண்.பா. 2, உரை; நவநீ.பா. 2; தொ.விள. 285; மு.வீ. 1027)*

**புராணம்**

1. உலகத் தோற்ற ஒடுக்கம், மனுவந்தரம், முனிவர் வரலாறு, அரசர் மரபு, அவர் சரிதம் ஆகியவற்றை விளக்குவது *(வெண்.பா. 64)*
2. செவிவழிச் செய்திகளைத் தொடர்ச்சி இல்லாது கூறுவது. இலக்கியத் தன்மை குறைவுற்றிருக்கும் *(பிர.மர. 21)*
3. பல கதைகளைக் கூறுவது *(தொ.விள. 255)*
4. ▶ காப்பியம் *(சித.பா. 43)*

**புருடன்**

வித்தியா தத்துவம் ஏழனுள் ஒன்று *(பிர.திர. 378)*

**புருவம்**

▶ பாதாதி *(பன்.பா 214; நவநீ.பா. 44)*

**புரோகிதர்**

அரசர்க்குரிய ஐவர் குழுவில் ஒருவர் *(பிர.தீபிகை. 89)*

**புரோற்கீதம்**

சிவாகமம் இருபத்தெட்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 60)*

**புல்**

1. ஓரறிவு உயிர்களுள் ஒன்று; மெய்யால் அறியும் அறிவுடையது *(இல.விள. 913)*
2. புறவயிரம் உடையது *(இல விள. 918)*

**புல், மரத்தின் பொது உறுப்புகள்**

காய், பழம், தோல், செதிள், வீழ் *(இல.விள. 922)*

**புல்லின் உறுப்புகள்**

தோடு, மடல், ஓலை, ஏடு, இதழ், பாளை, ஈர்க்கு, குலை *(இல.விள. 920)*

**புலவர் வகை**

கவி, கமகன், வாதி, வாக்கி *(வெண்.பா. 23; நவநீ.பா. 87; இல.விள. 929; மு.வீ. 1021; பிர.தீபிகை. 98)*

**புலவராற்றுப்படை**

1. ஆற்றுப்படை வகைகளுள் ஒன்று *(வெண்.பா. 52, உரை; தொ.விள. 266; பிர.திர. 27)*
2. மக்களுக்கு மட்டுமன்றித் தேவர்க்கும் உரியது *(பன்.பா. 204)*

**புலன்**

1. குடைமங்கலப் பொருள்களுள் ஒன்று *(பன்.பா 121)*
2. சத்தம், ஸ்பரிசம், உருவம், ரசம், கந்தம் *(பிர.திர. 378)*

**புலிந்தம்**

ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று *(பிர.திர. 500-502; பிர.தீபிகை. 99)*

**புலியின் சிறுபறழ்**

ஆண்பால் பிள்ளைப்பாட்டுக்குரிய உவமைகளுள் ஒன்று *(பன்.பா. 114)*

**புலோமிசை**

விண்மாதர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை 46)*

**புள்**

பறவை என்பது இதன் பொருள். பன்னிரு பாட்டியல் மட்டுமே இப் பொருத்தத்தைக் கூறுகிறது. அகரம் முதலான ஐந்து உயிர்க்குறில்களை வல்லூறு, ஆந்தை, வலியன், குருகு, மயில் என்பனவற்றிற்கு உரியனவாகக் கூறி இவற்றின் பொருத்தம், விருத்தம், பகை, பலன் என்பவற்றைக் கூறுகிறது. *(பன்.பா. 39)*

| வ.எண் | பறவை | எழுத்து |
|---|---|---|
| 1 | வல்லூறு | அ |
| 2 | ஆந்தை | இ |
| 3 | வலியன் | உ |
| 4 | குருகு | எ |
| 5 | மயில் | ஒ |

**புறக்கோவை**

1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(சுவாமி 165)*
2. புறப்பொருள்மேல் அமையும் இலக்கிய வகை *(சுவாமி 167)*

புறங்கால்

► பாதாதி *(பன்.பா. 214; நவநீ.பா. 44)*

புறநாட்டுச் செய்கை

ஒற்றர்கள் தம் வேந்தனிடத்துப் பிற நாட்டு வேந்தர்களின் இயல்பைக் கூறல், பிறநாட்டார் திறையாகப் பொன்னைக் கொண்டு வந்து அளித்தல் இவை இரண்டையும் பாடும் இலக்கியம் *(பிர.திர. 24)*

புறநானூறு

பல பாட்டுகள் தொக்கி ஒரு நூலாகும் இலக்கிய வகையுள் ஒன்று *(பன்.பா. 89, உரை)*

புறநிலை

நீ வணங்கும் தெய்வம் நின்னைப் பாதுகாக்க, நின் வழி (பரம்பரை) மிகுவதாகவெனக் கூறும் இலக்கியம் *(மு.வீ. 1098; பிர.தீபிகை. 21; பிர.தீபம். 65)*

புறநிலை வாழ்த்து

1. வழிபடு தெய்வம் நின்னைப் புறங்காப்பக் குற்றமில்லாத செல்வத்தோடு ஒருகாலைக் கொருகால் சிறந்து பொலிவாய் என்று மருட்பாவால் அறையும் வகை *(பன்.பா. 213; நவநீ.பா. 55; மு.வீ. 1120; பிர.தீபிகை. 27)*
2. வெள்ளையடியும் ஆசிரியமுமாகப் பாடுவது *(பிர.தீபம். 83)*

புறப்பொருட் கோவை

புறப்பொருளைப் பற்றிப் பாடும் இலக்கியம் *(சுவாமி. 167)*

புறம் புல்குவான்

ஆண்பால் பிள்ளைப்பாட்டு நிலைகளுள் ஒன்று *(பன்.பா. 102, உரை)*

புன்கவிஞர்

கள்ளக்கவி, சார்த்துக்கவி, பிள்ளைக்கவி, வெள்ளைக்கவி *(வெண்.பா. 68; நவநீ.பா. 87; இல.விள 934)*

புன்னாகவராளி

1. வகுப்புறு இராகங்கள் முப்பத்திரண்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 53)*
2. இரக்கத்திற்கு உள்ள இராகங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 55)*

புன்னை

1. மஞ்சரிக்குரிய பத்துவகை மரங்களுள் ஒன்று *(பிர.திர. 35)*
2. இசைக்குரிய மணங்களுள் ஒன்று *(பிர.திர. 92)*
3. பெண்டிர் அணியும் மலர் மாலைகளுள் ஒன்று *(பிர.திர. 201)*

புனர்பூசத்திற்கு உரிய எழுத்துகள்

கெ, கோ, கை *(பன்.பா. 42; வெண்.பா. 12; நவநீ.பா. 14; சித.பா. 23; இல.விள. 787; தொ.விள. 292; பிர.திர. 143; மு.வீ. 1034; பொரு.விள. 42)*

புனர்பூசம்

1. சூரிய கணத்திற்கு உரிய நாள் *(இந்.காளி. 36; பன்.பா. 62)*
2. ஆகாய கணத்திற்கு உரிய நாள் *(சித.பா. 25; இல.விள. 800, உரை; பிர.திர. 154)*
3. நோய் விளைவிக்கும் *(பன்.பா. 62; சித.பா. 25; இல.விள. 800, உரை; பிர.திர. 154)*
4. வெண்பாவிற்கு உரிய நாள்களுள் ஒன்று *(பன்.பா. 91; வெண்.பா. 70; இல.விள. 880; தொ.விள 295; மு.வீ 1012; பிர.திர. 417)*

புனல்

மங்கலச் சொற்களுள் ஒன்று *(பன்.பா. 68; வெண்.பா. 2, உரை; நவநீ.பா 2; வரை.பா. 6; சித.பா. 18; இல.விள. 771; தொ.விள. 285; பிர.திர. 111; சுவாமி. 173)*

புனவேடர்

குலப் பெயர்களுள் ஒன்று *(பிர.திர. 363)*

## பூ

பூ

1. பெண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 27; வெண்.பா 6; நவநீ.பா 7; சித.பா. 20; தொ.விள. 289; பிர.திர. 124; சுவாமி. 174; மு.வீ. 1031; பொரு.விள. 21)*
2. அத்த நாளுக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 47; வெண்.பா. 15; நவநீ.பா. 17; சித.பா. 23; இல.விள. 792; தொ.விள. 292; பிர.திர. 144; மு.வீ. 1034; பொரு.விள. 55)*
3. மங்கலச் சொற்களுள் ஒன்று *(பன்.பா. 68; வெண்.பா. 2; நவநீ.பா. 2; வரை.பா. 5; சித.பா. 18; இல.விள. 771; தொ.விள. 285; சுவாமி. 173; மு.வீ. 1027; பொரு.விள. 3)*
4. பொன் என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 5)* பார், பொன், சொல் என்னும் மங்கலச் சொற்களுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 3)*
5. மரத்தின் உறுப்புகளுள் ஒன்று *(இல.விள. 921)*

**பூச்சூட்ட வாராய்**
ஆண்பால் பிள்ளைப்பாட்டு நிலைகளுள் ஒன்று (பன்.பா. 102 உரை)

**பூசத்திற்கு உரிய எழுத்துகள்**
கொ, கோ, கௌ *(பன்.பா. 42; வெண்.பா. 12; நவநீ.பா. 14; சித.பா. 23; இல.விள. 787; தொ.விள. 292; பிர.திர. 143; மு.வீ. 1034; பொரு.விள. 43)*

**பூசம்**
1. சூரிய கணத்திற்கு உரிய நாள் *(சித.பா. 25; இல.விள. 800, உரை; பிர.திர. 154)*
2. வெண்பாவிற்கு உரிய நாள்களுள் ஒன்று *(பன்.பா. 91; வெண்.பா. 70; இல.விள. 880; தொ.விள. 295; மு.வீ. 1012; பிர.திர. 417)*

**பூபாளம்**
1. முப்பத்திரண்டு இராகங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 51)*
2. வைகறை நேர இராகங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 56)*

**பூமாதேவி**
தருகின்றவர் *(பிர.திர. 287)*

**பூமாலை**
அரசர்க்குரிய இருபத்தொரு சின்னங்களுள் ஒன்று *(பிர.திர. 88)*

**பூமி**
ஐம் பூதங்களுள் ஒன்று *(பிர.திர. 378)*

**பூமிப்பரீட்சை**
அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 72)*

**பூரச்சுழி**
குதிரைக்கு ஆகாத இருபது சுழிகளுள் ஒன்று (பிர.திர. 388)

**பூரட்டாதி நாளுக்கு உரிய எழுத்துகள்**
நொ, நோ, நௌ *(பன்.பா. 46; வெண்.பா. 14; நவநீ.பா. 16; சித.பா 23; இல.விள. 791; தொ.விள 292; பிர.திர. 143; மு.வீ. 1034; பொரு.விள. 53)*

**பூரணகும்பம்**
அரசர்க்குரிய இருபத்தொரு சின்னங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 88)*

**பூரணை**
சுவாயம்பு மனுக் குலத்தின் குழந்தை *(பிர.திர. 287)*

**பூரணையின் பிறப்பிடம்**
சுவாயம்பு மனுவின் குலம் *(பிர.திர. 287)*

**பூர நாளுக்குரிய எழுத்துகள்**
மொ, மோ, மௌ *(பன்.பா. 48; வெண்.பா. 15; நவநீ.பா. 17; சித.பா. 23; இல.விள. 793; தொ.விள. 292; பிர.திர. 144; மு.வீ. 1034; பொரு.விள. 59)*

**பூரம்**
ஆசிரியப்பாவிற்கு உரிய நாள்களுள் ஒன்று *(பன்.பா. 92; வெண்.பா. 70; தொ.விள. 296; மு.வீ. 1013; பிர.திர. 417)*

**பூராடம்**
கலிப்பாவிற்கு உரிய நாள்களுள் ஒன்று *(பன்.பா. 93; வெண்.பா. 70; இல.விள. 881; தொ.விள. 297; மு.வீ. 1014; பிர.திர. 417)*

**பூராடத்திற்கு உரிய எழுத்துகள்**
உ, ஊ, எ, ஏ, ஐ *(பன்.பா. 41; வெண்.பா. 11; நவநீ.பா. 13; சித.பா. 23; இல.விள. 785; தொ.விள. 292; பிர.திர. 142; மு.வீ. 1034; பொரு.விள. 38)*

**பூவை**
தூதுப் பொருள்களுள் ஒன்று *(பிர.திர. 30)*

**பூவைசியர்**
1. அரசனுக்கு அஞ்சாது ஏருழுவித்தல், விதை விதைத்தல், பிராமணரைக் கொண்டு வேள்வி செய்தல், வாய்மையுடைமை, பொறையுடைமை, நிரையோம்பல் ஆகியவற்றை உடையவராயிருத்தல் *(வெண்.பா. 84)*
2. முதலிரண்டைத் தவிர்த்து ஏனையவை பிரபந்தத்திரட்டில் சுட்டப்பட்டுள்ளன. அவற்றோடு, மன்னனை இகழும் வண்ணம் இன்பமும் கொடைத் தன்மையும் கொள்வர்; குபேரனை வணங்குவர்; வணிகத் தொழில் செய்வர் என்பனவும் சொல்லப்பட்டுள்ளன *(பிர.திர. 303)*

# பெ

## பெ

1. ஆண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 26; வெண்.பா 6; நவநீ.பா 7; சித.பா. 20; தொ.விள. 289; பிர.திர. 124; சுவாமி 174; மு.வீ. 1031; பொரு.விள. 20)*
2. சித்திரை நாளுக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 47; வெண்.பா. 15; நவநீ.பா. 17; சித.பா. 23, இல.விள. 792; தொ.விள. 292; பிர.திர. 144; மு.வீ. 1034; பொரு.விள. 56)*
3. பார் என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 8)*; பார், தருவு என்னும் மங்கலச் சொற்களுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 3)*

## பெட்டை

பெண்பால் மரபுப் பெயர்களுள் ஒன்று *(இல.விள. 917)*; ஒட்டகம், குதிரை, மரை, புள் இவற்றின் பெண்பால் பெயர் *(இல.விள 917 உரை)*

## பெடை

பெண்பால் மரபுப்பெயர்களுள் ஒன்று *(இல.விள. 917)*; ஒட்டகம், குதிரை, மரை, புள் இவற்றின் பெண்பால் பெயர் *(இல.விள 917 உரை)*

## பெண்

உயர்திணைப் பெண்பால் மரபுப் பெயர்களுள் ஒன்று *(இல விள. 917)*; மக்களுள் பெண்பாலினைக் குறிக்கும் *(இல.விள 917 உரை)*

## பெண்டிரின் அணிகலன்கள்

| வ.எண் | | அணிகலன்கள் | பிர.திர. நூ.எண் |
|---|---|---|---|
| 1. | பெண்டிர் | கங்கணம், மேலீடு, கொப்புருக்கு, மணிகளுடைய சவடி, கட்டு கின்ற வடம், நாகபடம், தண்டை, ஒட்டியாணம், மிஞ்சி, விடு மணிகள், மோகனமாலை, கால் மோதிரம், பீலி, வெற்றிலை நறுக்குப் போன்றும் மயிலடி போன்றுமுள்ள கால்மோதிரம், புருடராகம், பவளம், முத்து, வச்சிரம், மரகதம், பதுமராகம், வயிடூரியம், கோமேதகம், நீலம் எனும் நவமணிகள் பொருந்தியமாலை; வைரம், சிறுமணி, பெருமணி, அச்சுமணி, கோதுமை மணி, நெல்லிக்காய் என்பன பொருந்திய மாலை. | 204 |
| | | ஒன்றிய பொன்மலர், துத்திப்பூ, வெள்ளிப்பூ, மணி பொருந்திய பொற்பூ, சிங்கசரம், கைச்சரம், அங்கசரம், முன்சரம், புன்சரம் இணைசரம், விடுசரம் எனும் சரப்பணிகள், முறுக்கியது போன்ற தண்டை, சிலம்பு, பாடகம், சலங்கை, கொலுசு, கிண்கிணி எனும் காலணிகள், காஞ்சி, கலாபம், அரைஞாண், நெற்றிச் சுட்டி, பட்டம், பாளை, பின்சங்கிலி, கன்னாவதஞ்சம், தங்க மோதிரம், தலையிலணியும் வெண்பிறை, சூரியப்பிறை, குப்பி தொங்கல், மணிவடம். | 205 |
| | | கவரிமானின் மயிர், சரப்பணி, பதக்கம் | 206 |
| 2. | ஆடவர் | அங்கதம், சரப்பணி, பதக்கம், அரைஞாண், பொன்முடி, கடகம், மிஞ்சி, மாணிக்கமாலை, தொங்குகின்ற கடுக்கன் கண்டி, மணிமோதிரம் | 216 |
| 3. | கடவுளர் | மலை, நதி, நாடு, ஊர், அணியும் பொருள், குதிரை, யானை, கொடி, தேர், உறுதியான முரசு, ஏறு, குடை, படை, வேல், குணம், நட்சத்திரம், மலர், மனைவி, மக்கள் உணவு, உண்டகறி, ஆடி, அணியும் பூண், நடனம், செயல் (அரன் தவிரப் பிறதெய்வங்கள் இவற்றை நிரலாகவும் நிறைவாகவும் பெறுவர். வருவனவற்றில் அருமையாகச் சிலருக்கு சில அணிகள் குறைந்தமைகின்றன) | 219 |
| 4. | சிவன் | கங்கை நதி, ஆத்தி, அறுகு, தலையோடு எலும்பு, கரந்தை மலர், தும்பை, பாம்பு, திங்கள், வில்வம், எருக்கு, கொன்றை மாலை, ஏறு(திருமால்), வில்(மேரு) தங்குமிடம் - திருவாலங் காடு, கைலாசம், வில்லுக்கு நாணாக ஆதிசேடன் என்னும் பாம்பு, யானையுருக் கொண்டுவந்த கயாசுரனை வென்றவர், உலகத்தைத் தேராகக் கொண்டவர். அத்தேரின் சக்கரமாக அமைந்தன கதிரும் மதியும். | 220 |

| | | | |
|---|---|---|---|
| | | பவளச் செஞ்சடையினர், கதிரும் மதியுமான கண்ணுடையவர் புலித்தோல் ஆடை உடையவர், கரியன் உரியை போர்வை யாக உடையவர், இடபக் கொடி உடையவர், ஐந்துமுகத்தினர் சூலம், துடி உடையவர், திருமாலும் பிரமனும் அறிய முடியாதவர், காமனை நீறாக்கியவர். | 222 |
| | | வானத்தை நாடாக உடையவர், குறள் பேய்களுடன் இசைக் கிணைய நடனம் புரிவர், தன்னுடலின் ஒரு பாதியில் உமாதேவி யை இணைத்ததால் தாமதகுணம் உடையவர், கதிரவனின் பல்லினையும், வாணியின் மார்பையும், சிறந்த மலரை அறுத் தவளின் மூக்கையும் அயனின் தலையையும், திருமாலின் மார்பினையும், மகனின் மகன் தலையையும் சிதைத்தவர், வெற்றிக் குடையாகப் பொன் அண்டத்தைக் கொண்டவர், மானை அணியாக ஏந்தியவர், தாண்டக ஆடல் புரிந்தவர், அயனும் மாலும் தேட சோதி வடிவாக நின்றவர், முப்புரிநூல் அணிந்த மார்பினர், மறையையே காற்சிலம்பாகக் கொண்டவர். | 222 |
| 5 | அரன் (பாண்டரங்க நடனம் செய்தவருக்கு உரியவை) | முயலகனைப் பாதத்தின்கீழ்க் கொண்டவர், கையில் நெருப் பேந்தியவர், அமுதம் போன்று விஷத்தை உண்டவர், காலன் மனம் நடுங்கும்படி உதைத்தவர், ஆதிரையை நாளாகப் பெறுபவர், மழுவினை ஆயுதமாகத் தாங்கியவர், கங்கை நதிக்குத் தலைவர், மன்னி வளருகின்ற ஐந்து தொழில்கள் உடையவர், குறட்படை உடையவர், வண்ணம் பொருந்திய செஞ்சடை யினரான முனிவர் நினைக்கும் சிவாயநம எனும் ஐந்தெழுத் துக்கு உரியவர், சிறுத்தொண்ட நாயனாரிடம் மகனைக் கறியாகப் பெற்றவர். | 223 |
| 6 | விநாயகர் | தந்தைக்குரிய மலை, நதி, நாடு, ஊர், அணி, முழவு, குடை, படை, உருவம், இடம், தொழில் என்பன பொருந்தும், அவர் செயல் - எழுதுதல், வேகமுடைய குதிரை - வடவைத்தீ, யானை - பிரணவ மந்திரம் மூலத்தானத்தில் எழுந்து படரும் ஒலி - தேர், பூதம் போன்ற உடலினர், ஊர்தி - பெருச்சாளி, படைக்கலன் - அங்குசம், பாசம், தனது கொம்பு, சத்துவம், இராசதம், தாமதம் ஆகிய மூக்குணத்தினன் தந்தையாகிய அரனின் முறைப்படியே பிற கடவுளருடன் முறை அமைகின்றது. மனைவி - வல்லவை. உணவு - அப்ப வகைகள், படையலாக அமைவன அனைத்தும் கறி. பொன்னாடையினர், குழந்தைப் பேறில்லாதவர். | 226 |
| | விநாயகர் (மாயன் உற்ற சாபத்தை நீக்கிய விநாயகரின் சிறப்பு) | ஐந்து கரங்கள் உடையவர், அத்துடன் நதிபோல் பாயும் மும்மலங்கள் உடையவர், சடையுடைய தந்தையான அரன் அணியும் பொருட்களைப் பெறுவர் பூராட நட்சத்திரத்தினர். (மும்மலம் - யானையின் 3 மலங்கள்) | 227 |
| 7 | முருகன் | பரங்குன்று முதலிய ஆறு மலைகள், ஆறுமுகமுடையவர், நதி - மானசரோவர், நாடு - குறிஞ்சி மற்றும் நகர், ஆறு, ஊர் அணியும் மாலை - குறிஞ்சி, வெண்கடம்பு, கொன்றை. வேதம் - வலிமையுடைய குதிரை, வேதப்பொருள் - மதம் ஊறுகின்ற யானை, கொடியில் இசைவது கோழி உருவம், தேர் - மனத்தின் வேகம், முழவு, ஒலிக்கின்ற தடாரி. ஏறு - மயில், ஆடு. குடை - உலகம். படை - வேல். | |
| | முருகன் | ஆறுமுகம், பன்னிரு கைகள், கண்ணி எனும் தலைமாலையால் புனையப்பட்ட சடை, படையாகக் கொள்ளத்தக்க பலவகை பூத கணங்கள், அசுரர்களைச் சாம்பலாக்கும் தன்மை | 230 |
| 8. | ஐயனார் | மாலை - அழகிய கொன்றை, வாகனம் - வெள்ளை யானை, கொடி - கோழிக் கொடி, சடையில் - ஒளிபொருந்திய திங்கள், சிறப்புடைய வெண் குடையினர், ஆயுதம் - கைச்செண்டை, சிறப்புடைய இராசத குணத்தினர், பரணி நட்சத்திரத்தினர், தந்தை கொள்ளும் முறைநெறிகளை உடையவர். கடல் வண்ண | |

மேனியர், பூரணை, புட்கலையை மனைவியாகப் பெற்றவர். சால்புடைய அமுதத்தை உணவாகக் கொண்டவர். பீதாம்பர உடையினர், ஐந்தெழுத்தினர் (அரிகர ஓம்) வெற்றியை நடமாக உடையவர், காத்தல் தொழிலினர். 231

ஐயனார் — தந்தையாகிய அரன் பெறுவனவற்றை இவரும் பெறுவார் 232

9. வைரவர் — ஊர்தியாக நாயினை உடையவர், கரிய குதிரையை உடையவர், படையாகவும் கொடியாகவும் அமைவது நாய்கள், தந்தையாகிய அரனின் முறைவழியே முறை கொள்பவர். அற்றமறி நாய் என்ற தால் மறைப்பை மறைக்கக் கூடிய நாய் எனலாம். 232

வைரவர் — பிரமனது நடுத்தலையைக் கிள்ளியவர், உருவம் - நீலநிறம், மனைவி - சூரி, இடம் - சுடலை, உணவு முதலியன தலைவனான அரன் பெறுவன. 233

10. வீரபத்திரன் — மனைவி - பத்திரை, ஊர்தி - சிங்கம், நாள் - அத்தம், தந்தையின் அணிகளும், அவரின் முறைவழியே முறையும் கொள்ளப்படும் 233

11. அச்சுதன் — மலை - நீலகிரி, நதி - வேணி, நாடு - தேவருக்குரிய வைகுந்தம், குதிரை - நிலைத்த உள்ளம். உரிய யானை - மதம் பொருந்திய இந்திரன், கொடி - சிங்கம், தேர் - கருடன், வாத்தியம் - மாயா சக்தியுடைய கோடணை, ஊர்தி - கருடன், குடை - குன்று, படை - அமரர், ஐம்படைக் கலங்கள் - சங்கு, சக்கரம், தனு, வாள், கதை. குணம் - இராசசம். நாள் - ஓணம். உறவு முறை - சிவனுக்கு மைத்துனர் இவ்வழியே பிறருக்கு உறவுமுறை நோக்கப்படும் உடல் - நீலநிறம், மனைவி - பூமாது, திருமகள். 235

12. திருமால் — மக்கள் - பிரமன், மதன், சாமன், வள்ளி, தேவயானை. உணவு - மண், கறி, வெண்ணெய். பாயல் கொள்ளும் இடம் - கடல். உடை - பீதாம்பரம், அணியும் பூண் - கவுத்துவமணி, மந்திரம் - எட்டெழுத்துடைய ஓம் நமோநாராயணாய. அரிய நடனம் - அல்லியம். தொழில் - காத்தல் 236

13. பிரமன் — மலர் மாலை, மனை நதி, பிதிர் நாடு, நிசவனநகர், தாமரை மாலை, குதிரை, மாறுகின்ற யுகம், கற்பம் - யானை, கொடி - தூய அன்னம், தேர் - அன்னம் நிலைபெற்ற சிறந்த முழவு - ஒலிக்கின்ற துந்துமி, அன்னம் ஏறு, குடை - நீர், படை - குறள் படை, ஆயுதம் - தண்டு, குணம் - சாத்வீகம். நாள் - உரோகிணி, மேனி நிறம் - பொன்மை, மனைவி - வாணி. உணவு - நெய், கறி - பயறு. பயில் இடம் - மலர், ஆடை - பொன்னாடை, புரிநூலை அணியாகக் கொண்டவன். நான்கு வேதத்தை எழுத்தாகக் கொண்டவன், பிரமரி நடனத்தையும் படைத்து ஆக்குதலை தொழிலாகவும், நான்கு முகத்தையும் பத்து கரத்தையும் எட்டு விழிகளையும் கொண்டவன்.

14. இந்திரன் — மலை-பசுமலை, நதி-மந்தாகினி, நாடு-விண். ஊர்-அமராவதி, பரி-உச்சைச் சிரவம். யானை-அயிராவதம், கொடி-இடை, தனம்-பெரிய தேர், பறைவகை-தூரியம், பெருமுழவு. ஏறும் ஊர்தி - கார், குடை-மேகம், படை-அமரர், படைக்கலம்-வச்சிராயுதம், குணம்-இராசசம், தாமசம். நட்சத்திரம்-அசுவதி, உறவு-திருமாலின் தம்பி, உடல் நிறம்-நீலம், மனைவி-இந்திராணி மற்றும் பிறர். பிள்ளை-சயந்தன், உணவு-அமுதம், நல்ல கறி. பயிலிடம்-வானுலகம், ஆடை-பொறுமை, தொழில்-யாகம் புரிதல். இவற்றோடு கற்பகம் முதலிய ஐந்துதருக்களுக்குத் தலைவனாகவும், ஒரு முகமும், இரு, கையும் ஆயிரம் கண்ணும் உடையவனாக விளங்குகின்றான். 238

மாளிகை - வசந்தம், மலர்மண்டபம் - சுதானம், மின்னல் - சாமரை, சிந்தாமணி படிக்கம், அளவற்ற நிதிகளைத் தாங்கும் குபேரன் அடைப்பைக்காரன்; மலரும் நவநிதி அடைக்காய். வேலைக்காரனாக காமதேனு, வாள் மலர், ஐந்து மரங்களின் பூக்களை அணையாக அடைபவன், ஆடலும் அணைத்தலும் உரிய மாதர், மதனனை வெல்லும் புலோமிசை, திலோத்தமை முதற்பேர், வீசுகின்ற வில் மழைவில், அதன் நாண் மழைத்தாரை. 246

| | | | |
|---|---|---|---|
| 15. | உபேந்திரன் | இந்திரனின் அணிகளைப் பெறுவான். மனைவி - பத்மவிலோசினி, குதிரை - பாடலம், யானை - மத்தம், கொடி - மின்னல், அழகிய மனைவி - சுந்தரி. இந்திரன் மகனாகிய சயந்தனுக்கு இவனும் தந்தை முறையினன். | 239 |
| 16. | மன்மதன் | மலை - தாரு, நாடு - தென்காமியம், நகர் - சவுசனியம், மாலை - மகிழம்பூவாலானது, தாவிச் செல்லும் குதிரை, கிளி, இருளே யானை, துள்ளும் மீன் கொடி. தேர் - தென்றல் காற்று, முழவு - அலைவீசும் கடல், ஊர்தி - இளமையுடைய புலி, குடை - திங்கள், படை - பெண்கள், அம்பு - அசோகு, குவளை, மா, தாமரை. குணம் - இராசதம், நாள் - மிருகசீரிடம், முறை - அரியின் வழித்தோன்றல், நிறம் - பசுமை, மனைவி - ரதி, உணவு - உலகின் மயலுற்ற மெல்லி யலாரின் ஆவிகள், கறி - மெல்லியலாரின் அழகு, ஆடை - வாகனம், நடம் - பேடிக்கூத்து, தொழில் - ஆணையும் பெண்ணையும் இணைத்தல், எல்லா இடமும் அவனுக்குரியது என்னும்படியாக ஊர்வான், இருகை, கண், தலையொன்று கொண்டவன் | 240 |
| | | காமனின் வில்: கரும்புவில், நாண்கயிறு வண்டு; வில்: கைம்மாலை; தூணி: நீலூமத்த மலர்; மண்டபம்: காமாங்க விலாசம்; பீடம்: இலவம்; அடைப்பைக்காரன்: தெய்வ இயல்புடைய வேனிலான்; வெற்றிலை: தேக்கின் மலர், மல்லிகை மலர். வெற்றிலையை மென்றுமிழும் காளாஞ்சி; சாமரை: கமுக மரத்தின் பூம்பாளை; வேத்தியர்: காவலாக அமைபவர்; தாளம்: காஞ்சி பண்; வாள்: மாமரத்தின் தளிர்; குயலின் இன்குரல்: எக்காள ஒலி; வைரமௌலி: விண்மீன். | 247 |
| 17. | சாமன் | மலை - சாதம், ஆறு - பனிநீர், நாடு - மலர்கள் பொருந்திய சாமம் நகர் - வினோதர் நகர், அணிவது - தாமரை, குதிரை, அன்னம், யானை - பகல், கொடி - மீனக் கொடி, தேர் - காற்று, முழவு - காற்று. ஊர்தி - காகம், பொய்யை மாற்றுகின்றதான குடை, கதிர், ஆண், அலி படைக்கலங்கள், எல்லாவகை மலர்கள், இராசச குணம், மதிக்குரிய நாள்மீன், தந்தையாகிய திருமாலின் வழியமையும் முறைகள், கார்காலத்திற்குரிய அணிகள். மனைவியர் - தேவமகளிர், உச்சி - உதயம், மாலை. உணவு - கறி, அமுது. ஆடை - அலை, பூணாக அணிவன - மலர், முகை. நடனம் - குளிர்ச்சி நிறைந்த தூக்கு, மற்றும் மதனின் செயல்களே சாமனுக்கும் உரியன. ஒருதலை; இருகை; கண்கள் ஐந்து, மன்மத வேளின் துணையாக அவனோடு சேர்ந்து இலங்கும் சாமனுக்கு இவை அணிகள். | |
| 18. | சிவன் முதல் மன்மதன் முடிய | இவர்கட்கு ஏற்கனவே சொன்னவற்றோடு இன்னும் சிலவும் உள. அவை தனு, நாண் பொருந்திய போர்வில், அணிகின்ற அம்பறாத் தூணி, அடைப்பைத் தொழில் புரிவோர், உடைவாள், எக்காளம், பொன்முடி. | 242 |
| 19. | விநாயகர், முருகன், அய்யனார், வைரவன், வீரபத்திரன் | தனு, நாண், அம்பறாத்தூணி, அடப்பை, காளாஞ்சி, சாமரை, வாள், காளம், கானம், புவியைக் காக்கும் குழை (பின்வரும் நான்கும் தந்தை பெற்ற பொருள்களின் நெறியின) கந்தரம், கந்தற்பம், பீடம், பீடாரிடம், விபுலை என்பன இடங்கள். பொருந்திய இலவம், மேற்கூறிய பெயர்கள் சார்ந்த கோட்டமாம் அடைப்பை கொடுப்பார் முறையே, சிங்கி, அரன், மாறதன், நளன், திருத்தி; காவலர் - இச்சுவா இடும்பின், அஞ்சன், நதன், அசிதன். | 245 |
| 20. | அருகன் | அம்புயம் ஊர்தி, கொடி அருள், அமரும் இடம் அசோகு, நான்கு முகமுடைமை தவிர மற்ற அணிகள் எல்லாம் கொன்றை அணிந்த சிவனை ஒக்கும். | 252 |
| 21. | புத்தன் | அமருமிடம் அரச மரம், படைத்தவள் காரணமாக மாயை மகன் எனப்படுவான். முன்னோர் அணி பொருந்தினவாகும். | 252 |
| 22. | கவுரி | வலிமையுடைய சிங்கம், நீலமலர், பாவை நடனம் | 253 |
| 23. | கலைமகள் | வெண்மை நிறத்தவள், வெண்மையான ஆடையினள் பூரானை ஊர்தியாகக் கொண்டவள். | 253 |
| | | கமண்டலம், பளிங்கு மாலை, நெருங்கிய ஞானம், புத்தகம் | 254 |

| | | | |
|---|---|---|---|
| | (வாணி) | எழுத்தாணி, ஓலைகளாலான ஏடு, தாமரை மலர் | 255 |
| 24. | சீதேவி | மலரைக் கையில் உடையவள் | 255 |
| 25. | உமை | சக்கர பாணி, பாசம், அங்குசம், கரும்பு வில் | 255 |
| 26. | இந்திராணி | கடையம் என்னும் நடம். | 256 |
| 27. | காளி | கரிய நிறத்தவள், சிங்கத்தை ஏறாகக் கொண்டவள், அலகையைக் கொடியாக உடையவள், எட்டு கரங்கள், மூன்று கண்கள், சூலம் ஏந்தியவள் | 256 |
| 28. | துர்க்கை | தங்குமிடம் பாலைவனம், மூன்று கண்கள், எட்டுக் கரங்கள் உடையவள், கலையினை ஊர்தியாகவும் அயில், வெட்டும் வாள், வளைந்த சூலம் என்பவற்றையும் உடையவள், திருமாலுக்குத் தங்கை. செய்த நடம் மரக்கால் | 256 |
| 29. | துர்க்கை | ஆனைத்தோல் உடை, பிற அணிகளாவன, உமைக்கு உரியன வற்றை ஒத்து அமையும். | 257 |
| 30. | முகடி (மூதேவி) | கழுதை ஊர்தி, நீலநிற மேனி, படையாக அமையும் வீட்டை விளங்கும்படி தூய்மைப்படுத்தும் விளக்குமாறு, எருக்கு மாலை, தலைவனாகத் துப்பிரன், காகக் கொடி, சிவனை மறந்தவரின் பொருட் செல்வம். உணவு, இருக்குமிடம் ஊருக்கு வெளியேயான குளத்தங்கரை | 258 |
| 31. | மரகதவள்ளி (தருமதேவதை) | இருப்பிடம் கமுக மரத்தின் கீழிடம், வடிவுடைய சூலாயுதமும் விடையும் உடையவள் | 260 |
| 32. | பலதேவன் | ஆயுதம் - கலப்பை. பனை கொடி, அரிக்கு மூத்தவன், உலக்கைக் கொடி, வெண் சங்கக் குழையை உடையவன். மச்சினி இரேவதியை கலந்து இன்புற்றவன். | 289 |
| 33. | பரசுராமர் | படை - மழு | 289 |
| 34. | அரசர் | திறையாகவும், பரிசாகவும் மற்றொரு மன்னனால் அளிக்கப்பெற்ற ஒளிபொருந்திய மணிகள், தெய்வத்தால் பெற்ற குற்றமற்ற அணிகள், போரில் பெற்றவை, சிங்கக் கொடி. | 301 |
| | அரசர் | சந்திரன், சூரியன் அக்கினி ஆகிய தோற்றங்களை உடைய மூன்று அரச குலம் அல்லாது, இமைத்தல் இல்லாத தேவர்களும், பிறரும் ஆதரித்தவர்களாகிய மன்னர்கள் அந்தந்தக் கடவுளர் கொண்ட அணி களையே கொள்வர். | 302 |
| 35. | வணிகர் | சீரகமணி மாலை, திரளான அணிகள், ஆரமாகச் சந்திரஹாரம், மார்பில் நூல், கரிய குடுமி, புகழோடு விளங்கல் | 304 |
| 36. | வேளாளர் | மேழிக் கொடியினர், குவளை மலர் மாலையர், மற்றும் மன்னர்க்குரிய அணிகளைப் பெறுவர். | 306 |
| 37. | கவிஞர் | எச்சாதியினரோ, அச்சாதிக்குரிய மாலை, அவர் பெற்ற விருது பெறுவார். கலைமகள் சேர்ந்த புலவருக்கு வாகனம் பூஞ்சிவிகை. பன்றி, வேழம் என்பன கொடி, அரசன் பெறுகின்ற அணிகள் பெறுவர். | - 391 |
| 38. | ஊர்வசி (நாராயண முனிவரின் தொடையில் பிறந்தவள்) | காந்தள் மலர் | 453 |
| 39. | சுதை, சுவாகா (அக்கினியின் மனைவியர்) | முத்துமாலை | ,, |
| 40. | யமன் முதலிய ஐவரின் மனைவியர் | பொற்குயில், மான், மீன், நிலவு, இரண்டு நிதிகள் | ,, |

| | | | |
|---|---|---|---|
| 41. | இந்திரனின் மனைவி | கற்பகப்பூ மாலை | ,, |
| 42. | சயந்தன் மனைவி | பவளம் பொருந்திய மாலை | ,, |
| 43. | பரை | பச்சைக்கிளி | ,, |
| 44. | வாணி | அன்னம் | ,, |
| 45. | மன்மதன் மனைவி | பசிய துளசிமாலை | ,, |
| 46. | தருமிமாது | புன்னை மொட்டு | ,, |
| 47. | அரம்பையர் | பொன்யாழ் தாங்குவர் | ,, |
| 48. | அசுரப் பெண்டிர் | மல்லிகை மலர் | 454 |

குறிப்பு: இங்குக் கூறப்படாத ஆதித்தர் பன்னிருவர், உருத்திராள், அட்ட வசுக்கள், இருவர் மருத்துவர், ஆகியோருக்கு அறிஞர் சொன்ன அணிகளைக் கூறவேண்டும். சாதி மரபில் வேறு உண்டாயின் கூறலாம். குலநிலவியப்பியலில் பிறந்தவர்கள் வருவாரேல் அவருக்கு அவ்வறிஞர் கூறுகின்ற அணிகளைக் கூறலாம். கொடி முதலியன இல்லாதவராயின் சாதிக்குரிய பெருமை, பிறவற்றைக் கொண்டு இசைகின்ற கொடியும் வாகனமும் கூறுதல் வேண்டும். *(பிர.திர. 450)*

## பெண்டிரின் இயல்பு

சூதாடல், சதுரங்கம் விளையாடல், பசுப்பாண்டி என்னும் பல்லாங்குழி விளையாடல் ஆகியன செய்வார்கள் தோழியுடன்; பொருந்திய களவுநெறியில் போகும் வன்மையுடையவர்கள். (களவொழுக்கத்தில் இயங்குதல்) தன் நாட்டினையும் நகரையும் விட்டுத் தலைவன் நகருக்குப் போகும் பண்புடையவர்கள். களவு, திருமணம் வழிவரும் கற்பு நெறிகளிலும் போகும் ஆற்றல் உடையவர்கள்; வண்டு, ஞிமிறு போன்ற இசையினர் மதுகரம், கரும்பு, தும்பி போன்ற ஒலியும் கொள்வார்கள்; இனிய விளரி இசைப்பாட்டும் உடையவர்கள் *(பிர.திர. 188)*

## பெண்டிரின் பண்பு நலன்கள்

அன்பு செய்வதில் தாய், பணி புரிவதில் அடிமை, அழகு நிலையில் தாமரையில் வீற்றிருக்கும் திருமகள், கலவி இன்பத்தில் விலைமகள் போன்றும் அமைவது *(பிர.திர. 199)*

## பெண்டிருக்கான உவமைகள்

► அட்டவணை 13.

## பெண்பால்

உயர்திணை மூவகைப் பால்களுள் ஒன்று *(பன்.பா. 25; சித.பா. 20)*

## பெண்பால் உவமைகள்

மானின் கன்று, மயிலின் பிள்ளை, தேனின் தேறல், கரும்பின் இளமுலை, கல்லாக் கிள்ளை, இளந்தளிர் வல்லி *(பன்.பா. 115)*

## பெண்பால் எழுத்துகள்

1. (உயிர்) ஆ, ஈ, ஊ, ஏ, ஓ, ஐ, ஔ உயிர்மெய் நெடில் 126 - கா, கீ, கூ, கே, கோ, கை, கௌ, ஙா, ஙீ, ஙூ, ஙே, ஙோ, ஙை, ஙௌ, சா, சீ, சூ, சே, சோ, சை, சௌ, ஞா, ஞூ ஞே, ஞை, ஞோ, ஞௌ, டா, டீ, டூ, டே, டை, டோ, டௌ, ணா, ணீ, ணூ, ணே, ணை, ணோ, ணௌ, தா, தீ, தூ, தே, தை, தோ, தௌ, நா, நீ, நூ, நே, நை, நோ, நௌ, பா, பீ, பூ, பே, பை, போ, பௌ, மா, மீ, மூ, மே, மை, மோ, மௌ, யா, யீ, யூ, யே, யை, யோ, யௌ, ரா, ரீ, ரூ, ரே, ரை, ரோ, ரௌ, லா, லீ, லூ, லே, லை, லோ, லௌ, வா, வீ, வூ, வே, வை, வோ, வௌ, ழா, ழீ, ழூ, ழே, ழை, ழோ, ழௌ, ளா, ளீ, ளூ, ளே, ளை, ளோ, ளௌ, றா, றீ, றூ, றே, றை, றோ, றௌ, னா, னீ, னூ, னே, னை, னோ, னௌ *(வெண்.பா. 6; பன்.பா. 27; நவநீ.பா. 7; சித.பா. 20; தொ.விள 289; சுவாமி. 174; மு.வீ. 1031; பொரு.விள. 21)*
2. நெடில் ஏழு *(இல.விள. 773)*
3. உயிர் 4, உயிர்மெய்யில் நெடில் 73 என்கிறது *(பிர.திர. 124)*

## பெண்பால் பிள்ளைத்தமிழ்

► பிள்ளைத்தமிழ்

## பெண்பால் மரபுப் பெயர்கள்

பேடை, பெடை, பெட்டை, பெண், மூடு, நாகு, கடமை, அளகு, மந்தி, பாட்டி, பிணை , பிணவு, பிடி *(இல.விள. 917)*

## பெண்போகம்

முப்பத்திரண்டு அறங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 71)*

பெதும்பை

1. மகளிரின் ஏழு பருவங்களுள் ஒன்று *(பன்.பா. 135; வெண்.பா. 48; நவநீ.பா. 46; பிர.மர. 14; சித.பா. 37; இல.விள. 860; பிர.திர. 198; தொ.விள. 260)*
2. எட்டு முதல் பதினொன்று (4 வருடம்) வயது வரையிலானது *(வெண்.பா. 48; பிர.மர. 14, சித.பா. 37; இல.விள. 860)*
3. எட்டு முதல் பத்து வரை என்று கூறுகிறது *(நவநீ.பா. 46)*

பெயர்

தசாங்கம், சின்னப்பூவில் பாடப்படும் பத்துப் பொருள்களுள் ஒன்று *(பன்.பா. 139; வெண்.பா. 42; நவநீ.பா. 24; சித.பா. 32; தொ.விள. 263; பிர.திர. 15)*

பெயர் இன்னிசை

1. பாட்டுடைத் தலைவன் பெயரினைத் தொண்ணூறு அல்லது எழுபது அல்லது ஐம்பது இன்னிசை வெண்பாவில் பாடும் இலக்கியம் *(இல.விள. 825; மு.வீ. 1092; பிர.தீபிகை. 22)*
2. எண்ணிக்கை குறிப்பிடவில்லை *(பிர.தீபம். 62)*
3. ► இன்னிசைத் தொகை

பெயர் நேரிசை

1. பாட்டுடைத் தலைவன் பெயரினைத் தொண்ணூறு அல்லது எழுபது அல்லது ஐம்பது நேரிசை வெண்பாவில் பாடும் இலக்கியம் *(இல.விள. 830; மு.வீ. 1094, பிர.தீபிகை. 23)*
2. எண்ணிக்கை குறிப்பிடவில்லை *(பிர.தீபம். 63)*
3. ► இன்னிசைத் தொகை

பெயர்ப் பொருத்தம்

இது பாட்டுடைத் தலைவனின் இயற்பெயருக்கும் சிறப்புப் பெயருக்கும் பார்க்கப்படும் பொருத்தம். பன்னிரு பாட்டியல் மட்டுமே இப் பொருத்தத்தைப் பற்றிக் கூறுகிறது. குலப்பெயர், குடிப்பெயர், கோத்திரப்பெயர், குணப்பெயர், மணப்பெயர், ஆணைப்பெயர், சிறப்புப்பெயர், இயற்பெயர் என்னும் எண்வகைப் பெயர்களையும், இவற்றின் கீழ் வரும் பெயர்களையும் பன்னிரு பாட்டியல் கூறுகிறது. *(பன்.பா. 74-84)*

பெரியபாணாற்றுப்படை

பெருங்காப்பியங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 45)*

பெருங்காப்பியம்

1. 1. முருகாற்றுப்படை, 2. பொருநராற்றுப்படை, 3. சிறுபாணாற்றுப்படை, 4. மதுரைக்காஞ்சி, 5. பெரியபாணாற்றுப்படை, 6. முல்லைப்பாட்டு, 7. நெடுநல்வாடை, 8. கலைக்கோட்டுத்தண்டு, 9. மலைபடுங்கடாம், 10. பட்டினப்பாட்டு, 11. சிந்தாமணி, 12. குறிஞ்சிப்பாட்டு *(பிர.தீபிகை. 45)*
2. இறை வணக்கம், அறம், பொருள், இன்பம், வீடு உரைத்தல், கடல் வருணனை, சூரிய சந்திர வருணனை, கார் முதலான பருவங்களுள் ஒன்றைக் கூறுதல், தன்னிகரில்லாத தலைவனைப் பற்றிக் கூறுதல், சூரிய சந்திர உதயம், வெற்றி பெற்றோரின் போர்ச் செயல்பற்றி உரைத்தல், முடிசூடல், புதல்வர் பேறு, பொழில், புனலாடல், மந்திரம், தூது, போரெடுத்துச் செல்லுதல், போர்க்களச் செயல், வெற்றி, சந்து, செலவு, இலக்கியச் சுவை, பாவம், பொருத்தமான பா, உரை, மொழி, என்பவற்றைக் கொண்டு இலம்பகம், சருக்கம், பரிச்சேதம் என்னும் உட்பிரிவுகளை உடையதாய் இயற்றப்பெறுவது பெருங்காப்பியம் *(வெண்.பா. 62-64: நவநீ.பா. 62-64; பிர.மர. 20; சித.பா. 42; இல.விள. 854; தொ.விள. 256; சுவாமி 163; பிர.தீபிகை. 33)*

பெருஞ்சித்திரனார்

சங்கப் புலவர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை. 86)*

பெருமகிழ்ச்சி மாலை

பெண்களின் அழகு, குணம், ஆக்கம், சிறப்பு முதலியவற்றைப் பாடும் இலக்கியம் *(பிர.மர. 13; மு.வீ. 1058; பிர.தீபிகை. 12; பிர.தீபம். 32)*

பெருமங்கலம்

சிறையிடுதல் போன்ற சினத்தொழில்களை விட்டுச் சிறைவீடு செய்தல் முதலிய நல்ல தொழில்கள் நிகழக் காரணமான பிறந்த நாளில் நிகழும் வெள்ளணியைக் கூறும் இலக்கியம் *(பிர.தீபிகை. 33; பிர.தீபம். 90)*

## பே

பே

1. பெண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 27: வெண்.பா 6; நவநீ.பா 7; சித.பா. 20; தொ.விள. 289; பிர.திர. 124; சுவாமி 174; மு.வீ. 1031; பொரு.விள. 21)*
2. சித்திரை நாளுக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 47; வெண்.பா. 15; நவநீ.பா. 17; சித.பா. 23; இல.விள. 792: தொ.விள. 292; பிர.திர. 144; மு.வீ. 1034; பொரு.விள. 56)*
3. பார் என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 8)*; பார், தரவு என்னும் மங்கலச் சொற்களுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 3)*

**பேகடை**

▶ பியாகடை *(பிர.தீபிகை. 53, உரை)*

**பேடை**

பெண்பால் மரபுப் பெயர்களுள் ஒன்று *(இல.விள. 917)*; ஒட்டகம், குதிரை, மரை, புள் என்பவற்றின் பெண்பால் பெயர் *(இல.விள. 917 உரை)*

**பேதம்**

1. சிவாகமம் இருபத்தெட்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 60)*
2. பதினாறு சைவங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 62)*

**பேதை**

1. மகளிரின் ஏழு பருவங்களுள் ஒன்று *(பன்.பா. 135; வெண்.பா. 48; நவநீ.பா. 46; பிர.மர. 14; சித.பா. 37; இல.விள. 859; பிர.திர. 198; தொ.விள. 260)*
2. ஐந்து முதல் ஏழு வயது வரையிலானது (3 வருடம்) *(வெண்.பா. 48; நவநீ.பா. 46; பிர.மர. 14; சித.பா. 37; இல.விள. 859)*

**பேதையர்க்கான உவமைகள்**

மானின் கன்று, மயிலின் பிள்ளை, தேனின் அமுதம், தெள்ளாநறவம், கற்பகக்கன்று, நீர்வல்லி, கிள்ளை, கரும்பின் முளை *(நவநீ.பா. 85)*

**பேய்**

காளியின் வாகனம் *(பன்.பா. 109, உரை)*

**பேய்கள் காளியை ஏத்துதல்**

பரணியின் உறுப்புகளுள் ஒன்று *(பன்.பா. 143; வெண்.பா. 61; நவநீ.பா. 57-61; பிர.மர. 19; சித.பா. 41; பிர.திர. 45,46; சுவாமி. 171; மு.வீ. 1040; பிர.தீபிகை. 6)*

**பேரரசருக்குரிய கொடி மாலை**

1. பேரரசருக்குரிய கொடி, மாலை வருமாறு:

| | | |
|---|---|---|
| அரசன் | கொடி | மாலை |
| தருமன் | முரசு | குவளை |
| துரியோதனன் | பாம்பு | வலம்புரி |
| கர்ணன் | கவசக்கொடி | |
| வீமன் | சிங்கம் | |
| அர்ச்சுனன் | குரங்கு (வில், தண்டு - ஆயுதம்) | |

2. மேற்குறிப்பிட்ட அரசர்களுள் அர்ச்சுனனுக்கு மட்டும் ஆயுதம் - வில் அதாவது காண்டீபம் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. *(பிர.திர. 309)*

**பேரிளம்பெண்**

1. மகளிரின் ஏழு பருவங்களுள் ஒன்று *(பன்.பா. 135; வெண்.பா. 48; நவநீ.பா. 46; பிர மர. 14; சித.பா. 37; இல.விள. 863; தொ.விள. 260)*
2. முப்பத்திரண்டு முதல் நாற்பது வயது வரையிலானது (9 வருடம்) *(வெண்.பா 48; சித.பா. 37; இல.விள 863)*
3. முப்பத்தொன்று முதல் நாற்பது வயது வரையிலானது என இரு பாட்டியல்கள் குறிப்பிடுகின்றன *(நவநீ.பா. 46; பிர.மர. 14)*

**பேரின்பம்**

▶ கவிஞர் பாடும் இன்பம் *(பிர.திர. 414)*

## பை

**பை**

1. பெண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 27; வெண்.பா 6; நவநீ பா 7; சித.பா. 20; தொ.விள. 289; சுவாமி. 174; மு.வீ. 1031; பொரு.விள. 21)*
2. சித்திரை நாளுக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 47; வெண்.பா. 15; நவநீ.பா. 17; சித.பா. 23; இல.விள. 792; தொ.விள. 292; பிர.திர. 144; மு.வீ. 1034; பொரு.விள. 56)*
3. நீர் என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 6)*

**பைசந்தி**

வாக்கு நான்கனுள் ஒன்று *(பிர.திர. 380)*

**பைசாசம்**

எண்வகை மணங்களுள் ஒன்று; நீங்காத மயக்கம் கொண்டவளின் குன்றொத்த நகில் புணர்ந்தும், கூடாது அழித்தும் துயிலும்போது ஆடை கவர்ந்து கூடுவதும் பைசாசம் *(பிர.திர. 359; பிர.தீபிகை. 74)*

**பைபீல வாதம்**

அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 72)*

# பொ

## பொ

1. ஆண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 26; வெண்.பா 6; நவநீ.பா 7; சித.பா. 20; தொ.விள. 289; சுவாமி 174, மு.வீ. 1031; பொரு.விள. 20)*
2. சித்திரை நாளுக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 47; வெண்.பா. 15; நவநீ.பா. 17; சித.பா. 23; இல.விள. 792; தொ.விள. 292; பிர.திர. 144; மு.வீ. 1034; பொரு.விள. 56)*
3. பார் என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 8)*

## பொங்குகதிர்

ஆண்பால் பிள்ளைப்பாட்டுக்குரிய உவமைகளுள் ஒன்று *(பன்.பா. 114)*

## பொத்தியார்

சங்கப் புலவர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை. 85)*

## பொதுச்சீர்

அசைச்சீர். வெண்பாவின் ஈற்றில் தனியே வரும் நேர் நிரை. *(பன்.பா. 55)*

## பொதுப்பாயிரம்

1. ஆசிரியர் இயல்பு, மாணாக்கனின் ஏற்கும் அளவு, நல்லவை, தீயவை பற்றிய விளக்கம், போதிக்கும் விதம் ஆகியவை இடம்பெற்றிருப்பது *(வெண்.பா. 90)*
2. இவற்றுள் நல்லவை, தீயவை கூறாது முன்கூறிய இரண்டுடன் ஆசிரியர் உரைக்கும் முறை, மாணாக்கர் கேட்கும் முறை ஆகியவற்றை நவநீதப் பாட்டியல் கூறும் *(நவநீ.பா. 69)*
3. எல்லா நூலுக்கும் உரைக்கப்படுவது *(இல.விள. 889)*

## பொந்திலியன்

குலப் பெயர்களுள் ஒன்று *(பிர.திர. 362)*

## பொய்க்கால்

ஏகாங்கிரி என்னும் இலக்கிய வகையினின்றும் வேறுபட்டு, சிறந்த துதியை முதலில் கூறி, அதனுடன் மோகினியாள் வெண்ணிலவு, அழகிய வாடை ஆகியவற்றையும் முதலில் கூறி, பின்பு தன் காதலைச் சொல்லல். தலைவனைப் போற்றிக் கூறும் நொண்டியிடம் அதனைக் கூற அவன் வந்து கூறுதல்; தலைவன் குலம் விளக்க, நாட்டியம், அம்மானை, வருசிந்துகளில் மோகினியின் மயலைக் கூறிப் புகழ, கேட்ட இறைவன் விரும்பி வந்து அவளை அணைதல் ஆகியவற்றைப் பாடும் இலக்கியவகை. தோழி மொழிவது பொய்க்கால் எனும் வகைக்குப் பொருந்தாது *(பிர.திர. 478)*

## பொய்ம்மொழி அலங்காரம்

பொய்ம்மொழியால் (புகழாப் புகழ்ச்சி) போற்றும் வகையில் கலிவெண்பாவால் அமையும் இலக்கியம் *(பிர.திர. 17)*

## பொருத்தங்கள்

► முதன்மொழி *(சித.பா. 17, இல.விள. 770; தொ.விள. 284; பிர.திர. 110; சுவாமி. 173)*

## பொருநராற்றுப்படை

1. ஆற்றுப்படை வகைகளுள் ஒன்று *(வெண்.பா. 52, உரை; இல.விள. 873, பு.19; தொ.விள. 266; பிர.திர. 27)*
2. பெருங்காப்பியங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 45)*

## பொருள் இடையிடுதல்

முப்பத்திரண்டு உத்திகளுள் ஒன்று; தான் கூறும் பொருளுக்கிடையே இயைபுடைய வேறொரு பொருளை இணைத்துக் கூறுதலும், சொல்லப்படும் பொருளுக்குத் தொடர்புடைய ஒன்றினை அவ்விடத்தே கூறாது பிறிதொரு இடத்தில் கூறுதலும் போல்வன *(இல.விள. 898)*

## பொருளானந்தம்

ஆனந்தக்குற்றங்களுள் ஒன்று; பாட்டுடைத் தலைவனுக்கு ஏதம் வருமாறு பாடப்படுவது. (இறைச்சிப் பொருளை ஊறுபடச் சொல்லின் அதுவும் குற்றம்)

(எ-டு) தன் வாழ்க்கைக்குப் பாதுகாவல் தேடிக் கொள்ளாத சாவை விரும்புவானாகிய, குயவன் மரபினராகிய குயக்கோடன் *(இல.விள. 887)*

## பொருளிலமொழிதல்

பத்துவகைக் குற்றங்களுள் ஒன்று; பொருள் இல்லாதவற்றைக் கூறுதல் *(இல.விள. 897)*

## பொருளொடு புணர்ந்த நகைமொழி

உரை வகைகளுள் ஒன்று; பொருள் பொய் எனப்படாது, உலகியலாகி நகை தோற்றுவிக்கும் முறையில் இருத்தல் *(இல.விள. 903)*

**பொருளொடு புணராப் பொய்மொழி**

உரை வகைகளுள் ஒன்று; பொருளின்றிப் பொய்படத் தொடரும் முறை *(இல.விள. 903)*

**பொழிப்பு அளபெடை**

1. முப்பத்தைந்து தொடை வகைகளுள் ஒன்று *(சித.பா. 6)*
2. முதல், மூன்றாம் சீரில் இடம்பெறும் அளபெடை *(சித.பா. 6)*

(எ-டு) பூஉக் குவளைப் போஒ தருந்தி
*(மேற்: யா.கல விருத்தியுரை நூ. 41:2, யா.காரிகை 20, உரை; சித.பா.ப. 24)*

**பொழிப்பு இயைபு**

1. முப்பத்தைந்து தொடை வகைகளுள் ஒன்று *(சித.பா. 6)*
2. முதல், மூன்றாம் சீரில் உள்ள இறுதி எழுத்து ஒன்றிவரும் இயைபு *(சித.பா. 6)*

(எ-டு) மற்றதன் அயலே முத்துறழ் மணலே
*(மேற்: யா.கல விருத்தியுரை நூ. 40:2; யா.காரிகை 20, உரை; சித.பா.ப. 23)*

**பொழிப்பு எதுகை**

1. முப்பத்தைந்து தொடை வகைகளுள் ஒன்று *(சித.பா. 6)*
2. முதல், மூன்றாம் சீரில் இடம்பெறும் எதுகை *(சித.பா. 6)*

(எ-டு) பன்னருங் கோங்கின் நன்னலங் கவற்றி
*(மேற்: யா.கல விருத்தியுரை நூ. 36:2; யா.காரிகை 20, உரை; சித.பா.ப. 23)*

**பொழிப்பு முரண்**

1. முப்பத்தைந்து தொடை வகைகளுள் ஒன்று *(சித.பா. 6)*
2. முதல், மூன்றாம் சீரில் இடம்பெறும் முரண் *(சித.பா. 6)*

(எ-டு) சுருங்கிய நுசப்பிற் பெருகு வடந்தாங்கி
*(மேற்: யா.கல விருத்தியுரை நூ. 38:2; யா.காரிகை 20, உரை; சித.பா.ப. 24)*

**பொழிப்பு மோனை**

1. முப்பத்தைந்து தொடை வகைகளுள் ஒன்று *(சித.பா. 6)*
2. முதல், மூன்றாம் சீரில் இடம்பெறும் மோனை *(சித.பா. 6)*

(எ-டு) அரிற்குரற் கிண்கிணி அரற்றும் சீறடி
*(மேற்: யா.கல விருத்தியுரை நூ. 35:2; யா.காரிகை 20, உரை; சித.பா.ப. 22)*

**பொழிப்புரை**

உரை வகைகளுள் ஒன்று *(இல.விள. 903, உரை)*

**பொன்**

1. மங்கலச் சொற்களுள் ஒன்று *(பன்.பா. 68; வெண்.பா. 2; நவநீ.பா. 2; வரையறு. பா. 5; சித.பா. 18; இல விள. 771; தொ.விள. 285, பிர.திர. 111; சுவாமி. 173; மு.வீ. 1027; பொரு.விள. 3)*
2. கலிப்பாவிற்கு உரிய நிறம் *(பன்.பா. 94; வெண்.பா. 69; பிர.மர 25; இல.விள. 879; தொ.விள. 297; மு.வீ. 1014, பிர.திர. 417)*

**பொன்முடியார்**

சங்கப் புலவர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை. 85)*

## போ

**போ**

1. பெண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 27; வெண்.பா 6; நவநீ.பா. 7; சித.பா. 20; தொ.விள. 289; சுவாமி. 174; மு.வீ. 1031; பொரு.விள. 21)*
2. சித்திரை நாளுக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 47; வெண்.பா 15; நவநீ.பா. 17; சித.பா. 23; இல.விள. 792; தொ.விள. 292; பிர.திர. 144; மு.வீ. 1034; பொரு.விள. 56)*
3. பார் என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 8)*

**போடம்**

ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று *(பிர.திர. 500-502; பிர.தீபிகை. 99)*

**போத்து**

ஆண்பால் மரபுப் பெயர்களுள் ஒன்று *(இல.விள. 916)*; பெற்றம், எருமை, புலி, மரை, புல்வாய், மயில், எழாஅல், மற்றும் நீர்வாழ் சாதியின் அறுவகைப் பிறப்புகளின் ஆண்பாலைக் குறிக்கும் *(இல.விள. 916 உரை)*

**போதாய நீயம்**

முப்பத்திரண்டு உபநிடதங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 59)*

**போர்க்களம் காணுதல்**

பரணியின் உறுப்புகளுள் ஒன்று *(பன்.பா. 143; வெண்.பா. 61; நவநீ.பா. 57-61; தொ.விள. 259; பிர.திர. 45, 46)*

**போர்க்கெழுவஞ்சி**

▶ வஞ்சி மாலை *(மு.வீ. 1071; பிர.தீபிகை. 15; பிர.தீபம். 57)*

## பௌ

**பௌ**

1. பெண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 27; வெண்.பா 6; நவநீ.பா 7; சித.பா. 20; தொ.விள. 289; சுவாமி. 174; மு.வீ. 1031; பொரு.விள. 21)*
2. சித்திரை நாளுக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 47; வெண்.பா. 15; நவநீ.பா. 17; சித.பா. 23; இல.விள. 792, தொ.விள. 292; பிர.திர. 144; மு.வீ. 1034; பொரு.விள. 56)*

## ம்

**ம்**

அலி எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 28; வெண்.பா. 6; நவநீ.பா. 7; சித.பா. 20; தொ.விள. 289; இல.விள. 773; பிர.திர. 125; சுவாமி. 174; மு.வீ. 1031; பொரு.விள. 22)*

## ம

**ம**

1. சூரியன் படைத்த எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 4; வெண்.பா. 10; நவநீ.பா. 11; சித.பா. 21; இல.விள 778; சுவாமி 175)*
2. அரச சாதிக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 6; வெண்.பா. 9; நவநீ.பா. 12; சித.பா. 21; இல.விள. 775; தொ.விள 291; சுவாமி. 175; மு.வீ. 1033; பொரு.விள. 34)*
3. வேளாள சாதிக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.திர. 135)*
4. மக்கள் கதிக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 15; வெண்.பா. 18; நவநீ.பா. 20; சித.பா. 24; இல.விள. 798; தொ.விள. 293; பிர.திர. 152; சுவாமி. 176; மு.வீ. 1036)*
5. அமுத எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 20, வெண்.பா. 7; நவநீ.பா. 10; சித.பா. 20; இல.விள. 779; தொ.விள. 290; பிர.திர. 128; சுவாமி 175, மு.வீ. 1032; பொரு.விள. 27)*
6. ஆண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 26; வெண்.பா. 6; நவநீ.பா. 7; சித.பா. 20; தொ.விள. 289, பிர.திர. 124; சுவாமி. 174; மு.வீ. 1031; பொரு.விள. 20)*
7. சோதி நாளுக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 48; வெண்.பா. 15; நவநீ.பா. 17; சித.பா. 23, தொ.விள. 292; இல.விள. 793; பிர.திர. 144; மு.வீ. 1034; பொரு.விள. 57)*
8. பூ என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 3)*

**மக்கள்**

1. நான்கு கதிகளுள் ஒன்று *(இந்.காளி. 2; பன்.பா. 13)*
2. அறுவகை அறிவுடையவர்கள் *(இல.விள. 913)*

**மக்கள் கதிக்குரிய எழுத்துகள்**

ஆ, ஈ, ஊ, ஏ, ங, ஞ, ண, ந, ம *(பன்.பா. 15; வெண்.பா. 18; நவநீ.பா. 20; சித.பா. 24; இல.விள. 798, தொ.விள. 293; பிர.திர. 152; சுவாமி. 176; மு.வீ. 1036)*; இவற்றுள் ங, ஞ, ட என்பன மொழிக்கு முதலில் வாராது (இல.விள. 798, உரை)

**மகணம்**

▶ நிலக் கணம் *(சித.பா. 25; பிர.திர. 154; சுவாமி. 177)*

**மகதந்திரம்**

சிற்பநூல் முப்பத்திரண்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 61)*

**மகதம்**

ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று *(பிர.திர. 500-502; பிர.தீபிகை. 99)*

**மக நாளுக்குரிய எழுத்துகள்**

ம,மா,மி,மீ,மு,மூ *(பன்.பா. 48; வெண்.பா. 15; நவநீ.பா. 17; சித.பா. 23; இல.விள. 793; தொ.விள. 292; மு.வீ. 1034; பிர.திர. 144; பொரு.விள. 57)*

**மகப்பால்**

முப்பத்திரண்டு அறங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 71)*

### மகப்பெறுவித்தல்
முப்பத்திரண்டு அறங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 71)*

### மகம்
ஆசிரியப் பாவிற்கு உரிய நாள்களுள் ஒன்று *(பன்.பா. 92; வெண்.பா. 70; பிர.மர. 25; இல.விள. 881; தொ.விள. 294; மு.வீ. 1013; பிர.திர. 417)*

### மகரக் குறுக்கம்
நஞ்சு எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 24; வெண்.பா. 8; நவநீ.பா. 9; சித.பா. 20; இல.விள. 780; தொ.விள. 290; மு.வீ. 1032; சுவாமி. 175; பிர.திர. 130; பொரு.விள. 28)*

### மகரம்
1. அரசர்க்குரிய இருபத்தொரு சின்னங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 88)*
2. வஞ்சிப்பாவிற்கு உரிய இராசிகளுள் ஒன்று *(பன்.பா. 94; வெண்.பா. 70; பிர.மர. 26; இல.விள. 882; மு.வீ. 1015)*

### மகவு
இளமை மரபுப்பெயர்களுள் ஒன்று *(இல.விள. 910)*; கோடுவாழ் விலங்கு, மக்கள் என்பவற்றின் இளமைப் பெயர் *(இல விள. 910 உரை)*

### மகளிர்
1. *மயலுற்ற மகளிரின் துன்பத்திற்குக் காரணமானவை*
அன்றில், அன்னை, இன்னிசை வீணை, தென்றல், கன்றுகளின் கழுத்து மணி ஓசை, குயில், கடல், ஒளிவிடும் நிலவு, மதன், அலர் தூற்றுவார், தலைவனைச் சேராத தன் மார்பு, ஆற்றாமையால் வருந்தும் நெஞ்சு *(பிர.திர. 196)*
2. *மயலுற்ற மகளிர் நிலை*
அடிக்கடி சிரித்தல், மலரணிந்த கூந்தலைக் கலைத்தல், உடைகளை மாற்றி மாற்றி அணிதல், உயர்ந்து நடத்தல், பேச்சில் கடுமை கொள்ளுதல், கடைக்கண் பார்வை எனும் வேலினை விடுத்தல், மயங்கிச் சுழல்தல், பிரிவாற்றாமையால் துடித்தல், மெல்லிய இடை தள்ளாடும் படியும், நகில்கள் அசையும்படியும் வருகின்ற காதலரின் தோளை அணைத்தல், முத்தம் அளித்தல், தலைவரைத் தடுத்தல், பின்பு விடுதல், வாயிதழைச் சுவைக்க அவர்க்கு அளித்தல். கொஞ்சுதல், சிரித்தல், மடியில் விழுதல், விம்முதல், சினம் தணிதல், கோபமுறுதல், உருகுதல், அச்சமுறுதல், விரைவாகத் தூது செல்பவையாகிய எகினம் முதலிய பத்தினைப் போற்றுதல்.
பத்து என்பதால் இவை யொழியப் பிறவற்றைப் பெருமையுடையவர் கூறமாட்டார்கள். சொல்லால் கூறுவதற்கு அப்பாற்பட்ட வேகமுடையதாக மனத்தின் இயல்பு மிகுவதால் அவை கூறப்பட்டது. அய்ந்திரத்தில் அவற்றை வச்சிராயுதமுடைய இந்திரன் உரைத்தான். (ஒழிந்தவை சொலார் எனப்பட்டதால் எகினம் முதலிய பத்து என்ற கருத்தைக் கொள்ளலாம் அல்லது மயலுற்ற மாதரின் பிற செயல்கள் பெருமையுடையோரால் கூறப்படா எனக் கொள்ளலாம் *(பிர.திர. 194, 197)*
3. *மயலுற்ற மாதர் விட்டு விலக்குவன*
அணிந்த கச்சினை நீக்குவர், மாலை அணியார், கண்ணிற்கு மை தீட்டார், நெற்றியில் திலகம் இடார், கூந்தலை முடியார், அணிகள் அணியார், கழங்கு, அம்மானை முதலியன ஆடார், சுனையில் நீராடார், இசைக் கருவிகளை மீட்டார், வளர்ப்புக் கிளியை கையில் எடார், வண்டு போன்று இசை எழுப்பார், வளர்ப்புப் பறவையான பூவையை விரும்பார், கண்களில் உறக்கம் கொள்ளார், பாராட்டத்தக்க தோழியர்க்குப் பணிகள் சொல்லார். உணவினை நஞ்சென்பார், மலர் மெத்தையை நெருஞ்சிமலர் போன்றது என்பர். சந்தனம் பூசிய மார்பினரான தலைவர் பிரிந்தால் எங்கள் உயிர் உடலில் நிலைக்காது என்பர். தலைவனை மிகுதியாகத் தேடுவர்; குறிகேட்பர்; கவிதை புனைவர் *(பிர.திர. 193)*
4. *மயலுற்ற மாதரின் பண்பும் செயலும்*
அன்னம், கிளி, குயில் என்னும் தலைவியின் வளர்ப்புகள் நெருங்கி வந்தாலும், அவை பாலும், சோறும், உண்டாலும் அருகே தோழியர் இருப்பினும் அவற்றால் மகிழாது, தலைவர் வரவில்லையே எனும் ஏக்கத்தை அப்பறவையிடமும் தோழியரிடமும் கூறுவர். தூது விடுப்பர்; தலைவனின் ஊரைச் சென்று அடைவதைக் குறிக்கோளாகக் கொண்டு கைவளை நெகிழ, நாணம் இழக்கத் தெருவழியாகச் செல்வர் *(பிர.திர. 195)*
*பிரிவாற்றாமைக்குரிய குறிகள்*
ஆடை தளர்தல், வளையல், பொன் அணிகள், நாணம் ஆகியவற்றைத் துறத்தல், பசலை படர்தல், மடல் ஏறுவேன் என்றுரைத்தல், கள்ளுண்டார்போல் இருத்தல், கூடல் இழைத்துப் பார்த்தல், கண்களில் நீர்வழிய இருத்தல், மலர் பரப்பிய பஞ்சணையில் இருப்பினும் வெம்மையால் உடல் கொப்புளிக்கும் இளமைத் தன்மை கொண்டிருத்தல், அன்பான பொருள்களையும் துறக்கின்ற மயக்கத்தினராதல். *(பிர.திர. 190)*
*பிரிவால் வருந்தும் மகளிர்க்குப் பகையாவன*

பனிநீர், முத்து, மலர்கொத்து, மலர் விரவிய பஞ்சணை, கடல், களபம், மழை, தண்மை பொருந்திய செடிகள், கதலி, அடர்ந்த இருள் இப்பத்தையும் பகையாக உடையவர் தமக்கு இனிதாகக் கொண்ட ஊரினையும் அன்பு பூண்ட கடவுளரையும் கூட, அம்மயக்கம் காரணமாக நீக்குவர் *(பிர.திர. 192)*

## மகளிர் இயல்பு

1. மது அருந்துதல், மயில், கிள்ளை, குயில், பூவை என்பனவற்றோடு பேசுதல், பந்தடித்தல், கழங்காடுதல், முல்லைக்கொடியை வளர்த்துதல் போன்ற செயல்களைச் செய்து சோலையில் வனதேவதை போல் காட்சியளிப்பர் *(பிர.திர 187)*

   விடியலில் துயில் நீங்கி எழுவர்; சோலை, பிறவிடங்களில் யாரும் காணாத நிலையில் இன்பம் துய்ப்பர்; மாலையில் நீராடுவர்; வீடு சென்று சேர்வர்; உற்றாருறவினருடன் உணவுண்பர்; விருந்தளித்துப் பல்லுயிர் ஓம்புவர்; காகம் போன்று பகுத்துண்டு இணைந்து வாழ்வர்; காம மயக்கம் காரணமாக கருவுறுவர்; கருவுறுதல் காரணமாக அழகு குறைவர். *(பிர.திர 200)*

   ஏலம் இலவங்கம், சாதிக்காய், தக்கோலம், வெற்றிலைப் பாக்கு, சுண்ணாம்பு, பாதிரி, கிராம்பு, சுக்கு, வகுக்கப்பட்ட சாதிப்பத்திரி, கற்பூரம் என்பவற்றை வாயிலிட்டுக் கூட்டிச் சுவைக்கும் வாசனைப் பொருள்களால் இன்பம் அடைவர். கள்ளிப் பாலின் நன்மணம் பொருந்துவர், விலை கூறுதற்கரிய பஞ்சாலாகிய படுக்கையில் நல்லுறக்கம் கொள்வர். மயிற் மெத்தை, அன்னத் தூவியாலான படுக்கையிலும் உறக்கம் கொள்வர். ஆலமரத்தின் தண்ணிய இலைப்பாய் துயில்வதற்குரிய மஞ்சமாம். முகம், கால், கண் ஆகியவற்றிற்கு முறையே மஞ்சளும் செம்பஞ்சுக் குழம்பும் இடுவர் *(பிர.திர. 203)*

2. *விளையாடும் இடங்கள்*

   பெண்டிரின் கற்பால் பத்து மரங்களும் மலர, தெளிவுடைய மலர்ச் சோலைகள், பூங்குளங்கள், ஊசல், செய்குன்றம், மலர்கள் நிறைந்த மாதவிப் பந்தர் இவற்றில் விளையாடுவர்

3. *மயலுற்ற மகளிர் இயல்பு*

   நடுக்கம், சோகம் உடையவர், நீராடாத மாசுடைய உடலினர், தோழியரின் வருத்த மொழிகளைப் பெறுவர், புண்ணான நெஞ்சுடையவர், பெருமூச்சுக் கொள்வர். நெருங்குகின்ற ஆசை காரணமாக உடலில் அணிந்த முத்துமாலை பொரியும்படி வெம்மையுறுவர்; தொடர்ந்து மாசுபடிந்த உடையே உடுத்தித் தனிமையுடையவராகவும் பேச்சற்றவராகவும் ஆவர் *(பிர.திர 191)*

4. *அணியும் மலர்மாலைகள்*

   மல்லிகை, கொன்றை, தும்பை, இருவாட்சி, கோங்கு, அலரி, பிச்சி, குல்லை, சண்பகம், நீலமணி போன்ற சங்குப் பூ, குங்குமம், பாரிசாதம், முல்லை, செவ்வந்தி, தாழை, தாமரை, பாதிரி, அசோகு, மல்லி, மந்தாரை, புன்னை, நந்தியாவட்டம், பச்சிலை, குரவு, வேலம், மயிலை, ஆத்தி, குடமுல்லை, பவளமல்லி, மரா, மருக்கொழுந்து, நீல நிறமுடைய கழுநீர், மகிழம், செங்கழுநீர், சந்தனம், மலையலரி, கற்பகப் பூ, சிறுகரந்தை, வெண்கடம்பு, குருகத்தி, தேக்கு என்னும் மலர்களால் ஆன மாலைகளைச் சூடுவர் *(பிர.திர. 201, 202)*

## மகளிர் உலா

சிற்றில், பாவை, கழங்கு, அம்மனை, ஊசல், பைங்கிளி, யாழ், நீராட்டு, பொழில் விளையாட்டு, நன்மது நுகர்தல் இவையும் இவை போல்வன பிறவும் அந்தந்தப்பருவ மங்கையருக்கு ஏற்றபடி உலாவில் அமைத்துப் பாடற்கு உரியன *(பன்.பா. 137)*

## மகளிரின் பருவம்

1. பேதை, பெதும்மை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண் என்னும் ஏழாகும் *(பன்.பா 135, வெண்.பா. 48; நவநீ.பா. 46; பிர.மர. 14; சித.பா. 37; இல.விள. 859-863; பிர.திர 198, தொ.விள 260)*
2. இந்த ஏழு பருவங்களுக்கும் உரிய வயதினைக் கூறுவதில் பாட்டியல்களிடையே வேறுபாடு காணப்படுகிறது. இதில் பிரபந்தத் திரட்டு வரையறுக்கும் முறை புதுமையாகவும், வியப்பேற்படுத்துவதாகவும் நினைவில் கொள்வதற்கு வசதியாகவும் உள்ளது. தொகைப் பொருள்களின் அடிப்படையில் இந்நூல் வயதைக் கணிக்கிறது. கடல் ஏழு - உவர்நீர், நன்னீர், பால், தயிர், நெய், கருப்பஞ்சாறு, தேன். இது பேதையின் பருவம். மணிகள் ஒன்பது - கோமேதகம், நீலம், பவளம், புட்பராகம், மரகதம், மாணிக்கம், முத்து, வைடூரியம், வைரம். இது பெதும்பையின் பருவம். கதிர் எனப்படும் ஆதித்தர் பன்னிருவர் இது மங்கையின் பருவம். சந்திரகலை பதினாறு; அல்லது பிரதமை முதல் அமாவாசை அல்லது பௌர்ணமி வரையுள்ள திதி பதினைந்து - இது மடந்தைப் பருவம். பாரதப் போர் பதினெட்டு நாளளவும் நடந்ததன் அடிப்படையில் அரிவையின் பருவம். வள்ளல்கள் இருபத்தொருவர் - இது தெரிவையின் பருவம். அறங்கள் முப்பத்திரண்டு அது முதலான எட்டு வருடங்கள் - அதாவது நாற்பது வரை பேரிளம் பெண். *(பிர.திர. 198)*

## மகாசைவம்

பதினாறு சைவங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 62)*

**மகிழ்**

மஞ்சரிக்குரிய பத்து மரவகைகளுள் ஒன்று *(பிர.திர. 35)*

**மகிழ்ச்சிஇராகம்**

காம்போதி, சாவேரி, தன்னியாசி என்னும் மூன்று *(பிர.தீபிகை. 55)*

**மகிழம்**

பெண்டிர் அணியும் மலர் மாலைகளுள் ஒன்று *(பிர.திர. 201)*

**மகேந்திர சாலம்**

அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 72)*

**மங்கலச் செய்யுள்கள்**

வெண்பா, ஆசிரியப்பா, விருத்தம், கலிப்பா, வஞ்சிப்பா ஆகியன மங்கலம் பொருந்திய பாக்கள் *(பன்.பா. 98)*

**மங்கலச் சொல்**

நூலில் அமைய வேண்டிய பத்துப் பொருத்தங்களுள் முதலாவதாகக் கருதப்படும் பொருத்தம் இது. நூல் இயற்றத் தொடங்குகையில் மங்கலமுடைய சொற்களை முதலாவதாக வைத்துத் தொடங்க வேண்டும். இம் மங்கலச் சொற்களைப் பெரும்பாலான பாட்டியல்கள் பட்டியலிட்டுள்ளன. இதன் மூலம் எழுபத்துமூன்று மங்கலச் சொற்களை அறிய முடிகின்றது.

இதில் வரையறுத்த பாட்டியல் மற்றும் பிரபந்த தீபிகை என்னும் இரண்டு நூல்களும் இச்சொற்களைப் பற்றி விரிவாகப் பேசுகின்றன. எந்தெந்த எழுத்துகளுக்கு எந்தெந்த மங்கலச் சொற்கள் உரியன என்பதைப் பற்றி இந்நூல்களில் கூறப்பட்டுள்ளன. ▶ அட்டவணை 14.

மங்கலச் சொற்களைப் பற்றிக் கூறும் பாட்டியல் நூல்களில் பன்னிரு பாட்டியல் மட்டும் அச்சொற்கள் எவ்வாறு இருக்க வேண்டும் என்பது பற்றியும் கூறியுள்ளது. இதனைப் பின்வந்த பாட்டியலார் சொற்பொருத்தம் எனத் தனியொரு பொருத்தமாகக் கூறியுள்ளனர்.

**மங்கலச் சொற்கள்**

1. இலக்கியம் தொடங்குகையில் இடம்பெற வேண்டியனவாக சில சொற்களைப் பாட்டியல்கள் பட்டியலிடுகின்றன. இச்சொற்களின் எண்ணிக்கையில் பாட்டியல்களிடையே வேறுபாடு காணப்படுகிறது. அதனை அட்டவணையில் காண்க *(பன்.பா. 68; வெண்.பா 2, உரை; நவநீ.பா. 2, உரை, வரை பா. 4-9; சித.பா. 18; சுவாமி. 173; மு.வீ 1027; பொரு.விள 3)*
2. மங்கலச் சொல்லில் உள்ள ஒற்றெழுத்து புணர்ச்சியில் சிதைந்து அங்கு உயிரெழுத்துப் பெறின் அச்சொல் மங்கலம் இழக்கும். *(பிர.திர 113)*

அட்டவணை 1

| வ.எண் | சொல் | வரையறுத்த பாட்டியல் எழுத்துகள் | பிரபந்த தீபிகை |
|---|---|---|---|
| 1. | அமுதம் | - | ச,சா,ஞா,நெ,நே,நை.நொ.நோ |
| 2. | ஆரம் | - | மெ, மே, மை |
| 3. | ஆழி | - | ஒ,ஓ,ஔ |
| 4. | உலகு | ப, பா (8) | ந,நா,நி,நீ,நு,நூ,யு,யூ |
| 5. | எழுத்து | நு,நூ,யூ (4) | - |
| 6. | கங்கை | அ,ஆ,ஒ,ஓ,த,தா,தொ,தோ, (7) யோ | - |
| 7. | கடல் | - | அ,ஆ |
| 8. | கார் | - | அ,ஆ, ஒ, ஓ, ஔ, கெ, கே |
| 9. | குஞ்சரம் | இ ஈ ஞா(8) | - |
| 10. | சாதரூபம் | - | சொ, சோ |
| 11. | சானவி | - | கொ, கோ |
| 12. | சிந்து | - | நெ, நே, நை |
| 13. | சீர் | க.கா,கி,கீ,சொ,சோ,ந,நா, நீ,யா,வ,வா,வி,வீ | க,கா,கி,கீ,சொ,சோ,தொ, தோ,நி,நீ,ய,யா |
| 14. | செல்வம் | - | து, தூ, தெ, தே, தை |
| 15. | சொல் | ஔ,சு,சூ,செ,சே,தௌ,நௌ (7) | கு, கூ, நு, நூ, பு, பூ |
| 16. | தரணி | - | ப, பா, பி, பீ |
| 17. | தரு | - | சி, சீ |

| | | | |
|---|---|---|---|
| 18. | திகிரி | - | த, தா |
| 19. | திங்கள் | கொ, கே (5) | - |
| 20. | திரு | கொ, கோ (5) | த, தா |
| 21. | தேர் | உ ஊ எ ஏ ஐ நை மை (9) | ப பா பி பீ யு யூ |
| 22. | நீர் | கை சி சீ தி தீ தை நொ<br>நோ பை (6) | ஒ ஔ தி தீ |
| 23. | நேமி | - | உ ஊ எ ஏ ஐ |
| 24. | பங்கசை | - | யு யோ |
| 25. | பதுமை | - | வி வீ |
| 26. | பார் | ச,சா,பெ,பே,பொ,போ,வெ<br>வே (5) | பு பூ பெ பே மு மூ |
| 27 | பால் | - | ச சா |
| 28 | பிறை | - | மெ மே மை மொ மோ |
| 29. | பூ | கௌ சை ம மா மி மீ மு மூ<br>வை வௌ (5) | அ ஆ சு சூ செ சே சை<br>ப பா பி பீ ம மா மி மீ<br>மு மூ |
| 30. | பொன் | கு கூ சௌ து தூ தெ தே<br>நெ நே பு பூ மெ மே மொ<br>மோ மௌ (5) | உ ஊ எ ஏ ஐ பு பூ |
| 31. | மணி | - | அ ஆ கெ கே கை சா நெ<br>நே நை வெ வே வை வௌ |
| 32. | மதி | - | தொ தோ வெ வே வை வௌ |
| 33. | முந்நீர் | - | அ ஆ இ ஈ |
| 34. | மொழி | - | ஞா |
| 35. | வாரணம் | ஞெ, ஞொ (7) | |
| 36. | வேலை | - | து தூ தெ தே தை |
| 27. | வேழம் | - | கி கீ சி சீ |

## மங்கலச் சொற்பொருத்தம்

மங்கலச் சொற்களானவை தோன்றல், திரிதல், கெடுதல் முதலிய விகாரங்கள், பல்பொருள், வகையுளி என்பன நீங்கிய சொல்லாக அமைய வேண்டும். இப்பொருத்தத்தை விளக்குகையில் சில பாட்டியலார் இத்தகைய சொல் வரலாகாது என எதிர்மறையில் கூறுகின்றனர். சிதம்பரப் பாட்டியல், நவநீதப் பாட்டியல் என்னும் சில பாட்டியல்கள் இதனை ஆனந்தக் குற்றம் என்கின்றன. *(பன்.பா 70; வெண் பா. 3; நவநீ.பா. 4; சித.பா. 18; இல.விள. 772; தொ.விள. 286; மு வீ 1028; சுவாமி 174)*

வகையுளிச் சொல், பலபொருளுடைய சொல், சிறப்புக் குன்றிய மொழி ஆகியவற்றை நீக்கி, சிறந்த பொருளுடைய சொல்லைப் பொருத்தி அச்சொல் ஈற்றில் திரிவு பெறாததாய் இருத்தல் சிறப்புடைத்து. *(பிர திர 115; பொரு.விள.9)*

மெல்லெழுத்தையும் இடையெழுத்தையும் பெற்றுவரும் மங்கலச் சொற்கள் வருமொழி காரணமாக, தம் ஈற்றுப் பகுதியின் வடிவு கெட்டு வல்லெழுத்துப் பெறும் கடைத்திரிவும், சீரமைப்புக் காரணமாக மங்கலச்சொல் முதற்சீரிலும் வருமொழியிலுமாகப் பிளவுபடும் வகையுளியும் விடப்படல் வேண்டும். *(பிர திர. 116)*

சொல் தன் முழு உருவுடன் வருதலும், தலைவனின் பெயருக்கேற்பத் தானப்பொருத்தம் அமைதலும், பல பொருளுடைய சொல்லை நீக்கி ஒரு பொருளுடைய சொல்லைக் கொள்ளலும் நலம். *(பிர.திர. 117)*

## மங்கலப் பொருத்தம்

மங்கலச் சொற்கள் எவ்வாறு அமைய வேண்டும் என்பதைப் பின்வருமாறு பாட்டியல்கள் கூறியுள்ளன.

மெய் எழுத்துகளுடன் சேர்ந்தே உயிரெழுத்துகள் மங்கலச் சொற்களாக அமைதல் வேண்டும். அவ்வாறு மெய்யொடு புணராது நிற்பின் குற்றமாகும். *(இந் காளி 27)*

உயிரெழுத்துகள் மெய்யெழுத்துகளைச் சாராது தனியாக நிற்றல் சிறப்பில்லை. உடம்பிலிருந்து தனியே உயிர் பிரிந்தால் அதற்கு மரணம் ஏற்படுவது போல்தான் இவ்வெழுத்துகளும் கருதப்படும். *(இந் காளி 28)*

மனிதர்களைப் பாடும் இலக்கியத்தில் முதன்மொழியில் அமையும் மங்கலச் சொல்லின் முதலெழுத்து உயிர்மெய் எழுத்தாக மட்டுமே இருக்க வேண்டும். கடவுள் மற்றும் முனிவர்களைப் பாடும் இலக்கியத்தில் மங்கலச் சொல்லின் முதலெழுத்து உயிரெழுத்தாக இருக்க வேண்டும். *(பன்.பா. 69)*

மேற் கூறப்பட்ட கருத்துடன், உயிர் எழுத்துகளோடு சேரப் பெறாமல் தனியே மெல்லின. இடையின எழுத்துகளை அமைத்துப் பாடுதலும் தீமை தரும். *(இந்.காளி 26)*

கொலை முதலிய சொற்களை விடுத்து, அரன், நெடுமால், ஆதித்தன், ஐங்கரக்கடவுள், ஆறுமுகன், பிரமன் ஆகியோர் பெயரைக் கொண்டு பாடுதல் வேண்டும். *(நவநீ.பா. 3)*

நல்ல அடைச் சொற்களும் திரிசொற்களும் நூலுக்கு முன்னும் பின்னும் இடையிலும் பயன்படுத்துவது மங்கலம். *(சுவாமி. 173; மு.வீ. 1027)*

மங்கலச் சொல் ஒன்றிற்குப் பதிலாக அதன் பரியாயச் சொல் (இணைப்பொருட் சொல்) முதற்சீராய் வரினும் குற்றமில்லை. *(பொரு.விள. 6)*

மங்கலத்துக்குரிய பரியாயச் சொல்லால் முதற்சீரில் ஆளப்படும் மங்கலச்சொல் செய்யுள் முதலில், இடையில், ஈற்றில் வைத்தல் செய்யுட்கு உரியது. *(சித.பா. 27)*

மங்கலச் சொல்லுக்கு முன் சான்றோரால் வழங்கப்படும் அடைமொழி வருதலும் சிறப்பு. *(சித.பா. 27; இல.விள. 801; பொரு.விள. 7)*

மங்கலப் பொருளைத் தரும் மங்கலச்சொல் அல்லாது வேறுசொல் முதற்சீராய் வரின் அது மங்கல வழுவாகும். *(பொரு.விள. 5)*

முதல் பொருத்தமாகிய மங்கலப் பொருத்தம் சொல், எழுத்து, உண்டி ஆகிய பொருத்தங்களைக் காட்டிலும் சிறந்தது. ஆதலின் இப்பொருத்தம் இருப்பின் சொல், எழுத்து, உண்டிப் பொருத்தங்கள் ஏற்றன. அல்லவாயினும் கவலையில்லை. அதேசமயம் மங்கலப் பொருத்தத்தைவிடத் தானம், நாள், கணப்பொருத்தங்கள் சிறப்புடையன. அவற்றின் பொருத்தம் நோக்கி மங்கலச் சொல்லை அடைகொடுத்துச் சீரின் இடையும் இறுதியும் ஆக்கி அல்லது மங்கலச் சொல்லை அடைகொடுத்துச் சீரின் இடையும் இறுதியும் ஆக்கி அல்லது மங்கலச் சொல்லின் பரியாயப் பெயர் கூறி மாற்றி அமைத்தல் வேண்டும். *(இல.விள. 801)*

*புறனடை*

மங்கலச் சொல்லை எடுத்து, எழுத்து, தானம், நாள், பொருந்தி வருகின்ற கதி, கணம் அமைத்தால் மங்கலப் பொருத்தம் அமைந்திடும். பொருந்துகின்ற உத்தியால் அறிந்து தானம், நாள், கணம் என்பனவற்றை அமைத்தாலும் அப்பொருத்தம் அமையும். தானம், நாள் இரண்டு மட்டும் அமைத்தாலும் நலம் சேரும். தானப் பொருத்தத்தை நீக்கி நாட்பொருத்தம் ஒன்றை மட்டும் குறிக்க வல்லவர் அவ்வாறும் அமைப்பர். உயர்ச்சியுடைய தானத்திலும் உயிர்மெய் எழுத்து ஆயின், உயிரைத் துணிந்து அந்த உயிரைப் பற்றுக் கோடாகக் கொண்டு எண்ணுக. *(பிர.திர. 448)*

**மங்கல வள்ளை**

► மங்கல வெள்ளை *(வெண்.பா. 54; சித.பா. 36; இல.விள. 828; மு.வீ. 1111; பிர.தீபம். 75)*

**மங்கல வெள்ளை**

1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(பன்.பா. 99)*
2. தொடர்நிலைச் செய்யுள் வகைகளுள் ஒன்று *(இல.விள. 805)*
3. மகளிரின் கற்பைப் பொருளாகக் கொண்டு சந்தம், வெண்பாவில் அமையும் செய்யுள்கள் இதில் ஒன்பது சந்தமும் ஒன்பது வெண்பாவும் வருதற்குரியன *(பன்.பா. 192; பிர.மர. 13; பிர.தீபிகை. 26)*

**மங்கள கவுசிகை**

வகுப்புறு இராகங்கள் முப்பத்திரண்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 53)*

**மங்கை**

1. மகளிரின் ஏழு பருவங்களுள் ஒன்று *(பன்.பா. 135; வெண்.பா. 48; நவநீ.பா. 46; பிர.மர. 14; சித.பா. 37; இல.விள. 861; பிர.திர. 198; தொ.விள. 260)*
2. பன்னிரண்டு முதல் பதின்மூன்று வயது வரையிலானது (2 வருடம்) *(வெண்.பா. 48; இல.விள. 861; சித.பா. 37)*
3. பதினொன்று முதல் பன்னிரண்டு வயது வரை என்று குறிப்பிடுகிறது *(நவநீ.பா. 46)*
4. பதினொன்று முதல் பதினான்கு வயது வரையிலானது எனப் பிரபந்த மரபியல் கூறுகிறது *(பிர.மர. 14)*

**மச்சம்**

ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று *(பிர.திர. 500-502; பிர.தீபிகை. 99)*

மஞ்சரி
1. மலர்களின் கொத்தினைப் போலப் பல பாடல்களின் தொகுதியாலான இலக்கியம். *(பிர.திர. 81)*
2. அரசனுக்குப் பாடப்பெறும் இலக்கியங்களுள் ஒன்று *(பிர.திர. 81)*
3. பத்துவகை மரங்கள் பெண்ணின் பத்து செயல்களுக்கு ஒப்பாகச் சொல்லப்பட்டுள்ளன. வழிபடு தெய்வங்களும், இறைவர் அணிதற்குரிய புல்லும், மலரும் அவர்க்குப் படைக்கப்படும் பொருள்களும், நற்கோணமும், திசைபார்த்தலும், மந்திரம் ஓதலும், பவனி வருதலும் பெண்ணைப் பார்த்தலும் என்ற இவற்றை உட்பிரிவாகக் கொண்டு பாடப்படும் இலக்கியம் *(பிர.திர. 35-39)*
4. வணிகருக்கு இவ்விலக்கியம் பாடப்படாது *(பிர.திர. 35-39)*
5. இவ்விலக்கியத்தின் மதிப்பு 400 பொன் *(பிர.திர. 86)*
6. ஓம், நம், அம், ஆம், கிலிம், அலம், சிம், சங், கிலீம், விம் என்னும் பத்து மந்திரங்களைக் கூறி கருவறையின் முன் இறைவனை வழிபடுதலைக் கருவாகக் கொண்ட இலக்கியம் *(பிர.திர. 98)*
7. அரசன் உலாச்சென்றபோது, குழுமிய மக்களில் ஒரு பெண்ணைக் கண்டு அன்புற்று அவளைப் பெறாமையால் அரண்மனையில் வருந்தியிருக்க, அவன் வருத்தத்தை நீக்கும் முயற்சியாக அமைச்சர் அவளைக் கொணர்ந்து அவனுக்கு மணமுடிக்க அவர்கள் இருவரும் இன்ப வாழ்வு நிகழ்த்துவதைக் கருவாகக் கொண்ட இலக்கியம் *(பிர.திர. 99)*
8. கற்புடைய மகளிரால் மலர்கின்ற மரங்களின் செயல்களைக் கருவாகக் கொண்டு குதிரை, சிவிகை, தார், யானை என்னும் சிறப்பங்கங்களை உடைய அரசர்க்குப் பாடப்பெறும் இலக்கியம் *(பிர.திர. 100)*
9. யாப்புநிலை - *சந்தங்கள் காரணமாகப் பல வேறுபாடுகளாகி,* ஈரடியாயும் பிறவாலும் அமைத்து எழுதுதல் நன்று. *(பிர.திர. 489)*

மஞ்சரியில் குறிக்கப்படும் வழிபடு தெய்வங்கள்
விநாயகன், முருகன், சிவன், பிரமன், மன்மதன், சூரியன், சந்திரன், இந்திரன் *(பிர.திர. 36)*

மஞ்சரியின் பவனி
முன்புறம் குதிரை, பொன் தேர், துயர் நீக்கும் சிவிகை, என்பனவும். பின்பு இரதம், வலிமையுடைய தண்டிகை, மா என்பனவும் அதன் பின்பு முத்து ஊர்தி, மா, மணி அணிந்த கொடிஞ்சியுடைய அழகிய பெரிய தேர் என்பனவும் தொடர, வலிமை பொருந்திய யானை பத்தாம் நாள் வரும் *(பிர.திர 494)*

மஞ்சுகோஷை
விண்மாதர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை. 46)*

மட்டியம்
எழுவகைத் தாளங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 49)*

மடந்தை
1. மகளிரின் ஏழு பருவங்களுள் ஒன்று *(பன்.பா. 135; வெண்.பா. 48; நவநீ.பா. 46; பிர.மர. 14; சித பா. 37; இல.விள. 862; பிர.திர. 198; தொ.விள. 260)*
2. பதினான்கு முதல் பத்தொன்பது வயது வரையிலானது (6 வருடம்) *(வெண்.பா. 48; பிர.மர. 14; சித.பா. 37; இல.விள. 862)*
3. பதின் மூன்று முதல் பதினெட்டு வயது வரையிலானது என நவநீதப்பாட்டியல் கூறுகிறது *(நவநீ.பா. 46)*

மடம்
முப்பத்திரண்டு அறங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 71)*

மடல்
1. ஒரு நூல் ஒரு பாட்டேயாகும் இலக்கிய வகைகளுள் ஒன்று *(பன்.பா. 87)*
2. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(பன்.பா. 99; சுவாமி. 165)*
3. தொடர்நிலைச் செய்யுள் வகைகளுள் ஒன்று *(இல.விள. 805)*
4. ஆடவர் *தனியிடத்து* ஒருத்தியைக் கண்டபின் அவள்பால் காதல் கொண்டு அறம், பொருள், வீடு ஆகியவற்றை இழித்துக் கூறி, அவளது வடிவை ஒரு படத்தில் எழுதிக் கரும்பனையால் செய்யப்பட்ட குதிரை மீது ஏறுதலைக் கலிவெண்பாவால் *பாடும்* இலக்கியம். *(பன்.பா. 146)*
5. தனிச்சொல் இன்றி அடிதோறும் பாட்டுடைத் தலைவனது இயற்பெயர்க்கு எதுகையை அமைத்து கலிவெண்பாவில் பாடுவர் புலவர் *(பன்.பா. 146; நவநீ.பா. 47)*
6. சில பாட்டியல்கள் இதனை வளமடல் என்று கூறுகின்றன *(வெண்.பா. 50; இல.விள. 856; மு.வீ. 1087; சுவாமி. 168)*
7. இதனை இன்ப மடல் *என்று* சில பாட்டியல்கள் கூறுகின்றன *(பிர.மர. 14; சித.பா. 37; சுவாமி. 168)*
8. உலாவிற்கு வழங்கப்பட்ட உறுப்புகளோடு தலைவனைக் கண்ட மாதர்க்கு எழுந்த இனிய காதலை மற்றோர் உறுப்பாகக் கூட்டி இயற்பெயர்க்கு எதுகை அமைத்துக் கலிவெண்பாவால் பாடும் இலக்கியம் *(தொ.விள. 261; பிர.திர. 22)*

9. ஆசிடையில்லாத எதுகையைக் கொண்டும் காமமுற்றான் கூற்றைக் கொண்டும் அமையும் இலக்கியம் *(பிர.திர. 108);* மடலேறுவேன் என்னும் பொருண்மையுடைய மடலினைச் சந்தங்கள் காரணமாகப் பல வேறுபாடுகளை உடையதாகவும், ஈரடியாலும் பிறவாலும் அமைத்துப் பாடுதல் நன்று. *(பிர.திர. 489)*
10. மகளிர் தம் காதல் மிகுதியாகிய போதிலும் மடல் ஏறுதல் இல்லை. *(பன்.பா. 147)*
11. கடவுளர் தலைவராய் வருங்காலத்து மடல் ஏறுவர் *(பன்.பா.147)*
12. புல்லின் உறுப்புகளுள் ஒன்று *(இல.விள. 920)*

**மண்**

சிற்பத் தொழிற்குரிய பத்து பொருள்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 60)*

**மண்ணின் தன்மை**

பெண்ணின் குணத்திற்கு அடிப்படை இங்குச் சொல்லப்படுகிறது

| | | |
|---|---|---|
| 1. வேதம் ஓதும் இடத்து மண் | - | கல்வியறிவு |
| 2. பசுத்தொழுவின் மண் | - | பால் பாக்கியம் |
| 3. பெரிய நிலத்தின் சாலி மண் | - | நலம் உண்டாகும் |
| 4. பூப் போன்ற மண் | - | குழந்தை |
| 5. தேன் ஒழுகும் மடுவின் மண் | - | பதிவிரதை |
| 6. உவர் மண் | - | மலடி |
| 7. உறைபனி | - | விதவை |
| 8. மந்தையின் மண் | - | விபசாரி *(பிர.தீபிகை. 74)* |

**மணி**

மங்கலச் சொற்களுள் ஒன்று *(பன்.பா. 68; வெண்.பா. 2; நவநீ.பா. 2; வரை.பா. 6; சித.பா. 18; இல.விள. 771; பிர.திர. 111; மு.வீ. 1027; பொரு.விள. 3)*

**மணிமாலை**

இருபது வெண்பாவாலும் நாற்பது கலித்துறையாலும் பாடப்பெறும் இலக்கியம் *(தொ.விள. 279; மு.வீ. 1056; பிர.தீபிகை. 12; பிர.தீபம். 30)*

**மணியூசல்**

விருத்தம் அல்லது கலித்தாழிசை அல்லது பிறவற்றால் ஊசலாட்டுவதாகப் பாடும் இலக்கியம்(பிர.திர. 20)

**மத்திமை**

வாக்கு நான்கனுள் ஒன்று *(பிர.திர. 380)*

**மத்தியமாவதி**

வகுப்புறு இராகங்கள் முப்பத்திரண்டுள் ஒன்று. *(பிர.தீபிகை 53)*

**மதங்கி**

1. கலம்பக உறுப்புகளுள் ஒன்று *(பன்.பா. 129; வெண்.பா. 32; நவநீ.பா. 33; பிர.மர. 4; சித.பா. 29; இல.விள. 812; தொ.விள. 258; பிர.திர. 32; மு.வீ. 1041; பிர.தீபிகை. 7; பிர.தீபம். 95)*
2. இரண்டு கைகளிலும் வாளேந்திச் சுழற்றுதலோடு தானும் சுழன்று ஆடுகின்ற ஓர் இளமாதின் எழிலின் சிறப்பைக் கண்டு பாராட்டிக் கூறுதல் தோன்றப் பாடப்படும் பகுதி *(பன்.பா. 129, உரை; நவநீ.பா. 33; இல.விள. 812; பிர.தீபம். 29, உரை)*

**மதங்கு**

► மதங்கி *(சித.பா. 29; பிர.திர. 32; மு.வீ. 1041; பிர.தீபம். 95)*

**மதம்**

ஐம்பூதங்களாலாகிய மனித உடலின் வான் கூறுகளுள் ஒன்று *(பிர.திர. 380)*

**மதயானை**

அரசர்க்குரிய இருபத்தொரு சின்னங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 88)*

**மதனசாத்திரம்**

அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 72)*

**மதன சிங்காரம்**

1. முதலில் காமக் கடவுளான மன்மதனைப் பாடிப் பின்னர் மனத்துயர் தந்த தலைவனைப் பாடி, அவனைப் பொருந்தப்பெறும் இன்பத்தைப் பாடி, உலா விதிக் கொள்கை புலப்பட வெண்கலிப்பாவில் உரைக்கப்படும் இலக்கியம் *(பிர.திர. 48)*
2. மன்மதனின் படை முதலான அங்கங்கள் அனைத்தையும் மன்னனுக்குரிய உவமையாகப் பாடி, அவன் பவனி வருதலைக் கருவாகக் கொண்ட இலக்கியம் *(பிர.திர. 102)*

**மதனமோகினி**

விண்மாதர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை. 46)*

### மதன விசையம்

1. திக்கு விசயம் புரிந்த மன்னன் செயலைக் கேள்வியுற்று அவன்பால் அன்பு கொண்ட பெண்ணை மதன் தன் மலர்ப்பாணங்களால் எதிர்த்தலைப் பாடும் இலக்கியம் *(பிர.திர. 42)*
2. இவ்விலக்கியத்தின் மதிப்பு 4000 பொன் *(பிர.திர. 87)*

### மதனின் ஐங்கணையின் செயல்கள்

மன்மதனின் ஐங்கணையின் செயல்கள் பின்வருமாறு:

| வ.எண் | கணை | எய்யுமிடம் | செயல் | அவத்தைகள் |
|---|---|---|---|---|
| 1 | வனசம் | நெஞ்சு | கனவு | சுப்பிரயோகம்-பேச்சு, நினைவு,இழத்தல் |
| 2 | மா | கொங்கை | உன்மத்தம் | விப்பிரயோகம் - பெருமூச்செறிந்து வருந்துதல் |
| 3 | அசோகு | கண் | மோகனம் | சோகம் - வெதும்புதல், ஊண்மறுத்தல் |
| 4. | முல்லை | தலை | சந்தாபம் | மோகம் - அழுதல், பேசிப்பிதற்றல் |
| 5. | நீலம் | அல்குல் | வசிகரணம் | மரணம் - மிகுந்த மயக்கம்,சோர்வடைதல் *(பிர.திர. 248,249)* |

### மதி

1. மங்கலச் சொற்களுள் ஒன்று *(பன்.பா. 68; வெண்.பா. 2; நவநீ.பா. 2; வரை.பா. 6, சித.பா. 18; இல.விள. 771; தொ.விள. 285; பிர.திர. 111; சுவாமி. 173; மு.வீ. 1027)*
2. இருபத்தேழு நட்சத்திரங்களை மாலையாகப் புனைவது *(பிர.திர. 287)*

### மதிக்கணம்

நன்மை பொருந்திய கணங்களுள் ஒன்று *(இந்.காளி. 21; பன்.பா. 66; வெண்.பா. 20; நவநீ.பா. 22; சித.பா. 25; இல.விள.800; தொ.விள. 294; பிர.திர. 154)*

### மதியம்

மங்கலச் சொற்களுள் ஒன்று *(நவநீ.பா. 2, உரை)*

### மதியுற்ற சாபம்

சசாசுரனை மதி மாற்றியதை அறிந்து, முயலகன் உற்ற துன்பம் நினக்கு வர, பிறவி ஐந்து சேர்க என்றும், அனற் பிறப்பில் ஐக்கியம் ஆகுக என்றும் மதிக்குச் சாபமிடப்பட்டது. இதனால் கதிரவனின் கவசமிட்டு, கனலுக்கு அப்பால் உயர்ந்த தவம் புரிந்து, நான் இறந்தாலும் என்னிடமுள்ள மான் இறவாது காத்தல் வேண்டும் எனக் கேட்டும், மீண்டும் பிறந்தும் எல்லாரும் முயல்கூடு என்று கூறிட இருந்தான். முயலின் திறம் புரியும் இருகூறும் கனலில் பிறந்து பரனாரின் திருவடியில் இடம் கொண்டும் அங்கையில் இடம் பெற்றும் அழகுற நின்றன *(பிர.திர. 515)*

### மதில்

அரசர்க்குரிய இருபத்தொரு சின்னங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 88)*

### மதுரகவி

1. நால்வகைக் கவிகளுள் ஒருவர் *(வெண்.பா. 23; நவநீ.பா. 87; இல.விள. 930; தொ.விள. 299; மு.வீ. 1016, பிர.திர. 392; பிர.தீபிகை. 98)*
2. சுவையான சொல், பொருளை அமைத்து யாப்பிலக்கணத்துக்கு இயைபுத் தொடை, தொடை விகற்பம் இணக்கமாய்ப் பொருந்தப் பலவகை அணிகளை அமைத்துக் கேட்போருக்கு இன்பம் பயக்கப் பாடும் பாவகை. *(வெண்.பா 25, நவநீ.பா. 87, உரை; இல.விள 765; தொ.விள. 299; மு.வீ. 1018; பிர.திர. 392; பிர.தீபிகை. 98)*

### மதுரடாஷாணம்

அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 72)*

### மதுரைக்காஞ்சி

பெருங்காப்பியங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 45)*

### மதுரைத்தமிழ் நாயகன்

சங்கப் புலவர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை. 86)*

### மதுரைத்தமிழாசிரியர்

சங்கப் புலவர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை. 86)*

### மதுரைப்பெரு மருதர்

சங்கப் புலவர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை. 86)*

**மதுரையின் மேவு பாலாசிரியர்**

சங்கப் புலவர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை. 86)*

**மந்தாரை**

பெண்டிர் அணியும் மலர் மாலைகளுள் ஒன்று *(பிர.திர. 201)*

**மந்தி**

பெண்பால் மரபுப் பெயர்களுள் ஒன்று *(இல.விள. 917)*; குரங்கு, முசு, ஊகம் என்பவற்றின் பெண்பாலைக் குறிக்கும். *(இல.விள. 917 உரை)*

**மந்திரம்**

1. சான்றோர்கள் பல்லாண்டு தம் அனுபவத்தால் அறிந்தவற்றை உலகம் ஏற்றுப் பயன்படுத்த வேண்டிக் கூறும் செய்யுள் *(இல விள. 906)*
2. அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 72)*

**மந்திரி**

1. கலம்பகத்தில் எழுபது செய்யுள்களால் பாடப்படுவர் *(பன்.பா. 130; வெண்.பா. 34; நவநீ.பா. 35; பிர.மர 6; சித.பா. 30; இல.விள. 813; தொ.விள. 258; பிர.திர. 34; சுவாமி. 170)*
2. அரசர்க்கு உரிய ஐவர் குழுவில் ஒருவர் *(பிர.தீபிகை. 89)*

**மயங்கக்கூறல்**

பத்துவகைக் குற்றங்களுள் ஒன்று; பொருளைத் தெளிவுபடுத்தாது மயங்கச் செய்யும் சொற்களைக் கூறுதல் *(இல.விள. 897)*

**மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா**

பல அடிகள் மயங்கி வரும் செய்யுள் *(சித.பா. 11)*

(எ-டு) மணிகளிர் நெடுமுடி மாயவனுந் தம்முனும்போன்
றணிகிளர் நெடுங்கடலுங் கானலுந் தோன்றுமால்
நுரைநிவந் தவையன்ன நொய்ப்பறைய சிறையன்னம்
இரைநயந் திரைகூரும் ஏமஞ்சால் துறைவகேள்;
மலையென மழையென மஞ்செனத் திரைபொங்கிக்
கனலெனக் காற்றெனக் கடிதுவந் திசைப்பினும்
விழுமியோர் வெகுளிபோல் வேலாழி இறக்கலா
தெழுமுந்நீர் பெயர்ந்தோடும் ஏமஞ்சால் துறைவகேள்
(இவையிரண்டும் தரவு)

கொடி புரையும் நுழைநுசுப்பிற் குழைக்கமர்ந்த திருமுகத்தோன்
தொடிநெகிழ்ந்த தோள்கண்டும் துறவலனே என்றியால்;
கண்கவரு மணிப்பைப்பூட் கயில்கவைஇய சிறுபுறத்தோள்
தெண்பனிகண் உகக்கண்டும் திரியலனே என்றியால்;

நீர்பூத்த நிரையிதழ்க்கண் நின்றொசித்த புருவத்தோள்
பீர்பூத்த நுதல்கண்டும் பிரியலனே என்றியால்;

கனைவரல்யாற் றிருகரைபோற் கைநில்லா துண்ணெகிழ்ந்து
நினையுமென் நிலைகண்டும் நீங்கலனே என்றியால்

வீழ்சுடரில் நெய்யேபோல் விழுமநோய் பொறுக்கல்லாத்
தாழுமென் நிலைகண்டுச் தாங்கலனே என்றியால்;

கலங்கவிழ்ந்த நாய்கன்போற் களைதுணை பிறிதின்றிப்
புலம்புமென் நிலைகண்டும் போகலனே என்றியால்
(இவை ஆறும் தாழிசை)

அதனால்
(தனிச்சொல்)

அடும்பம லிறும்பின் நெடும்பணை மிசைதொறுங்
கொடும்புற மடலிடை ஒடுங்கின குருகு;
செறிதரு செருவிடை எறிதொழில் இளையவர்
நெறிதரு புரவியின் மறிதருந் திமில்;

அரசுடை நிரைபடை விரைசெறி முரசென
நுரைதரு திரையொடு கரைபொருங் கடல்;

அலங்கொளி ரவிர்சுடர் இலங்கொளி மறைதொறுங்
கலந்தெறி காலொடு புலம்பின பொழில்;
(இவை நான்கும் அராகம்)
விடாஅது கழலுமென் வெள்வளையுஞ் செறிப்பாய்மன்
கெடாஅது பெருகுமென் கேண்மையும் நிறுப்பாயோ;
ஒல்லாது கழலுமென் ஒளிவளையுஞ் செறிப்பாய்மன்
நில்லாது பெருகுமென் நெஞ்சமும் நிறுப்பாயோ;
தாங்காது கழலுமென் தகைவளையுச் செறிப்பாய்மன்
நீங்காது பெருகுமென் நெஞ்சமும் நிறுப்பாயோ;
மறவாத அன்பினேன் மனதிற்கு மாறுரையாய்
துறவாத தமருடையேன் துயர்தீரு மாறுரையாய்
காதலார் மார்பின்றிக் காமக்கு மருந்துரையாய்
ஏதிலார் தலைசாய யானுய்யு மாறுரையாய்.
இணைபிரிந்தார் மார்பின்றி இன்பக்கு மருந்துரையாய்
துணைபிரிந்த தமருடையேன் துயர்தீரு மாறுரையாய்;
(இவை ஆறும் தாழிசை)
எனவாங்கு,
(தனிச்சொல்)
பசைபோன் றதுதுறை பரிவா யினகுறி
நகையிழந் ததுமுகம் நனிநா ணிற்றுளம்
தகையிழந் ததுதோள், தலைசிறந் ததுதுயர்
புகைபரந் ததுமெய், பொறையாகின் றென்னுயர்
(இவை இருசீர் ஓரடி எட்டம்போதரங்கம்)
அதனால்
(தனிச்சொல்)
இனையது நிலையால் அனையது பொழுதால்
இனையல் வாழி தோழி துணைவாற்
பனியொடு கழிக உண்கண்
என்னொடு கழிகஇத் துன்னிய நோயே.
*(மேற்: யா.கல விருத்தியுரை மேற்.நூ. 86; யா.காரிகையுரை 32 மேற்.: சித.பா.ப. 56 -58)*

**மயிர்**
ஐம்பூதங்களாலாகிய மனித உடலின் நிலக் கூறுகளுள் ஒன்று *(பிர.திர. 379)*

**மயில்**
1. தூதுப் பொருள்களுள் ஒன்று *(பிர.திர. 30)*
2. கௌமாரியின் வாகனம் *(பன்.பா 109, உரை)*

**மயிலின் பிள்ளை**
பெண்பால் பிள்ளைப்பாட்டுக்குரிய உவமைகளுள் ஒன்று *(பன்.பா. 115)*

**மயிலை**
பெண்டிர் அணியும் மலர் மாலைகளுள் ஒன்று *(பிர.திர. 202)*

**மயேச்சுவரி**
(துர்க்கை) சத்த மாதர்களுள் ஒருவர் *(பன்.பா. 109, உரை; நவநீ.பா. 27, உரை)*
► வேய்த்தோள் எழுவர்

**மயேச்சுவரியின் ஆயுதம்**
பினாகம் (சிவன்வில்) *(பன்.பா. 109, உரை)*

**மயேச்சுவரியின் வாகனம்**
இடபம் *(பன்.பா. 109, உரை)*

**மரணம்**
1. பகைக்குரிய தானங்களுள் ஒன்று *(பன்.பா. 33)*
2. உடற்குற்றம் பதினெட்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 70)*
3. ஐவகைத் தானங்களுள் ஒன்று *(பன்.பா. 30; வெண்.பா. 5; நவநீ.பா. 6; சித.பா. 19; இல.விள. 783; தொ.விள. 288; பிர.திர. 121, சுவாமி 174; பொரு.விள. 17)*

### மரத்தின் உறுப்புகள்

இலை, முறி, தளிர், தோடு, சினை, குழை, பூ, அரும்பு, நனை *(இல.விள. 921)*

### மரபுப் பெயர்கள்

#### இளமை மரபுப் பெயர்கள்

| வ.எண் | மரபுப் பெயர்கள் | விலங்குகள் | நூற்பா எண் |
|---|---|---|---|
| 1. | பார்ப்பு | பறப்பன, தவழ்வன | 910 |
| 2. | பறழ் | மூங்கா, வெருகு, எலி, அணில், முயல், பன்றி, நாய், நரி, கோடுவாழ் விலங்குகள் | *(இல.விள.)* |
| 3. | குட்டி | மூங்கா, வெருகு, எலி, அணில், முயல், பன்றி, நாய், நரி, யாடு, குதிரை, நவ்வி, புல்வாய், கோடுவாழ் விலங்குகள். | |
| 4. | குருளை | முயல், பன்றி, நாய், நரி | |
| 5. | கன்று | யானை, குதிரை, கழுதை, கடமை, மான், எருமை, மரை.கவரி, ஒட்டகம், கராம், ஓரறிவுயிரின் இளமைப் பெயர். | |
| 6. | பிள்ளை | பறப்பன, தவழ்வன, முயல், பன்றி, நரி கோடுவாழ் விலங்குகள், ஓரறிவுயிருள் இளமைப்பெயர். | |
| 7. | மகவு | கோடுவாழ் விலங்குகள். | |
| 8. | மறி | யாடு, குதிரை, நவ்வி, புல்வாய், கோடுவாழ் விலங்குகள். | |
| 9. | குழுவி | குஞ்சரம், எருமை, கடமை, மரை, குரங்கு, முசு சிதல், எறும்பு பின்னிரண்டின் கிளைப்பிறப்பு ஓரறிவுயிரின் இளமைப்பெயர். | |

#### ஆண்பால் மரபுப் பெயர்கள்

| வ.எண் | மரபுப் பெயர்கள் | விலங்குகள் | நூற்பா எண் |
|---|---|---|---|
| 1. | ஏறு | பன்றி, புல்வாய், உழை, கவரி, எருமை, மரை, பெற்றம், சுறா | 916 *(இல.விள.)* |
| 2. | ஏற்றை | எல்லா ஆணினையும் குறிக்கும். | |
| 3. | ஒருத்தல் | யானை, பன்றி, புல்வாய், புலி, மான், கவரி, கராம், எருமை. | |
| 4. | களிறு | வேழம், பன்றி | |
| 5. | சே | - | |
| 6. | சேவல் | மயில் அல்லாத சிறகோடு கூடிய பறவைகள் | |
| 7. | இரலை | புல்வாய். முசு | |
| 8. | கலை | புல்வாய், முசு | |
| 9. | மோத்தை | யாடு | |
| 10. | தகர் | யாடு | |
| 11. | உதள் | யாடு | |
| 12. | உம்பல் | யாடு | |
| 13. | போத்து | பெற்றம், எருமை, புலி, மரை, புல்வாய், முசு. | |
| 14. | கண்டி | எருமை ஏறு | |
| 15. | கடுவன் | குரங்கு, பூஞை ஏறு | |

#### பெண்பால் மரபுப் பெயர்கள்

| வ.எண் | மரபுப் பெயர்கள் | விலங்குகள் | நூற்பா எண் |
|---|---|---|---|
| 1. | பேடை | ஒட்டகம், குதிரை, மரை | 917 |
| 2. | பெடை | ஒட்டகம். குதிரை, மரை* | *(இல.விள.)* |
| 3. | பெட்டை | ஒட்டகம், குதிரை, மரை | |
| 4. | பெண் | - | |
| 5. | மூடு | யாடு | |

| | | |
|---|---|---|
| 6. | நாகு | எருமை, மரை, பெற்றம், நந்து |
| 7. | கடமை | யாடு |
| 8. | அளகு | கோழி, மயில், கூகை |
| 9. | மந்தி | குரங்கு, முசு, ஊகம் |
| 10. | பாட்டி | பன்றி, நாய், நரி |
| 11. | பிணை | புல்வாய், உழை, கவரி |
| 12. | பிணவு | பன்றி, புல்வாய், நாய் |
| 13. | பிடி | யானை |

* பெடை என்பது எவற்றுக்கான பெண்பால் மரபுப் பெயர் என்பது குறிப்பிடப்படவில்லை. தொல்காப்பிய நூற்பா அடிப்படையில் இங்கு அம்மூன்று பெயர்கள் தரப்பட்டுள்ளன.

**மரபு வகை**
1. இரண்டு வழக்கினிடத்து உள்ள மரபு.
2. செய்யுளினிடத்து உள்ள மரபு *(இல.விள. 908)*

**மரம்**
1. ஓரறிவு உயிர்களுள் ஒன்று; மெய்யால் அறியும் உயிர் *(இல.விள. 913)*
2. அக வயிரம் உடையது *(இல.விள. 919)*
3. சிற்பத் தொழிற்குரிய பத்துப் பொருள்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 60)*

**மரா**
1. மஞ்சரி இலக்கியத்திற்குரிய பத்துவகை மரங்களுள் ஒன்று *(பிர.திர. 35)*
2. பெண்டிர் அணியும் மலர் மாலைகளுள் ஒன்று *(பிர.திர. 202)*

**மராடம்**

ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று *(பிர.திர. 500-502; பிர.தீபிகை. 99)*

**மருக்கொழுந்து**

பெண்டிர் அணியும் மலர் மாலைகளுள் ஒன்று *(பிர.திர. 202)*

**மருட்பா**
1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(பன்.பா. 99)*
2. புறநிலை வாழ்த்து, வாயுறை வாழ்த்து, செவியுறிவுறூஉ ஆகிய மூன்றும் மருட்பாவில் அவற்றிற்கு உரிய இலக்கணப்படி அமையும் வகையில் இயற்றப்பெறும் இலக்கியம். *(பன்.பா 213)*
3. இம்மூன்றுடன் கைக்கிளையையும் சேர்த்துச் சில பாட்டியல்கள் கூறுகின்றன *(நவநீ.பா. 55; சித.பா. 15)*
4. வெண்பாவும் ஆசிரியப்பாவும் சேர்வதால் உண்டாகும் மருட்பாவிற்கு வருணம் பொருந்தாது. *(பன்.பா. 96)*

**மருத்துவன் தாமோதரன்**

சங்கப் புலவர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை 85)*

**மருதம்**
1. வஞ்சிப்பாவிற்கு உரிய நிலம் *(பன்.பா. 94)*
2. கலிப்பாவிற்கு உரிய நிலம் *(வெண்.பா. 69; இல.விள. 878; தொ.விள. 298; மு.வீ. 1014; பிர.திர. 417)*

**மல்யுத்தம்**

அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 72)*

**மல்லி**

பெண்டிர் அணியும் மலர் மாலைகளுள் ஒன்று *(பிர.திர. 201)*

**மல்லிகை**
1. வெண்பாவிற்கு உரிய மலர் *(பன்.பா. 91)*
2. பெண்டிர் அணியும் மலர் மாலைகளுள் ஒன்று *(பிர.திர. 201)*

**மலகரி**

முப்பத்திரண்டு இராகங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 51)*

**மலங்கள்**

ஆணவம், மாயை, கர்(ன்)மம் இவை இணைந்த ஆறும் (ஐம்பூதம்+மலம்) (5+1) புறத்தீது. *(பிர.திர. 381)*

**மலர்**

மங்கலச் சொற்களுள் ஒன்று *(வெண்.பா. 2, உரை)*

**மலர்ப்பா**

விரதம் ஏற்றுத் தலைவி வருந்தி அயர்கையில் தோழி தானே கதிரவனின் ஒளியோடு தோய்வுகொண்டு சிறந்த பூவை மலரச்செய்து தலைவனிடத்துக் கொண்டு கொடுக்க, தலைவன் அதனை ஏற்றுத் தலைவியோடு இணைதலைக் கருவாகக் கொள்ளும் இலக்கியம்.

► தாமரை நோன்பு *(பிர.திர. 96)*

**மலை**

1. மங்கலச் சொற்களுள் ஒன்று *(பன்.பா. 68; வெண்.பா. 2; நவநீ.பா. 2; சித.பா. 18; தொ.விள. 285; பிர.திர. 111; சுவாமி. 173; பொரு.விள. 3)*
2. தசாங்கம், சின்னப்பூவில் பாடப்படும் பத்துவகைப் பொருள்களுள் ஒன்று *(பன்.பா. 139; வெண்.பா. 42; நவநீ.பா. 24; சித.பா. 32; தொ.விள. 263; பிர.திர. 15)*

**மலைபடுங்கடாம்**

பெருங்காப்பியங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 45)*

**மலையலரி**

பெண்டிர் அணியும் மலர் மாலைகளுள் ஒன்று *(பிர.திர. 202)*

**மலையாளம்**

ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று *(பிர.திர. 500-502; பிர.தீபிகை. 99)*

**மலையாளி**

குலப் பெயர்களுள் ஒன்று *(பிர.திர. 362)*

**மழை வகை**

1. ஏழு
   1. மணி (சம்வர்த்தம் என்னும் மேகத்தால் பொழியப்படுவது)
   2. நீர் (ஆவர்த்தம் என்னும் மேகத்தால் பொழியப்படுவது)
   3. பொன் (புட்கலாவர்த்தம் என்னும் மேகத்தால் பொழியப்படுவது)
   4. பூ (சங்காரித்தம் என்னும் மேகத்தால் பொழியப்படுவது)
   5. மண் (துரோணம் என்னும் மேகத்தால் பொழியப்படுவது)
   6. கல் (காளமுகி என்னும் மேகத்தால் பொழியப்படுவது)
   7. தீ (நீல வருணம் என்னும் மேகத்தால் பொழியப்படுவது) *(பிர.திர. 291)*
2. இந்த ஏழு தவிர இந்திரனின் ஆணைப்படி இன்னும் ஏழு வகையாகவும் மழை பெய்யும் அவை: 1. மலர், 2. நெல், 3. பால், 4. தயிர், 5. நெய், 6. தேன், 7. கரும்புச்சாறு *(பிர.திர. 296)*
3. இவை தவிர, கதிர் மண்டலம் முதலாக மாரகம் (மாரி) காயம்* ஆகியனவும் உள
   *இவை பற்றிய விளக்கம் தெளிவாக இல்லை *(பிர.திர. 296)*
   முதல் மழை - உயிர்கள் துன்புறும்படி குளிர்ச்சி அளித்து நடுங்கி அழியும்படியானது.
   இரண்டாம் மழை - கொடிய நஞ்சு பொழியும்
   மூன்றாம் மழை - மண்ணுடன் இரத்தமும் தசையும் எலும்பும் அழியும்படி தீ மாரி பொழியும்.
   நான்காம் மழை - மின்னல், இடி என்பனவற்றால் நெருப்பழிவு புரியும்.
   ஐந்தாம் மழை - நன்னீர் பெய்து பெரிய உலகை உய்விக்கும்.
   ஆறாம் மழை - நீரைக் குடிப்பவர்க்கு நோய்கள் வரும்.
   ஏழாம் மழை - இரு அரசர்களுக்குப் போர்வரும்படி, துன்பம் வர, வேறுபாடு ஏற்படும்படி கண்டமாரி பொழிந்து கெடுக்கும் *(பிர.திர. 294, 295)*

**மறக்களவஞ்சி**

1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(பன்.பா. 99)*
2. தொடர்நிலைச் செய்யுள் வகைகளுள் ஒன்று *(இல.விள. 805)*
3. குறளடி, சிந்தடி அளவடியாகிய அகவலடி விரவிவரும் வஞ்சிப்பாவினால் வேந்தர்களின் போர்க்களச் செய்தியைப் புறப்பொருள் இலக்கணப்படி கூறும் இலக்கியம் *(பன்.பா. 200)*

**மறநிலை இன்பம்**

அரசியல் வகை ஆறனுள் ஒன்று; ஏறு தழுவுதல், அம்பினை வில்லில் வைத்து இலக்கினை நோக்காது இருந்து எய்துதல், பண்பு இல்லாத வழியில் பெண்ணை மணத்தல் *(பிர.தீபிகை. 89)*

**மறநிலைப் பொருள்**

அரசியல் வகை ஆறனுள் ஒன்று; நேரிடுகின்ற பகைவரின் பொருள், திறைப்பொருள், சூதில் வென்ற பொருள் என்பன *(பிர.தீபிகை. 89)*

**மறநிலையறம்**

அரசியல் வகை ஆறனுள் ஒன்று; ஆநிரையை மீட்டு, வருகின்ற பகையை வென்று செஞ்சோற்றுக் கடன் கழியாதோரைத் தண்டித்துக் குறைவுறச் செய்தல் *(பிர.தீபிகை. 89)*

**மறம்**

1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(பன்.பா. 99; சுவாமி. 166)*
2. கலம்பக உறுப்புகளுள் ஒன்று *(பன்.பா. 129; வெண்.பா. 32; நவநீ.பா. 33; பிர.மர. 4; சித.பா. 29; இல.விள 812, தொ.விள. 258; பிர.திர. 33; மு.வீ. 1041; பிர.தீபிகை. 7; பிர.தீபம். 95)*
3. அரசன் விடுத்த மகள் வேண்டல் தூதினை மறவர்கள் மறுத்தும், அவ்வேந்தனை இகழ்ந்தும் கூறுதல் தோன்றப் பாடப்படும் பகுதி *(பன்.பா. 148)*
4. பேரரசனின் தூதுவனொருவன் குறுநில மன்னனிடம் சென்று தம்மரசன் சார்பாக மகள் வேண்ட சினம் கொண்ட குறுநில மன்னனின் கூற்று தோன்றப் பாடப்படும் நூல் *(பன்.பா. 148)*

**மறவர்**

குலப் பெயர்களுள் ஒன்று *(பிர.திர. 363)*

**மறி**

இளமை மரபுப் பெயர்களுள் ஒன்று *(இல.விள. 910)*; யாடு, குதிரை, நவ்வி, புல்வாய் என்னும் கோடு வாழ் விலங்குகளின் இளமைப் பெயர் *(இல.விள. 910 உரை)*

**மறுதலை சிதைத்துத் தன்துணிபு உரைத்தல்**

முப்பத்திரண்டு உத்திகளுள் ஒன்று; தன் கருத்துக்கு மாறாகக் கூறுவார் இருப்பின் அவர் கருத்துக்கு இடம் ஏற்படாதவகையில் அதனை மறுத்து நீக்கித் தான்கொண்ட கருத்தினை வலியுறுத்தி வெளியிடுதல் *(இல.விள. 898)*

**மறை**

அபிராமியின் ஆயுதம் *(பன்.பா. 109, உரை)*

**மன்மதன்**

மஞ்சரி எனும் இலக்கியத்தில் குறிக்கப்படும் வழிபடு தெய்வங்களுள் ஒருவர் *(பிர.திர. 36)*

**மன்மதனின் கணைச்செயல்**

உலகில் உள்ள மனிதருக்கு நல்ல உற்பத்தியாக, மதன் இளமையுடைய வாகை வில்லில் தாமரை நூலாகிய நாணையும், தாமரை மலராகிய கணையையும் பூட்டி மனதில் நினைக்கும்படி விடுவான். தாமரைத் தண்டினை வில்லாக, பிச்சி மலர் நாணாக கணை மாமலராக பசலையுறும்படி மார்பில் எய்வான்; கரும்பு வில்லில் பண்ணிசைக்கும் வண்டினை நாணாக ஏற்றி அசோகமலர் பாணத்தினை கண்களில் எய்ய, துயரம் உண்டாகும். கமுகில் உற்ற பாளை வில்லாக, வெட்டிவேர் நாணாக முல்லையே பொருகின்ற பாணமாக இடையில். ...எய்வதனால் கொல்வான் *(பிர.தீபிகை. 34)* (சில பகுதிகள் நூற்பாவில் விடுபட்டுள்ளன)

**மன்னர் இயல்பு**

1. பூவைநிலை, சூரியனை வழிபடுதல், இறைவனை வாழ்த்துதல், காத்தல், முடி சூட்டல், களவேள்வி, தீத்தொழில் களைதல், வெண்குடை, செங்கோல், கவரி, வெற்றி, அரியாசனம் போன்றவற்றைப் பெற்றிருத்தல். குடிமக்களைப் பெருக்குதல், பொறையுடைமை, நால்வகைப் படையுடைமை, வாய்மையுடைமை, பொருளை வளப்படுத்துதல், மெய்ந்நூல் அறிந்திருத்தல். *(வெண்.பா. 82, 83)*
2. மேற்கூறியவற்றுடன் தேவரோடு உவமிக்கப்படல், கலைகள் ஓதல், வேதியர் நெறிநின்று ஆறு சமயத்தையும் பரிகரித்தல், அமைச்சர் உரைத்தவற்றை இகழாது கொள்ளல் என்பவற்றையும் சேர்த்துக் கூறுகிறது *(நவநீ.பா. 75, 76)*
3. படை, குடை, கொடி, முரசு, புரவி, களிறு, தேர், தார், முடி, செங்கோல் உடையவர்களாக இருத்தல் என இலக்கண விளக்கம் கூறுகிறது *(இல.விள. 925)*
4. வெண்பாப் பாட்டியல் கூறுவனவற்றோடு வள்ளன்மையுடைய குலத்தோராதல், விருதுகள் உடையோராதல், உரிய மாலைகள் பெறுதல் என்பனவும் சேர்த்துச் சொல்லப்பட்டுள்ளது. பொருள் வழியால் புலவர்களைப் பாடவிடுதல், நாடுபடை விரிவுபடுத்தல், அழகிய உவமையாக தேவரைப் பெறுதல், புகழுடன் வாழ்தல், தூதனுப்பல், உலகில் மிக்க தகுதியுடைய அரசராக இருத்தல், சமயமும் வாய்மையும் பொருளாகப் பாடப் பரிசளித்து அனுப்பல் *(பிர.திர. 299, 300)*
5. மதிப்பு, அறம், பொருள், இன்பம், அன்பு, புகழ், மறுமை உடையவர்களாக இருத்தல் *(பிர.தீபிகை. 88)*
6. நான்கு சாதிகளில் அரசசாதி அல்லாது பிற சாதியினைச் சேர்ந்த மனிதர்கள் உலகாளும் தலைவர் ஆனால் அதுவும் அரச சாதியாகவே கொள்ளப்படும். அதனை உலகம் விலக்காது,

மேன்மையான அரசகுலத்தில் பிறந்து இரப்பானேயானால் வேண்டும் உறவினரும் விரும்பார். காலகாலனான சிவபெருமானின் அருளை அறியவோ, விலக்கவோ நாம் ஆற்றல் பெற்றிலோம் *(பிர.திர. 308)*

7. விழுப்புண்களை ஆபரணமாகக் கருதுவர்; குடியோர் மகிழும் மறுமை பெற இவர் யானை ஏறுவர்; குடியோர் பெருகும்படி தாவும் குதிரையில் ஏறுவர்; நாடு பெண்டிரின் கூட்டத்தால் நிறையும்படி சிவிகையில் ஏறுவர்; குடிகள் பொலிவுமிக்கு அமைய கோ இரதம் ஏறுவர்; கூறப்பட்ட இவற்றில் ஏறவில்லை எனின் இவை குன்றும். அழகுடைய சிங்காசனத்தில் இருத்தல் என்பது, பூமாதேவியின் மடியில் சென்று இருப்பதாம்; வெண்ணிறமுடைய சங்கு ஒலித்தல், குழல் கேட்டலாம் *(பிர.திர. 521)*
8. படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் ஆறும் உள்ளவர்; அச்சம், லோபம், மூடம், ஏழைமை என்பன இல்லாதவர். அடைதுயில் கொள்ளாமை, கல்வி, துணிவுடைமை என்பன பெற்றவர். இயற்றல், மீட்டல், காத்தல், வகுத்தல் என்பன உள்ளவர். துன்பமற்ற, காட்சிக்கு அருமையும் கடுஞ்சொல்லும் இல்லாதவர். இரு காதும் கசந்திடும் சொல்லை நீக்கிய பொறுமை உடையவர். துன்பம் தொடர்ந்து வந்தாலும் இன்பம் தரும் செயல் செய்வதிலிருந்து நீங்க மாட்டார்கள், துஷ்டரையும். சிஷ்டரையும் தடிந்து காப்பார் *(பிர.திர. 523)*

**மன்னவன் வாகை**
பரணியின் உறுப்புகளுள் ஒன்று *(பன்.பா. 143; வெண்.பா. 61; நவநீ.பா. 57-61; தொ.விள. 259; பிர.திர. 45, 46; சுவாமி. 171)*

**மன்னன் மரபு**
பரணியின் உறுப்புகளுள் ஒன்று *(பன்.பா. 143; வெண்.பா. 61; நவநீ.பா. 57-61; பிர.திர. 45, 46)*

**மன்னனை வாழ்த்துதல்**
பரணியின் உறுப்புகளுள் ஒன்று *(பன்.பா. 143; வெண்.பா. 61; நவநீ.பா. 57-61; பிர.திர. 45, 46)*

**மன்னைச் சுழி**
குதிரைக்கு ஆகாத இருபது சுழிகளுள் ஒன்று *(பிர.திர. 388)*

**மனப்பெயர்**
1. எண்வகைப் பெயர்களுள் ஒன்று *(பன்.பா. 74)*
2. அவரவர் தமக்குத் தாமே வைத்துக் கொள்ளும்பெயர் *(பன்.பா. 79)*

**மனித உடலின் வாயு வகை**
1. பிராணன், 2. அபானன், 3. உதானன், 4. வியானன், 5. சமானன், 6. நாகன், 7. கூர்மன், 8. கிருகரன், 9. தேவதத்தன், 10. தனஞ்சயன் *(பிர.திர. 379)*

**மனுமிருதி**
பதினெண் மிருதிகளுள் ஒன்று *(பிர.தீபிகை. 58)*

**மனோகரை**
விண்மாதர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை. 46)*

## மா

**மா**
1. பெண்பால் எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 27; வெண்.பா 6; நவநீ.பா 7; சித.பா. 20; தொ.விள. 289; பிர.திர. 124; சுவாமி. 174; மு.வீ. 1031; பொரு.விள. 21)*
2. மக நாளுக்கு உரிய எழுத்துகளுள் ஒன்று *(பன்.பா. 48; வெண்.பா. 15; நவநீ.பா. 17; சித.பா. 23; இல.விள. 793; தொ.விள. 292; பிர.திர. 144; மு.வீ. 1034; பொரு.விள. 57)*
3. மங்கலச் சொற்களுள் ஒன்று *(பன்.பா. 68; வெண்.பா. 2; சித.பா. 18; இல.விள. 771; பிர.திர. 111; மு.வீ. 1027)*
4. பூ என்னும் மங்கலச் சொல்லுக்குரிய எழுத்துகளுள் ஒன்று *(வரை.பா. 5; பிர.தீபிகை. 3)*
5. மாக்கள்; மக்களுள் ஐயறிவுடையோர் *(இல.விள. 913)*

**மாக்கள்**
► மா. 5 *(இல.விள. 913, உரை)*

**மாங்குடி மருதனார்**
சங்கப் புலவர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை. 85)*

**மாண்டூகம்**
முப்பத்திரண்டு உபநிடதங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 59)*

**மாணாக்கர் வகை**
1. தலை, இடை, கடை எனக் கூறத் தகுவர் *(பிர.திர. 396)*
2. ஆசிரியனின் மகன், தனது ஆசான் மகன், செம்பொன் கொடுப்பவன், அரசன் மகன், உரைகோளாளன், ஔவியம் இன்றித் தொழுவோன் *(பிர.திர. 395)*

3. கோடல் மரபு காலைப் பொழுதொடு சென்று வழிபடுதல், முனியாதிருத்தல், குணத்தொடு பழகல், குறிப்பில் சார்ந்து அமைதல் சித்திரம் போன்று அடங்குதல் *(பிர.திர. 396)*
4. பயிலும் முறை பாடத்தைப் போற்றல், கேட்டவை நினைத்தல், பாடத்தை நன்கறிவதற்கு ஒரு கால் கேட்ட துணையாலே அமையாது இருமுறை கேட்டல், மூன்றுமுறை கேட்டு முறையறிதல் என்பவற்றோடு, ஆசான் உரைத்தலால் பெறும் கால்பகுதி, தன் போன்றோருடன் பயிலுதலால் இன்னொரு கால்பகுதி, அதைப் பிறருக்கு உரைத்தலால் மேலும் அரைக்கூறு புலமை பெறுதல் என்பனவாம் *(பிர.திர. 397)*
5. மாணாக்கர் ஆகத்தகாதோர் - துற்குறிகள், வையுறுவோர் *(பிர.திர. 395)*

**மாத்திரைச் சுருக்கம்**

சித்திரகவி வகைகளுள் ஒன்று; செய்யுளின் சொல்லொன்றில் உள்ள ஓர் எழுத்தின் மாத்திரையைக் குறைத்தால் வேறொரு பொருள் தருமாறு அமைவது *(வெண்.பா. 26; இல.விள. 766 (690))*

**மாத்திரைப் பெருக்கம்**

சித்திரகவி வகைகளுள் ஒன்று; செய்யுளின் சொல்லொன்றில் உள்ள ஓர் எழுத்தின் மாத்திரையைக் கூட்ட வேறொரு பொருள் தரக்கூடியதாக அமைவது *(வெண்.பா. 26; இல.விள. 766 (690))*

**மாதங்கி**

முன்பு அணைந்த இன்பமான தலைவன், பின்னர் வந்து, அங்குக் கண்ட யானையுடனும் பிடியுடனும் புலம்புதல், அப்பெண் வரப் புலம்புதல், அவளைப் புறம் புல்கல், விரைவுடைய யானைக்கும் மடந்தையின் உறுப்புக்கும் சிலேடையாகப் பாடுதல், அவளைக் கைக்கொண்டு திரும்புதல், மணம் செய்தல் முதலியவற்றை உள்ளடக்கிப் புனையப்படுவது. *(பிர.திர. 479)*

**மாதர் மயக்கம்**

சாம பேத தான தண்டம் என்னும் உபாயங்கள், இனம் ஏற்றம், நீக்கு இறக்கம், பழிப்பு உரை, தோத்திரம், மகிழ்வு, விலக்கல், தடை இல்லாத கொடை, பகை வெற்றி, தசாங்கம், தன்மெய்க்கீர்த்தி, பவனி செல்லல், புரண் மொழி ஆகியன கொண்ட சிற்றலக்கிய வகை *(பிர.திர. 472)*

**மாதிரக் கட்டு**

1. பெண்ணின் மயலை பேய் என்று கருதிய தாய் அதனை நீக்கக் கோடங்கியை அழைக்கிறாள். கோடங்கி வந்து திசைகளைக் கட்ட தலைவி, கைநொடித்து, தான் மன்னனிடம் கொண்ட மயக்கைக் கோடங்கியிடம் கூறுகிறாள். தலைவியின் மயல் அறிந்த பெற்றோர் அவளை இற்செறிக்க தான் நினைப்பவனே தன் கணவன் என அவள் வாதிட இறுதியில் தலைவனுடன் சேர்கிறாள். குறி கூறிய கோடங்கிக்கு அன்னை பரிசுப் பொருள் கொடுக்கின்றாள். இச்செய்திகள் இடம் பெறுமாறு புனையப்படும் இலக்கியம் *(பிர.திர. 40, 41)*
2. இவ்விலக்கியத்தின் மதிப்பு 1000 பொன் *(பிர.திர. 86)*

**மாதுளங்கனி**

இசைக்குரிய சுவைகளுள் ஒன்று *(பிர.திர. 92)*

**மாந்தளிர்**

காமனின் ஐங்கணைகளுள் ஒன்று *(பன்.பா. 186)*

**மாபற்பன்**

1. அட்ட நாகங்களுள் ஒன்று
2. அரச சாதியினது
3. ► அட்டநாகம் 1, 2 *(பிர.திர. 274)*

**மாமூலர்**

சங்கப் புலவர்களுள் ஒருவர் *(பிர.தீபிகை. 85)*

**மாயை**

1. வித்தியா தத்துவம் ஏழனுள் ஒன்று *(பிர.திர. 378)*
2. மும்மலங்களுள் ஒன்று *(பிர.திர. 381)*

**மாரீசம்**

உபபுராணம் பதினெட்டுள் ஒன்று *(பிர.திர. 70)*

**மாலிகன்**

குலப் பெயர்களுள் ஒன்று *(பிர.திர. 362)*

மாலை (தார்)

1. சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று *(சுவாமி. 165)*
2. தசாங்கம், சின்னப்பூவில் பாடப்படும் பத்துவகைப் பொருள்களுள் ஒன்று *(பன்.பா. 139; வெண்.பா 42; நவநீ.பா. 24; சித.பா. 32; தொ.விள. 263; பிர.திர. 15)*
3. மங்கலச் சொற்களுள் ஒன்று *(வரை.பா. 2, உரை)*
4. பொருள், இடம், காலம், தொழில் என்னும் நான்கை அடிப்படையாகக் கொண்டு 30, 40, 70, 90, 100 எண்ணிக்கைக் கொண்ட வெண்பா அல்லது கலித்துறையால் பாடப்படும் இலக்கியங்கள் மாலை, மஞ்சரி, காஞ்சிமாலை, முல்லைக்கலி, சதகம் எனப்பெறும் (பிர.மர. 16); மாலையை மட்டும் குறிப்பிட்டுள்ளது (சித.பா. 38)
5. வெண்கலித்துறை, ஆசிரியப்பா, ஆசிரிய விருத்தம் ஆகியவற்றால் முறையாக இயற்றப்பெறும் இலக்கியம் *(சுவாமி. 169)*
6. இவ்விலக்கியங்கள் நாற்சாதியினர் மீதும் பாடப்பெறும் *(பிர.திர. 81)*

மாலை (பொழுது)

பருவரல் வளரக் காரணமானவற்றுள் ஒன்று *(பன்.பா. 185)*

மாலைகளும் அவற்றை அணிதற்குரியோரும்

| வ.எண் | மாலை | அணிதற்குரியவர் |
|---|---|---|
| 1. | வில்வம் | சிவன், உமை |
| 2. | துளசி | மாதவன் |
| 3. | தாமரை | வாணி |
| 4. | செவ்வலரி | துர்க்கை |
| 5. | அறுகு | ஐங்கரன் |
| 6. | வெண் கடம்பு | செவ்வேள் |
| 7. | கற்பகம்... | இந்திரன் |
| 8. | தாமரை | அந்தணன் |
| 9. | ஆத்தி | சோழன் |
| 10. | பனை | சேரன் |
| 11. | வேம்பு | பாண்டியன் |
| 12. | வலம்புரி | கேது |
| 13. | சீரகம் | வைசியன் |
| 14. | குவளை | சூத்திரர் |
| 15. | குங்குமப் பூ | பௌத்தர் |
| 16. | முல்லை | வடுகர், கள்ளர், மறவர், அகம்படியர், ஆயர், தொட்டியர் பின்னோர் |
| 17. | வாகை | வெற்றி பெற்றவர் *(பிர.தீபிகை. 97)* |

மாலைமாற்று

சித்திரகவி வகைகளுள் ஒன்று; ஒரு செய்யுளைத் தொடக்கத்திலிருந்து வாசித்துச் சென்றாலும், இறுதியிலிருந்து வாசித்து வந்தாலும் எழுத்துகளின் முறை மாறாது இருக்கும்படி நிரலே அமைத்துப் பாடுவது *(வெண்.பா. 26; இல.விள. 766 (690))*

மாளவம்

ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று *(பிர.திர. 500-502; பிர.தீபிகை. 99)*

மாளவஸ்ரீ

உச்சை நேர இராகங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 56)*

மாளவி

முப்பத்திரண்டு இராகங்களுள் ஒன்று *(பிர.தீபிகை. 51)*

மாறாடர்

குலப் பெயர்களுள் ஒன்று *(பிர.திர. 363)*

மாறுகொளக்கூறல்

பத்துவகைக் குற்றங்களுள் ஒன்று; முன்னர்க் கூறிய பொருளிற்கு மாறுபடப் பின்னர்க் கூறுதல் *(இல.விள. 897)*

மானசாரம்

சிற்பநூல் முப்பத்திரண்டுள் ஒன்று *(பிர.தீபிகை. 61)*

